# A TRANSFER GRAMMAR FOR TAMIL MALAYALAM MACHINE TRANSLATION

*Thesis submitted to the University of Kerala for the award of the Degree of Doctor of Philosophy in Tamil*

**VIJAYA RAJESWARI. S**

DEPARTMENT OF TAMIL
UNIVERSITY OF KERALA, KARIAVATTOM
THIRUVANANTHAPURAM, KERALA - 695 581
INDIA
2014

# தமிழ் மலையாள இயந்திரமொழிபெயர்ப்புக்கு உரிய மொழிமாற்ற இலக்கணம்

முனைவர் பட்டத்திற்காக கேரளப் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பட்ட ஆய்வேடு

**விஜயராஜேஸ்வரி.சா**

தமிழ்த்துறை
கேரளப்பல்கலைக்கழகம், காரியவட்டம்
திருவனந்தபுரம், கேரளம் - 695 581

2014

# DECLARATION

I hereby declare that the Ph.D thesis entitled, **"A TRANSFER GRAMMAR FOR TAMIL MALAYALAM MACHINE TRANSLATION"** is an independent work carried out by me and it has not been submitted anywhere else for any other degree, diploma or title.

Vijayaji.

**Place : Kariavattom** **VIJAYARAJESWARI.S**

**Date :** 05/02/2014

**Dr. P. JEYAKRISHNAN**

**Assistant Professor & Head**

**Department of Tamil**

**University of Kerala**

**Kariavattom**

**Thiruvananthapuram - 695 581.**

# CERTIFICATE

This is to certify that the work embodied in the thesis entitled, "A TRANSFER GRAMMAR FOR TAMIL MALAYALAM MACHINE TRANSLATION" has been carried out by **VIJAYARAJESWARI.S** under my supervision and guidance .

**Place : Kariavattom**

**Date :** 05 · 02 · 2014

**Dr.P.JEYAKRISHNAN**

Dr. P. JEYAKRISHNAN, M.A.B.Ed.,
Head of the Department of Tamil
University of Kerala, Kariavattom
Thiruvananthapuram - 695 581
Ph - 0471-2418919, 09447222571



## synopsis

# A TRANSFER GRAMMAR FOR TAMIL MALAYALAM MACHINE TRANSLATION

Machine Translation is becoming increasingly very important in the global village scenario. Concerted efforts are being made by Governments in India to design a Machine Translation System between the Indian languages . Tamil and Malayalam Languages constitute one of those pairs in which the Machine Translation efforts are being made. It is a bidirectional Machine Translation system in which the aim is to translate the Tamil language text to Malayalam language text and vice versa. In this system, there is a need to identify , understand and translate grammatical aspects , between Tamil and Malayalam , described as Transfer Grammar . The main aspects of the Grammar pertain to morphological, syntactic and semantic transfer of a Tamil sentence into Malayalam . To effect a transfer grammar at the morphological level, the differences between Tamil and Malayalam is to be finding out . This thesis is concerned with the morphological part and the differences between Tamil and Malayalam morphology which is important to map between the two languages.

The present study is divided into six chapters excluding introduction and conclusion.

### Introduction

In this introduction, the aim of the study, hypothesis, sources, methodology, review of related literature, scope of the study including limitations and finally a thesis summary are briefly provided.

**Chapter I -Tamil and Malayalam Languages**

The first chapter gives a brief introduction to Tamil and Malayalam Languages, manual translation and the limitation.

**Chapter II - Machine Translation and Transfer Grammar**

A detailed study of Machine Translation and Transfer Grammar are presented in the second chapter. Machine Translation, types, the past and present efforts of machine translation in foreign languages, Indian Languages, available system in Indian Languages, Tamil and Malayalam Languages, merits and demerits are discussed in this chapter.

**Chapter III - Person Number Gender**

The third chapter deals with the morphological category Person Number and Gender in modern Standard Tamil and Modern Standard Malayalam . It contains the similarities and differences of the Personal Pronouns, Singular Plural suffixes and the Gender markers for all divisions. All these grammatical suffixes are elaborately discussed and differences are presented.

**Chapter IV - Case Markers and Case Syncretism**

The fourth chapter includes critical discussions of the case markers and the case syncretism in Tamil and Malayalam. The nominative, accusative, dative, instrumental, sociative, ablative, locative, genitive and vocative cases and their differences are studied in detail. The case syncretism is also broadly discussed and the differences are elaborated.

**Chapter V - Verbs**

The fifth chapter deals with the study on verbs. The different aspects of verbal forms and the divisions of verbal forms in Tamil and Malayalam are discussed in detail. The critical differences are discovered in each category.

**Chapter VI - Adjectives and Adverbs**

The Adjectives in Tamil and Malayalam are studied in detail. The differences between adjectives in Tamil and Malayalam are written. Adverbs in Tamil and Malayalam also described and differences are discovered.

**Conclusion**

In the final chapter, the main conclusions of this study are described.

# நன்றியுரை

**"தமிழ் மலையாள இயந்திர மொழிபெயர்ப்புக்குரிய மொழிமாற்ற இலக்கணம்"** என்ற தலைப்பில் ஆய்வு செய்ய எனக்கு அனுமதியளித்து, நெறியாளராக இருந்து, ஆய்வு குறித்து ஆழமாகக் கற்கவும், சிறப்பான முறையில் செய்து முடிக்கவும் எனக்கு பல நிலைகளிலும் உறுதுணையாக இருந்த பெருமையும் மதிப்பும் மிக்க கேரளப்பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத்தலைவர் பேராசிரியர்,**முனைவர்.ப.ஜெயகிருஷ்ணன்** ஐயா அவர்களுக்கு முதற்கண் என் உளமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

கேரளப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் எனக்குக் கல்வியளித்து, என் ஆய்வுக்காலத்தில் ஆய்வு குறித்து பல சிறப்பான கருத்துக்களை வழங்கி, ஆய்வினை முடிக்க ஊக்கம் அளித்த கேரளப் பல்கலைக்கழக முன்னாள் தமிழ்த்துறைத்தலைவர் மதிப்புறு. **முனைவர் கி. நாச்சிமுத்து ஐயா** அவர்களுக்கு என் நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

கேரளப் பல்கலையில் எனக்குக் கல்வி புகட்டி, ஆய்வுக்காலத்தில் ஆய்வு குறித்த தரவுகளைத் திரட்ட அறிவுரை அளித்து, பல நிலைகளிலும் எனக்கு உதவிய தமிழ்த்துறையின் முன்னாள் துறைத்தலைவர் பெருமைமிகு. **ஐயா.முனைவர். டாக்டர்.பி.டாக்டர் நசீமுதீன்** அவர்களுக்கும் என் நன்றியினைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

ஆய்வு குறித்த அரிய தகவல்களையும், கட்டுரைகளையும், புத்தகங்களையும், இணையத்திலிருந்தும் நூலகத்திலிருந்தும் தந்து உதவியும், இயந்திர மொழிபெயர்ப்பு, கணினி மொழியியல், மொழிமாற்று இலக்கணம் குறித்த அனைத்து ஐயங்களையும் தீர்த்து உதவியும் ஆய்வு செம்மையாக முடிவுற உதவிய, தமிழ் மீது தீராக் காதல் கொண்ட கனடாவின் வாட்டர்லு பல்கலைக்கழகத்தின் மின்னியல்துறைப்

பேராசிரியர் மதிப்புறு முனைவர். செ.இரா. செல்வக்குமார் ஐயா அவர்களுக்கு என் உளமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

ஆய்வுக்காலத்தில் எனக்கு பல்வேறு நிலைகளில் ஆக்கமும் ஊக்கமும் அளித்து, ஆய்வுக்கு பல கருத்துக்களை வழங்கி, ஆய்வு முடிவுற உதவியாக இருந்த மலாயாப் பல்கலைக்கழகத்தின் இந்திய ஆய்வியல் துறையின் பெருமைமிகு தலைவர். **முனைவர். குமரன்** ஐயா அவர்களுக்கு என் மேலான நன்றியினைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

ஆய்வு மேற்கொண்ட காலத்தில் தேவையான அனைத்து நூல்களையும் தந்துதவிய கேரளப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறை, மொழியியல் துறை நூலகர்களுக்கும் என் நன்றி.

எனைப்பெற்று வளர்த்து, சிறப்பான கல்வியினைக் கற்க தங்கள் வாழ்வினை அர்ப்பணித்த என் அன்புத் தாத்தா-பாட்டி திரு. ஒய்யணன்-சவுந்தரம் அவர்களுக்கும், திரு. நாராயணன்-வெள்ளத்தாய் அவர்களுக்கும், என் அன்புப் பெற்றோர் திரு. சாதுராக்-பாண்டியம்மாள் அவர்களுக்கும், என் ஆய்வுக்கு முழு ஒத்துழைப்பும் நல்கி, என் உடனிருந்து ஊக்கமளித்த என் அன்புக்கணவர் திரு.சசிபாலன் அவர்களுக்கும், தட்டச்சு செய்தும், அவ்வப்போது ஊக்கமூட்டியும் உதவிய என் அன்பு மாமா-அத்தை திரு. பந்தளராஜன்-இலட்சுமி அவர்களுக்கும் என் அன்புத்தம்பி திரு.மகேந்திரன், அன்புத்தங்கை சீலா, கெலீனா அன்பு மகள்கள் சியாமா சிறீ லட்சுமி, இனியா அவர்களுக்கும் என் உள்ளத்தின் ஆழத்திலிருந்து நன்றியினைச் சமர்ப்பிக்கின்றேன்.

எல்லாவற்றுக்கும் மேலாக, கற்றோர் விளங்கும் அறிவுப்பாதையில் எனை வழிநடத்திடும் எல்லாம் வல்ல இறைவனுக்கும் என் நன்றி.

**விஜயராஜேஸ்வரி. சா.**

## சுருக்கக் குறியீடுகள்

| | | |
|---|---|---|
| அஃ | - | அஃறிணை |
| ஆண் ஒ | - | ஆண்பால் ஒருமை |
| ஆ கோ | - | ஆய்வுக்கோவை |
| ஆங் | - | ஆங்கிலம் |
| ஆ பா | - | ஆண்பால் |
| இ கா | - | இறந்தகாலம் |
| இ மொ | - | இலக்கு மொழி |
| இ மொ பெ | - | இயந்திர மொழிபெயர்ப்பு |
| இ வி | - | இலக்கணவிளக்கம் |
| இ வே | - | இட வேற்றுமை |
| உடை வே | - | உடைமை வேற்றுமை |
| உ த.பன் | - | உளப்பாட்டு தன்மை பன்மை |
| உதா த பன் | - | உளப்படுத்தா தன்மை பன்மை |
| உ தி | - | உயர்திணை |
| உ வே | - | உடனிகழ்ச்சி வேற்றுமை |
| எ கா | - | எடுத்துக்காட்டு |
| எதி கா | - | எதிர்காலம் |
| எழு | - | எழுத்ததிகாரம் |
| ஒரு | - | ஒருமை |
| க வே | - | கருவி வேற்றுமை |
| கே பா | - | கேரள பாணினியம் |
| கொ வே | - | கொடை வேற்றுமை |
| சா | - | சான்று |
| செ வே | - | செயப்படுபொருள் வேற்றுமை |
| சொல் | - | சொல்லதிகாரம் |
| த | - | தமிழ் |
| த ப பெயர் | - | தமிழ்ப் பதிலிடுபெயர் |
| தொல் | - | தொல்காப்பியம் |

| | | |
|---|---|---|
| த.வி.மு. | - | தமிழ் வினைமுற்று- |
| தொன்.வி. | - | தொன்னூல் விளக்கம் |
| நன். | - | நன்னூல் |
| நி.கா | - | நிகழ்காலம் |
| நீ. வே. | - | நீங்கல் வேற்றுமை |
| ப.பா. | - | பலர்பால் |
| பல.பால்.ஒரு. | - | பலர்பால் ஒருமை |
| பல.பால்.பன். | - | பலர்பால் பன்மை |
| பலவி.பா. | - | பலவின் பால் |
| பன். | - | பன்மை |
| பெண்.ஒ | .- | பெண்பால் ஒருமை |
| பெ.ப | - | பெயர்ப்பயனிலை |
| பெ.பா. | - | பெண்பால் |
| பட.ஒரு.ஆ. | - | படர்கை ஒருமை ஆண்பால் |
| பட.ஒரு.பெ. | - | படர்கை ஒருமை பெண்பால் |
| பட..பன். | - | படர்கைப் பன்மை |
| பட.மரி..பன் | - | படர்கை மரியாதைப் பன்மை |
| ம | - | மலையாளம் |
| மரி.ஒ. | - | மரியாதை ஒருமை |
| ம.ப.பெயர் | - | மலையாள பதிலிடு பெயர் |
| மலை.வி. | - | மலையாள வியாகரணம் |
| ம.வி.மு. | - | மலையாள வினைமுற்று- |
| முன்.ஒரு. | - | முன்னிலை ஒருமை |
| முன்.சிற.உய.ஒரு. | - | முன்னிலைச்சிறப்பு உயர்வு ஒருமை |
| முன்.பன் | - | முன்னிலைப் பன்மை |
| முன்.மரி. பன். | - | முன்னிலை மரியாதைப்பன்மை |
| மூ.மொ | - | மூலமொழி |
| வி.ப | - | வினைப்பயனிலை |
| வேறு. | - | வேறுபாடுகள் |

# பொருளடக்கம்

# ஆய்வு முன்னுரை

## 1. அறிமுகம்

இந்திய மொழிகளுக்கிடையேயான இயந்திர மொழிபெயர்ப்பு முயற்சிகள் நாடெங்கிலும் முனைப்பாக நடைபெற்றுக்கொண்டிருக்கின்றன. இத்தருணத்தில் இயந்திர மொழிபெயர்ப்பினை, தமிழ் மலையாள மொழிகளுக்கிடையே மேற்கொள்வது மிகவும் தேவையான ஒன்றாகும். இதற்குப்பயன்படும் வகையில்; தமிழ் - மலையாள இயந்திர மொழிபெயர்ப்பிற்கு பயன்படும் இன்றியமையாத பகுதிகளுள் ஒன்றான; மொழிமாற்ற இலக்கணத்தினை உருவாக்குவதை மையமாகக் கொண்டு இவ்வாய்வு மேற்கொள்ளப்படுகிறது.

## 2. *ஆய்வுத் தலைப்பு*

"தமிழ் - மலையாள இயந்திர மொழிபெயர்ப்புக்கு உரிய மொழிமாற்ற இலக்கணம்" என்பதே இவ்வாய்வின் ஆய்வுத் தலைப்பாக அமைகின்றது.

## 3. ஆய்வு எல்லை

தற்காலத்தில் வழங்கும் தமிழ் மற்றும் மலையாள மொழிகளைக் குறித்து எழுதப்பட்ட இலக்கணங்களை ஒப்பிட்டு, மொழிமாற்ற இலக்கணத்திற்கு தேவையான இலக்கண ஒற்றுமைகளையும் வேறுபாடுகளையும் கண்டறிவதனை எல்லையாகக் கொண்டு இவ்வாய்வு விளங்குகின்றது.

## 4. ஆய்வு நோக்கம்

தற்காலத் தமிழ் மற்றும் மலையாள மொழிகளை மொழியியல் - உருபனியல் அடிப்படையில் ஆராய்வது; இரு மொழிகளுக்கிடையே உருபனியல் நிலையில் அமையும் ஒற்றுமைகளையும் வேறுபாடுகளையும்

தமிழ் - மலையாள இயந்திர மொழிபெயர்ப்பிற்குப் பயன்படும் மொழிமாற்ற இலக்கணத்தினை வடிவமைப்பதற்காக கண்டறிவது ஆகியவை இவ்வாய்வின் நோக்கங்களாகும்

### 5. ஆய்வுக்குரிய கருதுகோள்

தமிழ் மலையாள இயந்திர மொழிபெயர்ப்புக்கு உதவும் மொழிமாற்ற இலக்கணத்தினை வடிவமைக்கத் தேவையான இலக்கண வேறுபாடுகளை மொழியியல் அடிப்படையில் கண்டுபிடிப்பதே இவ்வாய்வின் கருதுகோளாக அமைகின்றது

### 6. ஆய்வுச் சான்றாதாரங்கள்

ஆய்வுக்குரிய சான்றுகள், முதன்மைச்சான்றுகள் மற்றும் துணைமைச் சான்றுகள் என்று இரு வகைப்படுத்தப்படுகின்றன.

### 6.1. முதன்மைச் சான்றுகள்

இவ்வாய்விற்கு, தற்காலத்தமிழ் மொழியின் அமைப்பு குறித்து எழுதப்பட்ட, முனை. அகத்தியலிங்கத்தின் தமிழ்மொழி அமைப்பியல், முனை. கு பரமசிவத்தின் இக்காலத்தமிழ் மரபு, முனை. தாமசு லேமனின் A Grammar of Modern Tamil போன்ற நூல்களும், தற்கால மலையாள மொழியின் அமைப்பினை விளக்கும் முனை ஆர். இ. ஆசர் மற்றும் குமாரியின் மலையாளம், டாக்டர். கே.எம் ஜார்ஜின் Malayalam Grammar and Reader என்ற நூல்களும் முதன்மைச் சான்றாதாரங்களாக அமைகின்றன.

### 6.2. துணைமைச் சான்றுகள்

தற்காலத் தமிழ் மற்றும் மலையாள மொழிகளின் அமைப்பினை விளக்கும் விதத்தில் எழுதப்பட்ட நூல்கள், கட்டுரைகள், ஆய்வேடுகள் போன்றன துணைமைச் சான்றாதாரங்களாக அமைகின்றன

## 7. ஆய்வு அணுகுமுறை

இவ்வாய்வு, மொழியியல் அடிப்படையிலான ஒப்பீட்டு அணுகுமுறை, பகுப்பாய்வு அணுகுமுறை, விளக்கவியல் அணுகுமுறை ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு அமைகின்றது.

## 8. ஆய்வுப் பயன்

தமிழ் - மலையாள இயந்திர மொழிபெயர்ப்பு செய்வதற்கு இன்றியமையாத பகுதிகளுள் ஒன்றான மொழிமாற்று இலக்கணத்தினை வடிமைக்கத் தேவையான இலக்கணத்தினை இவ்வாய்வு கொண்டிருப்பதால் தமிழ் - மலையாள இயந்திர மொழிபெயர்ப்பு அமைப்பினை வடிவமைப்பதற்கு இவ்வாய்வு பயன்படும்.

## 9. ஆய்வு முன்னோடிகள்

தமிழ் - மலையாள இயந்திர மொழிபெயர்ப்பிற்குத் தேவையான மொழிமாற்ற இலக்கணத்தினைத் தயாரிப்பது இதுவே முதல் முறை ஆகும். தமிழ் மலையாள இயந்திர மொழிபெயர்ப்பு குறித்து, சில ஆய்வுகளே இதுவரையில் வெளிவந்துள்ளன. இவற்றில், முனைவர். செல்வ வீர அழகிரியின் தமிழ் - மலையாளம் இய்ந்திர மொழிபெயர்ப்புத் திட்டம் மற்றும் , அவினேஷின் மொழிமாற்று இலக்கணக் கருவி போன்றவை முன்னோடியாகக் கொள்ளப்படுகின்றன.

## 10. ஆய்வேட்டின் அமைப்பு

இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஆறு இயல்களைக் கொண்டு அமைகின்றது.

ஆய்வு முன்னுரையில் ஆய்வுத்தலைப்பு, எல்லை, நோக்கம், கருதுகோள், சான்றாதாரங்கள், அணுகுமுறை, பயன், ஆய்வு முன்னோடிகள் மற்றும் ஆய்வேட்டின் அமைப்பு ஆகியவை இடம்பெறுகின்றன.

### 10.1. இயல் விளக்கம்

#### 10.1.1. தமிழ் - மலையாள மொழிகள்

முதலாம் இயலில், தமிழ் மொழி, தமிழ் மொழியின் வரலாறு, மலையாள மொழி, மலையாள மொழியின் வரலாறு, முற்காலத்தில் மலையாள இலக்கியங்கள், இடைக்கால மலையாள இலக்கியங்கள், தற்கால மலையாள இலக்கியங்கள், ஏ.ஆர்.இராஜ இராஜ வர்மா கூறும் மலையாளம் - தமிழ் உறவினை விளக்கும் ஆறு விதிகள்,
மொழிக்குடும்பம், ஒட்டு நிலை மொழி, தமிழ் மொழியின் அமைப்பு, ஒலியனியல் , ஒலியன் , தமிழ் மொழியின் ஒலியன்கள், உயிர் ஒலியன்கள், மெய்யொலியன்கள், மலையாள மொழியின் அமைப்பு, மலையாள மொழியின் ஒலியன்கள், உயிர் ஒலியன்கள், மெய்யொலியன்கள், தமிழில் அடைப்பொலிகள் / வெடிப்பொலிகள், மலையாளத்தில் அடைப்பொலிகள், தமிழில் மூக்கொலிகள், மலையாளத்தில் மூக்கொலிகள், உரசொலிகள், வருடொலி, மருங்கொலி, தொடரொலி, உயிர்ப்போலி, உருபனியல், தமிழ் மலையாளத்தில் பெயர்ச்சொற்கள், தமிழிலும் மலையாளத்திலும் ஒருமைப்பெயர்கள், மூவிடப்பெயர்கள், வினைச்சொற்கள், தொடரியல், வாக்கிய அமைப்பு, பின்னுருபுகள், சொல் வரிசை அமைப்பு ஆகியவை சுருக்கமாக விளக்கப்படுகின்றன.

#### 10.1.2. இயந்திர மொழிபெயர்ப்பும் மொழிமாற்ற இலக்கணமும்

இவ்வியலில் இயந்திர மொழிபெயர்ப்பு, செயற்கை நுண்ணறிவு, இயந்திர மொழிபெயர்ப்பு அமைப்பு / இயந்திர மொழிபெயர்ப்பி , இயற்கை மொழி, இயற்கை மொழி ஆய்வு, கணினி மொழியியல், இயந்திர மொழிபெயர்ப்பு முயற்சிகள் - வரலாறு, பல்வேறு இயந்திர மொழிபெயர்ப்பிகள், இயந்திர மொழிபெயர்ப்பியின் பாகங்கள், பல்வேறு இயந்திர மொழிபெயர்ப்பு அணுகுமுறைகள், நேரடி அணுகுமுறை,

மறைமுக அணுகுமுறை, மாற்றல் அணுகுமுறை, இடைநிலைமொழி அணுகுமுறை, இயற்கைமொழி ஆய்வின் நிலைகள், இயந்திர மொழிபெயர்ப்பில் சிக்கல்கள், தற்காலத்தில் வழங்கும் இயந்திர மொழிபெயர்ப்பிகளின் அமைப்பு, இயந்திர மொழிபெயர்ப்பிற்கு ஒரு குறிப்பிட்ட களன் உள்ள மொழியைப் பயன்படுத்துதல் / மொழியை எளிதாக்குதல், இயந்திர மொழிபெயர்ப்பில் மனித உதவியையும் உட்படுத்துதல், இந்தியாவில் இயந்திர மொழிபெயர்ப்பு முயற்சிகள், மொழிமாற்ற இலக்கணம் உருவாக்கும் முறை, தானியக்கமாக கணினியின் மூலம் உருவாக்குதல், மனித முயற்சியால் உருவாக்குதல், தமிழ் - மலையாளத்தில் மொழிமாற்று இலக்கணங்கள், தமிழ் - மற்றும் மலையாள மொழிகளுக்கிடையே வேறுபாடுகள், உருபனியல் ஒற்றுமைகள் வேற்றுமைகள் ஆகியவை விளக்கப்படுகின்றன

**10.1.3. தமிழிலும் மலையாளத்திலும் பால், எண், இடம்**

இவ்விரண்டாவது இயலில், தமிழ் மலையாளத்தில் பால்பாகுபாடு, பிற மொழிகளில் பால்பாகுபாடு, சொற்களில் பால் சுட்டப்படும் முறை, பால்காட்டும் விகுதியுடன் அமையும் பெயர்ச்சொற்கள், ஆண்பால் பெயர்கள், பெண்பால் பெயர்கள், பலர் பால்பெயர்கள், தமிழில் பலர்பால் விகுதிகள், மலையாளத்தில் பலர்பால் விகுதிகள், ஆண்பன்மைப் பெயர்கள், பெண்பன்மைப்பெயர்கள், பொதுப்பால் பெயர்கள், தமிழ்-மலையாளத்தில் பொதுப்பால் பெயர்கள், தமிழிலிருந்து மலையாளத்திற்கு மொழிபெயர்க்கப்படும்போது பொதுப்பன்மைப்பெயர்கள் மாறுதல், ஒன்றன்பால் பெயர்கள், பலவின்பால் பெயர்கள், தமிழ் மலையாள பால் விகுதிகளிடையே வேறுபாடுகள் ஆகியவை மொழி மாற்ற இலக்கணத்திற்கேற்ப ஆராயப்படுகின்றன.

### 10.1.4. தமிழிலும் மலையாளத்திலும் வேற்றுமை உருபுகளும் வேற்றுமை மயக்கமும்

இவ்வியலில் தமிழ் மலையாள வேற்றுமைகள், செயப்படு பொருள் வேற்றுமை, கருவி வேற்றுமை, உடனிகழ்ச்சி வேற்றுமை, கொடை வேற்றுமை, உடைமை வேற்றுமை, நீங்கல் வேற்றுமை, இட வேற்றுமை போன்றன ஆராயப்பட்டு, தமிழிலும் மலையாளத்திலும் அவை ஒன்றுபடுமிடங்கள், வேறுபாடுகள் மொழிமாற்ற இலக்கணத்திற்கு ஏற்ப கண்டுபிடிக்கப்படுகின்றன

### 10.1.5. தமிழிலும் மலையாளத்திலும் வினைச்சொற்கள்

இந்நான்காவது இயலில், தமிழ் மலையாள மொழிகளில் வினைச்சொற்கள், வினைச்சொல் வகைப்பாடுகள், வினை முற்றும் வினை எச்சமும், வினைமுற்று, வினைமுற்று வகைகள், ஏவல் வினைமுற்றும் அதன் வகைகளும், ஏவற்பன்மை, உறவு முறைப்பெயர்கள், செயல்வினை முற்றுக்கள் அதன் வகைகள், தமிழிலும் மலையாளத்திலும் காலம்காட்டும் உருபுகள், பால் எண் இட விகுதிகள், வியங்கோள் வினை, எச்சவினைகளும் அதன் வகைகள் ஆகியன ஆராயப்பட்டு தமிழிலும் மலையாளத்திலும் இவற்றின் வேறுபாடுகள் கண்டறியப்பட்டு, தொகுக்கப்பட்டுள்ளன.

### 10.1.6. தமிழிலும் மலையாளத்திலும் பெயரடை - வினையடைகள்

ஆறாவது இயலான இவ்வியலில் பெயரடைகள் எவை, பெயரடைகளின் விளக்கம், பெயரடைகளின் வகைகள், தனிப்பெயரடை ஆக்கப்பெயரடை, எதிர்மறைப் பெயரடைகள், பெயர்ப் பெயரடைகள், பெயரெச்சப் பெயரடைகள், தமிழிலும் மலையாளத்திலும் பெயரடைகளில் காணப்படும் வேறுபாடுகள் முதலியவையும், வினையடைகள் எவை, வினையடையின் விளக்கம், வினையடை வகைகள் , தனி வினையடைகள்,

தமிழில் தனி வினையடைகள், மலையாளத்தில் தனி வினையடைகள், மிகைப்பான்கள், குறைப்பான்கள், முறை வினையடை, நேர வினையடை, இடவினையடை, அளவு வினையடை, அடுக்கு வினையடை, வினையெச்சம் வினையடையாக வருதல், தமிழிலும் மலையாளத்திலும் வினையடைகளில் காணப்படும் வேறுபாடுகள் போன்றன மொழிமாற்ற இலக்கணத்திற்கு ஏற்ப கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

# 1. தமிழ் மற்றும் மலையாள மொழிகள்

1.1. தமிழ் மொழி
1.1.1. தமிழ் இலக்கிய வரலாறு
1.2. மலையாள மொழி
1.2.1. மலையாள இலக்கிய வரலாறு
1.2.1.1. முற்காலம்
1.2.1.2. இடைக்காலம்
1.2.1.3. தற்காலம்
1.2.2.1. மெல்லினமாக்கல் ( Nasalisation )
1.2.2.2. அண்ண ஒலியாய் திரிதல் ( Palatalisation )
1.2.2.3. உயிர்க்குறுக்கம் ( Contraction of Vowels )
1.2.2.4. பால் வேறுபாட்டொழிப்பு (Deletion of Personal Terminations )
1.2.2.5. பழைய வழக்குகளைத் தக்கவைத்துக்கொள்ளுதல் ( Retention of Obsolete Forms)
1.2.2.6. அங்க பங்கம் ( Abridgement of Forms )
1.3. மொழிக்குடும்பம்
1.3.1. ஒட்டு நிலை மொழி ( Agglutinative Language)
1.3.2. மொழியின் அமைப்பு
1.3.2. தமிழ் மொழியின் அமைப்பு
1.3.2.1. ஒலியனியல் ( Phonology )
1.3.2.1.1. ஒலியன் (Phoneme)
1.3.2.1.2. தமிழ் மொழியின் ஒலியன்கள்
1.3.2.1.2.1. உயிர் ஒலியன்கள்
1.3.2.1.2.2. மெய்யொலியன்கள்
1.4. மலையாள மொழியின் அமைப்பு
1.4.1. மலையாள மொழியின் ஒலியன்கள்
1.4.1.1. உயிர் ஒலியன்கள்
1.4.1.2. மெய்யொலியன்கள்
1.3.2.1.2.2.1. தமிழில் அடைப்பொலிகள் / வெடிப்பொலிகள்
1.4.1.2.1. மலையாளத்தில் அடைப்பொலிகள்
1.4.1.2.2. ஒலிப்பிலா அடைப்பொலிகள் ( Voiceless Stops )
1.4.1.2.3. ஒலிப்பிலா உயிர்ப்பு அடைப்பொலிகள் (Voiceless Aspirated Stops )
1.4.1.2.4. ஒலிப்புடை அடைப்பொலிகள் ( Voiced Stops )
1.4.1.2.5. ஒலிப்புடை உயிர்ப்பு அடைப்பொலிகள்( Voiced Aspirated Stops )

# 1. தமிழ் மற்றும் மலையாள மொழிகள்

## 1.1. தமிழ் மொழி

தமிழ் மொழி தமிழ் மக்களின் மொழி ஆகும் இது இரண்டாயிரம் ஆண்டு பழமையான இலக்கண இலக்கியங்களைக் கொண்டது. பழங்காலம் முதல் தற்காலம் வரையிலான தொடர்ச்சியான இலக்கியப் பாரம்பரியத்தினை உடையது. பழமையான தனித்துவம் வாய்ந்த இலக்கியங்களைக் கொண்டு, உலகின் உயர்தனிச் செம்மொழிகளில் ஒன்றாக விளங்குவது தமிழ்மொழி தமிழ் மொழியின் இத்தொடர்ச்சியான இலக்கண, இலக்கிய வரலாற்றினை தமிழறிஞர்கள் கீழ்க்கண்டவாறு பிரிப்பர். அவை,

1. சங்க காலம் ( கி.மு 300 - கி.பி. 100 )
2. சங்கம் மருவிய காலம் ( கி.பி. 100 - 500 )
3. பல்லவர் காலம் ( கி.பி 600 - 800 )
4. சோழர் காலம் ( கி.பி. 800 - 1200 )
5. நாயக்கர் காலம் ( கி.பி. 1200 - 1600 )
6. ஐரோப்பியர் காலம் ( கி.பி. 1600 - 1946)
7. 20 ஆம் நூற்றாண்டு முதல் தற்காலம் வரை

### 1.1.1. தமிழ் இலக்கிய வரலாறு

சங்க காலத்தில் அகத்தியம், தொல்காப்பியம் என்னும் இலக்கண நூல்களும், எட்டுத்தொகை பத்துப்பாட்டு என்ற அகம், புறம் குறித்த பாடல்களைக் கொண்ட தொகை நூல்களும் தோன்றி தமிழில் வழங்கி வந்தன. சங்கம் மருவிய காலத்தில், பதினெண்கீழ்க்கணக்கு நூல்களும் சமண நூலான சிலப்பதிகாரம், பௌத்த நூலான மணிமேகலை போன்ற காப்பியங்களும் திருக்குறளும் தோன்றின பல்லவர் காலத்தில் சைவ

இலக்கியங்களான, பன்னிரு திருமுறைகளும், ஆழ்வார் பாடல்களும் தோன்றி வளர்ந்தன

கி.பி. 900 ஆண்டு முதல் 1200 வரை நிலவிய சோழ அரசர்களின் காலத்தில் சிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி, சூளாமணி, நீலகேசி, உதயண குமார காவியம் , யசோதர காவியம், நாககுமார காவியம் , விம்பிசார கதை, மேருமந்திர புராணம், கம்பராமாயணம், பல புராண நூல்கள், நள வெண்பா, வில்லிபுத்தூராழ்வார் பாரதம் போன்ற இலக்கியங்கள் தோன்றி வளர்ந்தன. மேலும், வீரசோழியம், நேமிநாதம், வச்சிணந்திமாலை, பன்னிருபாட்டியல், அகப்பொருள்விளக்கம், யாப்பெருங்கலம், தண்டியலங்காரம், நன்னூல், போன்ற இலக்கண நூல்களும், திவாகர நிகண்டு, பிங்கல நிகண்டு, சூடாமணி நிகண்டு, உரிச்சொல் நிகண்டு, கயாதர நிகண்டு, அகராதி நிகண்டு. போன்ற நிகண்டுகளும், மாறனலங்காரம், இலக்கண விளக்கம், இலக்கணக் கொத்து போன்ற நூல்களும் தோன்றின. சோழர் காலத்துக்குப் பின் வந்த நாயக்கர் காலத்தில், கலம்பகம், உலா, பரணி, பிள்ளைத்தமிழ் போன்ற சிற்றிலக்கிய நூல்கள் தோன்றின. ஐரோப்பியர் காலத்தில் உரைநடை நூல்கள் தோன்றி, தமிழில் உரைநடை இலக்கியம் செழிப்புற்றது. சிறுகதை, நாவல், நாடகம். போன்றன தழைத்து வளர்ந்தன. பல துறை நூல்களும் தோன்றின. பத்திரிக்கைகளும், வார வெளியீடுகளும், இவ்விலக்கியங்களைச் சிறப்பாக வளர்த்தன. மேலும், இக்காலத்திலேயே தாயுமானவரின் உபநிடதங்களும், மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்கள் இயற்றிய தலபுராணங்களும், அந்தாதி மாலைகள், உலா, கோவை, தனிப்பாக்கள், சேக்கிழார் பிள்ளைத்தமிழ் போன்றவையும் தமிழ் இலக்கியப் பரப்பினைச் செழிப்பாக்கின. இராமலிங்கரது திருவருட்பா, மனுமுறை கண்ட வாசகம், ஜீவகாருண்ய ஒழுக்கம் போன்றவை தமிழுக்குப் பெருமை சேர்ப்பன. இராமச்சந்திர

கவிராயர், வேதநாயாம் பிள்ளை, போன்றோர் படைப்புகளும் தமிழில் தோன்றின.

இருபதாம் நூற்றாண்டு தொடங்கி, தற்காலம் வரையிலும் ஏராளமான படைப்புகள் தமிழில் வந்த வண்ணம் உள்ளன. இந்நூற்றாண்டில் கவிதை இலக்கியம் முக்கியத்துவம் பெற்றது. பாரதி, பாரதிதாசன், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, நாமக்கல் இராமலிங்கம் பிள்ளை, ஆகிய நால்வரும் பல படைப்புகளை தமிழுக்கு நல்கினர். இவை மிகவும் பிரசித்தி பெற்ற இலக்கியங்கள் ஆகும். மேலும், கண்ணதாசன், சுரதா, போன்றோரும் மிகவும் பெருமை வாய்ந்த படைப்புகளைத் தமிழுக்கு நல்கி உள்ளனர். இவை தவிர, புதினம், புதுக்கவிதை, நாடகம் போன்ற இலக்கியங்கள் தற்காலத்தில் சிறப்புற்று வளர்கின்றன. கல்வி, அறிவியல் தொடர்பான பல நூல்கள் தமிழில் வெளிவந்தவண்ணம் உள்ளன. இவை அனைத்தும் உரை நடை வடிவிலேயே அமைகின்றன. இதனால் தற்காலத்தில் உடைநடை வடிவம் மிகுந்த செல்வாக்கினைப் பெற்றுள்ளது என்பது வெள்ளிடைமலை ஆகும்.

**1.2. மலையாள மொழி**

மலையாள மொழி கேரள மக்களின் மொழியாகும். பண்டைய சேர்நாட்டின் மொழி. இது உலகில் மூன்று கோடியே முப்பத்து மூன்று இலட்சம் மக்களால் பேசப்படுகின்றது. பேச்சு வழக்கில் உள்ள திராவிட மொழிகளில் மலையாளம் தான் மிகவும் இளைய மொழியாக உள்ளது. 9 - ஆம் நூற்றாண்டில்தான் இது தனி மொழியாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. தமிழும் மலையாளமும் மிகவும் நெருங்கிய மொழிகள் ஆகும். பண்டைய தமிழகத்தில் வழங்கிய தமிழ் மொழியின் மேற்குக்கடற்கரைத் தமிழாக இன்றைய மலையாள மொழி இருந்தது. பதினான்காம் நூற்றாண்டு வரையிலும் மலையாளம் "தமிழ்" என்றே அழைக்கப்பட்டு வந்தது. பதிமூன்றாம் நூற்றாண்டின் லீலாதிலகத்தில் "கேரள பாஷா" என்றும், "தமிழ்" என்றும் இம்மொழி அழைக்கப்படுகின்றது. தமிழ் மொழியின் சங்க

இலக்கியங்களான, பதிற்றுப்பத்து சேர அரசர்களைக் குறித்ததே ஆகும். சிலப்பதிகாரத்தினை எழுதிய இளங்கோவடிகள் சேரமன்னர்கள் பரம்பரையில் வந்தவரே ஆவார் மலையாள மொழியின் இலக்கிய வரலாற்றினை எடுத்துக்கொண்டால் அது பதிமூன்றாம் நூற்றாண்டு முதலே ஆரம்பமாகிறது இவ்வரலாற்றினை மூன்று காலகட்டங்களாக அறிஞர்கள் பிரிப்பர்

அவையாவன,

1 முற்காலம் (கி பி 825 - கி பி 1325)

2. இடைக்காலம் (கி பி. 1325 - கி பி 1625)

3. தற்காலம் (கி பி. 1625 - இன்று வரை).

**1.2.1. மலையாள இலக்கிய வரலாறு**

**1.2.1.1. முற்காலம்**

மலையாளத்தில் இக்காலத்தில் எழுந்த இலக்கியங்களாக, நாட்டுப்புற வகை பாட்டு இலக்கியங்களைக் கூறுவர் பதிமூன்றாம் நூற்றாண்டில் எழுந்த இராமசரிதம் இதற்கு சான்று ஆகும் நிரணம் புலவர்கள் எனப்படும் இராமன் ,சங்கரன், மாதவன் என்பவர்களின் மூன்று படைப்புக்கள் இக்காலத்தில் எழுந்த முக்கிய இலக்கியங்கள் ஆகும் இராமன் கன்னச இராமாயணத்தையும், சங்கரன் பாரத மாலையையும், மாதவன் பகவத் கீதையையும் எழுதினர்

**1.2.1.2. இடைக்காலம்**

உண்ணிநீலி சந்நேசம், சந்ரோத்சவம் ஆகிய மணிப்பிரவாள நடையில் எழுதப்பட்ட இலக்கியங்களும், சம்பு இலக்கியங்கள், கன்னசப்பணிக்கர், ஐயம்பிள்ளை ஆசான் பாட்டுக்கள் ஆகியனவும் இக்காலகட்டங்களில் எழுந்தன

மணிப்பிரவாள நடையினை விளக்கும் மலையாள மொழியின் முதல் இலக்கணமான லீலாதிலகம் இக்காலகட்டத்தில் தான் எழுதப்பட்டது. *எழுத்தச்சன் எழுதிய கிளிப்பாட்டுகள் 1600 ஆண்டு வாக்கில்* மலையாளத்தில் எழுந்தவையாகும். இது மணிப்பிரவாளமும் பாட்டிலக்கியமும் சேர்ந்த மொழிநடையில் எழுதப்பட்ட இலக்கியம். இக்காலகட்டத்தில் தான் மணிப்பிரவாளமும் பாட்டும் சேர்ந்து புது இலக்கியவகை தோன்றியது என அறிஞர்கள் கருதுகின்றனர் ( செ.வை.சண்முகம், கேரள பாணினியம் - முகவுரை - மொழியியல் ஆய்வு, 2010, பக் - 36).

**1.2.1.3. தற்காலம்**

தற்கால மலையாள மொழி இலக்கியச்செழிப்பு மிக்கதாய் உள்ளது மிகச்சிறந்த இலக்கியங்களாகக் கருதப்படும் படைப்புகள் மலையாளத்தில் ஏராளம் வந்த வண்ணம் உள்ளன. நாவல், சிறுகதை, கவிதை போன்றன தற்கால மலையாளத்தில் தொடர்ந்து எழுந்த வண்ணம் உள்ளன. மாத இதழ்கள், வார இதழ்கள், தினசரி இதழ்கள் ஏராளமாக மலையாளத்தில் வந்த வண்ணம் உள்ளன.

பிற மொழிகளில் இருந்து ஏராளமான சொற்கள் மலையாளத்தில் இடம்பெற்றுள்ளன. இது பண்டைக்காலந்தொட்டே நிகழ்ந்ததாக அம்மொழி அறிஞர்கள் குறிப்பிடுவர். ரோமன், எகிப்து, தமிழ், போர்த்துகீசு, ஆங்கிலம், இந்துஸ்தானி, அரபிக், டச்சு, பிரெஞ்சு, ஹீப்ரு, சமஸ்கிருதம் பெர்சியன் போன்ற பல மொழிச்சொற்களும் மலையாளத்தில் ஏராளம் காணப்படுகின்றன. கேரளத்தில் இசுலாம் மக்கள் அதிகமாக வசிப்பதால் ஏராளமான அரபிமொழிச்சொற்கள் மலையாளமொழியில் கலந்துள்ளன. கிறிஸ்துவ மதம் நீண்ட நாட்களுக்கு முன்னரே கேரளத்தில் வேரூன்றியதால் அதுவும் அம்மொழியின் உருவாக்கத்திற்கு முக்கியக் காரணமாக அமைந்தது. ( M.E.Manickavasagam, Editor, Dravidian

Encyclopaedia, The International School of Dravidian Linguistics, Vol III, Language and Literature, பக் - 486 ). பத்தொன்பதாம் நூற்றாண்டு வரையிலும் சமஸ்கிருத மொழிச்சொற்கள் ஏராளம் கலந்த வண்ணம் இருந்துள்ளது. தற்கால மலையாளத்தில் ஆங்கிலச்சொற்கள் ஏராளமாக அமைந்துள்ளன. இந்திய மொழிகளில் கடன் சொற்கள் அதிகம் இடம்பெற்றுள்ள மொழிகளுள் ஒன்றாக தற்போதைய மலையாளம் அமைந்துள்ளது. மேலும் இன்றைய இந்தியாவில் வழங்கப்படும் சிறந்த மொழிகளுள் ஒன்றாக மலையாளமொழி அமைந்துள்ளது.

தமிழிலிருந்து மலையாளத்தினைப் பிரிக்கும் முக்கியப் பண்புகளுள் ஒன்று அம்மொழியின் அதிகமான சமஸ்கிருத மொழிச் சொற்களின் பயன்பாடே ஆகும். இவ்வதிகமான சமஸ்கிருத மொழிச்செல்வாக்கினால் மலையாள மொழியானது சமஸ்கிருதத்திலிருந்து உருவானது என்றும் சில ஆராய்ச்சியாளர்கள் கூறுவர். அறிவியல் மற்றும் தொழில்நுட்பக் கலைச்சொற்களுக்கு மலையாளம் பெரும்பாலும் சமஸ்கிருதத்தினையே சார்ந்துள்ளது.

மலையாள மொழிக்கு தமிழுடன் உள்ள உறவினை ஆறு விதிகள் / நயங்களின் மூலம் விளக்குவார். அம்மொழியின் இலக்கண ஆசிரியரான ஏ.ஆர். இராஜ இராஜ வர்மா. அந்த ஆறுவிதிகளாவன,

**1.2.2.1.மெல்லினமாக்கல் ( Nasalisation )**

மெல்லின எழுத்தின் பின் வல்லினம் வரும் ஒற்றிணைகளில் மெல்லின ஒலி மிகுந்து வல்லின ஒலியையும் மெல்லின ஒலியாக்கும்.

சான்று: மாங்காய் -> மாங்ஙா

**1.2.2.2. அண்ண ஒலியாய் திரிதல் ( Palatalisation )**

அண்பல் ஒலிகள் அண்ண ஒலிகளாகத் திரிதல்

த -> ச

ந -> ஞ

த்த -> ச்ச

ந்த -> ஞ்ச

அண்ண ஒலிகளாய்த் திரிந்த பின்னர் மெல்லினமாதலும் நிகழ்கின்றது.

சான்று:

வைத்து -> வெச்சு

நண்டு -> ஞண்டு

பிடித்த -> பிடிச்ச

அறிந்து -> அறிஞ்சு

### 1.2.2.3. உயிர்க்குறுக்கம் ( Contraction of Vowels )

உயிர்களை குறுக்கி ஒலிப்பது உயிர்க்குறுக்கம் எனப்படும். இது மலையாளத்தில் சிறப்பம்சமாக காணப்படுகிறது

சான்று: கண்டு -> கண்டு ( ட்+உ = குற்றியலுகரம்)

மழை -> மழ

இலை -> இல

### 1.2.2.4. பால் வேறுபாட்டொழிப்பு ( Deletion of Personal Terminations )

தமிழில் வினைச்சொற்கள் பால், எண், இட விகுதிகளைக் கொண்டிருக்கும். மலையாளத்தில் வினைச்சொற்கள் இவற்றை ஏற்பதில்லை.

சான்று: அவன் வந்தான் -> அவன் வந்நு

நான் வந்தேன் -> ஞான் வந்நு

### 1.2.2.5. பழைய வழக்குகளைத் தக்கவைத்துக்கொள்ளுதல் ( Retention of Obsolete Forms)

எதிர்கால வினையெச்சத்தைக் குறிக்கும் "ஆன்" என்ற விகுதி தமிழில் இல்லாது போய்விட்டது. ஆனால் மலையாளம் தர்போதும் இதை தக்கவைத்துக்கொண்டுள்ளது.

சான்று: குளிக்க வந்தாள் -> குளிக்கான் வந்நு.

### 1.2.2.6. அங்க பங்கம் ( Abridgement of Forms )

சில சொற்களிலும், உருபுகளிலும் மலையாள மொழி வசதிக்காக எழுத்துக்களை இழந்துள்ளது.

சான்று: அவனுடைய -> அவனுடெ -> அவன்றெ

தமிழ் மொழியானது கொடுந்தமிழாகி, (பேச்சுத்தமிழ்) பின்னர் மேற்கண்ட மாற்றங்களைப் பெற்று, மலையாளமாகத் திரிந்தது என்பார் கேரளபாணினி.

### 1.3. மொழிக்குடும்பம்

இந்திய நாட்டில் 1700 க்கும் அதிகமான மொழிகள் பேசப்படுகின்றன. ( வி.கீதா & இரா. லலிதாராஜா, மொழியறிவியல், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், 2007, பக்-5). இவை அனைத்தும் 1. இந்தோ ஆரிய மொழிகள். 2. திராவிட மொழிகள், 3. ஆஸ்ட்ரிக் மொழிகள், 4. திபெத்திய-பர்மிய மொழிகள் என்ற நான்கு பெரும் பிரிவுகளின் கீழ் அடங்கும். திராவிட மொழிகளைக் குறித்து ஆய்வுகளை மேற்கொண்ட டாக்டர். கால்டுவெல் அவர்கள், "திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்" என்ற அவருடைய நூலில், தென் திராவிட மொழிகளை இந்தோ ஆரிய மொழிகளிலிருந்து தனித்துப் பிரித்து, அவற்றிடையே உள்ள வேறுபாடுகளை விளக்குகின்றார். இவர், தென் திராவிட மொழிகளாக, தமிழ், மலையாளம், கன்னடம்,தெலுங்கு துளு, தோடா, கோத்தா, கோண்டா, கூயி ஆகிய ஒன்பது மொழிகளைக் குறிப்பிடுகின்றார். இன்று இருபத்திமூன்றிற்கும் அதிகமான திராவிட மொழிகள் உள்ளன. இவை, தென்திராவிட மொழிகள், நடுத்திராவிட மொழிகள், வட திராவிட மொழிகள் என மூன்று வகைப்படுத்தப்பட்டுள்ளன. மேற்கூறிய செய்திகளில் இருந்து தமிழும் மலையாளமும் திராவிட மொழிக்குடும்பத்தைச் சேர்ந்தவை என்றும், தென் திராவிட மொழிகள் என்ற பிரிவில் இவை அடங்கும் என்பதும் அறியப்பெறும்.

### 1.3.1. ஒட்டு நிலை மொழி ( Agglutinative Language)

அமைப்பு அடிப்படையில் ( Typological ) நோக்குகையில், மொழி ஒன்றில் அமையும் சொற்கள் பலவிதமான ஒட்டுக்களைப் பெற்று, பொருளுடைய சொற்களாக அமையுமானால் அவை ஒட்டுநிலை மொழி எனப்படும். திராவிட மொழிகள் ஒட்டுநிலை மொழிகள் ஆகும்.

### 1.3.2. மொழியின் அமைப்பு

ஒரு மொழியின் அமைப்பு என்பது, அம்மொழியின் 1. ஒலியன்கள், 2.அவற்றின் தன்மை, 3. உருபன்கள், 4. சொற்களின் தன்மை, 5. சொற்றொடர்களின் அமைப்பு, 6. வாக்கியங்களின் அமைப்பு ஆகிய மொழியின் அடிப்படை அலகுகளைக் கொண்டு அமையும் தமிழ் மொழியின் அமைப்பினை நன்கறிய, தமிழின் இத்தகைய மொழிக்கூறுகளை அறிதல் அவசியம் ஆகும்.

### 1.3.2. தமிழ் மொழியின் அமைப்பு

#### 1.3.2.1. ஒலியனியல் ( Phonology )

ஒரு மொழியில் காணப்படும் ஒலியன்களைக் குறித்து விளக்கும் மொழியியல் பிரிவு ஒலியனியல் எனப்படும்.

#### 1.3.2.1.1. ஒலியன் (Phoneme)

ஒலியன் எனப்படுவது மொழியில் காணப்படும் சொற்களின் பொருள்களை வேறுபடுத்துவதற்குரிய அடிப்படையான ஒலி அலகு .

#### 1.3.2.1.2. தமிழ் மொழியின் ஒலியன்கள்

தமிழில் உயிர் ஒலியன்கள், மெய்யொலியன்கள் என இரு வகைப்படும். இவற்றுள், உயிர் ஒலியன்களாகப் பத்தும் மெய்யொலியன்களாக பதினெட்டும், ஆய்தம் என்ற எழுத்தொலியனாக ஒன்றும் ஆக மொத்தம் 29 தனித்தனி ஒலியன்கள் தமிழில் உள்ளதாக, பேரா. அகத்தியலிங்கம் அவர்கள் குறிப்பிடுவார்.

#### 1.3.2.1.2.1. உயிர் ஒலியன்கள்

அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஒ, ஓ, ஆகியவை தமிழில் காணப்படும் உயிர் ஒலியன்கள் ஆகும்.

#### 1.3.2.1.2.2. மெய்யொலியன்கள்

க், ச், ட், த், ப், ற்ற், ங், ஞ், ண், ந், ம், ன், ய், ர், ல், வ், ழ், ள், ∴ என்பன மெய்யொலியன்கள்

## 1.4. மலையாள மொழியின் அமைப்பு

### 1.4.1. மலையாள மொழியின் ஒலியன்கள்

மலையாளத்தில் உயிர் ஒலியன்களும் மெய்யொலியன்களும் உள்ளன உயிர் ஒலியன்கள் பதினொன்றும் மெய்யொலியன்கள் முப்பத்தியெட்டும் ஆக மொத்தம் நாற்பத்தியொன்பது ஒலியன்கள் உள்ளன.

#### 1.4.1.1. உயிர் ஒலியன்கள்

மலையாளத்தில் உயிர் ஒலியன்களாக, அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, மற்றும் இதழ் குவியா உ என்பன உள்ளன.

#### 1.4.1.2. மெய்யொலியன்கள்

மலையாள மொழியின் மெய்யொலியன்களில் ஒலிப்பு ஒலிகளும் ( Voiced ), ஒலிப்பிலா ஒலிகளும் ( Voiceless ) உண்டு. ஒலிப்பு ஒலிகளிலும் ஒலிப்பிலா ஒலிகளிலும் உயிர்ப்பு ஒலிகளும் ( Aspirated ) உண்டு. இவை மலையாளத்தில் தனித்தனி ஒலியன்கள் ஆகும். தமிழில் ஒலிப்பிலா ஒலிகள் மட்டுமே உண்டு. அவற்றின் உயிர்ப்பொலிகள் கிடையாது. எனவே ஒலிப்பு ஒலிகளோ அவற்றின் உயிர்ப்பு ஒலிகளோ, ஒலிப்பிலா ஒலிகளின் உயிர்ப்பு ஒலிகளோ தமிழில் தனி ஒலியன்களாக அமையவில்லை.

#### 1.3.2.1.2.2.1. .தமிழில் அடைப்பொலிகள் / வெடிப்பொலிகள்

தமிழில் அடைப்பொலிகளாக கீழ்க்காணும் ஒலியன்கள் உள்ளன.

1. கடையண்ண அடைப்பொலி - க

2. இடையண்ண அடைப்பொலி - ச

3. பின் நுனியண்ண / நாவளை அடைப்பொலி - ட்

4. நுனியண்ண அடைப்பொலி - ற்ற்

5. பல் அடைப்பொலி - த்

6. ஈரிதழ் அடைப்பொலி - ப்

#### 1.4.1.2.1. மலையாளத்தில் அடைப்பொலிகள்

மலையாளத்தில் அடைப்பொலிகள் நான்கு வகை உள்ளன. அவை,

1. ஒலிப்பிலா அடைப்பொலிகள் ( Voiceless Stops )
2. ஒலிப்பிலா உயிர்ப்பு அடைப்பொலிகள் ( Voiceless aspirated Stops )
3. ஒலிப்புடை அடைப்பொலிகள் ( Voiced Stops )
4. ஒலிப்புடை உயிர்ப்பு அடைப்பொலிகள் ( Voiced aspirated Stops )

#### 1.4.1.2.2. ஒலிப்பிலா அடைப்பொலிகள் ( Voiceless Stops )

1. கடையண்ண அடைப்பொலி - க[1]
2. இடையண்ண அடைப்பொலி - ச[1]
3. பின் நுனியண்ண / நாவளை அடைப்பொலி - ட்[1]
4. நுனியண்ண அடைப்பொலி - ற்ற்
5. பல் அடைப்பொலி - த்[1]
6. ஈரிதழ் அடைப்பொலி - ப்[1]

#### 1.4.1.2.3. ஒலிப்பிலா உயிர்ப்பு அடைப்பொலிகள் ( Voiceless aspirated Stops )

1. கடையண்ண ஒலிப்பிலா உயிர்ப்பு அடைப்பொலி - க[2]
2. இடையண்ண ஒலிப்பிலா உயிர்ப்பு அடைப்பொலி - ச[2]
3. பின் நுனியண்ண/நாவளை ஒலிப்பிலா உயிர்ப்பு அடைப்பொலி - ட்[2]
4. பல் ஒலிப்பிலா உயிர்ப்பு அடைப்பொலி - த்[2]
5. ஈரிதழ் ஒலிப்பிலா உயிர்ப்பு அடைப்பொலி - ப்[2]

### 1.4.1.2.4. ஒலிப்புடை அடைப்பொலிகள் ( Voiced Stops )

1. கடையண்ண ஒலிப்புடை அடைப்பொலி - க$^{3}$
2. இடையண்ண ஒலிப்புடை அடைப்பொலி - ச$^{3}$
3. பின் நுனியண்ண / நாவளை ஒலிப்புடை அடைப்பொலி - ட்$^{3}$
4. பல் ஒலிப்புடை அடைப்பொலி - த்$^{3}$
5. ஈரிதழ் ஒலிப்புடை அடைப்பொலி - ப்$^{3}$

### 1.4.1.2.5. ஒலிப்புடை உயிர்ப்பு அடைப்பொலிகள் (Voiced Aspirated Stops )

1. கடையண்ண ஒலிப்புடை உயிர்ப்பு அடைப்பொலி - க$^{4}$
2. இடையண்ண ஒலிப்புடை உயிர்ப்பு அடைப்பொலி - ச$^{4}$
3. பின் நுனியண்ண/நாவளை ஒலிப்புடை உயிர்ப்பு அடைப்பொலி - ட்$^{4}$
4. பல் ஒலிப்புடை உயிர்ப்பு அடைப்பொலி - த்$^{4}$
5. ஈரிதழ் ஒலிப்புடை உயிர்ப்பு அடைப்பொலி - ப்$^{4}$

### 1.3.2.1.2.2.2. தமிழில் மூக்கொலிகள் ( Nasals )

தமிழில் ஆறு மூக்கொலிகள் உள்ளன. அவையாவன,

1. கடையண்ண மூக்கொலி - ங்
2. இடையண்ண மூக்கொலி - ஞ்
3. பின் நுனியண்ண / நாவளை மூக்கொலி - ண்
4. நுனியண்ண மூக்கொலி - ன்
5. பல் மூக்கொலி - ந்
6. ஈரிதழ் மூக்கொலி - ம்

### 1.4.1.2.2. மலையாளத்தில் மூக்கொலிகள்

மலையாளத்தில் தமிழைப் போன்றே ஆறு மூக்கொலிகளும் உள்ளன. இவற்றுள் நுனியண்ண மூக்கொலியான 'ன' வும் , பல் மூக்கொலியான 'ந' வும் பெரும்பாலும் ஒரே போன்றே உச்சரிக்கப்படுகிறது. எனவே தமிழில் இவ்விரு ஒலியன்களுக்கிடையே வேறுபாடு எதுவும் இல்லை. ஆனால்

மலையாளத்தில் இவ்விரு ஒலியன்களும் அதனதன் இடத்திலேயே ஒலிக்கப்படுவதால் இரண்டு ஒலிகளும் நன்கு வேறுபடுகின்றன

**1.5. உரசொலிகள் ( Fricatives )**

தமிழில் உரசொலிகள் சமஸ்கிருதத்திலிருந்து வந்ததாகக் கருதப்படுகிறது. எனவே இவை தமிழ் மொழியில் உபரி ஒலியன்களாகக் கருதப்படுகின்றன ( முனை.ச அகத்தியலிங்கம், தமிழ்மொழி அமைப்பியல், பக்-62). மாறாக, மலையாளத்தில் இவை அம்மொழியின் ஒலியன்களாகவே கருதப்படுகின்றன. அவையாவன,

1 குரல்வளை உரசொலி - ஹ
2. இடையண்ண உரசொலி - க்ஷ
3. பின் நுனியண்ண உரசொலி - ஷ
4. நுனியண்ண உரசொலி - ஸ
5. ஈரிதழ் உரசொலி - ஃப (fa)

**1.6. வருடொலி ( Flap / Tap / Trill )**

தமிழில் வருடொலியாக 'ர்' மட்டுமே உள்ளது. மலையாளத்தில் 'ர்' வும் 'ற்' றும் உள்ளன.

**1.7. மருங்கொலி ( Lateral )**

தமிழிலும் மலையாளத்திலும் இரண்டு மருங்கொலிகள் உள்ளன அவை,

1. நுனியண்ண மருங்கொலி - ல
2. பின் நுனியண்ண மருங்கொலி - ள

**1.8. தொடரொலி ( Continuent )**

தமிழிலும் மலையாளத்திலும் நாவளை தொடரொலி ( Retroflex Continuent ) ‘ழ’ ஆகும்

**1.9. உயிர்ப்போலி ( Approximant)**

தமிழிலும் மலையாளத்திலும் இரண்டு உயிர்ப்போலிகள் உள்ளன. அவை,

1. பல்லிதழ் உயிர்ப்போலி - வ

2 இடையண்ண உயிர்ப்போலி - ய

**1.3.2.2. உருபனியல் ( Morphology )**

ஒரு மொழியிலுள்ள ஒலியன்கள் ஒன்று சேர்ந்து ஒரு ஒலிகூறாகின்றது. இவ்வொலிக்கூறு பொருளுள்ளதாக அமையும் போது அது ஒரு உருபன் ஆகின்றது. ஒரு மொழியிலுள்ள உருபன் சொற்பொருள், இலக்கணப்பொருள் ஆகிய இரண்டையும் கொண்டிருக்கும். இவ்வாறு உருபன்களையும் அவற்றின் அமைப்பு, வருகைமுறை ஆகியவற்றைக் குறித்த அறிவு உருபனியல் எனப்படும்

**1.3.2.2.1. உருபன் ( Morpheme )**

ஒரு மொழியில் உருபன் என்பது ஒரு பொருளுடைய ஒலியக்கூறு. ஒரு உருபனை மேலும் பிரிக்க முடியாது. உருபன் மொழியில் தனித்து வந்தோ, சேர்ந்து வந்தோ அமையலாம். உருபன் அகராதிப்பொருள், இலக்கணப்பொருள் ஆகிய இரண்டையும் கொண்டோ அல்லது இவையிரண்டில் ஏதாவது ஒன்றை மட்டுமோ கொண்டு அமையலாம்.

தமிழிலும் மலையாளத்திலும் இத்தகைய உருபன் அமைப்பு காணப்படுகிறது. இரு மொழிகளும் மிகவும் நெருங்கிய தென் திராவிட மொழிகள் எனினும் அவை, தத்தமக்குரிய உருபன் அமைப்பில் மாறுபடுகின்றன. தமிழ் மொழி அதற்கே உரிய உருபனியலையும், மலையாள மொழி அதற்கேயுரிய உருபனியலையும் கொண்டு அமைந்துள்ளது. இதன் மூலம் தமிழும் மலையாளமும் உருபனியல் அளவில் மாறுபடுகின்றன என்பது புலனாகின்றது.

**1.3.2.2.2. தமிழ் மலையாளத்தில் பெயர்ச்சொற்கள்**

தமிழிலும் மலையாளத்திலும் ஒருமைப்பெயர்களும் பன்மைப்பெயர்களும் காணப்படுகின்றன. ஒருமைப்பெயர்களைக் குறிப்பிட இரு மொழிகளிலும் ஒட்டுக்கள் எதுவும் சேர்க்கப்படுவதில்லை.

பன்மைப்பெயர்களைக் குறிப்பிட கள், மார் போன்ற ஒட்டுக்கள் அல்லது பன்மை காட்டும் உருபன்கள் பெயர்களுடன் சேர்க்கப்படுகின்றன. பால், எண், இடம் குறித்த செய்திகள் பெயர்ச்சொல்லின் இறுதியில் இரு மொழிகளிலும் சேர்க்கப்படுகின்றன. பால் பாகுபாடு தமிழிலும் மலையாளத்திலும் காணப்படுகின்றது. தமிழில் பால்பாகுபாடு ஐந்து பிரிவுகளாக பிரிக்கப்பட்டுள்ளது. அவை, ஆண்பால், பெண்பால், பலர்பால், ஒன்றன்பால் மற்றும் பலவின்பால் என்பன. மலையாளத்தில் மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அவை, ஆண்பால், பெண்பால் மற்றும் பாலற்றது / நடுவம்பால் என்பன. தமிழ் மலையாளச் சொற்களில் அடுத்த பகுதியாக வேற்றுமைகள் அமைகின்றன. தமிழில் வேற்றுமைகள் எண்ணிக்கை எட்டு என்பர் மரபிலக்கண அறிஞர்கள். மலையாளத்தில் அவை ஏழு என்பர். தமிழில் வேற்றுமைகள் ஒன்று இரண்டு என எண் அடிப்படையிலும் உருபு அடிப்படையிலும் பெயரிடப்பட்டுள்ளன. மலையாளத்தில் வேற்றுமைகளுக்கு அம்மொழியின் இலக்கணவியலாளர்கள் தனித்தனிப்பெயரிட்டு அழைக்கின்றனர்.

### 1.3.2.2.3. தமிழ் மலையாளத்தில் மூவிடப்பெயர்கள்

இரு மொழிகளிலும் தன்மை, முன்னிலை, படர்கைப் பெயர்கள் உண்டு. இரு மொழிகளிலும் படர்கைப் பதிலிடு பெயர்கள் திணை, பால் எண் இட விகுதிகளை ஏற்று அமைகின்றன.

### 1.3.2.2.4. தமிழ் மலையாளத்தில் வினைச்சொற்கள்

தமிழிலும் மலையாளத்திலும் வினைச்சொற்கள் மூன்று காலங்களைக் கொண்டுள்ளன. அவை, இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என்பன. மூன்று காலங்களையும் காட்ட மூவகை காலங்கட்டும் உருபுகள் இரு மொழிகளிலும் வினைச்சொற்களில் பயன்படுத்தப்படுகின்றன. தமிழ் வினைமுற்றுக்களில் காலங்காட்டும் உருபுகளை அடுத்து பால், எண், இட உருபுகள் சேர்க்கப்படுகின்றன. மலையாள மொழியில் இவ்வுருபுகள்

இடம்பெறுவதில்லை. அவை, காலங்காட்டும் உருபுகளை மட்டும் ஏற்கின்றன. இரு மொழிகளிலும் பெயரெச்சம் மற்றும் வினையெச்ச வடிவங்கள் உண்டு.

### 1.3.2.3. தொடரியல்

தொடரியல் என்பது மொழியில் உள்ள வாக்கியங்களின் அமைப்பை விளக்குவது ஆகும். ( பேரா.கி.அரங்கன், தொடரியல் மாற்றிலக்கண அணுகுமுறை, 1985, பக் - 7 ).

தமிழும் மலையாளமும் தொடரியல் நிலையில் மிகக்குறைவான வேறுபாடுகளையே கொண்டுள்ளன.

#### 1.3.2.3.1. வாக்கிய அமைப்பு

தமிழும் மலையாளமும் எழுவாய், செயப்படுபொருள், வினை என்ற வாக்கிய அமைப்பினையே கொண்டுள்ளன. எனவே இவ்வமைப்பில் இருமொழிகளுக்கிடையே வேறுபாடு எதுவும் இல்லை.

சான்று:

| | | |
|---|---|---|
| சீதா | இராமனை | அழைத்தாள் |
| சீத | ராமனெ | விளிச்சு |
| எழு | செ.பொ. | வினை |

#### 1.3.2.3.2. சொல் வரிசை அமைப்பு

தமிழும் மலையாளமும் சுதந்திரச் சொல்வரிசை அமைப்பினை கொண்டவை.

#### 1.3.2.3.3. பின்னுருபுகள்

தமிழிலும் மலையாளத்திலும் தொடர்கள் பின்னுருபு அமைப்பினை உடையன. ஆங்கிலத்தில் தொடர்கள் முன்னுருபு அமைப்பினை உடையன.

சான்று:

த தோட்டத்தில்

ம தோட்டத்தில் ; ஆங் In the Garden

# 2. இயந்திர மொழிபெயர்ப்பும் மொழிமாற்ற இலக்கணமும்

2.2.1.1.1. தானியக்கமாக கணினியின் மூலம் உருவாக்குதல்

2.2.1.1.2. மனித முயற்சியால் உருவாக்குதல்

2.2.2. தமிழ் - மலையாளத்தில் மொழிமாற்று இலக்கணங்கள்

2.2.3. தமிழ் - மற்றும் மலையாள மொழிகளுக்கிடையே வேறுபாடுகள்

2.2.4. உருபனியல் - ஒற்றுமைகளும் வேற்றுமைகளும்

# 2. இயந்திர மொழிபெயர்ப்பும் மொழிமாற்ற இலக்கணமும்

### 2.1.1. இயந்திர மொழிபெயர்ப்பு ( Machine Translation )

"இயந்திர மொழிபெயர்ப்பு" ( Machine Translation ) என்பது ஒரு இயற்கை மொழியினை மற்றொரு இயற்கை மொழிக்கு கணினியின் மூலம் மொழிபெயர்ப்பு செய்வதைக் குறிக்கும். இது கணினி அறிவியலின் மிகப்பெரிய பரந்து விரிந்த துறையும் செயற்கை நுண்ணறிவின் உட்பிரிவும் (Artificial Intelligence) ஆகும்.

### 2.1.2. செயற்கை நுண்ணறிவு (Artificial Intelligence)

"செயற்கை நுண்ணறிவு" என்பது கணினியை மனித அறிவுடன் செயல்படத்தூண்டுவது ஆகும். இயந்திர மொழிபெயர்ப்பும் செயற்கை நுண்ணறிவும் மிகவும் சவாலான துறை ஆகும்.

### 2.1.3. இயந்திர மொழிபெயர்ப்பு அமைப்பு / இயந்திர மொழிபெயர்ப்பி

**( Machine Translation System )**

இயந்திர மொழிபெயர்ப்பு அமைப்பு / இயந்திர மொழிபெயர்ப்பி எனப்படுவது, ஒரு மொழியிலுள்ள உரையினை உள்ளீடாக எடுத்துக்கொண்டு அதனை மற்றொரு மொழிக்கு மொழிபெயர்ப்பு செய்து வெளியீடாகத் தரும் கணினி நிரல் ஆகும் மொழிபெயர்ப்பு செய்வதற்காக உள்ளீடு செய்யப்படும் மொழி மூலமொழி எனப்படும் ( Source Language ). மொழிபெயர்ப்புக்குட்பட்டு வெளியீடாகப் பெறப்படும் மொழி இலக்கு மொழி (Target Language) எனப்படும்.

### 2.1.4. இயற்கை மொழி ( Natural Language )

இயற்கையாகத் தோன்றி, மனிதனால் தொன்றுதொட்டு பேசப்பட்டு வரும் மொழிகள் "இயற்கை மொழிகள்" எனப்படும். சான்றாக தமிழ்,

மலையாளம், ஆங்கிலம் போன்றவை செயற்கையாக உருவாக்கப்பட்ட மொழிகள் "செயற்கை மொழிகள்" (Artificial Languages) எனப்படும் சான்றாக, கணினிக்காக உருவாக்கப்பட்ட மொழிகளான சி, சி++, எஸ் கியூ எல் (SQL) மற்றும் 1887-ல் எல் எல் சாமன்கோஃப் என்பவரால் செயற்கையாக உருவாக்கப்பட்ட "எஸ்பராந்தோ" எனும் மொழி ஆகியன செயற்கை மொழிகள் ஆகும்

**2.1.5. இயற்கை மொழி ஆய்வு ( Natural Language Processing) / கணினி மொழியியல் (Computational Linguistics )**

"இயற்கை மொழியாய்வு" என்பது மனித மொழியினை கணினியின் மூலம் அதன் அனைத்து இயல்புகளோடும் மொழியியலின் அனைத்து மொழியியலாய்வு நிலைகளிலும் ஆய்வு செய்வது" என்பார் முனை கு சுப்பையாப்பிள்ளை ( இயற்கை மொழியாய்வு - தமிழ், 2003, பக் 5).

இயற்கை மொழியாய்வு, கணினி மொழியியல் ( Computational Linguistics ) என்றும் அழைக்கப்படுகின்றது இன்று உலகெங்கிலும் கணினித்துறையிலும் மொழியியல் துறையிலும் ஒரு பிரிவாக கணினி மொழியியல் பயிற்றுவிக்கப்படுகிறது இயந்திர மொழிபெயர்ப்பு அமைப்பு ஒன்றில் மூலமொழியாகவும், இலக்குமொழியாகவும் அமைவது இயற்கை மொழியே ஆகும் இதன் மூலம் ஒரு இயந்திரமொழிபெயர்ப்பு அமைப்பு இயற்கை மொழியாய்வுப் பணியையே செய்கிறது என்பதனை அறியலாம்

**2.1.6. இயந்திர மொழிபெயர்ப்பு முயற்சிகள் - வரலாறு**

1. "இயந்திர மொழிபெயர்ப்பு" என்னும் கருத்துரு 17 ஆம் நூற்றாண்டில் பிரான்சிய அறிவியலாளர் இரெனே இடேக்கார்ட்டு என்பவரால் 1629 ஆம் ஆண்டு உருவாக்கப்பட்டது ( W. John Hutchins and Harold L Somers, "An Introduction to Machine Translation, Academic Press 1992 பக் - 5-7 ) அவர் பொது மொழி ( Universal Language ) எனப்படும் கருத்தினை

முன்வைத்தார். அதன்படி எல்லா மொழிகளிலும் ஒரே பொருளைத்தரும் சொற்களை பொதுமொழியில் ஒரு குறியீட்டில் அமைத்து அதனையே எல்லா மொழிகளிலும் அமைத்து, சொல்லுக்குச் சொல் மொழிபெயர்க்கலாம் என்னும் கருத்து நிலவியது. இவ்வாறு 1661-ல் பெக்கர் என்பார் பத்தாயிரம் இலத்தீன் சொற்களுக்கு குறியீடுகள் அமைத்து ஒரு அகராதியையே உருவாக்கினார். ( ஹட்சின்ஸ் W. ஜான், 1986, Machine Translation, Past, Present, Future ).

2. முதன் முதலில் 1949-ஆம் ஆண்டு இயந்திர மொழிபெயர்ப்பு ஒரு தனித்துறையாக அமெரிக்க அறிவியல், கணிதவியல் வல்லுனரான 'வாரன் வீவர்' என்பவரால் கருதப்பட்டது.

3. "இயந்திர மொழிபெயர்ப்பு" குறித்த ஆய்வு முதன் முதலில் அமெரிக்காவில் மசாசுசெட்ஸ் தொழில்நுட்பக் கழகத்தில்தான் (Massachusetts Institute of Technology) தொடங்கப்பட்டது. யெகோசுவா பார் ஹிலல் (Yehoshua Bar Hilel) என்பவர் தான் முதல் இயந்திர மொழிபெயர்ப்பு ஆய்வாளர் ஆவார். இவர் இந்நிறுவனத்தில் முழுநேர ஆய்வாளராக அமர்த்தப்பட்டு, இயந்திர மொழிபெயர்ப்பு குறித்த ஆய்வுகள் நடத்தப்பட்டன. யெகேசுவா தன் ஒரு வருட ஆய்விற்குப்பிறகு தான் கண்ட ஆய்வு முடிவுகளை சமர்ப்பித்தார் அவை கீழ்க்காணும் கருத்துக்களைக் கொண்டிருந்தன.

1. மொழிபெயர்ப்பு செய்வதற்காக எடுத்துக்கொள்ளப்படும் மொழிகளின் பெயர்த்தொடர், வினைத்தொடர் போன்ற தொடரியல் கூறுகளுக்கிடையே அமைந்துள்ள தொடரியல் உறவுகளும் அது அமையும் விதிமுறைகளும் நன்கு ஆய்ந்து அறியப்படுதல் வேண்டும்.
2. இயந்திர மொழிபெயர்ப்புக்கு உட்படுத்தப்படும் மொழிகள் கணினிக்கு ஏற்ப சில கட்டுப்பாடுகளுடன் மாற்றியமைக்கப்படல் வேண்டும்.

3. மொழிபெயர்ப்பின்போது தேவைப்படும் இடங்களில் மனிதனின் உதவியும் அளிக்கப்படலாம்

இவை போன்ற கருத்துக்கள் இவ்வாய்வாளரின் மூலம் முன்வைக்கப்பட்டன

4. இதன் பிறகு, 1954 - ஆம் ஆண்டு ஜனவரி மாதம் அமெரிக்காவின் ஜார்ஜ் டவுண் பல்கலைக்கழகமும், ஐ.பி.எம். (IBM) நிறுவனமும் ஒன்றிணைந்து செயல்பட்டு, 49 உருசிய மொழித்தொடர்களை ஆங்கிலத்திற்கு மொழிபெயர்த்தது. இத்திட்டம் மக்கள் முன்னிலையில் விளக்கப்பட்டது. இவ்வாறு முதன்முதலில் மக்களின் கவனத்திற்கு கொண்டு செல்லப்பட்ட இயந்திர மொழிபெயர்ப்புத்திட்டம் இதுவே ஆகும். இம்முயற்சியின் இரண்டு பண்புகள் ஆவன,

1. 200 சொற்கள் மட்டுமே இம்மொழிபெயர்ப்பு அமைப்பில் பயன்படுத்தப்பட்டன
2. ஆறு இலக்கண விதிகள் மட்டுமே அமைக்கப்பட்டிருந்தன.

இதன் மூலம் நாற்பத்தியொன்பது உருசிய மொழித்தொடர்கள் ஆங்கிலத்திற்கு மொழிபெயர்க்கப்பட்டன

5. இதன் பின்பு 1962 - ல் ஆங்காங்கே நடக்கும் இயந்திர மொழிபெயர்ப்பு ஆய்வுகளை ஒன்றிணைக்கும் பொருட்டு, 1962 - ஆம் ஆண்டு இயந்திர மொழிபெயர்ப்பு மற்றும் கணினி மொழியியல் அமைப்பு ( Association for Machine Translation and. Computational Linguistics - AMTCL ) அமைக்கப்பட்டது.

6. 1964-ல் அமெரிக்க அரசால், இயந்திர மொழிபெயர்ப்பின் வெற்றிவாய்ப்புக்களை கணக்கிடுவதற்காக, தானியங்கு மொழிபெயர்ப்பிற்கான அல்பாக் அறிவுரைக் குழு ( Automatic Language Processing Advisory Committee – ALPAC ) ஒன்று அமைக்கப்பட்டது ஏழு அமெரிக்க அறிவியலறிஞர்களைக் கொண்ட இந்தக்குழு 1966 - ல்

அதன் அறிக்கையினை அரசுக்கு சமர்ப்பித்தது அதில் கீழ்க்காணும் முடிவுகள் கூறப்பட்டிருந்தன

- ✓ தானியங்கி மொழிபெயர்ப்பு என்பது காலவிரயத்தினை ஏற்படுத்தக்கூடியது.
- ✓ துல்லியத்தன்மை அற்றது.
- ✓ மனித மொழிபெயர்ப்பினை விட செலவுமிக்கது
- ✓ எதிர்பார்க்கும் அளவிற்கு இதன் வெற்றி அமையாது

என்பன போன்ற முடிவுகளை அல்பாக் பரிந்துரைக்குழு வெளியிட்டது. இதன் விளைவாக,

அ. இயந்திர மொழிபெயர்ப்பு முயற்சியில் மேலும் பணமுதலீடு செய்தல் வேண்டாம் இதற்குப்பதில் மொழிபெயர்ப்பாளர்களுக்குத் தேவையான மொழியாய்வுக் கருவிகள், மின் அகராதிகள் தயாரித்து வழங்கலாம்

ஆ. கணினி மொழியியல் தொடர்பான அடிப்படை ஆய்வுகளை ஊக்குவிக்கலாம்; ஆகிய முடிவுகள் எடுக்கப்பட்டன.

அல்பாக்கின் முடிவுகளை அனைத்து இயந்திர மொழிபெயர்ப்பாளர்களும் ஏற்றுக்கொள்ளவில்லை எனினும் அமெரிக்காவில் இயந்திர மொழிபெயர்ப்பினையே கைவிடும் அளவிற்கு அதன் தாக்கம் அமைந்தது. அமெரிக்காவில் இயந்திர மொழிபெயர்ப்புகளுக்காக செலவிடப்படும் நிதியும் நிறுத்திவைக்கப்பட்டது இதனால் சிலகால அளவுவரை அங்கு இம்முயற்சிகள் எதுவும் எடுக்கப்படவில்லை ஆனால் கனடா, ஜப்பான், உருசியா போன்ற பிற நாடுகளில் இயந்திரமொழிபெயர்ப்பு முயற்சிகள் பெரும் வரவேற்பைப்பெற்று மேற்கொள்ளப்பட்டன. அக்காலத்தில் வடிவமைக்கப்பட்ட சில இயந்திர மொழிபெயர்ப்புத் திட்டங்களாவன,

### 2.1.6.1. சிஸ்ட்ரான் ( SYSTRAN )

சிஸ்டம் டிரான்ஸ்லேஷன் என்பதன் சுருக்கமே சிஸ்ட்ரான் எனப்படும் இது 1950-ல் ஜார்ஜ்டவுண் பல்கலைக் கழகத்தில் பீட்டர் டோமா என்பவரால் உருவாக்கப்பட்டு, 1969-ல் அமெரிக்காவின் ரைட் பேட்டர்சன் ஒகியோ பிரிவு விமானப்படையில் சோதனை செய்து பார்க்கப்பட்டது இம்மொழிபெயர்ப்பு அமைப்பு ஏராளமான அறிவியல் மற்றும் தொழில்நுட்ப ஆவணங்களை உருசிய மொழியிலிருந்து ஆங்கில மொழிக்கு அமெரிக்க விமானப்படைக்காக மொழிபெயர்த்தது. இது விதி அடைப்படையிலான இயந்திர மொழிபெயர்ப்பு அணுகுமுறையில் (Rule Based) அமைக்கப்பட்டிருந்தது மேலும் சிஸ்ட்ரான் பல இணை மொழிகளுக்கிடையே மொழிபெயர்க்குமாறு வடிவமைக்கப்பட்டு இருந்தது அம்மொழியிணைகளாவன,

ஆங்கிலம் - பிரெஞ்சு

ஆங்கிலம் - செருமன்

ஆங்கிலம் - எசுப்பானியம்

ஆங்கிலம் - ஸ்பானிஷ்

ஆங்கிலம் - இத்தாலி

ஆங்கிலம் - போர்த்துகீசியம்

செருமன் - பிரெஞ்சு

செருமன் - எசுப்பானியம்

செருமன் - ஸ்பானிஷ்

செருமன் - இத்தாலி

என்பனவும், இன்னும் பல மொழியிணைகளுக்கு இடையேயும் அமைக்கப்பட்டிருந்தது. இத்திட்டம் மக்களிடையே பெரும் வரவேற்பினைப் பெற்றது பல்வேறு நிறுவனங்கள் இதனை மேம்படுத்த நிதியளிக்கத் தொடங்கின.

#### 2.1.6.2. யூரோட்ரா ( EUROTRA )

இது 1978-ல் ஐரோப்பாவின் அனைத்து ஆட்சி மொழிகளுக்கிடையேயும் அமைக்கப்பட்ட இயந்திர மொழிபெயர்ப்பு அமைப்பு ஆகும். இதில் டானிஷ், டச்சு, ஆங்கிலம், பிரெஞ்சு, செருமன், இத்தாலி, கிரேக்கு, எசுப்பனியம் மற்றும் போர்த்துக்கீசியம் என ஒன்பது ஐரோப்பிய மொழிகளும் எழுபத்தியிரண்டு மொழியிணைகளும் அடங்கியிருந்தன இவ்வியந்திர மொழிபெயர்ப்பு அமைப்பு, 1982-ஆம் ஆண்டு, ஐரோப்பிய அரசால் அதிகாரப்பூர்வமாக ஏற்றுக்கொள்ளபட்டு, பல ஆய்வுகள் அதில் நிகழ்த்தப்பட்டு, மேலும் சிறப்பாக வடிவமைக்கப்பட்டது.

#### 2.1.6.3. சூசி (SUSY)

சூசி இயந்திர மொழிபெயர்ப்பு அமைப்பு 1972 - ல் உருசியன் செருமன் மொழியிணைகளுக்கிடையே அமைக்கப்பட்டது. இது ஆய்தல், மாற்றம், உருவாக்கம் என்னும் முறையில் அமைக்கப்பட்டது. இது மாற்றல் பகுதி உருபனியல் ஆய்வு, தொடர் ஆய்வு, பொருள் மயக்கம் நீக்குதல், மாற்றியமைத்தல், பொருண்மை உருவாக்கம், தொடர் உருவாக்கம், மற்றும் உருபனியல் உருவாக்கம் போன்ற பல பகுதிகளைத் தன்னகத்தே கொண்டு வடிவமைக்கப்பட்டது இது ஃபோர்ட்ரான் (FORTRAN) எனும் கணினி மொழியால் எழுதப்பட்ட பழமையான கட்டமைப்பை உடையது

#### 2.1.6.4. மெட்டியோ (METEO)

கனடா நாட்டின் மாண்ட்ரியால் ( MONTREAL ) பல்கலைக்கழகத்தால் 1976 - ல் தயாரிக்கப்பட்டு; 1982 முதல் அந்நாட்டின் வானிலை அறிக்கைகளை மொழிபெயர்ப்பதற்கு பயன்படுத்தப்பட்டது. குறிப்பாக, கனடாவின் கியூபெக் பகுதியில் பிரெஞ்சு மொழியில் வெளியிடப்படும் வானிலை அறிக்கையினை ஆங்கிலத்திற்கு மொழிபெயர்க்கவும், கனடாவின் பிற பகுதிகளில் ஆங்கிலத்தில் வெளியாகும் வானிலை அறிவிப்புகளை பிரெஞ்சு மொழிக்கு மொழிபெயர்க்கவும்

பயன்படுத்தப்பட்டது. இது மிகச்சிறப்பாக வடிவமைக்கப்பட்டு தற்போதும் செயலாற்றும் ஒரு இயந்திர மொழிபெயர்ப்பு அமைப்பு ஆகும்.

**2.1.6.5. ஏரியன் கீட்டா ( ARIANE GETA)**

ஏரியன் கீட்டா என்னும் இயந்திர மொழிபெயர்ப்புத்திட்டம் 1960-1970 ஆம் ஆண்டுகளில் உருவாக்கப்பட்டது. இவ்வமைப்பு பெர்னார்டு வான்குயிஸ் என்பாரின் தலைமையிலான ஆய்வுக்குழுவால் பிரான்சு நாட்டின் கிரினோபிள் பல்கலைக்கழகத்தின் இயந்திர மொழிபெயர்ப்பு ஆய்வு மையத்தால் ( Centre for the Study of Machine Translation ) உருவாக்கம் பெற்றது. இது உருசியன்- பிரெஞ்சு மற்றும் செருமன் - பிரெஞ்சு மொழிகளுக்கிடையே மொழிபெயர்ப்பு செய்யும் விதம் அமைக்கப்பட்டது. இந்த உருசியன் - பிரெஞ்சு மொழிபெயர்ப்பு அமைப்பு விண்வெளி ஆய்வு மற்றும் உலோகவியல் சார்ந்த எழுபதாயிரம் உருசியன் சொற்களைக்கொண்டுள்ளது.

**2.1.6.6. மெட்டல் ( METAL )**

மெட்டல் (Mechanical Translation and Analysis of Languages) என்பது செருமன் - ஆங்கிலம் மொழிபெயர்ப்பு மென்பொருள் ஆகும். இது அமெரிக்க அரசின் விமானப்படையால் நிதியுதவி செய்யப்பட்டு டெக்சாஸ் பல்கலைக்கழகத்தின் மொழியியல் துறையால் வடிவமைக்கப்பட்ட இயந்திரமொழிபெயர்ப்பு அமைப்பு. இது தொழில்நுட்பச்செய்திகள் அடங்கிய உரைகளை மொழிபெயர்ப்பதற்காக வடிவமைக்கப்பட்டது ஆகும். மாற்றல் அணுகு முறையின் (Transfer Method) மூலம் இவ்வமைப்பு செயல்படுகிறது. உருபனியல் ஆய்வும், தொடரமைப்பு இலக்கணமும் (Phrase Structure Grammar) இதில் பயன்படுத்தப்படுகின்றன.

**2.1.6.7. சீனப்பல்கலைக்கழக மொழிபெயர்ப்பி (Chinese University Language Translator)**

இத்திட்டம் ஐ.பி.எம் நிறுவனத்தால் 1969-ல் தயாரிக்கப்பட்டு, 1972-ல் வெளிவந்தது. இது சீன மொழியில் உள்ள "அக்டா மேத்தமெட்டிக்கா " ( ACTA

MATHEMATICA ) என்னும் கணித நூலை ஆங்கிலத்தில் மொழிபெயர்ப்பதற்காக தயாரிக்கப்பட்டது. இம்மென்பொருள் மேலும் மேலும் வலுவூட்டப்பட்டு, சீன - ஆங்கில மொழிகளுக்கிடையே மொழிபெயர்ப்புப்பணியினைச் செய்வதற்காக பயன்படுத்தப்பட்டது.

தற்போது தனியார் நிறுவனங்களான ஹிட்டாச்சி, மிட்சுபிசி, நோவா, தோஷிபா, ஷார்ப் போன்ற நிறுவனங்கள் தானியங்கு இயந்திர மொழிபெயர்ப்பு அமைப்புகளை உருவாக்கும் முயற்சியில் மும்முரமாக களமிறங்கி உள்ளன.

( W. John Hutchins, University of East Anglia, Norwich, Recent Developments in Machine Translation - A review of the last five Years).

## 2.1.7. இயந்திர மொழிபெயர்ப்பியின் பாகங்கள்

ஒரு இயந்திர மொழிபெயர்ப்பு அமைப்பு பொதுவாக கீழ்க்காணும் பகுதிகளைக் கொண்டிருக்கும். அவையாவன,




( Durgesh D Rao, Machine Translation, A Gentle Introduction 1998).

ஒரு இயந்திர மொழிபெயர்ப்பியை பொதுவாக மூன்று பாகங்களை உள்ளடக்கியதாகக் கருதலாம்.

அவை,

1. உள்ளீடாகக் கொடுக்கப்படும் மூ.மொ.யினை ஆராயும் பகுதி (ANALYSER).
2. மூ.மொ.யினை ஆராய்ந்து கணினிக்குப்புரியும் விதத்தில் எழுதப்பட்ட குறியீட்டு வடிவத்தினை இ.மொ.க்கு ஏற்ப மாற்றும் பகுதி (TRANSFER ).
3. இ.மொ.யினை உருவாக்கும் பகுதி (GENERATOR).

எனவே, ஒரு இயந்திர மொழிபெயர்ப்பி, ஆராயும் பகுதி, மாற்றும் பகுதி, உருவாக்கும் பகுதி என மூன்று பகுதிகளைக்கொண்டிருக்கும். மேலும் இம்மூன்று பாகங்களும் மூ.மொழி. மற்றும் இ.மொழி. யின் சொற்களையும் மொழியியல் செய்திகளையும் தன்னகத்தே கொண்டிருக்கும். சொற்கள் குறித்த செய்திகள் அகராதிகளாகவும், மொழியியல் குறித்த செய்திகள் இலக்கண வடிவிலும் இவ்வமைப்பில் சேமிக்கப்பட்டு இருக்கும்.

**2.1.8. அகராதி (Lexicon )**

ஓர் இயந்திர மொழிபெயர்ப்பிக்கு அகராதி இன்றியமையாத பகுதி ஆகும். மூ.மொ. மற்றும் இ.மொ. யின் சொற்கள், சொற்றொடர்களைக் குறித்து மொழிபெயர்ப்புக்குத் தேவைப்படும் அனைத்து செய்திகளையும் இவ்வகராதி கொண்டிருக்கும். எனவே அகராதியிலுள்ள ஒரு சொல்லானது, கீழ்க்காணும் செய்திகளைக் கொண்டிருக்கும்.

1. அச்சொல் குறித்த சொல் வகைப்பாடு
2. உருபனியல் செய்திகள்
3. அச்சொல்லுடன் தொடர்புடைய சொற்கள்
4. அச்சொல் இடம்பெறும் தொடர்கள்
5. அச்சொல்லின் பல்வேறு பொருண்மைகள்
6. அச்சொல்லுக்கு நிகரான இ.மொ. சொல் குறித்த செய்திகள்

ஓர் இயந்திர மொழிபெயர்ப்பியில் அமைக்கப்படும் அகராதி எந்திரத்தால் கையாளப்படுகிறது. இயந்திரத்திற்கு மனிதன் பயன்படுத்தும் எந்த ஒரு மொழியினைக்குறித்தும் எவ்வித அறிவும் கிடையாது. ஆனால்

மனிதன்; தான் அறிந்த மொழியினைக்குறித்த பரந்த அறிவினை அவனுக்குத் தெரியாமலேயே தன்னகத்தே கொண்டுள்ளான் எனவே, மனிதன் சாதாரணமாகப் பயன்படுத்தும் அகராதிகளில் இருக்கும் செய்திகளை விட ஏராளமான செய்திகளை ஓர் இயந்திரம் பயன்படுத்தும் அகராதி தன்னகத்தே கொண்டிருக்க வேண்டும் எனவே தற்கால இயந்திர மொழிபெயர்ப்பிகள் பயன்படுத்தும் அகராதிகள் அனைத்துமே இத்தேவைக்கு ஏற்ப விரிவான தகவல்களையும் உள்ளடக்கி, சிறப்பாக வடிவமைக்கப்படுகின்றன.

**2.1.9. இயந்திர மொழிபெயர்ப்பு அணுகுமுறைகள் (Approaches to Machine Translation)**

ஒவ்வொரு காலகட்டத்திலும் தொழில்நுட்பமும் மொழியை மனிதன் புரிந்துகொள்ளும் திறனும் மாறுவதற்கேற்ப இயந்திரமொழிபெயர்ப்பு அணுகுமுறைகளும் மாறிக்கொண்டு வருகின்றன. இயந்திர மொழிபெயர்ப்பு தோன்றிய காலம் முதல் மூன்று வித அணுகுமுறைகள் நிலவி வந்துள்ளன. இவற்றை இருவகைளின் கீழ் அடக்கலாம். அவையாவன,

1. நேரடி அணுகுமுறை
2 மறைமுக அணுகுமுறை

**2.1.9.1. நேரடி அணுகுமுறை (Direct Approach)**

இவ்வணுகுமுறை 1950 - 1970 ஆம் ஆண்டுகளில் செயல்பாட்டில் வந்த முறை ஆகும். இக்காலகட்டத்தில் வழக்கிலிருந்த இவ்வணுகுமுறை 'பைனரி அணுகுமுறை' என அழைக்கப்பட்டது இம்முறை மிக எளியது இம்முறையில், உள்ளீடாகக் கொடுக்கப்படும் மொழியானது மிகக்குறைந்த அளவு ஆய்வுக்கே உட்படுத்தப்படுகிறது உள்ளீடாகக் கொடுக்கப்படும் மூ.மொழிச் சொற்களுக்கு நிகரான இ.மொ சொற்களை இட்டு, மிகச்சில இலக்கணக்கூறுகளை மட்டும் உட்படுத்தி, இவ்வணுகுமுறையில் மொழிபெயர்ப்பு செய்யப்படுகிறது மேலும் இவ்வணுகுமுறையினை ஓர்

இணை மொழிகளுக்கு இடையில் மட்டுமே செயல்படுத்த இயலும் எடுத்துக்கொள்ளப்படும் மொழிகள் மிகக்குறைவான ஆய்வுக்கே உட்படுத்தப்பட்டன இவ்வாறு அமைக்கப்படும் அமைப்பில், பெரிய இருமொழி அகராதி ஒன்று இருக்கும். மொழியினை ஆய்வு செய்வதற்கும் உருவாக்குவதற்குமான, ஒரு கணினி வழியமைப்பும் இருக்கும். இவ்வணுகுமுறையில் அமைக்கப்பட்ட ஓர் இயந்திர மொழிபெயர்ப்பியினை மற்றுமொரு மொழி இணைக்கு பயன்படுத்த இயலாது சான்றாக, தமிழ்-மலையாள மொழிகளுக்குப் பயன்படுத்திய அமைப்பினை, தமிழ் - ஆங்கிலத்துக்குப் பயன்படுத்திட இயலாது. இதுவே இத்திட்டத்தின் முக்கியக் குறைபாடாகக் கருதப்படுகிறது. இதனை சொல்லுக்குச் சொல் மொழிபெயர்க்கும் முறை என்றும் அழைப்பர்.

2.1.9.2. மறைமுக அணுகுமுறை

நேரடி அணுகுமுறையின் இரு இணை மொழிகள் அமைப்பினையும் அது பிற மொழிகளுக்கு பயன்படுத்த இயலாமையினையும் கருத்தில்கொண்டு; 1970-1980 - களில் மறைமுக அணுகுமுறைகள் வடிவமைக்கப்பட்டன. மறைமுக அணுகுமுறைகளில் இடைநிலைமொழி அணுகுமுறையும், மாற்றல் அணுகுமுறையும் அடங்கும்.

**2.1.9.2.1. இடைநிலைமொழி அணுகுமுறை ( Interlingua Approach)**

இடைநிலைமொழி அணுகுமுறையில் மூ.மொழிக்கும், இ.மொழிக்கும் இடையில் ஒரு இடைநிலை மொழியொன்று வடிவமைக்கப்படும். இது ஒன்றுக்கும் மேற்பட்ட மொழிகளுக்குப் பொருந்தும் வகையில் அமைக்கப்பட்டு இருக்கும் இவ்வமைப்பில் மூ.மொழியானது ஒரு இடைநிலை மொழியாக மாற்றியமைக்கப்படும். இவ்விடைநிலை மொழியானது இயற்கை மொழியாகவோ அல்லாமலோ இருக்கலாம். வெறும் கணிதக் குறியீடுகளை மட்டும்

உள்ளடக்கியதாகவும் இருக்கலாம். இவ்விடைநிலை மொழி வடிவம், இ.மொழியினை உருவாக்கத் தேவையான மிகப்பெரும்பாலான மூ.மொழியின் செய்திகளையும் கொண்டிருக்கும். இ.மொழியானது இவ்விடைநிலைமொழியினை உட்படுத்தி உருவாக்கப்படும். இவ்வணுகு முறையானது, பன்மொழி மொழிபெயர்ப்பியினை உருவாக்கிடச் சிறந்ததாகக் கருதப்படுகிறது.

இம்முறையில், ஒரு மொழியினை மூலமொழியாக ஆய்வுக்கு எடுத்துக்கொண்டு, பல இலக்குமொழி உருவாக்கிகளை இணைத்து, பல இலக்கு மொழிகளைப் பெற இயலும்.




### 2.1.9.2.2. மாற்றல் அணுகுமுறை (Transfer Approach)

மறைமுக அணுகுமுறைகளில் மாற்றல் அணுகுமுறை இரண்டாவதுமுறை ஆகும். மாற்று வழி அணுகுமுறையில் முதலில் மூலமொழியானது உட்புற மூலமொழிக்குறியீட்டு வடிவமாக மாற்றப்படும். இது முற்றிலும் மூலமொழியினைச் சார்ந்த அமைப்பு ஆகும். இரண்டாவதாக, இவ்வுட்புற மூ.மொழிக்குறியீட்டு வடிவம் உட்புற

இ.மொ.குறியீட்டு வடிவமாக மாற்றப்படும். இது முற்றிலும் இலக்குமொழியினைச் சார்ந்து அமையும். மூன்றாவது நிலையில் இ.மொழியின் உட்புறக்குறியீட்டு வடிவத்திலிருந்து இ.மொ உருவாக்கப்படும்.

இதனைக் கீழ்க்கண்டவாறு விளக்கலாம்.




மாற்றுவழி அணுகுமுறையே தற்காலத்தில் பரவலாகப் பயன்படுத்தப்படும் முறை ஆகும். மந்திரா இயந்திர மொழிபெயர்ப்புத் திட்டம் (1999) மற்றும் சம்பர்க் இந்திய மொழிகளுக்கிடையேயான இயந்திர மொழிபெயர்ப்புத்திட்டம் (2009) என்பவை மாற்றுவழி அணுகுமுறையில் அமைக்கப்பட்ட திட்டங்கள் ஆகும்.

### 2.1.10. இயற்கைமொழி ஆய்வின் நிலைகள்

இயந்திர மொழிபெயர்ப்பிகளை உருவாக்கிட, இயற்கை மொழியினை பல்வேறு படிநிலைகளைக் கொண்ட மொழியியல் ஆய்வுகளுக்கு

உட்படுத்திட வேண்டும் அம்மொழியியல் படிநிலைகளின் கடினத்தன்மைக்கு ஏற்ப, அவை கீழ்க்கண்டவாறு வகைப்படுத்தப்படுகின்றன.

1. சொல்நிலை ( The Lexical Level/ Word Level )
2. தொடரியல் நிலை ( The syntactic Level/ The Sentence Level)
3. பொருண்மையியல் நிலை (The Semantic Level/ Meaning Level)
4. சொல்லாடல் மற்றும் சூழல் பொருண்மை நிலை ( The Discourse and Pragmatic Level ).

( Durgesh Rao, Machine Translation ; A Gentle Introduction, National Centre for Software Technology, Mumbai ).

**2.1.10.1. சொல்நிலை**

இந்நிலையில் உள்ளீடாகக் கொடுக்கப்படும் சொற்களானது ஒவ்வொரு எழுத்துக்களாகப் படிக்கப்படும். பின்பு பல குறியீடுகளாக (TOKEN) இச்சொற்கள் பிரிக்கப்படுகின்றன. இடைவெளி, நிறுத்தற்குறி, சொற்பிழை போன்றவைகளை இந்நிலை ஆராயும். ஒரு தொடரை உள்ளீடாகக் கொடுத்தால் அத்தொடரில் எத்தனை சொற்கள் உள்ளன என்று . அதன் எண்ணிக்கையையும் தெரிவிக்கும். இதனை அடையாளப்படுத்தல் (Tokenisation) அல்லது சொல் ஆய்வு ( Lexical Analysis ) என்பர்

சான்றாக,

மாலா நேற்று வருவாள்

எனும் ஒரு தொடர் உள்ளீடாக் கொடுக்கப்பட்டால், இத்தொடர் மூன்று அடையாளங்களைக் (Tokens) கொண்டது என்றும்; வருவாள் எனும் இறுதிச்சொல் தவறு என்றும் குறிப்பிடும் ஏனெனில் இச்சூழலில்;

வருவாள் எனும் சொல்லோடு நேற்று எனும் சொல் வராது எனும் செய்தி கணினியில் பதிவுசெய்யப்பட்டு இருக்கும்.

### 2.1.10.2. தொடரியல் நிலை

இந்நிலையில் உள்ளீடாகக் கொடுக்கப்படும் தொடரின் அமைப்பு ஆராயப்படும். இதில் ஒரு தொடரியல் பகுப்பான் ( Parser) இருக்கும். இத்தொடரியல் பகுப்பான் ஒரு தொடரின் இலக்கணத்தினைச் சரிபார்க்கும். மேலும் சார்பு இலக்கணம் (Dependency Grammar ), தொடரமைப்பு இலக்கணம் ( Phrase structure Grammar ), கிளை இணைப்பு இலக்கணம் ( Tree Adjoining Grammar ) போன்ற ஏதாவது ஒரு இலக்கண வடிவமைப்பின் அடிப்படையில் தொடர்களுக்கு பகுப்புக்கிளை தரும் ( Parser ). இவ்வாறு தொடரிலக்கண முறையில் ஒரு வாக்கியத்தின் பகுப்புக்கிளையினை உருவாக்க இயலுமாயின் அத்தொடர் சரியானதாக இருக்கும். உள்ளீடு செய்யப்பட்ட தொடரின் பகுதிகளின் இலக்கண அமைப்பும், செயல்பாடும் பகுப்புக்கிளையின் மூலம் பெறப்படும். ஒரு தொடர் எச்சத்தொடரா, அல்லது பெயர்த்தொடரா என்று இத்தொடர் பகுப்பான் ஆய்ந்து சொல்லும்.

### 2.1.10.3. பொருண்மையியல் நிலை

உள்ளீடு செய்யப்படும் உரையின் பாகங்களும் அதன் பொருண்மையும் இந்நிலையில் ஆராயப்படும். சொற்பொருள்மயக்கமும் இந்நிலையில் நீக்கப்படும். பொருண்மையியல் நிலை, மொழிபெயர்ப்பு குறித்த உலக அறிவையும், மொழிபெயர்ப்புக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட களத்தில் (Domain) உள்ள சொற்கள் மற்றும் அதன் பல்வேறு பொருள் குறித்த உலக அறிவையும் உள்ளடக்கியது

### 2.1.10.4. சொல்லாடல் மற்றும் சூழல் பொருண்மையியல் நிலை

ஒரு தொடர் வெவ்வேறு சூழல்களில் வெவ்வேறு பொருள்களைத் தரவல்லது. இவ்வாறு ஒரு தொடரின் பொருள் அதன் சூழலுக்கு ஏற்றதாகப், பொருள்கொள்ளப்படுவதே சூழல்பொருண்மை எனப்படும். எனவே இந்நிலையில் மூ.மொழியில் உள்ளீடு செய்யப்பட்டுள்ள உரை இ.மொழியில் சரியான பொருளைக் கொண்டுள்ளதா எனச் சரிபார்க்கப்படும்.

ஓர் இயந்திர மொழிபெயர்ப்பு அமைப்பு இயற்கை மொழியினை ஆராயும் போது மேற்கண்ட மொழியியல் நிலைகள் அனைத்தையும் சிறப்பாக பயன்படுத்த வேண்டும். மூ.மொழி ஒன்று இலக்குமொழியாக கணினியின் வழியாக மொழிபெயர்க்கப்படுகையில் மூ.மொழியானது மேற்கண்ட எல்லா நிலைகளிலும் இலக்கு மொழியாக அமைக்கப்படல் வேண்டும். அப்போது மட்டுமே பிழையற்ற சிறப்பான மொழிபெயர்ப்பாக, அது அமைய முடியும்.

### 2.1.11. இயந்திர மொழிபெயர்ப்பில் சிக்கல்கள் - காரணங்கள்

இயந்திர மொழிபெயர்ப்பு / இயற்கை மொழி ஆய்வு என்பது ஒரு சிக்கலான முயற்சியே ஆகும். இதற்கு இரண்டு முக்கியக் காரணங்கள் உள்ளதாகக் கருதப்படுகின்றன. அவையாவன,

இயற்கை அல்லது மனித மொழி மிகவும் பொருள்மயக்கம் உடைய மொழியாகும். சொல்நிலை, தொடர்நிலை, சூழல் பொருண்மைநிலை, என மொழியின் எல்லா நிலைகளிலும் இப்பொருள்மயக்கம் அமைந்துள்ளது. ஒரு சொல் அல்லது தொடருக்கு ஒரு மொழியில் பல்வேறு பொருள்கள் இருக்கலாம். சான்றாக, தமிழில் "படி" எனும் சொல், முன்னிலை ஏவல் ஒருமை வினையாகவும் "படிக்கட்டின் படி" என்னும் பெயர்ச்சொல்லாகவும் "படியெடுத்தல்" என்னும் பொருள்தரும் பெயர்ச்சொல்லாகவும் அளவைப்பொருள் தரும் "படி" யாகவும் இருக்கலாம். இத்தகையதொரு சூழலில்; ஒரு இயந்திரத்துக்கு சரியான பொருளைத் தேர்ந்தெடுத்து;

மொழிபெயர்ப்பைச்செய்வது என்பது கடினமான செயல் ஆகும். எனவே தவறான பொருளில் பெயர்ப்பைத் தரும் சூழல் உள்ளது. ஆனால் இதே மொழிபெயர்ப்பை மனிதன் செய்யும் போது ( இயற்கை மொழியை மனிதன் பயன்படுத்தும்போது ) அவை தொடர்பான ஏராளமான உலக அறிவையும், பொது அறிவையும் சூழல் அறிவினையும் பயன்படுத்துகிறான். அவ்வறிவுத்தொகுப்பு பொருள் மயக்கத்தினைத் தீர்க்க உதவுகின்றது. மனித அறிவால் இயலுகின்ற இத்தகைய செயல்பாடுகளைக் கணினியால் செய்ய இயலுவதற்கு, கணினியும் மனிதனைப்போல் பொது அறிவையும், உலக அறிவையும், சூழல் அறிவையும் மொழிபெயர்ப்புச் செயல்பாடுகளுக்குப் பயன்படுத்த வேண்டும். இவ்வாறான அறிவினை கணினிக்குக் கொடுப்பதற்கு, மனிதன் இன்னும் கடினமாக முயல வேண்டியுள்ளது.

### 2.1.11.1. தற்காலத்தில் வழங்கும் இயந்திர மொழிபெயர்ப்பிகளின் அமைப்பு

இயந்திர மொழிபெயர்ப்பிகளை வடிவமைப்பதில் உள்ள மேற்கண்ட சிக்கல்களால், பொதுவான ஒரு களத்தில் முற்றிலும் தானியங்கியாக செயல்பட்டு, தவறுகளற்ற சிறந்த மொழிபெயர்ப்பைத் தருகின்ற மொழிபெயர்ப்பிகளை உருவாக்குவது சாத்தியமில்லாமல் உள்ளது. எனவே தற்காலத்தில் உருவாக்கப்படும் மொழிபெயர்ப்பிகள் கீழ்க்கண்ட முறைகளை பின்பற்றுகின்றன.

### 2.1.11.2. ஒரு குறிப்பிட்ட களன் உள்ள மொழியைப் பயன்படுத்துதல் / மொழியை எளிதாக்குதல்

இது எளிதான மொழியைப் பயன்படுத்தும் அணுகுமுறை எனப்படும். ( Sub Language Approach). இது பொதுவான களம் என்னும் கருத்திலிருந்து மாறுபட்டு, ஒரேயொரு களத்தில் இயங்கும் மொழிபெயர்ப்பியினைக் குறிக்கின்றது. இவ்வாறு தற்காலத்தில்

கட்டுப்படுத்தப்பட்ட களனில் இயங்கும் மொழிபெயர்ப்பிகளுக்கு கனடிய நாட்டில் பயன்பாட்டில் இருக்கும் டாம் (TAUM), மெட்டியோ (METEO) எனும் இயந்திர மொழிபெயர்ப்பிகள் சான்றுகளாகும். இவை, வானிலை அறிக்கைகளை ஆங்கிலத்தில் இருந்து பிரெஞ்சு மொழிக்கும் பிரெஞ்சு மொழியிலிருந்து ஆங்கிலத்துக்கும் மொழிபெயர்க்கின்றன. பல வருடங்காளாக, முற்றிலும் தானியக்க முறையில் இவை இயங்கிக்கொண்டிருக்கின்றன. அமெரிக்காவின் கேட்டர் பில்லர் இழுவை (டிராக்டர்) நிறுவனம் பயன்படுத்தும் மொழிபெயர்ப்பியும் குறிப்பிட்ட களனில் இயங்கும் மொழிபெயர்ப்பிக்குச் சான்றாகும். இந்த டிராக்டர் தயாரிப்பு நிறுவனம், டிராக்டர் விற்பனை செய்யும் பதினைந்து நாடுகளுக்கு, டிராக்டர் குறித்த செய்திகள் அடங்கிய குறிப்பேட்டினை பதினைந்து மொழிகளில் வழங்குகிறது. இந்த மொழிபெயர்ப்பியில் ஆங்கிலம் மூ.மொ.யாகவும் பிற பதினைந்து மொழிகள் இ.மொ.யாகவும் பயன்படுத்தபட்டு தானியங்கு முறையில் இக்குறிப்பேடு தயாரிக்கப்படுகிறது. டிராக்டர் குறித்த செய்திகளை மட்டும் ஆங்கிலத்தில் கொண்டுள்ள இக்குறிப்பேடு, டிராக்டர் குறித்து, தேவையான செய்திகளை மட்டும் கொண்டு, சிறப்பாக வடிவமைக்கப்பட்டுள்ளதால் முற்றிலும் தானியக்க மொழிபெயர்ப்பு சிறப்பாக நடைபெறுகிறது. ( துர்கேஷ் ராவு, இந்தியாவில் இயந்திர மொழிபெயர்ப்பு ).

### 2.1.11.3. இயந்திர மொழிபெயர்ப்பில் மனித உதவியையும் உட்படுத்துதல்

இது முற்றிலும் தானியக்க முறையில் செயல்படாமல், சிறந்த மொழிபெயர்ப்பிற்கு மனிதனின் உதவியையும் நாடும் முறை ஆகும். மொழிபெயர்ப்பின் போது உள்ளீடு செய்யப்படும் உரை, மொழிபெயர்ப்பிற்கு முன் திருத்தம் செய்யப்படுவதும், வெளியீடு செய்யப்படும் தகவல் பின்திருத்தம் செய்யப்படுவதும், பொருள் மயக்கங்கள் இருப்பின் நீக்கப்படுவதும், மனிதர்களின் செயல்பாட்டால் நடைபெறும். இங்கு

மொழிபெயர்ப்புச் செயல்பாட்டில் அதிகம் ஈடுபடுவது மனிதனா, கணினியா என்பதனைப் பொறுத்து, இருவகை மொழிபெயர்ப்பு அமைப்புகள் உருவாக்கப்படுகின்றன. அவை,

1. மனித உதவியுடன் கூடிய இயந்திர மொழிபெயர்ப்பு (Human Aided Machine Translation )
2. கணினி உதவியுடன் கூடிய மனித மொழிபெயர்ப்பு (Machine Aided Human Translation )

( R.M.K. Sinha, Machine Translation: The Indian Context, IIT-Kanpur) .

### 2.1.12. இந்தியாவில் இயந்திர மொழிபெயர்ப்பு முயற்சிகள்

பல மொழிகள் வழங்கும் இந்தியாவில், இயந்திர மொழிபெயர்ப்பு என்பது மிகமிகத் தேவையான ஒன்றாக உள்ளது. இந்தியாவில் காலங்காலமாக மொழிபெயர்ப்பாளர்களின் மூலம் செய்யப்பட்டுள்ள மொழிபெயர்ப்புகள் ஏராளம். கலை, இலக்கியம், தத்துவம், அறிவியல், நாட்டுப்புறவியல் எனப்பலதுறை அறிவுக்களஞ்சியங்களும் பழங்காலத்திலிருந்தே ஒரு மொழியிலிருந்து மற்றொரு மொழிக்கு மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. நவீன உலகில் மொழிபெயர்ப்பு இன்றியமையாததாகக் கருதப்படும் பல துறைகள் உள்ளன. நிருவாகம், பத்திரிகை மற்றும் செய்தித்துறை, கல்வி, வணிகம், அறிவியல், தொழில் நுட்பம் என்பவை இவற்றுள் முக்கியமானவை ஆகும்.

இந்தியா ஒரு மொழிவளம் மிகுந்த நாடு. இந்தியாவில் 22 ஆட்சி மொழிகள் உள்ளன. ஆங்கிலமும் இந்தியாவில் பரவலாகப் பயன்படுத்தப்படுகிறது. இந்தியாவின் பல மாநிலங்களிலும் அவற்றுக்கே உரித்தான மொழி உள்ளது. எனவே இத்தகையதொரு சூழலில் ஆங்கிலத்திலிருந்து இந்தியாவின் பிற மொழிகளுக்கும் இந்திய மொழிகளுக்கிடையேயும் இயந்திர மொழிபெயர்ப்பு முயற்சிகள் தவிர்க்க இயலாததாக உள்ளது. இந்தியாவில் உள்ள மொழிபெயர்ப்பின் தேவைக்கு

ஏற்ப, அவை வேகமாக உடனுக்குடன் மொழிபெயர்க்க வேண்டிய அவசியம் உள்ளது. அரசுக்குத்தேவையான மிகப்பெரும்பாலான செய்திகளும் ஆங்கிலத்தில் உள்ளன. இந்தி மொழி ஆட்சி மொழியாக இருப்பதால், ஆங்கிலத்தில் இருக்கும் அரசின் ஆவணங்கள் அனைத்தும் இந்தி மொழிக்கு மாற்றப்படல் வேண்டும். இதனால் இந்தியாவில் உருவாக்கப்பட்ட பெரும்பாலான இயந்திர மொழிபெயர்ப்பிகளும் ஆங்கிலத்திலிருந்து - இந்திக்கே உருவாக்கப்பட்டு உள்ளன.

இவ்வாறு இந்தியாவில் ஆங்கிலம் - இந்தி இயந்திர மொழிபெயர்ப்பு முயற்சிகள் பல மேற்கொள்ளப்பட்டு இருப்பினும் தற்போதைய நிலவரப்படி, முழுமையான தானியக்க முறைப்படி இயங்குவதும் சிறந்த தரமானதும், பொதுப்பொருண்மைக்களனில் இயங்குவதுமான இயந்திர மொழிபெயர்ப்பி இன்னும் சாத்தியப்படவில்லை. எனவே இந்தியாவில் *இதுவரை உருவாக்கப்பட்டுள்ள இயந்திர மொழிபெயர்ப்பிகள் அனைத்துமே* ஒரு குறிப்பிட்ட களத்தில் இயங்குபவையாகவோ; முன் அல்லது பின் திருத்தத்திற்கு மனித மொழிபெயர்ப்பாளர்களை நாடுபவையாகவோ மட்டுமே உள்ளன. இந்தியாவில் தற்போதுள்ள அமைப்புகள் இந்த இரு அடிப்படையிலேயே செயல்பட்டுக்கொண்டு உள்ளன. ( Sudip Naskar & Sivaji Bandyopadhyay , Use of Machine Translation in India: Current Status, Jadavpur University). மேலும் இந்தியாவின் இயந்திர மொழிபெயர்ப்பு முயற்சிகள் வெளிநாடுகளோடு ஒப்பிட்டுப்பார்க்கையில் மிகவும் புதியவை ஆகும். இங்கு 80 ஆம் ஆண்டுகளிலேயே இம்முயற்சிகள் முழுமையாகத் தொடங்கப்பட்டு உள்ளன. இந்தியாவில் அன்றைய காலகட்டத்தில் இத்தகைய முயற்சிகள் மேற்கொள்ளப்பட்ட நிறுவனங்கள் ஆவன,

1. இந்தியத் தொழில் நுட்பக் கழகம் - கான்பூர்
2. ஐதராபாத் மத்தியப் பல்கலைக்கழகம்
3. மென்பொருள் தொழில்நுட்ப தேசிய நிறுவனம் - மும்பை மற்றும்,

4. புனேயிலுள்ள முன்னேகிய கணிப்பீட்டு வளர்ச்சிக்கான நடுவம் ( சி.டாக், புனே ).

இந்திய அரசின் தகவல் மற்றும் தொழில்நுட்பத்துறை, "இந்திய மொழிகளில் மொழித்தொழில்நுட்ப வளர்ச்சி" ( Technology Development for Indian Languages – TDIL ) என்ற திட்டத்தினை அமைத்து மேற்கண்ட நிறுவனங்களுக்கு நிதியுதவி அளித்து வந்தது. மேலும் 1989 - 1990 முதல் மத்திய அரசின் உள்த்துறை அமைச்சகத்தின் ஏற்புபெற்ற மொழிகளுக்கான இலாக்காவும் ( Department of official Languages ) இந்திய மொழிகளில் இத்தகைய முயற்சிகள் மேற்கொள்ளப்படுவதற்கு நிதியுதவி அளித்து வருகின்றன. இவ்வாறு இந்திய மொழிகளில் இயற்கை மொழி ஆய்வு, இயந்திர மொழிபெயர்ப்பு, மொழித்தொழில் நுட்பம் போன்ற பணிகள் மேற்கொள்ளப்பட்டன. இம்முயற்சிகளில் கீழ்க்கண்ட குறிப்பிட்ட பொருண்மைக் களங்களில் இயங்கவல்ல அமைப்புகளை உருவாக்கும் முயற்சிகள் தொடங்கப்பெற்றன. இவ்வாறு தேர்வு செய்யப்பட்ட களங்களாவன,

1. அரசின் நிருவாக செயல்முறையும் வடிவமைப்பு முறைகளும் (Government Administrative Proceedures and Formats )
2. பாராளுமன்ற கேள்வி பதில்கள் (Parliamentary Questions and Answers)
3. மருந்தியல் சார் தகவல்கள் ( Pharmaceutical Information )
4. சட்டம் சார் கலைச்சொல்லாட்சி ( Legal Terminology )
5. முக்கிய நீதிமன்றத் தீர்ப்புகள் ( Importanat Judgements)

போன்றவை ஆகும்.

1990-களின் இறுதிப்பகுதியில் மும்பை இந்தியத் தொழில்நுட்பக்கழகத்திலும், ஐதராபாத்தின் பன்னாட்டுத் தொழில்நுட்பக்கழகத்திலும், சென்னை அண்ணா பல்கலைக்கழகத்தின் கே.பி.பாலசந்தர் ஆய்வு மையத்திலும், கொல்கத்தாவின் ஜாதவ்பூர்

பல்கலைக்கழகத்திலும் இயந்திர மொழிபெயர்ப்புத்திட்டங்கள் ஆரம்பிக்கப்பட்டன. இரண்டு தனியார் நிறுவனங்களும் இப்பணியினை எடுத்துச் செய்தன. அவை,

1. சூப்பர் இன்ஃபோசாப்ட் பிரைவேட் லிமிடெட் மற்றும்
2. ஐ.பி.எம் இந்திய ஆய்வகம் ஆகியன ஆகும்

இவ்வாறு இந்தியாவில் உருவாக்கப்பட்ட மொழிபெயர்ப்பு மென்கலங்கள் அனைத்துமே பெரும்பாலும் களத்தில் செய்தேர்வுக்காகவோ (Field Testing) அல்லது வலைப்பக்கங்களில் மொழிபெயர்ப்புச்சேவையினை வழங்குவதற்காகவோதான் பயன்படுத்தப்படுகின்றன மேலும் இம்மென்கலங்கள் கல்லூரி, ஆய்வு மாணவர்களுக்கு இயந்திர மொழிபெயர்ப்பு குறித்து கற்பிக்கவும் பயன்படுத்தப்படுகின்றன.

கீழ்க்கண்ட மொழிபெயர்ப்பு மென்கலங்கள் வலைப்பக்கங்களில் சேவையினை வழங்கிடவும், களத்தில் செய்தேர்வுக்காகவும் இணையத்தில் காணப்படுகின்றன.

1. ஆங்கில பாரதி மற்றும் அனுபாரதி தொழில்நுட்பம்
2. மந்திரா இயந்திர மொழிபெயர்ப்புத்திட்டம்
3. அனுசாரகா இயந்திர உதவியுடன் கூடிய திட்டம்
4. சிவா மற்றும் சக்தி திட்டம்
5. உலக வலைப்பின்னல் மொழி அடிப்படையிலான ஆங்கில-இந்தி திட்டம்
6. மாத்ரா திட்டம்
7. ஆங்கிலம் - கன்னடம் இயந்திர மொழிபெயர்ப்புத்திட்டம்
8. தமிழ் - இந்தி இயந்திர உதவியுடன் கூடிய திட்டம்
9. அனுவாதக் திட்டம்
10. அனுபாத் திட்டம்
11. இந்தியமொழிகளுக்கிடையேயான இயந்திரமொழிபெயர்ப்புத்திட்டம்

12. வாக்கியா அமைப்பு

போன்ற திட்டங்கள் தற்போது இந்தியாவில் புழக்கத்தில் உள்ளன. (Durgesh Rao, Machine Translation in India, A Brief Study, NCST, Mumbai).

**2.1.12.1.1. ஆங்கிலபாரதி தொழில் நுட்பம்**

ஆங்கிலபாரதி இயந்திர மொழிபெயர்ப்புத்திட்டம், பேராசிரியர் ஆர் எம்.கே சின்கா அவர்களால் கான்பூரில் உள்ள இந்தியத் தொழில்நுட்பக் கழகத்தில் 1990 ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது. இந்தியாவில் இயந்திர மொழிபெயர்ப்பினை அறிமுகப்படுத்தியவர் ஆர்.எம்.கே சின்கா அவர்களே. இது ஆங்கிலத்தினை மூலமொழியாகவும் பல்வேறு இந்திய மொழிகளை இலக்குமொழியாகவும் கொண்டு வடிவமைக்கப்பட்ட மனித உதவியுடன் கூடிய திட்டம். இவ்வமைப்பின் அணுகு முறையும், அதில் பயன்படுத்தப்பட்டுள்ள அகராதியும் பொதுப்பொருண்மைக்களங்களில் பயன்படுத்தக்கூடியனவாய் அமைக்கப்பட்டன. பொதுச்சுகாதார முகாம்கள், தினசரி அலுவலகப் பயன்பாடுகள், தொழில் நுட்பக் கையேடுகள் ( Technical Manuals ) , போன்ற பல்வேறு பொருண்மைக் களன்களில் செயல்பட வல்லதாக இத்திட்டம் அமைக்கப்பட்டது இத்திட்டத்தின் முதன் முயற்சியாக 1991-ல் ஆங்கிலம் - தமிழ் மூல மாதிரி அமைப்பு உருவாக்கப்பட்டது. பின்பு ஆங்கிலம் - இந்தி அமைப்பு உருவாக்கப்பட்டது. இம்முயற்சியின் முதல் கட்டமாக ஆங்கில மொழியானது ஒரு இடைநிலைப்போலி மொழியாக மாற்றியமைக்கப்பட்டது. (Pseudo Interlingua) இந்தப் போலி இடைநிலை மொழியானது இலக்குமொழியாக எடுத்துக்கொள்ளப்பட்ட அனைத்து இந்திய மொழிகளுக்கும் பொதுவானதாக அமைந்தது. அதாவது இலக்குமொழிகளான இந்தோ ஆரியன் மொழிகள், திராவிட மொழிகள், ஆஸ்ட்ரோ ஆசிய மொழிகள்,

திபத்திய-பர்மிய மொழிகள், என அனைத்து இந்திய மொழிகளுக்கும் பொதுவான இடைநிலைப் போலி மொழியாக அமைந்தது. இந்திய மொழிகளின் அமைப்பு ஒற்றுமைப்பண்பும், இது போன்ற பிற ஒற்றுமைப் பண்புகளும் கண்டுபிடிக்கப்பட்டு அவை இடைநிலைப்போலி மொழியில் நிலைநிறுத்தப்பட்டன. பின்னர் ஒவ்வொரு இலக்கு மொழிக்கும் தனித்தனியே உரை உருவாக்கிகள் அமைக்கப்பட்டன. அவ்வுரை உருவாக்கிகளில் இருந்து தனித்தனியே இலக்குமொழியானது பெறப்பட்டது.

இதற்கு பயன்படும் இலக்கணம் சமசுகிருத மொழிக்கு பாணினி எழுதிய "அஷ்டாத்தியாயி"யில் இருந்து பெறப்பட்டது. இவ்விலக்கணத்தின் "காரகா" கோட்பாட்டினைப் பயன்படுத்தி இந்திய மொழிகள் அனைத்திற்கும் ஒரே மாதிரியான உரை உருவாக்கிகளை உருவாக்க முடிந்தது. பொருள் மயக்கங்களைக் களைவதற்காக, தொடரியல், பொருண்மையியல், பயன்வழியியல் போன்ற மொழியியல் அடைப்படையில் அமைந்த விதிகள் பயன்படுத்தப்பட்டன. கணினியால் தீர்க்க இயலாத பொருள் மயக்கங்கள் மொழிபெயர்ப்பாளர்களுக்கு, பின் திருத்தங்களாக (Post Editing) விடப்பட்டன. ஆங்கில பாரதி திட்டத்தின் முக்கிய குறிகோள்களில் ஒன்று ஆங்கிலத்திலிருந்து இந்திய மொழிகள் அனைத்திற்கும் ஒரே மாதிரியான திட்ட ஒழுங்கினை வடிவமைப்பது ஆகும் மேலும் மொழிபெயர்ப்பு தவிர, பேச்சு உருவாக்கும் வசதியும், ஒளி வருடி எழுத்துரு அறிதல் ( Optical Character Recognition ) வசதியும் இணைக்கப்பட்டு இருந்தது. இவ்வாறு ஆங்கில பாரதி திட்டத்தின் கீழ் பன்னிரெண்டு மொழிகள் உருவாக்கப்பட்டன. அவையாவன,

1. ஆங்கிலா - மராத்தி
2. ஆங்கிலம் - கொங்கணி
3. ஆங்கிலம் - அஸ்ஸாமி
4. ஆங்கிலம் - மணிப்பூரி

5. ஆங்கிலம் - பங்களா

6. ஆங்கிலம் - உருது

7. ஆங்கிலம் - இந்தி

8 ஆங்கிலம் - கசுமீரி

9. ஆங்கிலம் - மலையாளம்

10. ஆங்கிலம் - பஞ்சாபி

11. ஆங்கிலம் - சமசுகிருதம்

12. ஆங்கிலம் - ஒரியா போன்றவை.

**2.1.12.1.2. அனு பாரதி தொழில்நுட்பம்**

அனு பாரதி தொழில்நுட்பத்தினையும் வடிவமைத்தவர் பேராசிரியர் சின்கா அவர்களே. இது எடுத்துக்காட்டு அடிப்படையிலான ( Example Based ) இயந்திர மொழிபெயர்ப்பு அணுகுமுறையின் மூலம் அமைக்கப்பட்டது. இத்திட்டத்தில் இந்தி மூலமொழியாகவும், ஆங்கிலம் இலக்குமொழியாகவும் இருந்தன. இம்முறை; அமைப்பு ஒற்றுமை உடைய இரு மொழிகளுக்கிடையே நன்றாகப் பொருந்தியது. எனவே இந்திய மொழிகளுக்கிடையே மொழிபெயர்ப்பு செய்திட இம்முறை மிகவும் பொருத்தமானதாக அமைந்தது.

ஆங்கில பாரதி மற்றும் அனு பாரதி தொழில்நுட்பம் இரண்டுமே தொடக்கத்தில் இருந்ததை விடச் சீர்செய்யப்பட்டுக்கொண்டே இருந்தன 2004-ல் ஆங்கில பாரதி II மற்றும் அனுபாரதி II என இதன் புதிய பதிப்புகள் வெளியிடப்பட்டன. இதில் முந்தைய மற்றும் பிந்தைய திருத்தங்கள் தானியக்க முறையிலேயே அமைக்கப்பட்டன. மொழியியல் சார்ந்த பல பிரச்சினைகளையும் தீர்க்கும் வசதியோடு ஆங்கில பாரதி 2-ஆம் பதிப்பு அமைந்திருந்தது. அனுபாரதி திட்டம் தனது 2-ஆம் பதிப்பில் இந்தியினை மூலமொழியாகக் கொண்டு பல இந்திய மொழிகளுக்கிடையே மொழிபெயர்ப்பு செய்ய வல்லதாய் அமைக்கப்பட்டது. மேலும் ஆங்கிலம்

கலந்த இந்தி மொழியினையும் மொழிபெயர்க்க வசதிகள் செய்யப்பட்டன. ஒலி - ஒலி மொழிபெயர்ப்பு வசதியும் உருவாக்கப்பட்டு இத்துடன் இணைக்கப்பட்டது.

### 2.1.12.3. மந்திரா மொழிபெயர்ப்புத்திட்டம்

மந்திரா மொழிபெயர்ப்புத்திட்டம்; ஆங்கிலத்தினை மூலமாகவும் இந்தியினை இலக்காகவும் கொண்டு அமைக்கப்பட்டது. இத்திட்டம் அதற்கான சில சிறப்புப் பொருண்மைகளைக் கொண்டது. அவையாவன,

1. தனிநபர் மேலாண்மை
2. தினசரி அலுவலகப் பணிகள்
3. அலுவலக அறிக்கைகள்

போன்றன ஆகும். இவ்வமைப்பில்; மூல மொழியினை உரையாகவோ, *ஒலியாகவோ, ஒளி வருடி எழுத்துரு அறிதல் வடிவிலோ உள்ளீடு செய்ய* இயலும். ஆரம்பத்தில் இவ்வமைப்பு அலுவலக மேலாண்மை தொடர்பான உரைகள், பணியில் சேருவதற்கான விண்ணப்பங்கள், அறிவிப்புகள், மத்திய அரசின் அறிக்கைகள் போன்றவற்றை ஆங்கிலத்திலிருந்து இந்திக்கு மொழிபெயர்க்க உதவியது. தற்போது இவ்வமைப்பு விரிவுபடுத்தபட்டு, நிதியம், விவசாயம், தகவல் தொழில்நுட்பம், உடல் நலம், கல்வி, மற்றும் இன்னும் அரசின் பிற துறைகளிலும் பயன்படுத்தப்படுகிறது. சி-டாக் நிறுவனத்தால் உருவாக்கப்பட்ட இந்த தொழில்நுட்பமானது "மந்திரா இராஜ்யசபா" என்று அழைக்கப்படுகிறது. இதில் பயன்படுத்தப்படும் இலக்கணமானது, அலுவலகம் தொடர்பான சொற்கள், தொடர்கள் இவற்றை ஆய்வு செய்யவும் உருவாக்கவும் உதவும் விதம் அமைக்கப்பட்டுள்ளது. இதில் பயன்படுத்தப்படும் அகராதியில் அலுவலகம் தொடர்பான சொற்கள் மட்டுமே அடங்கியுள்ளன. இத்திட்டம் பாராளுமன்ற மேல்சபையில் பயன்படுத்துவதற்காக உருவாக்கப்பட்டு, பய்ன்பாட்டிலும் உள்ளது. இது பாராளுமன்ற நடவடிக்கைகளான, பிளாட்

(PLOT), அறிக்கை I, அறிக்கை II ( Bulletin I, II ) லிஸ்ட் ஆப் பிசினஸ் (List of Bussiness ) சினாப்சிஸ் போன்றவற்றை மொழிபெயர்த்திட உதவுகிறது மேலும், ஆங்கிலம் - வங்காளி, ஆங்கிலம் - தெலுங்கு, ஆங்கிலம் - குசராத்தி, இந்தி - ஆங்கிலம் ஆகிய மொழிகளுக்கிடையேயும், இந்தி - வங்காளி, இந்தி - மராத்தி போன்றவற்றுகிடையேயும் செயல்படுமாறு உருவாக்கப்பட்டுள்ளது.

### 2.1.12.4. அனுசாரகா இயந்திர உதவியுடன் கூடிய திட்டம் ( Anusaraka MAT System)

ஐதராபாத்திலுள்ள பன்னாட்டுத்தொழில் நுட்பக்கழகத்தின் பேராசிரியர்களான வினீத் சைதன்யா மற்றும் இராஜீவ் சங்கல் என்பவர்களால் உருவாக்கப்பட்டதே அனுசாரகா மொழிபெயர்ப்புத்திட்டம் ஆகும். இது தெலுங்கு, கன்னடம், மராட்டி, வங்காளி, பஞ்சாபி போன்ற மொழிகளில் இருந்து இந்திக்கு மொழிபெயர்ப்பு செய்வதற்காக அமைக்கப்பட்டது. இத்திட்டம் சிறுவர்களுக்கான கதைகளை மொழிபெயர்க்கும் விதம் அமைக்கப்பட்டது. இதில் மின்னஞ்சல் சேவையகம் ஒன்று இணைக்கப்பட்டு இருக்கும். மொழிபெயர்க்கப்பட வேண்டிய உரையினை மின்னஞ்சலில் சேர்த்து, மின்னஞ்சலின் தலைப்புப்பகுதியில் தேவையான இலக்குமொழியின் பெயரையும் எழுதி, அனுசாரகாவின் வலைக்கு மின்னஞ்சல் அனுப்பினால் இலக்குமொழிக்கு மொழிபெயர்ப்பு செய்யப்பட்டு, அம்மொழிபெயர்ப்பு நமது மின்னஞ்சலுக்கு திருப்பி அனுப்பப்படும். அனுசாரகாவின் கணினியில் நமக்கு அனுப்பப்பட்ட வெளியீட்டின் ஒரு படியானது, எதிர்காலத்தில் ஆய்வுகள் மேற்கொள்ளப்படுவதற்காகச் சேமித்து வைக்கப்படும். பயனருக்கு மொழிபெயர்ப்பு குறித்த ஐயங்கள் ஏதேனும் இருப்பின் மின்னஞ்சலில் தலைப்பில் "உதவி" என எழுதி, அதனை அனுப்பி வைத்தால் உதவிக்கான பதில் அனுப்பி வைக்கப்படும். இயந்திர மொழிபெயர்ப்பு மட்டும் அனுசாரகாவின் பணி அன்று. மாறாக, அனைத்து இந்திய

மொழிகளுக்கும் ஒரு மொழி அணுகியையும் உருவாக்குவதும் ஆகும். இதன் இலக்கணம் பாணினி இலக்கண விதிகளின் படியே வரையப்பட்டது. மேலும் இதில் தேர்வு செய்யப்படும் இரு மொழிகளுக்கிடையேயுள்ள ஒற்றுமைப் பண்புகளைப் பயன்படுத்தி, வட்டாரச்சொல் குழுமங்கள் உருவாக்கப்பட்டன. வேறுபாடுகள் தோன்றுமிடங்கள் குறித்து வைக்கப்பட்டன. இவ்வாறு குறிக்கப்பட்ட தரவுகளுடன் வெளியீடானது உருவாக்கப்பட்டது இதனை படித்துப் புரிந்துகொள்ள பயனர்களுக்கு சில பயிற்சிகள் தேவைப்பட்டன.

### 2.1.12.5. சிவா மற்றும் சக்தி திட்டம்

அமெரிக்காவின் கார்னகி மெலன் பல்கலைக் கழகமும் ஐதராபாத்திலுள்ள பன்னாட்டுத் தகவல் மற்றும் தொழில்நுட்பக் கழகமும் இணைந்து ஆங்கிலத்திலிருந்து இந்திக்கு மொழிபெயர்க்கும் சிவா மற்றும் சக்தி திட்டத்தினை வடிவமைத்தன. இவ்விரு அமைப்புகளுமே ஆய்வு நோக்குடனும், சோதனைக்காகவும், பயனர் கருத்துக்களை அறியவும் வலையில் இணைக்கப்பட்டன. இவை இரண்டுமே எடுத்துக்காட்டு அணுகுமுறையில் அமைக்கப்பட்டவை ஆகும். சக்தி அமைப்பு தெலுங்கு, இந்தி, மராட்டி என மேலும் மூன்று மொழிகளுக்கும் அமைக்கப்பட்டது. இம்முறைகளின் சிறப்புக்களில் ஒன்று பயனரின் தேவைக்கு ஏற்ப சொற்கள், தொடர்கள் போன்றவற்றின் பொருளை வினவும். பயனாளர் தமக்குத் தேவைப்படும் பொருளைக் கொடுப்பாராயின், இவ்வமைப்பு அதற்கேற்ற மொழிபெயர்ப்பினை வழங்கும்

### 2.1.12.6. உலக வலைப்பின்னல் மொழி அடிப்படையிலான ஆங்கில - இந்தி மொழிபெயர்ப்புத்திட்டம்

இத்திட்டம் மும்பையிலுள்ள இந்தியத்தொழில் நுட்பக் கழகத்தால் உருவாக்கப்பட்டு, ஆங்கிலம் - இந்தி ஆகிய மொழிகளுக்கு இடையே

மொழிபெயர்க்குமாறு அமைக்கப்பட்டது. இது உலக வலைப்பின்னல் மொழியை இடைநிலை மொழியாகப் பயன்படுத்தியது. இந்த இடைமொழியானது மூலமொழி, இலக்குமொழி இரண்டின் இலக்கணத்தையும் அகராதியையும் இணைத்துச் செயல்படும். இவ்விடையீட்டு மொழியே இலக்குமொழி உருவாக்கத்தினை சாத்தியமாக்கும். மூலமொழியிலிருந்து இடையீட்டு மொழிக்கு மாற்ற ஒரு இடையேற்றியும் (ENCONVERTER) இடையீட்டு மொழியிலிருந்து இலக்கு மொழிக்கு மாற்ற ஒரு இடையகற்றியும் (DECONVERTER) பயன்படுத்தப்படுகின்றன.

**2.1.12.7. மாத்ரா திட்டம்**

மும்பையிலுள்ள சி-டாக் நிறுவனத்தின் இயற்கை மொழி ஆய்வுக் குழுவினரால் உருவாக்கப்பட்டதே மாத்ரா ஆங்கிலம் - இந்தி மொழிபெயர்ப்பு அமைப்பு ஆகும். இத்திட்டம் பொதுப்பணிகளுக்காக உருவாக்கப்பட்டாலும் சில சிறப்பான பொருண்மைக் களங்களிலேயே பயன்படுத்தப்படுகிறது. இதில் பயன்படுத்தப்படும் பொருண்மைக் களன்களாவன, 1. செய்திகள் 2. ஆண்டறிக்கைகள் 3. தொழில் நுட்பத்தொடர்கள் போன்றன.

**2.1.12.8. வாக்கியா அமைப்பு**

இது சி-டாக் மும்பையில் கலப்பு அணுகுமுறையில் உருவாக்கப்பட்ட அமைப்பு ஆகும். இத்திட்டம் ஆங்கிலத்திலிருந்து இந்திக்கு செய்திகளை மொழிபெயர்ப்பதற்காக உருவாக்கப்பட்டது. இவ்வமைப்பு வினைச்சொல் மட்டும் கொண்ட வாக்கியங்களை மட்டும் உள்ளடக்கியதாக அமைக்கப்பட்டது.

**2.1.12.9. ஆங்கிலம் - கன்னடம் இயந்திர மொழிபெயர்ப்புத்திட்டம்**

ஐதராபாத் பல்கலைக்கழகத்தின் கணினியியல் மற்றும் தகவல் தொழில்நுட்பத் துறையால் உருவாக்கப்பட்டதே ஆங்கிலம் - கன்னட மொழிகளுக்கு இடையே ஆன மொழிபெயர்ப்புத்திட்டம் ஆகும். இம்முறை மாற்றல் அணுகுமுறையில் அமைந்தது ஆகும். கருநாடக அரசின் சுற்றறிக்கைகளை மொழிபெயர்க்கும் முகமாக இவ்வமைப்பு உருவாக்கப்பட்டது. இத்திட்டம் தொடர்ந்து மேம்படுத்தப்பட்டு வருகிறது மட்டுமின்றி ஆங்கிலம் - இந்தி மொழிபெயர்ப்புப்பணியிலும் இம்முறை பயன்படுத்தப்படுகிறது.

**2.1.12.10. தமிழ் - இந்தி இயந்திர உதவியுடன் கூடிய திட்டம்**

சென்னை அண்ணா பல்கலைக்கழகத்தில் கே.பி. சந்திரசேகர் ஆய்வு மையம் தமிழிலிருந்து இந்தி மொழிக்கு ஒரு மொழிபெயர்ப்பு அமைப்பினை உருவாக்கி உள்ளது. இதில் தமிழை தட்டச்சு செய்து உள்ளிடலாம். இலக்கு மொழியான இந்தியின் வெளியீடானது திரையில் தெரியும். இதனை நாம் தரவிறக்கிக் கொள்ளலாம். இது அனுசாரகாவினை அடிப்படையாகக் கொண்டு வடிவமைக்கப்பட்டது ஆகும்.

**2.1.12.11. அனுவாதக் திட்டம்**

தூப்பர் இன்போசாப்ட் நிறுவனத்தால் உருவாக்கப்பட்டதே அனுவாதக் அமைப்பு ஆகும். இது ஆங்கிலத்தினை மூலமொழியாகவும், இந்தியினை இலக்குமொழியாகவும் கொண்டிருந்தது. இதில் பிந்தைய திருத்தம் (Post Editing ) பயன்படுத்தப்பட்டது. இதில் உள்ளமைப்பிலேயே நிறுவப்பட்ட அலுவலகம், விவசாயம், மொழியியல், மேலாண்மை போன்ற சிறப்புப் பொருண்மைகளைக் கொண்ட அகராதிகள் பயன்படுத்தப்பட்டன. ஆங்கிலத்துக்கு இணையான சொல் இலக்குமொழியில் இல்லாவிடில் அது ஒலிபெயர்ப்பு செய்யப்பட்டு எழுதப்படுவதற்கான வசதிகளும்

அமைக்கப்பட்டு இருந்தன மைக்ரோசாப்டு விண்டோசின் அனைத்து இயங்கு தளங்களிலும் இயங்குமாறு இந்த மென் பொருள் வடிவமைக்கப்பட்டு இருந்தது

**2.1.12.12. அனுபாத் திட்டம்**

கொல்கத்தாவின் ஜாதவ்பூர் பல்கலைக்கழகத்தின் கணினி மற்றும் பொறியியல் துறை ஆங்கிலத்திலிருந்து வங்காளிக்கு மொழிபெயர்க்கும் திட்டத்தினை உருவாக்கியது இது ஆங்கிலச் செய்திகளை ஆங்கிலத்திலிருந்து வங்காளிக்கு மொழிபெயர்க்கிறது ஆய்வாளர்களையும், மாணவர்களையும் இயந்திர மொழிபெயர்ப்பு குறித்து கற்பிப்பதற்கு இந்த அமைப்பு உதவுகிறது இங்கே வங்காளி - ஆங்கிலம், மணிப்பூரி - ஆங்கிலம் போன்ற திட்டங்களும் உருவாக்கப்பட்டன.

இயந்திர மொழிபெயர்ப்பு இந்தியாவில் மிகவும் புதிய துறையே ஆகும். ஐரோப்பாவையும் ஜப்பானையும் ஒப்பிடும் போது இம்முயற்சி இந்தியாவில் நீண்டதூரம் பயணிக்க வேண்டியுள்ளது

**2.1.13. தமிழ் மொழியும் இயந்திர மொழிபெயர்ப்பும்**

இந்தியாவில் ஆட்சிமொழியாக இருக்கும் பல மொழிகளிலும் இயந்திர மொழிபெயர்ப்பு முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன தமிழிலும் இத்தகைய முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன, அவைகள் கீழே கொடுக்கப்படுகின்றன

**2.1.13.1. தமிழ் - உருசியன் மொழிபெயர்ப்புத்திட்டம்**

உருசியன் - தமிழ் மொழிபெயர்ப்புத்திட்டம் 1980-ல் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் நடந்த முக்கிய மொழிபெயர்ப்பு முயற்சி ஆகும். இது தமிழ்ப்பல்கலைக்கழக மொழிபெயர்ப்புத்திட்டம் என அழைக்கப்பட்டது 1983 - 84 - ல் தமிழ்ப்பல்கலைக்கழகத் துணைவேந்தர் முனை.வ அய் சுப்பிரமணியம் அவர்களால் இத்திட்டம் தொடங்கப்பட்டது உருசிய மொழியின் அறிவியல் உரை நூல்களை தமிழில் மொழிபெயர்த்து இரு மொழிகளுக்கும் இடையேயான ஒப்பீட்டு

ஆய்வுகளைச் செய்வதற்கான சோதனை முயற்சியாக இத்திட்டம் ஆரம்பிக்கப்பட்டது. பின்பு அறிவியல் உரைநூல்கள் பொருண்மைக்களனாகக் கருதி எடுத்துக்கொள்ளப்பட்டன இத்திட்டத்தில் ஒரு மொழியியல் அறிஞர், ஒரு உருசிய மொழி வல்லுனர், ஒரு கணினித்துறை வல்லுனர் போன்றோர் இடம் பெற்றிருந்தனர். இதில் மூலமொழி உருசியமாகவும் இலக்குமொழி தமிழ் ஆகவும் இருந்தது. முதல் முயற்சியாக இரு மொழிகளும் அவற்றின் முழு அளவிலான நடையியல், உருபனியல், தொடரியல் ஆய்வுகளுக்கு உட்படுத்தப்பட்டன இத்தொடக்ககட்ட முயற்சியில் கீழ்க்கண்ட உண்மைகள் உய்த்துணரப்பட்டன.

அ. உருசிய மொழி மிகுதியான உட்பிணைப்பு நிலை மொழி ( Highly Inflected Language )

ஆ. தமிழும் உருசியனும் சுதந்திரச் சொல்வரிசை அமைப்பினைக் கொண்டவை. ( Free Word Order )

இ. உருசிய மொழியின் தொடரியல் அமைப்பினைத் தமிழ் மொழியின் தொடரியல் அமைப்பாக மாற்றுவதற்கு உதவிடும் மாற்றுவிதிகள் பிற ஐரோப்பிய மொழிகளை விடக் குறைவாக இருக்கும் என்று கருதப்பட்டதால் உருசிய மொழியே மூல மொழியாக எடுத்துக்கொள்ளப்பட்டது

கீழ்க்காணும் இலக்குகளை உடையதாக இச்சோதனை முறை அமைந்தது.

- ✓ உருசிய மற்றும் தமிழ் மொழியினைத் தொடரியல் முறையில் ஆய்வதும் ஒப்பிடுவதும்.
- ✓ உருசிய மொழியின் அறிவியல் உரை நூல்களைத் தமிழ்மொழிக்குத் தானியங்கி முறையில் மொழிபெயர்ப்பது.
- ✓ ஒரு உருசிய மொழிச்சொல் ஒன்று உள்ளீடாகக் கொடுக்கப்பட்டால் அதிலிருந்து அதன் செயப்பாட்டு வினை வடிவம், நிகழ்கால எச்ச வடிவம் இறந்தகால எச்ச வடிவம், வேற்றுமை உருபு ஏற்ற

வடிவம், இவ்வடிச்சொற்களின் இயற்பெயர் வடிவம், பன்மை மற்றும் பெயர்த்தொடர் வடிவங்களை வருவித்தல், தானியக்க முன் திருத்தம், ஒப்பீட்டுச்சொற்றொடர்கள், கிழமைச் சொற்றொடர்கள், ஆகியவற்றைக் கையாளும் முறைகள் போன்ற உருசியன் மொழியின் பல்வேறு பண்புகளையும் ஆராய்தல்.

**2.1.13.1.1. உருசியன் - தமிழ் இயந்திர மொழிபெயர்ப்புத்திட்டத்தின் உட்பகுதிகள்**

உருசியன் - தமிழ்த் திட்டம் கீழ்க்காணும் உட்பகுதிகளைக் கொண்டிருந்தது அவை,

1. முன் திருத்தி ( Pre – Processor )
2. பகுப்பி (Parcer)
3. சொல்லாய்வி ( Lexical Analyser )
4. இருமொழியகராதி ( Bi-Lingual Dictionary)
5. உருபனியல் ஆய்வி ( Morphological Analyser )
6. மொழிபெயர்ப்புப்பகுதி ( Translation Module )
7. உரை உருவாக்கி (Text Generation Module) போன்றன ஆகும்.

இயந்திர மொழிபெயர்ப்புப்பணியினைச் செயல்படுத்துவதற்கு தேர்வு செய்யும் அணுகுமுறையினைப் பொறுத்து அதன் அமைப்பும் உட்பகுதிகளும் மாறுபடும். எந்த ஒரு இயந்திர மொழிபெயர்ப்பு முயற்சியாக இருந்தாலும் கீழ்க்காணும் செயல்கள் அதன் முக்கியப்பகுதிகளாக அமைகின்றன என்கிறார் முனை செல்லமுத்து அவர்கள். (தமிழ்ப் பல்கலைக்கழக உருசியன் - தமிழ் இயந்திர மொழிபெயர்ப்புத்திட்டம் 1983 - 84).

1. உள்ளீடு செய்யப்படும் உரையின் முழு ஆய்வு
2. அதன் தொடர்களைப் பகுத்தல்
3. உள்ளீட்டு மொழியின் சொற்களையும் உருபன்களையும் நுணுக்கமாக ஆய்தல்
4. மூல மொழிச் சொற்றொடருக்கு உரிய கருத்துருவாக்கம் செய்தல்
5. இரு மொழி அகராதியைப் பயன்படுத்துதல்
6. அவ்வமைப்பில் சேமிக்கப்பட்டுள்ள மொழியியல் அறிவினைப் பயன்படுத்தி அதற்கேற்ப உள்ளீடு செய்யப்படும் சொற்களை மொழிபெயர்த்தல்

**2.1.13.1.1.1. அணுகுமுறை**

உருசியன் - தமிழ் இயந்திர மொழிபெயர்ப்புத்திட்டத்தில் இடைமொழியுடன் கூடிய மாற்று அணுகுமுறை (Transfer Methodolgy involving intermediate Language) பயன்படுத்தப்பட்டது. இத்திட்டத்தில் இடைநிலை மொழியொன்று பயன்படுத்தப்பட்டது. இவ்விடையீட்டு மொழியின் தொடரியல் பண்புகள் இலக்கு மொழியின் தொட்ரியல் பண்புகளோடு மிகுந்த ஒற்றுமை உடையதாய் இருந்தது. இவ்வமைப்பில் உள்ளீடாகக் கொடுக்கப்படும் உருசிய மொழிச்சொற்றொடரானது முதலில் சொல்லாய்வுக்கு உட்படுத்தப்பட்டு, பின்பு அதன் தொடரியல் உருபனியல் ஆய்வுகள் செய்யப்பட்டு, ஒவ்வொரு சொல்லாக மொழிபெயர்க்கப்பட்டது. இதன் செயல்முறை விளக்கப்படத்தினைக் கீழே காணலாம்.




முன்திருத்தி - உள்ளிடப்பட்ட மூலமொழித் தொடர் தவறுகள் ஏதும் இன்றி சரியான அமைப்பில் உள்ளதா என ஆராய்வதே முன் திருத்தியின் பணியாகும். மேலும் இது சிக்கலான அமைப்புடைய தொடர்களை எளிய தொடர்களாக மாற்றுவதோடு மட்டுமின்றி உள்ளீடு செய்யப்பட்ட தொடரின்

அமைப்பினை ஒரு குறியீட்டு அமைப்பாக மாற்றி அமைக்கும். உள்ளிடப்பட்ட தொடர் சரியான அமைப்பு முறையில் உள்ளதா எனப்பார்த்து, அதனைப் பகுப்பாய்வு செய்து முழுதும் பகுக்கப்பட்ட ஒரு அமைப்பினை உருவாக்குவதே பகுப்பியின் பணியாகும். சொல்லாய்வி, உள்ளீடாகப்பெற்ற ஒவ்வொரு சொல்லையும் ஆராய்ந்து அதன் அடிச்சொல், பலவேறு மாற்று வடிவங்கள், அதன் உருபுகள் போன்ற பல வடிவங்களாகப் பிரிக்கும். ஒரு இயந்திர மொழிபெயர்ப்புக்குத் தேவையான சொல் ஒன்றினைக் குறித்த அனைத்துச் செய்திகளையும் கொடுப்பது சொல்லாய்வியேயாகும். இருமொழியகராதி, உருசியன் மற்றும் தமிழ்ச் சொற்களைக் கொண்ட 1200 சொற்களைக்கொண்டிருந்தது மூலமொழியில் வரவாய்ப்புள்ள அனைத்துச் சொற்களுக்கும் நிகரான இலக்கு மொழிச்சொற்கள் ஒரு அகராதியில் இடம்பெற்றிருத்தல் வேண்டும். ஒரு இயந்திர மொழிபெயர்ப்பு அமைப்பு அதன் சரியான மொழிபெயர்ப்பினைத் தருவதற்கு அவ்வகராதி குறைந்தது 50,000 சொற்களையாவது கொண்டிருக்க வேண்டும் என்று இவ்வாய்வின் மூலம் உணரப்பட்டது. அக்காலத்தில் அதிகமான அளவு சொற்களைச் சேமிப்பது கடினம் எனினும் பல தரவுத்தளங்களைப் பயன்படுத்தி சொற்கள் சேமிக்கப்பட்டு இருந்தன. மொழிபெயர்ப்புப்பகுதி சொல்லுக்குச்சொல் மொழிபெயர்ப்பதாய் அமைந்தது. தொடரியல் மற்றும் உருபனியல் ஆய்வியின் மூலம் கிடைத்த சொற்கள் இரு மொழியகராதியில் இருந்து நிகரன் கண்டுபிடிக்கப்பட்டு இலக்குமொழிச்சொல்லாக பெயர்க்கப்படும். வினைத்தொடர் ஆய்வி, ஒவ்வொரு தொடரின் வினைச்சொல், வினையடை, செய்வினை, செயப்பாட்டு வினை வடிவங்கள். போன்ற பல பண்புகளை ஆராயும். உரை உருவாக்கி, அகராதியிலிருந்து பெறப்பட்ட மூல மொழிக்கு நிகரான இலக்குமொழிச்சொல் நிகரன்களை அமைத்து மொழிபெயர்ப்பியானது ஒவ்வொரு சொல்லாக மாற்றியமைக்கும். அச்சொல்லுக்குப் பொருத்தமான வேற்றுமை உருபுகள், வேறுபட்ட

வடிவங்கள், போன்றன உருவாக்கப்பட்டு, இந்நிலையில் சேர்க்கப்படுகின்றன. இவ்வாறு இங்கு மொழிபெயர்க்கப்படும் உரையானது இடையீட்டு மொழியின் தொடரியல் பண்புகளைக்கொண்டு இருக்கும். பொருண்மையினை வைத்துப்பார்க்கும் போது இவ்வாறு உருவாக்கப்படும் உரையானது இலக்குமொழியோடு தொடர்பற்றதாக இருக்கும். எனவே இந்த உரை உருவாக்கியானது இத்தொடர்களை மீண்டும் தமிழ் மொழியின் தொடரியல் பண்புகளைச் சேர்த்து மாற்றியமைக்கும். இவ்வாறு அனைத்துப்பகுதிகளும் ஒன்றிணைந்து செயல்பட்டு உருசிய மொழியானது தமிழ் மொழியாக மாற்றியமைக்கும் முயற்சி நடைபெற்றது

**2.1.13.2. உலக வலைப்பின்னல் மொழி - இடைநிலை மொழியுடன் கூடிய இயந்திர மொழிபெயர்ப்பு**

பிற மொழிகளிலிருந்து தமிழுக்கு இடைநிலை மொழியினைப் பயன்படுத்தி இந்த முறையானது வடிவமைக்கப்பட்டது. இது சென்னையில் உள்ள அண்ணா பல்கலைக்கழகப் பேராசிரியர்கள்; தனபாலன் மற்றும் கீதா என்பவர்களால் 2004 ஆம் ஆண்டு நடைபெற்ற முயற்சியாகும். ( சுபஸ்ரீ, இயந்திர மொழிபெயர்ப்பு, முன் முனைவர்ப்பட்ட ஆய்வேடு, தமிழ்ப்பல்கலைக்கழகம்). இவ்விடைநிலை மொழி; உலகளாவிய வலைப்பின்னல் மொழி எனப்படும். மூல மொழியானது இவ்வலைப்பின்னல் மொழிக்கு மாற்றப்பட்டு பின்னர் இவ்வலைப்பின்னல் மொழியானது தமிழ்மொழியின் அகராதி மற்றும் இலக்கணத்தினைப் பயன்படுத்தி, தமிழ் மொழியினை முற்றிலும் தானியக்க முறையில் பெறுமாறு இவ்வமைப்பு வடிவமைக்கப்பட்டு இருந்தது.

**2.1.13.3. ஆங்கிலத்திலிருந்து மொழியியல் நூல்களைத் தமிழில் மொழிபெயர்க்கும் திட்டம்**

2004 ஆம் ஆண்டு தமிழ்ப்பல்கலைக் கழகத்தில் பேராசிரியர்கள் காமாட்சி மற்றும் இராசேந்திரன் என்பவர்களால் மொழியியல் புத்தகங்களைத்தமிழில் மொழிபெயர்ப்பதற்கு ஒரு இயந்திர

மொழிபெயர்ப்புக் கருவி உருவாக்கப்பட்டது. இதன் செயல்பாடு; தமிழ், ஆங்கில மொழிகளின் அமைப்பாய்வு, இரு மொழிச்சொற்களை உள்ளடக்கிய மொழிபெயர்ப்பு அகராதி, ஆங்கில - தமிழ் மாற்றமைவு விதிகள், தமிழ் மொழி உருவாக்கி போன்ற பகுதிகளைக் கொண்டிருந்தது.

**2.1.13.4. ஏ.யு.கே.பி.சி. நிறுவனத்தின் தமிழை உள்ளடக்கிய கணினி உதவி மொழிபெயர்ப்பு**

அண்ணா பல்கலைக்கழகத்தின் ஏ யு.கே பி சி நிறுவனத்தில் 2004 ஆம் ஆண்டு ஆங்கிலத்திலிருந்து தமிழுக்குக் கணினி உதவியுடன் கூடிய இயந்திர மொழிபெயர்ப்பு மேற்கொள்ளப்பட்டது. இது குறிப்பிட்ட அளவு சொற்களையும், குறிப்பிட்ட அளவு இலக்கணத்தையும் கொண்டு எளிய ஆங்கில வாக்கியங்களைத் தமிழுக்கு மொழிபெயர்த்திட உதவுகிறது.

**2.1.13.5. வாசு ரெங்கநாதன் அவர்களின் ஆங்கிலம் - தமிழ் இயந்திர மொழிபெயர்ப்புத்திட்டம்**

அமெரிக்காவின் பென்சில்வேனியா பல்கலைக் கழகத்தின் பேராசிரியர் வாசு ரெங்கநாதன் அவர்களால் ஆங்கிலம் - தமிழ் இயந்திர மொழிபெயர்ப்புத்திட்டம் ஒன்று உருவாக்கப்பட்டது. இது விதி அடிப்படை அணுகுமுறையில் உருவாக்கப்பட்ட அமைப்பு ஆகும் இதில் 5,000 ஆங்கிலம் மற்றும் தமிழ்ச்சொற்கள் உள்ளன. ஆங்கிலத்திலிருந்து தமிழுக்கு மாற்றும் விதிகளும் இதில் உள்ளன. இவ்வமைப்பினைப் பயன்படுத்துபவர்கள் இந்த அகராதியினை மேம்படுத்தும் விதம் இது அமைக்கப்பட்டுள்ளது. (Dr. Vasu Renganathan, An Interactive Approach to Development of English Tamil Machine Translation System on the Web, University of Pennsylvania).

### 2.1.14. மலையாளமும் இயந்திர மொழிபெயர்ப்பும்

தமிழைப்போன்றே மலையாளத்திலும் இயந்திர மொழிபெயர்ப்பு முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன மத்திய அரசின் முயற்சியாலும் நிதியுதவியாலும் பல்வேறு நிறுவனங்கள் கேரளத்திலும், இந்தியாவின் வெளி மாநிலங்களிலும் மலையாளத்திலிருந்து பிற மொழிகளுக்கு இயந்திர மொழிபெயர்ப்பு செய்யும் முயற்சியினை மேற்கொண்டுள்ளன, இயந்திர மொழிபெயர்ப்பு நோக்கில் மலையாள மொழியினை ஆய்ந்து, பல மொழியாய்வுக்கருவிகள் அம்மொழிக்கு உருவாக்கப்பட்டுள்ளன இவ்வாறு மலையாள மொழியில் மேற்கொள்ளப்பட்டுள்ள இயந்திர மொழிபெயர்ப்பு முயற்சிகளைக் குறித்து கீழே காணலாம்

#### 2.1.14.1. மலையாளம் - தமிழ் இயந்திர மொழிபெயர்ப்புத்திட்டம்

மலையாள மொழியிலிருந்து - தமிழுக்கு இயந்திர மொழிபெயர்ப்புத்திட்டம் சென்னை அண்ணா பல்கலைக்கழகத்தின் ஏ யு கே பி சி நிறுவன ஆய்வாளர்களால் மேற்கொள்ளப்பட்டது. இது இந்திய மொழிகளுக்கிடையேயான இயந்திர மொழிபெயர்ப்பு முயற்சியின் ஒரு பகுதி ஆகும் இதில் மேற்கொள்ளப்பட்ட அணுகு முறை விதி அடிப்படை அணுகுமுறை மற்றும் புள்ளியியல் அணுகுமுறை ஆகும் இவ்வமைப்பு ஆய்தல், மாற்றம், உருவாக்கம் என்ற முறையின்படி அமைக்கப்பட்டது. மலையாளத்திலிருந்து தமிழுக்கு மொழிபெயர்க்கத் தேவைப்படும் மலையாள மொழியின் உருபனியல் ஆய்வி, சொல் வகைப்பாட்டு அடையாளப்படுத்தி, தொடர் பகுப்பான், வட்டாரச்சொல் குழுமி, மலையாளம் - தமிழ் இலக்கண மாற்றல் பகுதி, தமிழ் மொழி உருவாக்கி போன்ற அனைத்து மூலமொழி - இலக்கு மொழி ஆய்வுக்கருவிகளையும் இவ்வமைப்பு கொண்டுள்ளது ஒரு ஆய்வுககருவியின் வெளியீடு அடுத்துவரும் கருவியின் உள்ளீடாக அமையும் விதம் மிகவும் நேர்த்தியாக இத்திட்டம் வடிவமைக்கப்பட்டுள்ளது

இம்மொழிபெயர்ப்பியானது தற்போதும் உருவாக்கப்பட்டுக்கொண்டு இருக்கிறது

### 2.1.14.2. தமிழ் - மலையாள இயந்திர மொழிபெயர்ப்புத் திட்டம்

தமிழ் மொழியிலிருந்து மலையாள மொழிக்கு மொழிபெயர்க்கும் இயந்திர மொழிபெயர்ப்பி தஞ்சாவூர் தமிழ்ப்பல்கலைக்கழகத்தில் நடைபெற்றது இதுவும் இந்திய மொழிகளுக்கிடையேயான இயந்திர மொழிபெயர்ப்பு முயற்சியின் ஒரு பகுதி ஆகும் பேராசிரியர் இராசேந்திரன் அவர்களது தலைமையில் அமைந்த ஆய்வுக்குழுவினரால் இம்முயற்சி மேற்கொள்ளப்பட்டது இதில் தமிழ் மற்றும் மலையாள மொழியியல் நிபுணர்களும், கணினியியல் வல்லுனர்களும் இடம்பெற்றிருந்தனர் இத்திட்டத்தின் மூலம் தமிழ் மற்றும் மலையாள மொழிகளில் இயந்திர மொழிபெயர்ப்புக்குத் தேவைப்படும் அனைத்து மொழியாய்வுக்கருவிகளும் வடிவமைக்கப்பட்டுள்ளன இத்திட்டம் தற்போதும் உருவாக்கப்பட்டுக்கொண்டு இருக்கிறது.

### 2.1.14.3. தமிழ் - மலையாள இயந்திர மொழிபெயர்ப்புத் திட்டம்

ஐதராபத்திலுள்ள பன்னாட்டுத் தொழில்நுட்ப நிறுவனத்தின் கேரளக் கிளை தமிழிலிருந்து மலையாளத்திற்கு மொழிபெயர்ப்பு செய்யும் முயற்சிகளை மேற்கொண்டு வருகிறது. தமிழ்ப்பல்கலைக் கழகத்தில் நடைபெற்ற இத்திட்டம் தற்போது இந்நிறுவனத்தில் நடைபெற்று வருகிறது. மலையாள மொழியினை இயந்திர மொழிபெயர்ப்புக்கு உட்படுத்துவதற்குத் தேவையான அனைத்து ஆய்வுகளும் இங்கு நடைபெற்று வருகின்றன.

### 2.1.14.4. ஆங்கிலம் - மலையாளம் இயந்திர மொழிபெயர்ப்புத் திட்டம்

ஆங்கிலம் - மலையாளம் மொழிகளுக்கிடையான இயந்திர மொழிபெயர்ப்பு முயற்சி தமிழ்நாட்டில் கோயம்புத்தூரில் உள்ள அமிர்தா பல்கலைக்கழகத்தில் நடைபெற்று வருகிறது. இது ஆங்கிலத்தினை மூலமொழியாகவும் மலையாளம், தமிழ், தெலுங்கு கன்னடம் என நான்கு

மொழிகளை இலக்குமொழியாகவும் கொண்டு நடைபெற்று வருகிறது மும்பையிலுள்ள இந்தியத் தொழில்நுட்பக் கழகம், திராவிடப் பல்கலைக்கழகம், ஐதராபாத் மத்தியப் பல்கலைக்கழகம், தமிழ்ப் பல்கலைக்கழகம், என நான்கு நிறுவனங்களுடன் இணைந்து அமிர்தா பல்கலைக்கழகத்தில் இம்முயற்சி மேற்கொள்ளப்பட்டு வருகின்றது இத்திட்டத்தில் புள்ளியியல் அணுகுமுறையானது பயன்படுத்தப்படுகின்றது

### 2.1.14.5. இந்திய மொழிகளுக்கு இடையேயான இயந்திர மொழிபெயர்ப்புத்திட்டம்

**(Indian Language to Indian Language Machine Translation System)**

இந்திய மொழிகளுக்கு இடையேயான இயந்திர மொழிபெயர்ப்புத்திட்டம் 2006 ஆம் ஆண்டு இந்திய அரசின் தகவல் மற்றும் தொழில்நுட்பத்துறையின் கீழ் இயங்கும் "இந்திய மொழிகளில் தொழில்நுட்ப வளர்ச்சி" ( Technology Development for Indian Languages, TDIL) என்ற திட்டத்தால் உருவாக்கப்பட்டது இந்தியாவிலுள்ள ஒன்பது இணை மொழிகளுக்கிடையே இம்முயற்சி மேற்கொள்ளப்படுகிறது இயற்கை மொழி ஆய்விலும் இயந்திர மொழிபெயர்ப்பிலும் சிறந்த அனுபவம் பெற்ற ஒன்பது நிறுவனங்கள் இதில் இணைந்து பணியாற்றுகின்றன அவை, ஐதராபாத்திலுள்ள பன்னாட்டுத் தொழில்நுட்பக்கழகம், ஐதராபாத் மத்தியப் பல்கலைக்கழகம், புனே மற்றும் நொய்டாவிலுள்ள சி-டாக் நிறுவனம், அண்ணாபல்கலைக்கழகத்தில் இயங்கிவரும் கே பி சந்திரசேகர் ஆய்வு மையம், கரக்பூரிலுள்ள இந்தியத்தொழில்நுட்பக் கழகம், மும்பையிலுள்ள இந்தியத் தொழில்நுட்பக் கழகம், பெங்களூரில் உள்ள இந்திய அறிவியல் மையம், தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம், அலகாபாத்திலுள்ள இந்தியத் தொழில்நுட்பக்கழகம்,

மற்றும் கொல்கத்தாவிலுள்ள ஜாதவ்பூர் பல்கலைக்கழகம் என்பன ஆகும். இதில் எடுத்துக்கொள்ளப்பட்ட மொழிகள் ஆவன, 1.இந்தி, 2..உருது, 3.பஞ்சாபி, 4.தெலுங்கு, 5.வங்காளி, 6.தமிழ், 7.மராட்டி, 8.கன்னடம், 9.மலையாளம் என்பன. இதில் உருவாக்கப்படும் பதினெட்டு இணை மொழிபெயர்ப்பு அமைப்புகள்,

1. இந்தி - உருது
2. உருது - இந்தி
3. இந்தி - பஞ்சாபி
4. பஞ்சாபி - இந்தி
5. இந்தி - தெலுங்கு
6. தெலுங்கு - இந்தி
7. இந்தி - வங்காளி
8. வங்காளி - இந்தி
9. இந்தி - தமிழ்
10. தமிழ் - இந்தி
11. இந்தி - மராட்டி
12. மராட்டி - இந்தி
13. இந்தி - கன்னடம்
14. கன்னடம் - இந்தி
15. தமிழ் - மலையாளம்
16. மலையாளம் - தமிழ்
17. தமிழ் - தெலுங்கு
18. தெலுங்கு - தமிழ்

ஆகியவைகளாகும்.

#### 2.1.14.5.1. பயன்பாடு

இத்திட்டத்தில் வடிவமைக்கப்படும் மொழிபெயர்ப்பிகள் அனைத்துமே இணையப்பக்கங்களில் செயல்படும் விதம் உருவாக்கப்படுகின்றன இணையத்தில் காணப்படும் சுற்றுலா மற்றும் உடல்நலம் தொடர்பான தளங்களில் இவை செயலாற்றும் தற்கால மொழிவழக்கின் உரைநடை வடிவினை இம்மொழிபெயர்ப்பிகள் மொழிபெயர்க்கும்

#### 2.1.14.5.2. பொருண்மைக் களன்கள்

இம்மொழிபெயர்ப்பிகள் சுற்றுலா (Tourism) மற்றும் (Health) போன்ற பொருண்மைக்களன்களில் செயல்படும் விதம் இவை வடிவமைக்கப்படுகின்றன

#### 2.1.14.5.3. உருவாக்கப்படும் முறை

இந்திய மொழிகளுக்கிடையே வடிவமைக்கப்படும் இத்திட்டம் ஆய்தல், மாற்றியமைத்தல், உருவாக்குதல் என்னும் முறையினைப் பின்பற்றி உருவாக்கப்படுகின்றன

#### 2.1.14.5.3.1. ஆய்தல் (Analysis)

உள்ளீடு செய்யப்பட்ட மொழியின் உரையானது, சேகரிக்கப்பட்டு, மொழிபெயர்ப்புக்கு ஏற்ப வடிவமைக்கப்படும் பின்பு அவ்வுரையின் மீதான பல்வேறு மொழியியல் ஆய்வுகள் மேற்கொள்ளப்படும்

#### 2.1.14.5.3.2. மாற்றியமைத்தல் (Transfer)

மூல மொழியின் உரை ஆய்வு செய்யப்பட்ட பின்பு; ஆய்வு செய்யப்பட்ட அமைப்பும், சொற்களும் இலக்கு மொழிக்கு மாற்றியமைக்கப்படும்.

#### 2.1.14.5.3.3. உருவாக்குதல் (Generation)

மாற்றியமைத்தல் மூலம் கிடைத்த வெளியீட்டிலிருந்து இலக்குமொழியானது அதன் பண்புகள் சேர்க்கப்பட்டு உருவாக்கப்படும்

### 2.1.14.5.4. முக்கியப் பாகங்களும் அவற்றின் பணிகளும்

இந்த இயந்திரமொழிபெயர்ப்பியின் அனைத்துப் பாகங்களையும் மூன்று முக்கியப் பிரிவுகளின் கீழ் அடக்கலாம். அவை,

1. மூலமொழி ஆய்வி
2. இலக்குமொழி ஆய்வி
3. மூலமொழியிலிருந்து இலக்குமொழிக்கு மாற்றும் பகுதி
4. இலக்குமொழி உருவாக்கி.

#### 2.1.14.5.4.1. மூலமொழி ஆய்வி

##### 2.1.14.5.4.1.1. முன் ஆய்வி

இணையத்தில் பயனாளர்களை இயந்திர மொழிபெயர்ப்பியுடன் இணைக்கும் ஓர் இடைமுகத்தினை இம்முன்னாய்வி அளிக்கிறது. பயனர் அளிக்கும் இணையப்பக்கங்களை இம்முன்னாய்வி சேகரிக்கும். இவ்வாறு சேகரித்த உரைப்பக்கங்களை, தன்னுடைய மொழிபெயர்ப்பிற்குத் தக்கவாறு வடிவமைக்கும்

##### 2.1.14.5.4.1.2. அடையாளப்படுத்தி

உள்ளீடாகப் பெறப்பட்ட ஒவ்வொரு வாக்கியத்தின் இறுதியிலும் அவ்வாக்கியத்திலுள்ள சொற்கள், நிறுத்தற் குறிகள் மற்றும் பிற குறிகளை அடையாளப்படுத்தியானது, குறித்துவைக்கும்.

##### 2.1.14.5.4.1.3. சந்தி பிரிப்பான்

உள்ளீடு செய்யப்பட்ட மொழியின் புணர்ச்சி அமைப்பினை இப்பகுதி கவனிக்கும். புணர்ச்சி இடம்பெறும் கூட்டுச் சொற்களை இப்பகுதி தனித்தனிச் சொல்லாகப் பிரிக்கும். உருபனியல் ஆய்வு மேற்கொள்ளும் முன் இக்கூட்டுச் சொற்கள் தனிதனியாகப் பிரிக்கப்படல் வேண்டும்.

எனவே இத்தகைய சொற்களைத் தனித்தனிச் சொற்களாக இச்சந்தி பிரிப்பான் பிரித்து வைக்கும்.

### 2.1.14.5.4.1.4. உருபனியல் ஆய்வி

சந்தி பிரிப்பானின் வெளியீடாகப் பெறபட்ட உரையினை, உருபனியல் ஆய்வு உள்ளீடாக எடுக்கும். அதனை வேர்ச்சொல் மற்றும் உருபன்களாக உருபனியல் ஆய்வி கண்டுபிடித்துப் பிரிக்கும். சொல்திரிபு அதிகமாக உள்ள தமிழ் போன்ற மொழிகளுக்கு; ஒரு வேர்ச்சொல் அகராதியும், அவற்றை வேர் மற்றும் அதன் இலக்கணப்பகுதிகளாகப் பிரிக்கும் உருபனியல் ஆய்வியும் மிக முக்கியமானவை ஆகும்.

### 2.1.14.5.4.1.5. சொல் வகைப்பாட்டுக்குறிப்பான்

உள்ளீடாகப்பெறப்பட்ட ஒவ்வொரு சொல்லுக்கும் அது எவ்வகைச் சொல் வகுப்பைச் சார்ந்தது என்று அறிந்து அதற்கு ஒரு குறியீட்டைக் கொடுப்பது சொல் வகைப்பாட்டுக் குறிப்பானின் செயலாகும். பெறபட்ட சொல்லானது, பெயர்ச்சொல்லா, வினைச்சொல்லா, பெயரடையா, வினையடையா எனப் பகுத்துக் குறிக்கும்.

### 2.1.14.5.4.1.6. தொடர் பகுப்பான்

தொடர் பகுப்பான்; எளிய பெயர்த்தொடர்கள், வினைத்தொடர்கள், பெயரடைத்தொடர்கள், வினையடைத்தொடர்கள் போன்றவற்றைக் கண்டு பிடித்து அடையாளம் காணும். உள்ளீடு செய்யப்பட்ட உரையில் தொடர்களைப் பல வகைகளாகப் பகுத்துப் பிரிப்பது தொடர் பகுப்பான் ஆகும்.

### 2.1.14.5.4.1.7. வட்டாரச் சொல் முழுமி

வட்டாரச் சொல்குழுமி, வட்டாரச்சொற்களை, வட்டாரத்தகவல் அடிப்படையில் குழுமப்படுத்தும்.

#### 2.1.14.5.4.1.8. பொருள மயக்க நீக்கி

உள்ளீடு செய்யப்பட்ட உரையில் உருபனியல் ஆய்வியின் மூலம் கண்டறியப்பட்ட வேர்ச்சொற்களின் சரியான பொருளை, இலக்குமொழியில் பொருள் மயக்கமின்றி காண, இவ்வமைப்பு பயன்படுகிறது பின்பு இலக்குமொழி நிகரனுடன் மூலமொழிச்சொல் மாற்றியமைக்கப்படுகிறது இதற்கு பன்மொழிச் சொல்லகராதி உதவுகிறது

#### 2.1.14.5.4.2. மூல மொழியிலிருந்து இலக்கு மொழிக்கு மாற்றுதல்

மூல மொழியிலிருந்து இலக்கு மொழிக்கு மாற்றும் முயற்சியில் மூன்று முக்கிய அலகுகள் செயல்படுகின்றன அவையாவன,

1 மொழிமாற்ற இலக்கணம்

2 சொற்களைப் பதிலீடு செய்யும் அலகு

3 ஒலிபெயர்ப்பி என்பன

#### 2.1.14.5.4.2.1. மொழிமாற்ற இலக்கணம்

மொழிமாற்ற இலக்கணம் என்பது, இரு இணை மொழிகளுக்கிடையே பாலம் போல் அமைக்கப்படும் இலக்கண வரைவு ஆகும் இரு மொழிகளுக்கிடையே உருவாக்கப்படும் இலக்கணத்தினை வேறு ஒரு மொழியிணைக்கிடையே பயன்படுத்த இயலாது மொழிமாற்ற இலக்கணம் உருபனியல், தொடரியல் அடிப்படையில் எடுத்துக்கொள்ளப்பட்ட இரு மொழிகளின் ஒற்றுமை, வேற்றுமைகளைக் கண்டுபிடித்து; மூலமொழியின் அமைப்பினை இலக்குமொழியமைப்பாக மாற்றியமைக்கும் இதற்காக இருமொழிகளுக்கிடையேயான வேறுபாடுகள் (Divergences) முக்கியமாகக் கண்டுபிடிக்கப்படல் வேண்டும்

#### 2.1.14.5.4.2.2. சொல் மாற்றி

உருபனியல் ஆய்வியின் மூலம் மூலமொழி உரையிலிருந்து கண்டுபிடிக்கப்பட்ட வேர்ச்சொற்களுக்கு நிகரான இலக்குமொழி நிகரனை சொல்மாற்றியானது இலக்குமொழி அகராதியிலிருந்து கண்டுபிடிக்கும்

**2.1.14.5.4.2.3. ஒலிபெயர்ப்பி**

மூலமொழிச்சொல் ஒன்றின் எழுத்துவடிவினை மட்டும் இலக்குமொழியினுடையதாக மாற்றியமைப்பது ஒலிபெயர்ப்பு எனப்படும். மூலமொழியிலும் இலக்குமொழியிலும் பொதுவாக அமையும் சொற்களை இவ்வாறு ஒலிபெயர்ப்பு செய்தால், இதன் மூலம் பயன்பாட்டாளர் இலக்கு மொழியினைப் புரிந்துகொண்டு படிக்க இயலும் இந்திய மொழிகள் ஏராளமான சொற்களை பொதுச்சொற்களாகக் கொண்டுள்ளன. எனவே இந்திய மொழிகளுக்கிடையில் இயந்திர மொழிபெயர்ப்பிகள் உருவாக்கப்படும்போது இம்முறை சிறந்த பலன் தரும்.

**2.1.14.5.4.3. இலக்கு மொழி உரை உருவாக்கம்**

இலக்கு மொழி உரை உருவாக்கம் இவ்வியந்திர மொழிபெயர்ப்பு அமைப்பில் மூன்றாவது நிலை ஆகும். இது பெயர் - வினை இயைபு சேர்த்தல், இலக்கு மொழிக்கே உரிய பண்புகளைச் சேர்த்தல், இலக்கு மொழிச் சொல் உருவாக்கி என்ற மூன்று அலகுகளைக்கொண்டது.

**2.1.14.5.4.3.1.** பெயர் - வினை இயைபு சேர்த்தல்

மூல மொழிச்சொல்லின் பெயர் - வினை் இயைபுக்கு ஏற்ப இலக்குமொழியானது அமைக்கப்படல் வேண்டும். இப்பகுதி இலக்கு மொழியில் பெயர் வினை இயைபினைச் சரிபார்க்கும்.

**2.1.14.5.4.3.2.** இலக்கு மொழிப்பண்புகளைச் சேர்த்தல்

இலக்கு மொழிக்கே உரிய பண்புகள் இந்நிலையில் சேர்க்கப்படும். இதனை இப்பகுதி செயல்படுத்தும்.

**2.1.14.5.4.3.3.** இலக்குமொழி உருபனியல் உருவாக்கி.

ஒரு இலக்குமொழிச்சொல் உருவாக்கப்படுவதற்கு அச்சொல்லின் வேர், இலக்கண வகுப்பு அவற்றின் ஒட்டுக்கள் அனைத்தும் சரியான முறையில் சேர்க்கப்ப்படல் வேண்டும். இதற்கு இலக்குமொழியின் உருபனியல் அறிந்திருத்தல் அவசியம். இ.மொ. உருவாக்கியானது; அதன்

உள்ளீட்டினை மொழிமாற்ற இலக்கணத்திலிருந்து பெறும் இந்த உள்ளீடு, வினைச்சொல்லின் வேரையும், அதன் ஒட்டுக்களையும் கொண்டிருக்கும். இ.மொ.யின் உருபனியல் உருவாக்கி, இ.மொ.யின் உருபனியல் விதிகளைப் பயன்படுத்தி சரியான இலக்கண ஒட்டுக்களுடன் கூடிய இ.மொ சொல்லை உருவாக்கும். இவ்வாறு உருவாக்கப்படும் சொற்கள் மேற்கூறிய முறையில் ஒன்றன் பின் ஒன்றாக உருவாக்கப்பட்டு இ.மொழியின் முழுத்தொடரும் உருவாக்கப்படும்.

இந்திய மொழிகளுக்கிடையேயான இயந்திர மொழிபெயர்ப்புத் திட்டம் இவ்வாறு மேற்கண்ட பகுதிகள் அனைத்தையும் இணைத்துக்கொண்டு இயங்குகிறது மேற்கூறப்பட்ட ஒன்பது மொழிகளுக்கிடையே இயந்திர மொழிபெயர்ப்பு அமைப்புகள் அமைக்கப்பட்டுள்ளன. அதில் ஆறு மொழியிணைகளுக்கிடையேயான மொழிபெயர்ப்பிகள் முதல்நிலைச் சோதனைக்காக ஐதராபாத்திலுள்ள பன்னாட்டு தொழில்நுட்பக் கழகத்தின் இணையதளத்தில் வெளியிடப்பட்டுள்ளன.

### 2.2.1. மொழிமாற்ற இலக்கணம் ( Transfer Grammar )

1. விதி அடிப்படையிலான அணுகுமுறையில் உருவாக்கப்படும் மொழிபெயர்ப்பிகளில் மொழிமாற்ற இலக்கணம் முக்கியமான பகுதியாகும். மூல மொழி, இலக்கு மொழி இரண்டையும் இணைத்து வைக்க, நடுவே நிற்கும் ஒரு முக்கியமான இணைப்பு போன்று இவ்வமைப்பு செயல்படுகிறது. (P.V.S. Avinesh, Transfer Grammar Engine and Automatic Learning of Reorder Rules in Machine Translation, Master of Computer Sceince Thesis , 2010, IIIT- Hyderabad). இதன் முக்கியப்பணி, மூலமொழியின் அமைப்பினை இ.மொழியாக மாற்றுவது ஆகும். இவ்வாறு மாற்றுவதற்கான விதிகளை இது கொண்டிருக்கும். குறிப்பாக,

மூலமொழியின் அமைப்பினை உருபனியல், தொடரனியல், சொற்பொருண்மையியல் மற்றும் சூழல்பொருண்மையியல் எனப் பல மொழியியல் நிலைகளின் அடிப்படையில், இமொழியுடன் பொருத்துவது எனலாம் இவ்வாறு இரு மொழிகளையும் அனைத்து நிலைகளிலும் பொருத்துவதற்கு அவ்விரு மொழிகளும் ஒன்றுபடும், வேறுபடும் இடங்கள் ஆராய்ந்து கண்டறியப்பட்டு, அதனை இலக்கு மொழி அமைப்புடன் பொருத்தி விதிகள் எழுதப்படல் வேண்டும் எனவே இரு மொழிகளின் அமைப்பினையும் அதன் இலக்கண அமைதியையும் நன்கு அறிந்த மொழியியல் வல்லுனர்களால் இவ்விலக்கணம் எழுதப்படுகிறது இவ்வாறு மொழிபெயர்ப்புக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட இரு மொழிகளின் அமைப்பு குறித்த அனைத்து மாற்று விதிகளையும் உள்ளடக்கிய வடிவம், மொழிமாற்று இலக்கணம் எனப்படும்

**2.2.1.1. உருவாக்கும் முறை**

இயந்திர மொழிபெயர்ப்பின் தோற்றம் முதலே மொழிமாற்று இலக்கணங்கள் உருவாக்கப்பட்டு, பயன்படுத்தப்பட்டு வந்துள்ளன இதனை இரு வேறு முறைகளில் உருவாக்கலாம்

1. தானியக்கமாக கணினியின் மூலம் உருவாக்குதல்
2. மனித முயற்சியால் உருவாக்குதல்

**2.2.1.1.1.** தானியங்கு முறையில் மொழிமாற்று இலக்கணங்களை வடிவமைக்கலாம் இம்முறையில் மொழிபெயர்ப்புக்கு உட்படுத்தப்படும் இரு மொழிகளின் இணைப்பெருந்தரவுகள் தேவைப்படுகின்றன இவை கணினியில் சேமிக்கப்படல் வேண்டும் இப்பெருந்தரவுகளைப் பயன்படுத்தி, கணினியே இரு மொழிகளுக்கிடையேயான மொழிமாற்று இலக்கணங்களை வடிவமைக்கும் இது மிகவும் எளிய முறை எனினும் எடுத்துக்கொள்ளப்படும் பெருந்தரவுகள் மிகப்பெரியதாகவும், தவறுகள் இன்றியும் சிறப்பாகவும் இருத்தல் வேண்டும் ஏனெனில்

இப்பெருந்தரவுகளைப் பொருத்தே மொழிமாற்று இலக்கணங்கள் சிறப்பாக அமையும்

**2.2.1.1.2.** மனித முயற்சியால் உருவாக்கப்படும் மொழிமாற்று இலக்கணங்களை வடிவமைக்கும் இலக்கணவியலாளர், மொழிபெயர்ப்புக்காக எடுத்துக்கொள்ளப்படும் இரு மொழிகளின் அமைப்பினை மொழியியல் அடிப்படையில் நன்கு அறிந்தவராக இருத்தல் வேண்டும் முக்கியமாக, மொழியிணைகளுக்கிடையே அமையும் அனைத்து உருபனியல் தொடரனியல் வேறுபாடுகளையும் நன்கு அறிந்தவராக இருக்க வேண்டும் இவ்வாறு நன்கறிந்த மொழியியல் அறிஞர்களால் மொழிமாற்று விதிகள் எழுதப்படுகின்றன இருமொழிகளுக்கிடையே அமையும் வேறுபாடுகள் பொருத்தப்பட்டு, இவ்விதிகள் எழுதப்படும் ( Vineet Yadav, Anuroop Sriram, Hemansagar and Sriram, Inducing Transfer Grammar From Word Alingned Corpus, Language Technologies Research Centre, III-T, Hyderabad).

### 2.2.2. தமிழ் - மலையாளத்தில் மொழிமாற்று இலக்கணங்கள்

தமிழும் மலையாளமும் அமைப்பளவில் மிகவும் நெருங்கிய மொழிகள் ஆகும், எனினும் உருபனியல் அடிப்படையில் இரு மொழிகளும் மிகவும் வேறுபடுகின்றன ஆனால் தொடரனியனில் சார்ந்த வேறுபாடுகள் மிக மிகக் குறைவே ஆகும் எனவே தமிழ் - மலையாள மொழிகளுக்கிடையே மொழிமாற்று இலக்கணம் அமைக்க முற்படுகையில் உருபனியலே முக்கியத்துவம் பெறுகின்றது எனவே தமிழ் - மலையாள மொழிமாற்று இலக்கணம் இவ்விரு மொழிகளுக்கிடையே உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை முக்கியப்பகுதியாகக் கொண்டிருக்கும்

### 2.2.3. தமிழ் - மற்றும் மலையாள மொழிகளுக்கிடையே வேறுபாடுகள்

எந்த ஒரு மொழியும் அதன் அமைப்பில் பல்வேறு படிநிலைகளைக் கொண்டு அமைகின்றன மொழியின் இவ்வமைப்பினை மொழியியலாளர்கள் கீழ்க்கண்ட நிலைகளில் விளக்குகின்றனர்

1 ஒலியனியல் 2 உருபனியல் 3 தொடரனியல் 4 பொருண்மையியல் மற்றும் 5 சூழல் பொருண்மையியல் என்பனவாகும் இவற்றுள் தமிழும் மலையாளமும் தொடரியல் தவிர அனைத்து நிலைகளிலும் வேறுபடுகின்றன தமிழுக்கும் மலையாளத்திற்கும் இடையே முக்கியமாக, உருபனியல் நிலையே அதிகமான வேறுபாடுகளைக் கொண்டுள்ளது தமிழுக்கும் பிற திராவிடமொழிகளுக்கும் இடையே காணப்படும் வேறுபாடுகள், தமிழ் - மலையாளத்தை விட அதிகம் எனினும் இயந்திர மொழிபெயர்ப்பு நோக்கில் இவ்விருமொழிகளையும் நோக்குகையில் மிகச்சிறிய வேறுபாடு கூட கட்டாயம் கண்டுபிடிக்கப்படல் வேண்டும் இயந்திரமொழிபெயர்ப்பிற்காக எடுத்துக்கொள்ளப்படும் இரு மொழிகளுக்கிடையே காணப்படும் வேறுபாடுகள் கண்டறியப்பட்டு அவை கணினி வழிமுறையின் மூலம் மூலமொழியின் வேறுபடும் இலக்கணக்கூறு இலக்கு மொழியின் இலக்கணக்கூறுடன் சரியாகப் பொருத்தப்படல் வேண்டும் இதற்காக இரு மொழிகளுக்கும் இடையேயுள்ள வேறுபாடுகள் முக்கியமாகக் கண்டுபிடிக்கப்படல் வேண்டும் (Bonnie Jean Dorr, Machine Translation, A View from the Lexicon, 1993.page no. 234).

### 2.2.4. உருபனியல் - ஒற்றுமைகளும் வேற்றுமைகளும்

இயந்திர மொழிபெயர்ப்பு நோக்கில் தமிழ் மலையாள உருபனியல் அதன் எல்லா சொல்வகைகளின் கீழும் ஒப்பிட்டு நோக்கப்பட்டு வேறுபாடுகள் அறியப்படல் வேண்டும் தற்காலத்தமிழ் - மலையாளத்திற்கிடையே இம்முயற்சி மேற்கொள்ளப்படுவதால் தற்காலத் தமிழ் மற்றும் மலையாள மொழிகளின் சொல் வகுப்புகளும் அதன்

உட்பிரிவுகளும் ஒப்பிட்டு ஆராயப்படல் வேண்டும் தற்காலத் தமிழும் மலையாளமும் பழங்கால, முன்னைய வடிவங்களிலிருந்து பெரிதும் வேறுபடுகின்றன தற்காலத் தமிழ்மொழி புதிய சொல் வகுப்புக்களைத் தன்னகத்தே வளர்த்துக்கொண்டுள்ளமையால் தற்காலத் தமிழ் இலக்கண அறிஞர்கள் தமிழ் உருபனியலில் புதிய சொல் வகுப்புகளை உருவாக்கியுள்ளனர் ( ஆஷர், 1982, கோதண்டராமன் 1986, தாமசு இலேமன் 1989 ).

ஆஷர் தமிழின் சொல்வகைகளை, அவற்றின் பணபுகளுக்கு ஏற்ப ஏழு வகைகளாகப் பிரித்துள்ளார் அவையாவன,

1. பெயர்ச்சொல் 2. மாற்றுப்பெயர் 3. வினைச்சொல் 4. பெயரடை 5. பின்னுருபு 6. எண் / அளவை அடை மற்றும் 7. இடைச்சொற்கள் என்பன

பொன் கோதண்டராமன் (1989) சொல் வகைகளை; பத்து வகைகளாகப் பிரித்துள்ளார். அவை,

1. பெயர், 2. வினை 3. பெயரடை 4. வினையடை 5. வல்லடை 6. இணைப்பான் 7. உணர்ச்சி வெடிப்புச் சொல் 8. உணர்வுக் குறிப்புச் சொல் 9. விளிப்புச் சொல் 10. விளி ஏற்புச் சொல் என்பன.

தாமசு இலேமன் தற்காலத் தமிழ்ச்சொல்வகைகளை 1. பெயர்ச்சொல் 2. வினைகள் 3. பின்னுருபுகள் 4. பெயரடைகள் 5. வினையடைகள் 6. அளவடைகள் 7. வரையறு அடைகள் 8. இணைப்புக் கிளவிகள் என எட்டு சொல்வகைகளாகப் பிரித்துள்ளார். (முனை.ச. இராசேந்திரன், தமிழில் சொல்லாக்கம், பக் - 172, 2004). மேற்கூறப்பட்ட தமிழின் சொல் வகுப்புகளை மலையாளத்தின் சொல் வகுப்புகளோடு ஒப்பிட்டு ஒற்றுமை வேற்றுமைகள் காணப்படல் வேண்டும். அவ்வாறே இவ்வாய்வில் தமிழ் -

மலையாள மொழிகளின் பெயர்ச்சொற்களில் 1. பால், எண், இடம் , 2.வேற்றுமை உருபுகள் மற்றும் வேற்றுமை மயக்கம், 3. வினைச்சொற்கள் 4. பெயரடை, 5. வினையடை ஆகிய சொல்வகுப்புகள் தெளிவாக ஒப்பிட்டு ஆராய்ந்து ஒற்றுமைகள், வேற்றுமைகள் கண்டறியப்பட்டுள்ளன.

இம்மொழிமாற்று இலக்கணம் தமிழிலிருந்து மலையாளத்திற்கு இயந்திர மொழிபெயர்ப்பு செய்யும் நோக்கத்தினைக் கொண்டுள்ளதால் தமிழ் இலக்கணத் தொடர்கள் மலையாளத்திற்கு மொழிபெயர்க்கப்படுகின்றன. பின்பு அவற்றிடையே நிலவும் ஒற்றுமைகள், வேற்றுமைக்ள் கணினி மொழிபெயர்ப்புக்கு ஏற்ப; கண்டுபிடிக்கப்படுகின்றன. இவ்வாய்வின் மூலம் கண்டுபிடிக்கப்படும் தமிழ் - மலையாள இலக்கண வேறுபாடுகள்; தமிழிலிருந்து மலையாளத்திற்கு கணினி மொழிபெயர்ப்பு செய்யப்படும் போது மொழிமாற்று இலக்கணத்தினை வடிவமைக்கும் இன்றியமையாத கூறு ஆகும்.

# 3. தமிழிலும் மலையாளத்திலும் பால், எண், இடம்

## 3.1. தமிழிலும் மலையாளத்திலும் பால் பாகுபாடு

3.1.1. பிற மொழிகளில் பால் பாகுபாடு
3.1.2. தமிழில் பால் பாகுபாடு
3.1.3. மலையாளத்தில் பால் பாகுபாடு
3.1.2.1. தமிழில் பால் பாகுபாடு-படம்
3.1.3.1. மலையாளத்தில் பால் பாகுபாடு-படம்
3.1.4. சொற்களில் பால் சுட்டப்படும் முறை
3.1.5. பால்காட்டும் விகுதியுடன் அமையும் பெயர்ச்சொற்கள்
3.1.5.1. ஆண்பால் பெயர்கள் (Masculine Gender)
3.1.5.2. பெண்பால் பெயர்கள் (Feminine Gender)
3.1.5.3. பலர்பால் பெயர்கள் (Epicene Plural)
3.1.6. தமிழில் பலர்பால் விகுதிகள்
3.1.7. மலையாளத்தில் பலர்பால் விகுதிகள்
3.1.5.3.1. ஆண்பால் ஒருமை + பெண்பால் ஒருமை
3.1.5.3.2. ஆண்பன்மைப்பெயர்கள் (Masculine Plural)
3.1.5.3.3. பெண்பன்மைப்பெயர்கள் (Feminine Plural)
3.1.5.3.4. ஆண் + பெண் பன்மை (Common Gender plural)
3.1.5.3.4.1. பொதுப்பால் பெயர்கள் ( Common Gender )
3.1.5.3.4.1.1. தமிழில் பொதுப்பால் பெயர்கள்
3.1.5.3.4.1.2. மலையாளத்தில் பொதுப்பால் பெயர்கள்
3.1.5.3.4.1.3. சிறப்புப்பெயர் பொதுப்பால் பெயர்கள்
3.1.5.3.4.1.3.1. சிறப்புப்பெயர் பொதுப்பால் பெயர்கள் - ஒருமை
3.1.5.3.4.1.3.1.1. தமிழ்
3.1.5.3.4.1.3.1.2. மலையாளம்
3.1.5.3.4.1.3.2. சிறப்புப்பெயர் பொதுப்பால் பெயர்கள் - பன்மை
3.1.5.3.4.1,3.2.1. தமிழ்
3.1.5.3.4.1.3.2.2. மலையாளம்
3.1.5.3.4.1.4. பொதுப்பெயரின் பொதுப்பால் பெயர்கள்
3.1.5.3.4.1.4.1. பொதுப்பெயரின் பொதுப்பால் பெயர்கள் - ஒருமை
3.1.5.3.4.1.4.1.1. தமிழ்
3.1.5.3 4.1.4.1.2. மலையாளம்
3.1.5.3.4.1.4.2. பொதுப்பெயரின் பொதுப்பால் பெயர்கள்-பன்மை
3.1.5.3.4.1.4.2.1. தமிழ்
3.1.5.3.4.1.4.2.2. மலையாளம்

## 3.1. தமிழிலும் மலையாளத்திலும் பால் பாகுபாடு

ஒரு மொழியிலுள்ள சொற்களில் ஆண், பெண் என்ற வேறுபாட்டினைச் சுட்டும் பண்புக்கு பால் வேறுபாடு என்று பெயர். உலக மொழிகளில் பெயர்ச்சொற்களின் ஒரு முக்கியப் பண்பாக பால்வேறுபாடு அமைந்துள்ளது. தமிழில் பெயர்ச்சொற்களும் வினைச்சொற்களும் பால்காட்டும் பண்பினை உடையன.

### 3.1.1. பிற மொழிகளில் பால் பாகுபாடு

உலகில் பேசப்படும் மொழிகளை எடுத்துக்கொண்டால் பால்வேறுபாடனது இரண்டு பகுப்புகளின் அடிப்படையில் அமைந்துள்ளது. அவை,

1. இயற்கைப்பகுப்பு ( Natural Gender )
2. இலக்கணப்பகுப்பு ( Grammatical Gender )

உலக இயற்கையில்; உயிர்களில் காணப்படும் பால் அமைப்புப்படியே சொற்களிலும் பால் அமைப்பு அமைவது இயற்கைப்பகுப்பு எனப்படும். மாறாக; சொற்களின் அமைப்பு, பொருட்குறிப்பு ஆகியவற்றின் அடிப்படையில் பெயர்ச்சொற்களுக்கு பால் அமைவது இலக்கணப்பகுப்பு எனப்படும். இவ்விரு பகுப்புகளும் ஒரே போல் அமைவது இல்லை. இதனால் பால் பாகுபாடு மொழிக்கு மொழி மிகவும் வேறுபட்டுக் காணப்படுகின்றது

சான்றாக, சமசுகிருத மொழியில் ஆறு வகைப்பால்கள் கூறப்படுகின்றன. 'கரை' என்ற ஒரு பொருளைக்குறிக்கும் சொல்லே அம்மொழியில் மூன்று பால்களில் அமைகின்றது.

தட (கரை) → ஆண்பால்

தடி (கரை) → பெண்பால்

தடம் (கரை) → பாலற்றது

மேலும் நதி, சந்திரன், நகர் போன்ற அஃறிணைப்பெயர்கள் அம்மொழியில் பெண்பால் ஆகும்.

இதற்குக் காரணம் சமசுகிருதச்சொற்களில் அவற்றின் சொல் ஈற்றின் அமைப்பின் அடிப்படையில் அச்சொல்லுக்கு பால் நிறுவப்படுதலே ஆகும் ஆனால் இயல்பாக பால் அமைகின்ற சொற்களும் இம்மொழியில் உண்டு. எனவே சமசுகிருதத்தில் பால் இயல்பானது மட்டும் அன்று; அது இலக்கணத்தோடும் தொடர்புடையது. (டாக்டர். கு.மீனாட்சி, பாணினி, 1994 பக்கம் - 5)

இடாய்ச்சு (செருமன்) மொழியில் மூன்று பால்கள் உள்ளன. அவை சொற்களின் வடிவினை அடிப்படையாகக் கொண்டவை. பொருளை அடிப்படையாகக் கொண்டவை அன்று. பலவிடங்களிலும் பொருளைப் பின்பற்றி வருவது போல் தோன்றினாலும் அவை பொருளை அடிப்படையாகக் கொண்டன அன்று. அம்மொழியில் "டி சன்னே" (die sonne) எனப்படும் சூரியனைக் குறிக்கும் சொல் ஆண்பால். " டி நேச்சர்" (die Natur) எனப்படும் இயற்கையினைக் குறிக்கும் சொல் பெண்பால். மேசையைக்குறிக்கும் "டெர் டிஸ்ட்ச்" (der Tisch) எனும் சொல் ஆண்பால். எனவே இடாய்ச்சு மொழியில் பால் அமைப்பு . இலக்கணப்பகுப்பினை அடிப்படையாகக் கொண்டது.

எசுப்பானிய மொழியில் இரண்டு பால்களே உள்ளன. ஆண்பால் மற்றும் பெண்பால் இங்கு சூரியனைக்குறிக்கும் சொல் ஆண்பால். உருளைக்கிழங்கு பெண்பால்.

ஃபிரெஞ்சு மொழியிலும் ஆண்பால், பெண்பால் எனும் இரண்டு பால்களே உள்ளன. அதில், மேசையைக்குறிக்கும் "லா டேபிள்" (la Table) எனும் சொல் பெண்பால். பெண் குழந்தையைக் குறிக்கும் "பேப்" (bebe) எனும் சொல் ஆண்பால். எனவே பால்வேறுபாடு பல மொழிகளிலும் பலவாறாக வேறுபட்டுக்காணப்படுகின்றது.

செமிட்டிக் குடும்பத்திலுள்ள எத்தியோப்பிய மொழியான "அம்காரிக்" கில் ஆண்பால் பெண்பால் என இரு பால்களே உள்ளன உயிரற்ற பொருட்களில் மிகப்பெரும்பான்மையும் ஆண்பாலில் அடங்கும் மீதமுள்ளவை பெண்பாலாகக் கருதப்படுகின்றன

சான்றாக,

| | | | |
|---|---|---|---|
| வான்பர் | (Wanbar) | நாற்காலி | → ஆண்பால் |
| பெற் | (bet) | வீடு | → ஆண்பால் |
| மகினா | (makina) | கார் | → பெண்பால் |
| அகர் | (agar) | நாடு | → பெண்பால் |

(Ruth Kramer, Gender in Amharic Nominals, Page No. 2 ).

### 3.1.2. தமிழில் பால் பாகுபாடு

தமிழில் பால் பாகுபாடு பாலையும் எண்ணையும் உட்கொண்டே அமைகிறது தமிழில் பாலுக்கும் எண்ணுக்கும் வெவ்வேறு உருபுகள் இல்லை இரண்டும் ஒரே உருபினாலேயே சுட்டப்படும் எனவே தமிழ் மொழியில் பால் ஐந்து வகையாக பிரிக்கப்படுகின்றது

அவை,

1) ஆண்பால்
2) பெண்பால்
3) பலர்பால்
4) ஒன்றன்பால்
5) பலவின்பால் என்பன

இப்பிரிப்புக்கான அடிப்படைக் காரணத்தினை விளக்கவந்த இலக்கண ஆசிரியர்களின் கருத்தில் ஒற்றுமை இல்லை தமிழில் பால்பகுப்பு, 'பொருட்குறிப்பினை' (Reference) அடிப்படையாகக்கொண்டது என்பார் டாக்டர் கு பரமசிவம் (இக்காலத் தமிழ்மரபு, பக் - 120) தமிழ் மொழியின் 'அமைப்பினை' அடிப்படையாகக் கொண்டு, இயற்கைப்பகுப்பும்,

இலக்கணப்பகுப்பும் ஒரு சேர அமைவது என்பார் டாக்டர் அகத்தியலிங்கம் (திராவிட மொழிகள், இரண்டாம் தொகுதி, 1995, பக் -172). தமிழில் பால்வேறுபாடு பொருளை அடிப்படையாகக் கொண்டது என்பார் பி எஸ் சுப்பிரமணிய சாஸ்திரி தமிழில் பாலை மட்டும் கருதினால் அவை மூன்றே என்பார் டாக்டர் அகத்தியலிங்கம் மற்றும் தாமஸ் லேமன் போன்றோர்

**3.1.3. மலையாளத்தில் பால் பாகுபாடு**

மலையாளத்தில் பால்கள் மூன்று வகை என்பர் மலையாள இலக்கணிகள் அவை முறையே,

1) புல்லிங்கம் (ஆண்பால்)

2) ஸ்திரீலிங்கம் (பெண்பால்)

3) நபும்சகலிங்கம் (பாலற்றது / நடுவம்பால்)

*மலையாள இலக்கண வல்லுநர்களான சேசகிரிப்பிரபு, குண்டர்ட்,* ஜார்ஜ் மாத்தன், கேரள பாணினி போன்றோர் மேற்கண்டவாறு மூன்று பால்களையே சுட்டுகின்றனர் மலையாளத்தில் பால் அமைப்பு பொருளை அடிப்படையாகக் கொண்டது என்பர் இவ்வறிஞர்கள் சமசுகிருத மொழியைத் தழுவி மலையாளத்தில் பால் பாகுபாடு அமையவில்லை என்பார் சேசகிரிப்பிரபு

மலையாள இலக்கண அறிஞர்கள் அம்மொழியில் மூன்று வகைப்பால்களே உண்டு என்று கூறினாலும் அம்மொழியின் பால்காட்டும் சொற்களை ஆராய்ந்தால் அவை ஐவகைப் பகுப்பின் படியே அமைதலைக் காண இயலும். மேலும், திராவிட மொழிகள் அனைத்திலும் ஐவகைப்பாகுபாடே அமைந்துள்ளது எனும் கால்டுவெல் அவர்களின் கூற்றும், தமிழ் மலையாளம் கன்னடம் போன்ற தென்கோடித்திராவிட மொழிகள் ஐவகைப் பால்வேறுபாடுகளைக் கொண்டிருக்கின்றன என்ற டாக்டர் மீனாட்சி சுந்தரம் அவர்களின் கருத்தும் ( "திராவிட மொழிகளின்

பால் அமைப்பின் வரலாறும் வளர்ச்சியும்" மொழியியல் இதழ், தொகுதி ஐந்து, 1981, பக் - 12). இங்கே மலையாள மொழி ஐவகைப் பால்வேறுபாடுகளைக் கொண்டுள்ளது என்பதற்குச் சான்றுகள் ஆகும்.

### 3.1.2.1. தமிழில் பால் பாகுபாடு




### 3.1.3.1. மலையாளத்தில் பால் பாகுபாடு




### 3.1.4. சொற்களில் பால் சுட்டப்படும் முறை

தற்காலத் தமிழிலும் மலையாளத்திலும் பெயர்ச்சொற்களில் பால் மூன்று முறைகளில் சுட்டப்படுகின்றது.

அவையாவன,

1) பெயர்ச்சொற்களுடன் பால் காட்டும் ஒட்டினைச் சேர்த்தல்

சான்று:

| தமிழ் | மலையாளம் |
|---|---|
| இராமன் சீதை | சேட்டன் சேச்சி |
| பால்க்காரன் பால்க்காரி | பால்க்காரன் பால்க்காரத்தி |

2) ஆண், பெண் என்ற பொருளை உணர்த்தும் சொற்களைப் பயன்படுத்துதல்

சான்று:

| தமிழ் | மலையாளம் |
|---|---|
| கணவன் மனைவி | பர்த்தாவு பார்யா |
| அப்பா அம்மா | அச்சன் அம்ம |

3) பெயர்ச்சொற்களின் முன் ஆண் பெண் என்ற பாலை உணர்த்தும் சொற்களை இட்டு வழங்குதல்.

சான்று:

| தமிழ் | மலையாளம் |
|---|---|
| ஆண்குழந்தை பெண்குழந்தை | ஆண்குட்டி பெண்குட்டி |
| ஆண்பூனை பெண் பூனை | ஆண்பூச்ச பெண்பூச்ச |

தமிழில் வினைச்சொற்களும் பாலைச் சுட்டும். அதாவது பால் காட்டும் விகுதியினை ஏற்றே வரும். மலையாளத்தில் வினைச்சொற்கள் பால் காட்டுவது இல்லை.

### 3.1.5. பால்காட்டும் விகுதியுடன் அமையும் பெயர்ச்சொற்கள்

தமிழிலும் மலையாளத்திலும் தற்காலப் பெயர்ச்சொல் வழக்குகள் பால்காட்டும் விகுதிகளை ஏற்றுப் பொருத்தமான பாலைக்காட்டுகின்றன. தமிழில் ஐம்பாலுக்கும் தனித்தனியே அமைந்த விகுதிகள் உண்டு. மலையாளத்திலும் இவ்வாறே தனித்தனி விகுதிகள் உண்டு. இவ்விகுதிகளின் வருகை மற்றும் அமைப்புகள் கீழே ஆராயப்படுகின்றன.

#### 3.1.5.1. ஆண்பால் பெயர்கள் (Masculine Gender)

தமிழில் மனிதகுலத்தில் ஆணைக்குறிக்கும் சொற்கள் ஆண்பாற் பெயர்கள் எனப்படும் ஆண்பாலைக்குறிக்க "-அன்" போன்ற ஒட்டுக்கள் உள்ளன. இதனை

"னஃகான் ஒற்றே ஆடுஉ அறிசொல்"

(தொல்.சொல். 488)

என்று தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது

"-அன்" , "-ஆன்" போன்றன ஆண்பால் ஒட்டுக்கள் என்பார் நன்னூலார்.

மலையாளத்திலும் ஆணைக்குறிக்கும் சொல் ஆண்பால்

"அனியம் தனி நாமத்தில்

லிங்கப்பிரத்ய மாவிது"

(கேரள பாணினியம் பக் - 138).

என்று பெயர்களில் ஆண்பால் ஒட்டு "-அன்" என்று கேரள பாணினியம் கூறுகின்றது. "சேசகிரிப்பிரபு" எழுதிய "வியாகரணமித்ரம்" ஆண்பால் ஒட்டுக்களாக "-அன்", "-ஆன்" , "-ஓன்" என்பவற்றைக் குறிப்பிடுகின்றது. ஹெர்மன் குண்டர்ட் எழுதிய "மலயாள பாஷா வியாகரணம்" என்ற நூலிலும், ஜார்ஜ் மாத்தன் அவர்கள் எழுதிய "மலயாழ்மயுடெ வியாகரணம்" என்ற இலக்கண நூலிலும் "-அன்" ஆண்பால் ஒட்டாகக் கூறப்பட்டுள்ளது

தற்காலத்தமிழில் ஆண்பால் ஒட்டுக்களாக "-அன்" "-ஆன்" "-வன்" கன்" "-ஞன்" "-மான்" "-காரன்" "அவன்" "அப்பன்" என்பன வழக்கில் உள்ளதாக டாக்டர் அகத்தியலிங்கம் வகைப்படுத்துவார்

| | |
|---|---|
| அன் | → பொன்னன்,மன்னன் |
| ஆன் | → மச்சான்,மன்னான் |
| வன் | → கணவன்,கள்வன் |
| கன் | → நாயகன்,கணக்கன் |
| ஞன் | → கலைஞன்,அறிஞன் |
| மான் | → சீமான், முசல்மான் |
| காரன் | → பால்க்காரன்,வேலைக்காரன் |
| அவன் | → தென்னவன்,மன்னவன் |
| அப்பன் | → பேச்சியப்பன்,பச்சையப்பன் |

தற்கால மலையாள மொழியில் ஆண்பால் ஒட்டுக்களாக "அன்" "ஆன்" "அவன்" "காரன்" "அப்பன்" போன்றவை வழங்குகின்றன

| | |
|---|---|
| அன் | → அச்சன், மகன் |
| ஆன் | → ஆசான், தம்புரான், மேலான் |

அவன் → செறியவன், வலியவன்

காரன் → பணிக்காரன், பப்படக்காரன்

அப்பன் → கண்ணப்பன், ராசப்பன்

அச்சன் → லோப்பச்சன் போன்றன.

### 3.1.5.2. பெண்பால் பெயர்கள் (Feminine Gender)

தமிழிலும் மலையாளத்திலும் பெண்களைச்சுட்டும் பெயர்கள் பெண்பாற்பெயர்கள் எனப்படும்.

"ளஃகான் ஒற்றே மகடூஉ அறிசொல்"

(தொல்.சொல்.489)

என "-ள" கர ஒற்று பெண்பாலைச் சுட்டும் என்பார் தொல்காப்பியர். நன்னூலாரும் "-அள்" , "-ஆள்" பெண்பால் விகுதிகள் என்பார்.

தற்காலத்தமிழ் மொழியில் ஏராளமான விகுதிகள் பெண்பாலைச்சுட்டி வழங்கப்படுகின்றன.

தற்கால இலக்கண அறிஞர்கள் கூறும் பெண்பால் விகுதிகளுடன் மொழியில் வழக்கில் உள்ள பிற விகுதிகளும் கீழே கொடுக்கப்படுகின்றன.

அவையாவன,

அள் → மகள், எளியள்

ஆள் → இன்சொல்லாள், வல்லாள்

த்தி → குறத்தி, கிழத்தி

ஆத்தி → வண்ணாத்தி, பாப்பாத்தி

ச்சி → ஆய்ச்சி. இடைச்சி

அ/இச்சி → தமிழச்சி

ஆட்டி → பிராட்டி,கண்ணாட்டி, பெண்டாட்டி,வைப்பாட்டி

வி → செல்வி, மாணவி, மனைவி, தலைவி

மாட்டி → சீமாட்டி, பெருமாட்டி, கண்ணாட்டி

காரி → வீட்டுக்காரி, பணக்காரி

இ → அண்ணி, பொன்னி, குமரி, சுந்தரி, ராக்காயி,

ஐ →அங்கவை,சங்கவை,ஔவை,ஆசிரியை,மங்கை

அவள் → என்னவள், உன்னவள்

அம்மாள் → மணியம்மாள், பங்கஜம்மாள், ராக்கம்மாள்

ஆத்தாள் → கண்ணாத்தாள், மாரியாத்தாள்

மலையாளத்தில் பெண்பால் ஒட்டு "-அள்", "-ஆள்", "-இ" மற்றும் "-த்தி" என்கிறது கேரளபாணினியம். இவற்றுள் "-அள்" மலையாளத்தின் ஒட்டும் "-இ" சமசுகிருதத்தில் இருந்து வந்தது என்றும் இவர் குறிப்பிடுகின்றார். "-அள்", "-ஆள்", "-ஓள்", "-தி", "அவள்", "-இ" என்பன பெண்பாலைச்சுட்டும் விகுதிகள் என்பார் சேசகிரிப்பிரபு. குண்டர்ட் "-அள்", "-ஆள்", "-இ", "-த்தி", "-அ" என்ற விகுதிகளைக் கூறுவார் ஜார்ஜ் மாத்தன் "-அள்", "-இ", "-த்தி", "-அ", "-னி", "-ச்சி" , என்ற பெண்பால் ஒட்டுக்களை விளக்குவார்

தற்கால மலையாளத்தில் பெண்பாலைச்சுட்டும் ஒட்டுக்களாக "-அள்", "ஆள்", "-இ", "-த்தி", "-அத்தி", "-ச்சி", "-ட்டி", "-னி", "அம்ம" போன்றவை வழக்கில் உள்ளன.

சான்று:

அள் → அவள், செறியவள்

ஆள் → மீன்மிழியாள்

இ → மிடுக்கி, கள்ளி

த்தி → குறத்தி, ஒருத்தி

அத்தி → கள்ளத்தி, அரயத்தி, பணிக்கத்தி, கொல்லத்தி

ச்சி → ஆசாரிச்சி, மடிச்சி

ட்டி → ஆசாட்டி, தம்புராட்டி

அ → ரெம, சும, கீத, சோப

அம்ம → ஏலியாம்ம, தெரஸ்யாம்ம, குஞ்ஞும்ம

### 3.1.5.3. பலர்பால் பெயர்கள் (Epicene Plural)

பழந்தமிழில் ஆண் + பெண் கூட்டுப்பன்மையினை மட்டுமே பலர்பாலில் வழங்கினர். தொல்காப்பியர் இதனைப் "பல்லோர் அறியும் சொல்" என்பார். இதனைத் "திராவிட மொழிகள் எல்லாவற்றிலுமே

உயர்திணைப்பெயர்கள் பன்மைக்கண் ஆண், பெண் வேற்றுமையின்றி பொதுப்பாலாகிய "பலர்பால்" எனப்பிரித்து அறியப்பெறும்" என்ற டாக்டர்.கால்டுவெல் ஐயரின் கூற்றின் மூலமும் அறியலாம். (இராபர்ட் கால்டுவெல், திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம், தமிழ் மொழிபெயர்ப்பு, 2004, பக் - 204). ஆனால் தற்காலத் தமிழில் பலர்பால் என்பது 1. ஆண்பால் ஒருமை + பெண்பால் ஒருமை, 2. ஆண்பால் பன்மை , 3. பெண்பால் பன்மை மற்றும் 4 ஆண்கள் + பெண்கள் இவ்விருவரும் சேர்ந்த கூட்டுப்பன்மை போன்றனவற்றைச் சுட்டுவதாக அமைகின்றன. எனவே தற்காலத்தமிழில் பலர்பால் பெயர்கள் ஆவன,




மலையாள மொழியிலும் பலர்பாலைக்குறிக்கும் பெயர்கள் இவ்வமைப்பிலேயே காணப்படுகின்றன. ஆனால் அவை பலர்பால் என பாலில் விளக்கப்படாமல்; எண்ணின் கீழ் விளக்கப்படுகின்றன. அவையாவன,



### 3.1.6. தமிழில் பலர்பால் விகுதிகள்

"ரக்கான் ஒற்றும் பகர இறுதியும்

மாரைக்கிளவியும் உளப்பட மூன்றும்

நேரத்தோன்றும் பலர் அறி சொல்லே"

(தொல் சொல் 490 )

என, தமிழின் பலர்பால் விகுதிகளாக "-ர", "-ப", "-மார்" என்ற விகுதிகளைத் தொல்காப்பியம் கூறுகின்றது

தற்காலத்தமிழில் வழங்கும் பலர்பால் விகுதிகளாக "-கள்", "-அர்", "-அர்கள்", "-வர்", "-வர்கள்", "-இர்", "-இர்கள்", "-மார்", -மார்கள், "-ஓர்", "-ஓர்கள்", "-ஞர்", "-ஞர்கள்" என்பனவற்றைக் குறிப்பிடுவார் முனை.அகத்தியலிங்கம்.

### 3.1.7. மலையாளத்தில் பலர்பால் விகுதிகள்

"அர் என்ன லிங்க பும்ஸ்த்ரீகள்க்கு

அவய்கே மார் சலிங்கமாம்"

(கே.பா. 50).

இங்கு ஆண் + பெண் பன்மையினை சுட்ட வரும் விகுதி அர்" , "-மார்" என மேற்கண்ட கேரள பாணினியச்சூத்திரம் கூறுகின்றது.

மேலும் "-கள்", "-அர்", "-மார்" என்பன பலர்பால் விகுதிகள் என்கிறது வியாகரணமித்ரம் மலையாழ்மயுடெ வியாகரணம் "-கள்", "-மார்", "-அர்" போன்றவற்றைப் பலர்பால் விகுதிகளாகக் கூறுகின்றது. குண்டர்ட்டின் மலையாளபாஷா வியாகரணம் "-கள்" மற்றும் "-அர்" என்ற இரண்டு பலர்பால் விகுதிகளைக் குறிப்பிடுகின்றது.

தற்கால மலையாளத்தில் "-கள்", "-மார்", "-அர்", "-ஆர்", "-கார்" என்பன பலர்பால் சுட்டும் விகுதிகளாக அமைந்துள்ளன.

#### 3.1.5.3.1. ஆண்பால் ஒருமை + பெண்பால் ஒருமை

ஒரு ஆண்பால் பெயரையும் ஒரு பெண்பால் பெயரையும் சேர்த்துக் குறிப்பிடும்போதும் அது பலர் பாலிலேயே சுட்டப்படுகிறது.

சான்று இருவர்

மலையாளத்திலும் இவ்வகையான பெயர்கள் பலர்பாலிலேயே வருகின்றன

தமிழில் பலர்பால் அமையும் முறையினைக் கீழே காணலாம்

#### 3.1.5.3.2. ஆண்பன்மைப்பெயர்கள் (Masculine Plural)

ஆண்பாலின் பன்மையினைச்சுட்டும் பெயர்கள் ஆண்பன்மைப் பெயர்கள் எனப்படும் இவை தமிழிலும் மலையாளத்திலும் ஏராளமாகக் காணப்படுகின்றன. தமிழில் ஆண்பன்மைப்பெயர்களின் விகுதிகளாக, கள்", "-வர்கள்", "-அர்கள்", "-ஞர்கள்" போன்றவை காணப்படுகின்றன.

சான்று:

| | | |
|---|---|---|
| -கள் | → | ஆண்கள், பையன்கள். |
| -வர்கள் | → | சிறுவர்கள், இளைஞர்கள். |
| அர்கள் | → | வீரர்கள், அரசர்கள், மன்னர்கள். |
| -ஞர்கள் | → | அறிஞர்கள், இளைஞர்கள், கலைஞர்கள். |

மலையாளத்தில் ஆண்பன்மை விகுதிகளாக "-கள்" ,"-மார்" என்பன உள்ளன.

சான்று:

| | | |
|---|---|---|
| -கள் | → | வித்யார்த்திகள் |
| -மார் | → | அத்யாபகன்மார், புருஷன்மார், கூட்டுகாரன்மார்,சேட்டன்மார்,கள்ளன்மார் |

#### 3.1.5.3.3. பெண்பன்மைப்பெயர்கள் (Feminine Plural)

பெண்களின் பன்மையினைச்சுட்டும் பெயர்கள் பெண்பன்மைப் பெயர்கள் எனப்படுகின்றன. தமிழில் பெண்பன்மைவிகுதிகள் "-கள்" ,"-இர்", "-அர்கள்" என்பன.

சான்று:

-கள் → பெண்கள், குமரிகள், அழகிகள்,
தங்கைகள், மாணவிகள், புதல்விகள்

-இர் → மகளிர், பெண்டிர்.

-அர்கள் → செவிலியர்கள் என்பன

மலையாளத்தில் பெண்பன்மை விகுதிகள் "-மார்", "-கள்" ஆகும்

சான்று:

-மார் → அத்யாபிகமார், சேச்சிமார்

-கள் → ஸ்திரீகள்,வித்யார்த்தினிகள்,
கூட்டுகாரிகள், கள்ளிகள்

**3.1.5.3.4. ஆண் + பெண் பன்மை (Common Gender plural)**

ஆண்பன்மை, பெண்பன்மை என, இருவரும் சேர்ந்த கூட்டத்தினரைக் குறிக்கும் பெயர்கள் ஆண் + பெண் பன்மை எனப்படும். பழங்காலத்தமிழில் பலர்பால் இதனை மட்டுமே குறித்ததாக இலக்கணிகள் கூறுவர். தற்காலத்தமிழில் ஆண்+பெண் பன்மை விகுதிகளாக, "-அர்கள்", "-வர்கள்" , "-ஞர்கள்" காணக்கிடைக்கின்றன. இவ்விகுதிகள் இரட்டைப்பன்மை விகுதிகளாக வருவது இங்கே குறிப்பிடத்தக்கது ஆகும்

சான்று

-அர்கள் → மனிதர்கள், எழுத்தாளர்கள், இயக்குநர்கள்.

-வர்கள் → தலைவர்கள், மருத்துவர்கள்

-ஞர்கள் → கலைஞர்கள், அறிஞர்கள்.

மலையாளத்திலும் இதுபோன்ற ஆண் பெண் பன்மைப்பெயர்கள் மொழியில் வழங்கிடக்காணலாம். மலையாளமொழியில் இது "பும்ஸ்திரீலிங்கம்" என்றும் 'சாமான்யலிங்கம்' என்றும் வழங்கப்படுகிறது. இதன் விகுதிகள் "-அர்", "-கார்", "-கள்" போன்றன ஆகும்.

சான்று:

-அர் → அத்யாபகர், மனுஷ்யர், மந்திரிமார்,

-கள் → பந்துக்கள், அதிதிகள், சத்ருக்கள்.

-கார் → கூட்டுகார், நாட்டுகார், இந்தியக்கார்.

### 3.1.5.3.4.1. பொதுப்பால் பெயர்கள் ( Common Gender )

#### 3.1.5.3.4.1.1. தமிழில் பொதுப்பால் பெயர்கள்

உயர்திணை ஆண்பாலுக்கும் பெண்பாலுக்கும், அஃறிணை ஆண்பால், பெண்பாலுக்கும் பொதுவாக வழங்கும் பெயர்கள் பொதுப்பால் எனப்படும். அஃறிணையில் பால்பாகுபாடு மரபிலக்கண வழக்கில் இல்லையெனினும் தற்கால மொழி வழக்கில் அஃறிணை உயிருள் பொருட்பெயர்களில் இருப்பதனை அறிய இயலும். தற்காலத்தமிழில், உயர்திணையில் இவை சிறப்புப்பெயர், பொதுப்பெயர் என இரண்டிலும் காணப்படுகிறது. இவைகளில் சிலவற்றுக்கு ஒருமை பன்மை வடிவங்களும் காணப்படுகின்றன




மலையாளத்தில் ஆண்,பெண் இரு கூட்டத்தையும் உள்ளடக்கிய பெயர்களை அலிங்கநாமங்கள் என்று கேரளபாணினியமும், பும்ஸ்திரீ நாமங்ஙள், சாமான்ய நாமங்ஙள் (Common Genders) என்று பிற மலையாள இலக்கணவியலாரும் அழைக்கின்றனர். இங்கும் உயர்திணைப்பெயர்களிலும், அஃறிணை உயிருள் பெயர்களிலும் இந்த பொதுப்பால் பெயர்கள்

வழங்கிவருகின்றன. இரு பிரிவுகளிலும் ஒருமையும் பன்மையும் காணப்படுகிறது.

### 3.1.5.3.4.1.2. மலையாளத்தில் பொதுப்பால் பெயர்கள்




### 3.1.5.3.4.1.3. சிறப்புப்பெயர் பொதுப்பால் பெயர்கள்

உயர்திணையில் குறிப்பிட்ட ஆண் அல்லது பெண்ணுக்கு உரியதாக மட்டும் இடப்படும் பெயர்கள் சிறப்புப்பெயர்கள் எனப்படும். இவைகளில் சில பெயர்கள் தற்காலத்தமிழில் ஆண்,பெண்பாலுக்கும் ஒரே பெயர்களாக உள்ளன. இவையே **சிறப்புப் பொதுப்பால் பெயர்கள்** எனப்படும். தற்கால மலையாளத்திலும் இவ்வகைச் சிறப்புப் பொதுப்பால் பெயர்களைப் பரவலாகக் காணமுடிகின்றது.

சான்றாக; தமிழில் வீரமணி, மலர், பசும்பொன் போன்ற சிறப்புபெயர்களைச் சுட்டலாம். இவைகளில் ஒருமையும் பன்மையும் உண்டு.




### 3.1.5.3.4.1.3.1. சிறப்புப்பெயர் பொதுப்பால் பெயர்கள் - ஒருமை

#### 3.1.5.3.4.1.3.1.1. தமிழ்

வீரமணி, மலர், பசும்பொன் போன்றவை பொதுப்பால் ஒருமைப் பெயர்களுக்குச் சான்றுகள் ஆகும். இவை இரண்டு பாலினத்தவருக்கும் பொதுவாக வழங்கப்படுவதால் இவ்வாறு அழைக்கப்படுகிறது

#### 3.1.5.3.4.1.3.1.2. மலையாளம்

மலையாளத்திலும் சில பெயர்கள் ஆண்களுக்கும் பெண்களுக்கும் பொதுவாக வரும்.

சான்று: பினு, ரிம்மி, மணி, அனு, ரெஜி, விஜி போன்றன. இவை உயர்திணைச் சிறப்பு ஒருமைப் பொதுப்பெயர்களுக்குச் சான்றுகள் ஆகும்.

### 3.1.5.3.4.1.3.2. சிறப்புப்பெயர் பொதுப்பால் பெயர்கள் - பன்மை

#### 3.1.5.3.4.1.3.2.1. தமிழ்

தமிழில் இவற்றின் பன்மையாவது, மலர்கள், வீரமணிகள் என்று அமைகின்றன.

சான்று:

1. இவ்வகுப்பில் நிறைய *மலர்கள்* இருக்கிறார்களே!
2. எல்லாம் *வீரமணிகளா*?

இவ்வாறு பயன்படுத்துகையில் அது சிறப்புப்பெயர்களின் பொதுப்பால்பெயர் பன்மையைக் குறிக்கின்றது.

#### 3.1.5.3.4.1.3.2.2. மலையாளம்

மலையாளத்தில் இவ்வகையின் பன்மையாவன, ரிம்மிமார், பினுமார் என்று அமைகின்றன.

சான்று:

1. ஈ கிளாசில் ஒருபாடு ரிம்மிமார் உண்டல்லோ! (இவ்வகுப்பில் நிறைய ரிம்மிகள் உள்ளனரே!)

2. இவிடெ மொத்தம் பினுமாரா! (இங்கே பினு என்ற பெயருடையோர் ஏராளம்!)

இவ்விடங்களில் சிறப்புப்பெயர்களில் பொதுப்பால் பெயர்கள் பன்மை சுட்டுவதனைக் காணலாம். தற்கால மலையாளத்தில் இவ்வழக்கம் காணப்படுகிறது.

### 3.1.5.3.4.1.4. பொதுப்பெயரின் பொதுப்பால் பெயர்கள்

சிறப்புப் பெயர்களைவிட பொதுப்பெயர்களில்தான் மிகுதியாகப் பொதுப்பால்பெயர்கள் காணப்படுகின்றன. இவைகளும் ஒருமை பன்மை என இருவடிவங்களாகக் காணப்படுகின்றன.

சான்று:

| | |
|---|---|
| மருத்துவர் | மருத்துவர்கள் |
| கலைஞர் | கலைஞர்கள் |
| அமைச்சர் | அமைச்சர்கள் |

போன்ற பெயர்கள்.

தற்கால மலையாளத்திலும் பொதுப்பெயரின் பொதுப்பால்களை ஏராளமாகக் காணமுடிகிறது.

சான்று:

| | | |
|---|---|---|
| அத்யாபகர் | அத்யாபகன்மார் | (ஆசிரியர்கள்) |
| ஆள் | ஆள்கார் | (ஆட்கள்) |
| குட்டி | குட்டிகள் | (குழந்தைகள்) |
| மந்த்ரி | மந்த்ரிமார் | (அமைச்சர்) |

**3.1.5.3.4.1.4.1. பொதுப்பெயரின் பொதுப்பால் பெயர்கள் - ஒருமை**

**3.1.5.3.4.1.4.1.1. தமிழ்**

தமிழில் இவ்வகைப் பெயர்களின் ஒருமை வடிவங்கள் கீழ்க்கண்டவாறு அமையும்.

சான்று:

1. மருத்துவர் பத்து மணிக்கு வருவார். (மருத்துவர் ஆண்பாலோ பெண்பாலோ ஆகலாம்).
2. அமைச்சர் இன்று நம் தொகுதிக்கு வருகிறார். (அமைச்சர் இருபாலையும் குறிக்கும்).

இங்கு மருத்துவர், அமைச்சர் இரண்டும் ஒருமைப்பொதுப்பெயர்கள்.

**3.1.5.3.4.1.4.1.2. மலையாளம்**

மலையாளத்தில் சிலவற்றுக்கு ஒருமைப்பெயர் வடிவங்கள் கிடையாது. சிலவை இருவடிவங்களையும் கொண்டிருக்கும். ஒருமைப்பொதுப் பெயர்களாவன,

சான்று:

| | |
|---|---|
| குட்டி | (குழந்தை) |
| மந்த்ரி | (அமைச்சர்) |
| சத்ரு | (பகைவன்) |

போன்றன ஆகும்.

**3.1.5.3.4.1.4.2. பொதுப்பெயரின் பொதுப்பால் பெயர்கள்-பன்மை**

**3.1.5.3.4.1.4.2.1. தமிழ்**

தமிழில் பன்மைப்பொதுப் பெயருக்கு எடுத்துக்காட்டாக மருத்துவர்கள், இயக்குநர்கள், அமைச்சர்கள், கலைஞர்கள் என ஏராளமான பொதுப்பெயர்கள் இக்காலத்தமிழில் வழங்கிடக்காண்கிறோம்.

ஆண்பால், பெண்பால் இவற்றின் கூட்டத்தைக் குறிக்கும் பெயர்களாக இவை வழங்கப்படுகின்றன.

சான்று:

1. இன்று மருத்துவர்கள் வேலைநிறுத்தத்தில் ஏற்பட்டுள்ளனர்.
   (மருத்துவர்கள் ஆண் மருத்துவர்கள், பெண்மருத்துவர்கள் இருபாலரையும் குறிக்கும்).
2. மலையாளப்பட இயக்குநர்கள் வருத்தம் தெரிவித்து உள்ளனர்.
   (இயக்குநர்கள் ஆண் மற்றும் பெண்பால் கூட்டத்தினர் ஆகலாம்.)
3. அமைச்சர்கள் பாராளுமன்றத்தில் கூச்சல் போட்டனர்.
   (அமைச்சர்கள் ஆண் பெண்பால் இருவரையும் உள்ளடக்கிய பெயர்).

இவ்வகைப்பெயர்களை ஏராளமாக இன்றையத்தமிழில் காணலாம்.

### 3.1.5.3.4.1.4.2.2. மலையாளம்

மலையாளத்திலும் பொதுப்பெயர்களின் பன்மை வடிவங்களுக்கு சான்றாக,

| | |
|---|---|
| அதிதிகள் | (விருந்தினர்கள்) |
| வாயனக்கார் | (வாசகர்கள்) |
| ஆள்கார் | (ஆட்கள்) |
| விதேசிகள் | (வெளிநாட்டினர்) |

எனப்பல சொற்கள் வழங்கிடக்காண்கிறோம்.

இவற்றுள் வாசகர், ஆசிரியர், எனும் பொருள் கொள்ளும் பொதுப்பாற் சொற்களுக்கு ஒருமைப்பெயர் மலையாளத்தில் இல்லை.

தற்காலத்தமிழில் பொதுப்பெயர்களின் பன்மை வடிவங்கள் "-அர்கள்" எனும் இரட்டைப்பன்மை விகுதியினை ஏற்று வருகின்றன. ஆனால் மலையாளத்தில் இவை இவ்விகுதிக்குப் பதில் மூன்று வெவ்வேறு வகையான விகுதிகளை ஏற்று, மூன்று வடிவங்களில் வருகின்றன. அவை,

1. அர் விகுதி பெற்ற பெயர்கள் சான்று: அத்யாபகர்
2. கள் விகுதி பெற்ற பெயர்கள் சான்று: குட்டிகள், பந்துக்கள்

3. கார் விகுதி பெற்ற பெயர்கள் சான்று: செறுப்பக்கார், நாட்டுகார்

### 3.1.5.3.4.1.5. அஃறிணை உயிருள் பொதுப்பால் பெயர்கள்

தமிழ் இலக்கணங்களில் அஃறிணைக்குப் பால்பாகுபாடு வகுக்கப்படவில்லை. ஆனால் இயற்கைப்பகுப்பில் அஃறிணை உயிருள்ள பொருள்களின் பெயர்களுக்கு, பால்பாகுபாடு உள்ளதனை அறிய முடிகின்றது.. தற்காலத்தில் வழங்கும் தமிழிலும் இவ்வகைப் பெயர்கள் வழக்கில் உள்ளன.

தற்காலத்தமிழ் மொழியில் உயிருள் பொருட்களில் "-கள்" , "-க்கள்" என்ற ஒட்டுக்களே பெரும்பான்மையாகப் பன்மை சுட்டுவனவாக உள்ளன. ஆனால் "-மார் விகுதியும் மலையாளத்தில் காணப்படுகிறது.

சில அஃறிணைப்பெயர்களுக்கு "-அன்" உருபு சேர்த்து அழைக்கும் வழக்கம் மலையாளத்தில் காணப்படுகிறது. அவ்வாறு "-அன்" உருபு அப்பொருள்களோடு சேர்க்கப்படும் போது "-மார்" என்ற பன்மை உருபு அஃறிணைப்பெயர்களுக்கு வருகிறது.

#### 3.1.5.3.4.1.5.1. அஃறிணை உயிருள் பொதுப்பால் பெயர்கள் - ஒருமை

##### 3.1.5.3.4.1.5.1.1. தமிழ்

சான்று:

1. மாடு - (பசுமாடோ காளை மாடோ ஆகலாம்)
2. கோழி - (சேவலோ பெட்டைக்கோழியையோ குறிக்கும்)
3. குரங்கு- (குரங்கு ஆண்குரங்கோ,பெண்குரங்கோ ஆகலாம்)

மலையாளத்திலும் அஃறிணை உயிருள் பொதுப்பால்பெயர்கள் ஒருமைப்பன்மை காட்டவல்லன.

**3.1.5.3.4.1.5.1.2. மலையாளம்**

சான்று:

1. காலி - கால்நடைகளின் ஒருமை (பசுவோ மாடோ ஆகலாம்)
2. பூச்ச - பூனை (ஆண்பூனையையோ பெண்பூனையையோ குறிக்கும்)
3. நாய - நாய் (ஆண் நாயோ அலது பெண் நாயினையோ குறிக்கும்)

**3.1.5.3.4.1.5.2. அஃறிணை உயிருள் பொதுப்பால் பெயர்கள் - பன்மை**

**3.1.5.3.4.1.5.2.1. தமிழ்**

தமிழில் அஃறிணைப் பன்மை காட்டும் பொதுப்பால் பெயர்கள் "-கள்" போன்ற பன்மை விகுதிகளையேற்று பன்மை காட்டுகின்றன. இவ்வகைப்பெயர்கள் கீழே கொடுக்கப்படுகின்றன.

**சான்று**

மாடுகள்- (பசுமாடுகளோ காளைமாடுகளோ ஆகலாம்).

கோழிகள்- (சேவல்களையோ பெட்டைக்கோழிகளையோ குறிக்கும்)

குரங்குகள்- (குரங்குகள் ஆண்குரங்குகளோ, பெண்குரங்குகளோ ஆகலாம்)

**3.1.5.3.4.1.5.2.2. மலையாளம்**

மலையாளத்தில் அஃறிணைப்பெயர்கள் பொதுப்பால் காட்ட வருகையில் கீழ்க்கண்டவாறு அமையும்.

சான்று

1. நாயகள் (ஆண்நாய்ளும் பெண்நாய்களும் சேர்ந்த கூட்டத்தினைக் குறிக்கும்).
2. பூச்சகள் (ஆண்பூனைகளும்,பெண்பூனைகளும்சேர்ந்த கூட்டத்தினைக் குறிக்கும்).
3. ஆனகள் (ஆண்யானைகளும், பெண்யானைகளும் சேர்ந்த கூட்டத்தினைக் குறிக்கும்).

### 3.1.6. உயர்திணை, அஃறிணைப் பொதுப்பால் பன்மை விகுதிகள்

மேற்கண்டவற்றிலிருந்து தமிழில் உயர்திணைப்பெயர்களில் பொதுப்பால் பன்மை விகுதிகளாக, **-கள்**, அர், -வர், -ஞர், **-அர்கள்**, -வர்கள், -ஞர்கள், -ஓர்கள் போன்றவை இருப்பதாக அறியமுடிகின்றது.
அஃறிணைப்பொதுப்பால் ஒட்டுக்களாக, **-கள்**, மற்றும் **-க்கள்** இருப்பதனை அறியலாம்.

மலையாளத்தில் உயர்திணைப்பொதுப்பால் பன்மைப்பெயர் ஒட்டுக்களாக -அர், -கள், -மார், -கார் போன்றவைகளும், அஃறிணைப்பெயர் விகுதியாக "-கள்" உம் இருப்பதனை அறியலாம்.

### 3.1.7. தமிழிலிருந்து மலையாளத்துக்கு மொழிபெயர்க்கப்படும்போது பொதுப்பன்மைப்பெயர் விகுதிகள் மாறுதல்

#### 3.1.7.1. உயர்திணைப்பொருட்பெயர்களில் பொதுப்பெயர் விகுதிகள் மாறுதல்

##### 3.1.7.1.1. (-கள்) விகுதி மாறும் விதம்

| தமிழ் | மலையாளம் |
|---|---|
| ஆட்கள் | ஆள்கார்/<br>ஆளுகள் |

**[கள்→ கார்,கள்]**

குழந்தைகள் குட்டிகள்

**[கள்→கள்]**

புத்திசாலிகள் புத்திமான்மார்

[கள்→மார்]

தமிழில் இருந்து மலையாளத்துக்கு மொழிபெயர்க்கப்படுகையில் "-கள்" விகுதி "-கள்" , "-கார்" மற்றும் "-மார்" என்று மாறுகிறது

இவ்வாறு **"-கள்"** மலையாளத்தில் "-கள்", **"-கார்"**, **"-மார்"** என மூன்று விதங்களில் மாறுகின்றது இவ்விடங்களில், மலையாளத்தில் போன்று **"-கார்"** , **"-மார்"** எனும் விகுதிகள் தமிழில் இடம்பெறுவது இல்லை

**3.1.7.1.2. (-அர்) விகுதி மாறும் விதம்**

**தமிழ்** **மலையாளம்**

வெளிநாட்டினர் விதேசிகள்

**[அர்→கள்]**

பகைவர் சத்ருக்கள்

**[அர்→க்கள்]**

இந்துமதத்தினர் ஹிந்துக்கள்

**[அர்→க்கள்]**

இராணுவத்தினர் பட்டாளக்கார்

**[அர்→கார்]**

**"-அர்"** தமிழில் இருந்து மலையாளத்துக்கு மொழிபெயர்க்கப் படுகையில் விகுதி **"-கள்"** , **"-க்கள்"**, மற்றும் **"-கார்"** என்று மாறுகிறது இவ்விகுதிகள் மலையாளத்தில் மட்டுமே வருகின்றன தமிழில் இவை வருவதில்லை.

3.1.7.1.3. (-அர்கள்) விகுதி மாறும் விதம்

| தமிழ் | | மலையாளம் |
|---|---|---|
| மனிதர்கள் | | மனுஷர்,மனுஷன்மார் |
| | [அர்கள்→அர்,மார்] | |
| ஆசிரியர்கள் | | அத்யாபகர் |
| | [அர்கள்→அர்] | |
| விருந்தினர்கள் | | அதிதிகள் |
| | [அர்கள்→கள்] | |
| உறவினர்கள் | | பந்துக்கள் |
| | அர்கள்→க்கள் | |
| நாயர்கள் | | நாயன்மார் |
| | [அர்கள்→மார்] | |
| இரசிகர்கள் | | ஆராதகர் |
| | [அர்கள்→அர்] | |
| தொழிலாளர்கள் | | தொழிலாளிகள் |
| | [அர்கள்→கள்] | |
| அமைச்சர்கள் | | மந்திரிமார் |
| | [அர்கள்→மார்] | |
| இந்தியர்கள் | | இந்தியக்கார் |
| | [அர்கள் → கார்] | |

தமிழில் வழங்கப்படும் "-அர்கள்" என்ற பொதுப்பால் பன்மைப்பெயர் விகுதி மலையாளத்தில் மொழிபெயர்க்கப்படும் வேளையில் -அர், -கள், -மார், -கார் எனப் பலவிதங்களில் மாறுகிறது தமிழில் இரட்டைப் பன்மை விகுதியான "-அர்கள்" மலையாளத்தில் ஒற்றைப் பன்மையாக மாறிவருகின்றது மலையாளத்தில் வரும் "-கார்", "-மார்" விகுதிகள் தமிழில் இவ்விடத்தில் தமிழில் வருவதில்லை

### 3.1.7.1.4. (-வர்) விகுதிகள் மாறுதல்

| **தமிழ்** | | **மலையாளம்** |
|---|---|---|
| இருவர் | | ரண்டு பேர் |
| | [வர்→பேர்] | |
| மூவர் | | மூந்நு பேர் |
| | [வர்→பேர்] | |
| பகைவர் | | சத்ருக்கள் |
| | [வர்→க்கள்] | |

தமிழில் இருந்து மலையாளத்துக்கு மொழிபெயர்க்கப்படுகையில் வர்" விகுதி "-பேர்" மற்றும் "-க்கள்" , என்று மாறுகிறது.

### 3.1.7.1.5. (-வர்கள்) விகுதிகள் மாறுதல்

| **தமிழ்** | | **மலையாளம்** |
|---|---|---|
| பகைவர்கள் | | சத்ருக்கள் |
| | [வர்கள்→க்கள்] | |
| கள்வர்கள் | | கள்ளன்மார் |
| | [வர்கள்→மார்] | |
| முடவர்கள் | | விகலாங்கர் |
| | [வர்கள்→அர்] | |

தமிழில் இருந்து மலையாளத்துக்கு மாற்றப்படுகையில் "-வர்கள்" விகுதி "-மார்", "-அர்" என்று மாறுகிறது. "-வர்கள்" விகுதி மலையாளத்தில் கிடையாது.

#### 3.1.7.1.6. (-ஞர்கள்) விகுதி மாறும் விதம்

| தமிழ் | | மலையாளம் |
|---|---|---|
| அறிஞர்கள் | | பண்டிதன்மார் |
| | [ ஞர்கள் → மார் ] | |
| பொறிஞர்கள் | | என்ஜினியரன்மார் |
| | [ ஞர்கள் → மார் ] | |

"-ஞர்கள்" விகுதி "-மார்" என்று மாறுகிறது. மலையாளத்தில் ஞர்கள்" விகுதி இவ்விடம் அமையாது. "-மார்" விகுதி தமிழில் இவ்விடம் இடம்பெறுவதில்லை.

#### 3.1.7.1.7. (-ஓர்) , (ஓர்கள்) விகுதிகள் மாறுதல்

| | | |
|---|---|---|
| பெற்றோர் | | மாதாபிதாக்கள் |
| | [ ஓர் → கள் ] | |
| முதியோர் | | வ்ருத்தர் |
| | [ ஓர் → அர் ] | |
| ஊனமுற்றோர் | | விகலாங்கர் |
| | [ ஓர் → அர் ] | |
| சான்றோர் | | பண்டிதர் |
| | [ ஓர் → அர் ] | |
| பெற்றோர்கள் | | மாதாபிதாக்கள் |
| | [ ஓர்கள்→கள் ] | |
| முதியோர்கள் | | வ்ருத்தர் |
| | [ ஓர்கள்→அர் ] | |
| ஊனமுற்றோர்கள் | | விகலாங்கர் |
| | [ ஓர்கள்→அர் ] | |
| சான்றோர்கள் | | பண்டிதர் |
| | [ ஓர்கள்→அர் ] | |

தமிழில் "-ஓர்" எனும் ஒற்றைப் பன்மை விகுதியும் "-ஓர்கள்" எனும் இரட்டைப்பன்மை விகுதியும் உயர்திணைப் பொதுப்பால் விகுதிகளாக வருகின்றன இவற்றை மலையாளத்தில் மொழிபெயர்க்கையில், அவை, "-கள்" என்றும் "-அர்" என்றும் மாறுகின்றது மலையாளத்தில் "-ஓர்கள்" எனும் இரட்டைப்பன்மை விகுதி மலையாளத்தில் அமைவது இல்லை

### 3.1.7.2. அஃறிணை உயிருள் பொருட்பெயர்களில் பொதுப்பால் விகுதிகள் மாறுதல்

#### 3.1.7.2.1. (-கள்) விகுதி மாறும் விதம்

| தமிழ் | | மலையாளம் |
|---|---|---|
| குரங்குகள் | | குரங்ஙன்மார்,குரங்ஙுகள் |
| | [கள்→மார்,கள்] | |
| கழுகுகள் | | கழுகன்மார் |
| | [கள்→மார்] | |
| நரிகள் | | குருக்கன்மார் |
| | [கள்→மார்] | |
| தேள்கள் | | தேளுகள் |
| | [கள் = கள்] | |
| புலிகள் | | கடுவகள் |
| | [கள் = கள்] | |
| மயில்கள் | | மயிலுகள் |
| | [கள் = கள்] | |
| வாத்துகள் | | தாராவுகள் |
| | [கள் = கள்] | |
| நாய்கள் | | பட்டிகள், நாயகள் |
| | [கள் → கள்] | |
| பூனைகள் | | பூச்சகள் |

[கள் → கள்]

யானைகள் ஆனகள்

[கள் → கள்]

விட்டில்கள் புல்ச்சாடிகள்

[கள் → கள்]

பாம்புகள் பாம்புகள்

[கள் → கள்]

கால்நடைகள் கன்னுகாலிகள்

[கள் → கள்]

அஃறிணைப்பன்மை விகுதி **"-கள்"** மலையாளத்துக்கு மாற்றப்படுகையில் **"-அன்"** வருகின்ற இடங்களில் **"-மார்"** என்று மாறும். **"-அன்"** இல்லாத இடங்களில் எவ்வித மாற்றமும் நிகழாமல்; **"-கள்"** என்றே வருகின்றது. மேலும் இவ்விகுதி **"-கள்"** விகுதியாகவே எவ்வித மாற்றமும் இன்றி இருமொழிகளிலும் இடம்பெறுகின்றதையும் அறியமுடிகின்றது.

**3.1.7.2.2. அஃறிணை உயிருள் பொருட்களில் (-க்கள்) விகுதி மாறும் விதம்**

ஈக்கள் ஈச்சகள்

[ க்கள் = கள்]

கொசுக்கள் கொதுகுகள்

[ க்கள் → கள் ]

பூக்கள் பூக்கள்

[ க்கள் = க்கள் ]

புழுக்கள் புழுக்கள்

[ க்கள் = க்கள்]

**"-க்கள்"** விகுதி தமிழிலிருந்து மலையாளத்திற்கு மாற்றப்படுகையில் **"-கள்"** ஆகவும், **"-க்கள்"** ஆகவும் வெளிப்படுகின்றது.

3.1.7.2.3. உயிரில் பொருட்களில் (-கள்) விகுதி மாறும் விதம்

பெட்டிகள் பெட்டிகள்

[ கள் = கள் ]

மரங்கள் மரங்ஙள்

[ கள் = கள் ]

வீடுகள் வீடுகள்

[ கள் = கள் ]

வேலைகள் ஜோலிகள்

[ கள் = கள் ]

நினைவுகள் ஓர்ம்மகள்

[ கள் = கள் ]

மொழிகள் பாஷகள்

[ கள் = கள் ]

கற்கள் கல்லுகள்

[ கள் = கள் ]

பெட்டிகள் பெட்டிகள்

கள் = கள்]

செடிகள் செடிகள்

ள் = கள்]

குடைகள் குடகள்

கள் = கள்]

சிலைகள் பிரதிமகள்

.கள் = கள்]

வண்டிகள் வண்டிகள்

[கள் = கள்]

பன்மை விகுதியான "-கள்" இருமொழிகளிலும் உயிரற்ற அஃறிணைப்பெயர்களில் எவ்வித மாற்றமும் இல்லாமல் ஒரே போன்றே வருகின்றது.

**3.1.7.2.4. (-கள்) விகுதி (-வ) ஆதல்**

அவைகள் அவ

[ கள் → வ ]

இவைகள் இவ

[ கள் → வ ]

எவைகள் ஏவ

[ கள் → வ ]

**3.1.8. ஒன்றன்பாற் பெயர்கள்**

தமிழிலும் மலையாளத்திலும் அஃறிணைப்பெயர்களில் ஒருமையினைக் குறிக்கும் பெயர்கள் ஒன்றன்பால் பெயர்கள் எனப்படும்.

சான்று.

| த | ம |
|---|---|
| புலி | கடுவா |
| யானை | ஆன |
| கதவு | கதகு |

**3.1.9. பலவின்பாற்பெயர்கள்**

தமிழிலும் மலையாளத்திலும் அஃறிணைப் பன்மையினைக் குறிக்கும் பெயர்கள் பலவின்பால்பெயர்கள் எனப்படும்.

சான்று

| த | ம |
|---|---|
| புலிகள் | கடுவகள் |
| யானைகள் | ஆனகள் |
| கதவுகள் | கதகுகள் |

### 3.1.10. வேறுபாடுகள்

1. தமிழில் "-அர்" விகுதி மரியாதையினைச் சுட்ட உயர்திணை ஒருமை ஆண்பாற்பெயர்கள், பெண்பாற்பெயர்களில் வழங்குகின்றது. ஆனால் மலையாளத்தில் இவ்விகுதி மரியாதையினைக் குறிக்க வருவதில்லை.

2. மலையாளத்தில் பொதுப்பால் பன்மை விகுதியாக, "-ஙள்" எனும் மூக்கொலியுடன் அமைந்த விகுதி வழக்கில் உண்டு. ஆனால் தமிழில் இது "-கள்" எனும் அடைப்பொலியில் தொடங்கும் பன்மைப்பெயர் விகுதியாகவே வழக்கில் உள்ளது. "-ஙள்" எனும் விகுதி மலையாளத்திற்கே உரியதாகும். இது தமிழில் இல்லை.

3. "-கள்" விகுதிபெற்ற உயர்திணைப் பொதுப்பெயர் விகுதிகள் மலையாளத்தில் **"-கள்"**, **"-கார்"**, **"-மார்"** என மூன்று விதங்களில் மாறுகின்றது. இவ்விடங்களில், மலையாளத்தில் போன்று **"-கார்"**, **"-மார்"** எனும் விகுதிகள் தமிழில் இடம்பெறுவது இல்லை.

4. "-அர்" விகுதிபெற்ற உயர்திணைப்பொதுப்பெயர் விகுதிகள் தமிழில் இருந்து மலையாளத்துக்கு மொழிபெயர்க்கப்படுகையில் **"-அர்"** விகுதி **"-கள்"** , **"-க்கள்"**, மற்றும் **"-கார்"** என்று மாறுகிறது. இவ்விகுதிகள் மலையாளத்தில் மட்டுமே வருகின்றன. தமிழில் இவை வருவதில்லை.

5. தமிழில் இருந்து மலையாளத்துக்கு மாற்றப்படுகையில் **"-வர்கள்"** விகுதி **"-கள்"**, **"-அர்"** என்று மாறுகிறது. "-வர்கள்" எனும் இரட்டைப்பன்மை விகுதி மலையாளத்தில் கிடையாது.

6. உயர்திணைப் பொதுப்பால் பன்மை விகுதியான "-ஞர்கள்" விகுதி "-மார்" என்று மாறுகிறது. மலையாளத்தில் "-ஞர்கள்" விகுதி இவ்விடம் அமையாது. "-மார்" விகுதி தமிழில் இவ்விடம் வருவதில்லை

7. தமிழில் "-ஓர்" எனும் விகுதியும் "-ஓர்கள்" விகுதியும் உயர்திணைப் பொதுப்பால் விகுதிகளாக வருகின்றன. இவற்றைத் தமிழில்

மொழிபெயர்க்கையில், அவை, "-கள்" என்றும் "-அர்" என்றும் மாறுகின்றது. மலையாளத்தில் "-ஓர்" மற்றும் "-ஓர்கள்" எனும் இரட்டைப்பன்மை விகுதிகள் அமைவது இல்லை.

**8.** தற்காலத்தமிழில் "-கள்" எனும் பன்மை உருபு பெரும்பான்மை வழக்கு. தற்கால மலையாளத்தில் "-மார்" எனும் பன்மை உருபு பெரும்பான்மை வழக்கு.

**9.** தற்காலத் தமிழில் "-அர்கள்" , "-மார்கள்", "-வர்கள்" "-ஞர்கள்" "-ஓர்கள்" போன்ற இரட்டைப்பன்மை விகுதிகள் பலர்பால் விகுதிகளாக
வருகின்றன. ஆனால் தற்கால மலையாளத்தில் இரட்டைப்பன்மை விகுதிகள் வழக்கில் இல்லை.

**10.** தமிழில் வினைச்சொற்களும் பால் காட்டும் பண்பினை உடையன. ஆனால் மலையாளத்தில் வினைச்சொற்கள் பால் காட்டுவது இல்லை.

**11.** தமிழில் வினைப்பயனிலை (Verbal Predicate) , பெயர்ப்பயனிலை (Nominal Predicate) இயைபு உண்டு. மலையாளத்தில் பெயர்ப்பயனிலை இயைபு மட்டுமே உண்டு.

சான்று:

1. த கிருஷ்ணன் வருகிறான் (வி.ப)
2. ம கிருஷ்ணன் வருன்னு (பெ.ப)
3. த கிருஷ்ணன் நல்லவன் (வி ப)
4. ம கிருஷ்ணன் நல்லவன் (பெ ப)

**12.** க்ருத் இறுதிச் சொற்களிலும் தத்தித இறுதிச்சொற்களிலும் பாலற்ற சொற்களுக்கு / அஃறிணைச்சொற்களுடன் "அன்" என்ற ஒட்டு சேரும். இவ்வொட்டு வருகையில் அச்சொற்களுக்கு ஆண்பால் விகுதியான "-அன்" வரும். இவ்வகைச் சொற்கள் தமிழில் அருகியே உள்ளன. தற்கால மலையாளத்தில் இவை அதிகம் உள்ளன.

சான்று:

| த | ம |
|---|---|
| துவரன் பருப்பு | தெக்கன் காற்று ( தெற்கிலிருந்து வீசும் காற்று) |
| தடியன் காய் | கூனன் மாவு ( வளைந்த மாமரம்) |
| இளவன் காய் | தடியன் புஸ்தகம் (தடியான புத்தகம்) |
| | வளவன் வடி ( வளைந்த கம்பு) |
| | ஊக்கன் மதில் ( பெரிய மதில்) |
| | பாலக்காடன் மாம்பழம் ( பாலக்காட்டு மாம்பழம்) |
| | கோழிக்கோடன் அல்வா (கோழிக்கோட்டு அல்வா) |

## 3.2. தமிழ் மலையாளத்தில் எண் பாகுபாடு

3.2.11.1. பெண்பால் (-கள்) ஒட்டு மாறும் விதம்

3.2.11.2. பெண்பால் (-மார்) ஒட்டுக்கள் மாறும் விதம்

3.2.11.3. பெண்பால் (-மார்கள்) ஒட்டுக்கள் மாறும் விதம்

3.2.11.4. பெண்பால் (-அர்) ஒட்டு மாறும் விதம்

3.2.11.5. பெண்பால் (-அர்கள்) ஒட்டு மாறும் விதம்

3.2.11.6. பெண்பால் (-இர்) மாறும் விதம்

3.2.11.7. பெண்பால் (-இர்கள்) மாறும் விதம்

3.2.12. வேறுபாடுகள்

## 3.2. தமிழ் மலையாளத்தில் எண் பாகுபாடு

### 3.2.1. தமிழிலும் மலையாளத்திலும் எண்கள்

உலகிலுள்ள மொழிகள் பல்வேறு வகையான எண் பகுப்புக்களைக் கொண்டுள்ளன. ஒருமை, இருமை, பன்மை மற்றும் எண் வேறுபாடே இல்லாத நிலை போன்றவை இம்முறைகளில் உட்படும். ஆனால்

தமிழில் பெயர்ச்சொற்கள் இருவகையான எண் பாகுபாடுகளையே காட்டுகின்றன. அவை ஒருமை மற்றும் பன்மை எனப்படும். உயர்திணை ஆண்பால், உயர்திணைப்பெண்பால், அஃறிணை ஒன்றன்பால் இவை மூன்றும் தமிழில் ஒருமைப்பெயர்களை உட்கொள்வன. உயர்திணைப் பலர்பாலும் அஃறிணைப் பலர்பாலும் பன்மைப்பெயர்களைக் கொண்டுள்ளன.

### 3.2.3.1. ஒருமை - தமிழ்

1. தமிழில் விகுதிகள் ஏற்காத பெயர்வடிவங்கள் ஒருமையைச் சுட்டும்.

   சான்று:

   ஆறு , குளம், மேசை, கோகிலா, இராமன்

2. பால்காட்டும் விகுதிகள் சேர்ந்த பெயர் வடிவங்களும் ஒருமையைச் சுட்டும்.

   சான்று:

| | | |
|---|---|---|
| இராவணன் | -அன் | → ஒருமை |
| அவள் | -அள் | → ஒருமை |
| அது | -து | → ஒருமை |

### 3.2.3.2. பன்மை-தமிழ்

பன்மை விகுதிகளை ஏற்றுப் பெயர்ச்சொற்கள் பன்மையைச்சுட்டும்.

சான்று:

அண்ணன்கள், மாணவர்கள், அக்காமார்கள், தம்பிமார்

மலையாளத்திலும் பெயர்ச்சொற்கள் இவ்வாறே அமைந்துள்ளன. அங்கும் ஒருமை பன்மை என்ற இரண்டு எண் பாகுபாடுகளே காணப்படுகின்றன.

**3.2.4.1. ஒருமை-மலையாளம்**

1. மலையாளத்தில் பெயர்ச்சொல்லில் விகுதிகள் ஏற்காத வடிவங்கள் ஒருமையைச் சுட்டுகின்றன.

   சான்று:

   உண்ணிக்குட்டன், மேரிக்குட்டி, சக்க, பசு

2. மலையாளத்தில் பால்காட்டும் விகுதிகளான "-அன்", "-அள்" , "-இ", "-அம்" , "-து", என்ற ஒட்டுக்கள் சேர்ந்த பெயர் வடிவங்கள் ஒருமையைச் சுட்டும்.

   சான்று:

| | | |
|---|---|---|
| கண்ணன் | -அன் | → ஒருமை |
| அவள் | -அள் | → ஒரு. |
| வேலக்காரி | -இ | → ஒரு. |
| கள்ளம் | -அம் | → ஒரு. |
| அது | -து | → ஒரு. |

**3.2.4.2. பன்மை-மலையாளம்**

"-மார்" , "-கள்" ஆகிய பன்மை விகுதிகளை ஏற்றுப் பெயர்ச்சொற்கள் பன்மையைச் சுட்டுகின்றன.

சான்று:

அனுஜன்மார், பூச்சகள்.

**3.2.5. தமிழ் மலையாள வினைமுற்றுக்களில் எண்கள்**

1. தமிழ்ப்பெயர்ச்சொற்கள் மட்டுமின்றி வினைமுற்றுக்களும் எண் காட்டும் இயல்புடையன.

சான்று: தேன்மொழி வந்தாள் - ஆள்→ ஒருமை சுட்டும் ஒட்டு.

தமிழில் வினைமுற்றிலிருந்து எழுவாய் ஒருமையா பன்மையா என அறிந்துகொள்ள இயலும். ஏனெனில் தமிழில் வினைமுற்றுக்கள் திணை, பால், எண், இடம் காட்டும் ஒட்டுக்களைப்பெற்றே வரும்.

சான்று.

| | | |
|---|---|---|
| மாறன் வந்தான் → | (-ஆன்)→ | உயர்திணை, ஆண்பால், ஒருமை, படர்கை ஒட்டு. |
| மாலதி படிக்கிறாள் → | (-ஆள்)→ | உயர்திணை, பெண்பால், ஒருமை, படர்கை ஒட்டு. |
| மாணவர்கள் சென்றனர் → | (-அர்)→ | உயர்திணை,பலர்பால், பன்மை, படர்கை ஒட்டு |

2. தமிழில் அஃறிணைப்பெயர்களில் எதிர்கால வினைமுற்று எண் காட்டுவதில்லை. இங்கே பெயர்ச்சொல்லை வைத்தே எண் ஒருமையா, பன்மையா எனக் கண்டறிந்து கொள்ள வேண்டும்.

சான்று:

ஒரு பறவை **பறக்கும்**

பல பறவைகள் **பறக்கும்**

3. மலையாள மொழியில் வினைமுற்றுக்களில் திணை, பால், எண், இடம் காட்டும் விகுதிகள் இல்லை. எனவே பெயர்ச்சொற்களின் எண் குறித்த செய்தி வினைமுற்றால் தெரிவிக்கப்படுவது இல்லை. இவ்விடம் பெயர்ச்சொற்களையும் அதில் சேர்க்கப்படும் பன்மை காட்டும் ஒட்டுக்களையும் வைத்தே ஒருமை, பன்மையை அறிந்து கொள்ள இயலும்.

சான்று:

| **மலையாளம்** | **தமிழ்** |
|---|---|
| ஓமன **வந்நு** | (ஓமன **வந்தாள்**) |

நாயகள் ஓடி. (நாய்கள் ஓடின)

புஸ்தகங்ஙள் **வீணு.** (புத்தகங்கள் **விழுந்தன**)

குட்டி **படிக்குந்நு.** (குழந்தை **படிக்கிறது**)

இங்கே வந்நு, ஓடி, வீணு, படிக்குந்நு என்ற வினைமுற்றுகள் எவற்றிலுமே திணை, பால் எண், இடம் காட்டும் விகுதிகள் வருவதில்லை. எனவே மலையாளத்தில் வினைமுற்றுகளை வைத்து எண்ணை அறிதல் இயலாது.

ஆனால் அஃறிணை ஒருமைப்பெயர்களுடன் வரும் எதிர்கால வினைமுற்றுக்கள் தமிழைப்போல் திணை, பால், எண், இடம் காட்ட வல்லன.

சான்று:

| **மலையாளம்** | **தமிழ்** |
|---|---|
| ஆ பாம்பு இவிடெ **வரும்** | அந்தப் பாம்பு இங்கே **வரும்** |

இங்கே மலையாளத்தில் உள்ள **"வரும்"** என்ற எதிர்கால வினைமுற்று தமிழைப்போல் அஃறிணை, ஒருமை, படர்கை இடம், என்ற செய்திகளைக் காட்டுவதனை அறியலாம்.

4. தமிழ் , மலையாளம் ஆகிய இருமொழிகளிலும் எண், பால், இடம் போன்றன ஒருசேரக் கலந்துள்ளன. இதனாலேயே அவை -அள், -அன், -அர் போன்ற ஒரே விகுதியால் தெரிவிக்கப்படுகின்றன. எண்ணும் பாலும் இவ்வாறு ஒரே ஒட்டினால் தெரிவிக்கப்படும் முறை திராவிட மொழிகளின் விசேடப்பண்பு என்பார் பேரா.அகஸ்தியலிங்கம். (திராவிட மொழிகள், 1995, பக் - 226 ).

**3.2.6. பன்மை விகுதிகள்**

ஒன்றுக்கு மேற்பட்ட எண்ணிக்கையினைச்சுட்டும் பெயர்கள் பன்மைப்பெயர்கள் எனப்படும். திராவிட மொழிகளில் ஒருமை மற்றும் பன்மை என்ற எண் பகுப்பே உள்ளது. தமிழிலும் மலையாளத்திலும் பல

பன்மை ஒட்டுக்களைப் பெயர்ச்சொற்களில் சேர்ப்பதன் மூலம் அவ்வச்சொற்களின் பன்மைத்தன்மை காட்டப்படுகிறது.

சான்று.

| தமிழ் | | மலையாளம் | |
|---|---|---|---|
| ஒருமை | பன்மை | ஒருமை | பன்மை |
| பூனை | பூனைகள் | பூச்ச | பூச்சகள் |
| ஆள் | ஆட்கள் | ஆள் | ஆள்கார் |
| தம்பி | தம்பிமார் | அனுஜன் | அனுஜன்மார் |

இவ்விடம் தமிழில் "-கள்" , "-மார்" போன்ற ஒட்டுக்களையும், மலையாளத்தில் "-கள்" , "-கார்" , "-மார்" போன்ற பன்மை பின்னொட்டுக்களைப் பெயர்களின் பின்புறம் இணைத்து பன்மைப்பண்பு உணர்த்தப்படுவதனை அறியலாம்.

### 3.2.6.1. தமிழில் பன்மை விகுதிகள்

'ர' கர ஒற்று, 'ப' கர இறுதி 'மார்' என்ற சொல் இவை மூன்றும் பலர்பாலைக் குறிக்கும் ஈறுகள் என்றும், அ, ஆ, வ என்ற ஈறுகள் பலவின் பாலைக்குறிக்கும் என்றும் தொல்காப்பியம் கூறுகிறது. இவற்றுள் சில பன்மை விகுதிகள் இக்காலத்தமிழில் இல்லை. தற்காலத்தமிழில் தொல்காப்பியர் கூறிய பன்மை ஒட்டுக்களுடன் பல புதிய பன்மை விகுதிகளும் வழங்குகின்றன.

பேரா.அகத்தியலிங்கம் தற்காலத்தமிழில் வழங்கும் பன்மையுருபுகளைக் கீழ்க்கண்ட பிரிவுகளில் அடக்குகின்றார்.

1. ஆண்பால் பன்மை ஒட்டுக்கள்
2. பெண்பால் பன்மை ஒட்டுக்கள்

3 பொதுப்பால் பன்மை ஒட்டுக்கள்

4. பலவின்பால் பன்மை ஒட்டுக்கள்

5. இரட்டைப்பன்மை ஒட்டுக்கள்

**3.2.6.1.1. தமிழில் பன்மை விகுதிகள்-படம்**




பன்மை உருபுகளாகக் கீழ்க்கண்ட ஒட்டுக்களைக் அவர் வரிசைப்படுத்துவார். (முனை.அகத்தியலிங்கம், தமிழ்மொழி அமைப்பியல், 2002, பக் - 86).

**3.2.6.2. தமிழில் உயர்திணைப்பன்மை விகுதிகள்**

"-கள்", "-அர்", "-அர்கள்", "-ஆர்", "-ஆர்கள்", "-இர்", "-இர்கள்", "-மார்", "-மார்கள்" , "-ஓர்", "-ஓர்கள்", "-வர்", "-வர்கள்", "-ஞர்", மற்றும் "-ஞர்கள்" போன்றன

**3.2.6.3. தமிழில் அஃறிணைப்பன்மை விகுதிகள்**

"-கள்" , "-க்கள்" போன்றன தமிழில் அஃறிணைப்பன்மை உருபுகளாக வழங்கப்படுகின்றன.

**3.2.7.1. மலையாளத்தில் பன்மை விகுதிகள்**

மலையாள மொழியின் இலக்கணமான 'கேரள பாணினியம்' பன்மை விகுதிகள் நான்கு என்று குறிப்பிடுகின்றது. அவை "-அர்" ,- "மார்" , "-அ" , "-கள்" என்பன ஆகும். இவற்றில் "-அர்", "-மார்" என்பன இரண்டும்

ஆண்பால், பெண்பாலுக்குரியன. "-அ" , "-கள்" இரண்டும் அலிப்பாலுக்கு உரியன என்று கூறப்பட்டுள்ளது

ஐந்து வகையான பன்மைகள் மலையாளத்தில் உள்ளதாக அவற்றின் உருபுகளைக் காட்டுவார் K.S. நாராயணபிள்ளை அவர்கள் ( K.S. நாராயணபிள்ளை, ஆதுனிக மலையாள வியாகரணம்,1995 பக் - 91-92). அவையாவன,

1. பெண்பால் பன்மை ஒட்டுக்கள்
2. ஆண்பால் பன்மை ஒட்டுக்கள்
3. அலிங்கப் பன்மை ஒட்டுக்கள் (பொதுப்பால் ப ஒ)
4. உயர்வு ஒருமை காட்டும் பன்மை ஒட்டுக்கள்
5. நபும்சகப் பன்மை ஒட்டுக்கள் (அஃறிணைப் ப.ஒ.)

**3.2.7.1.1. மலையாளத்தில் பன்மை விகுதிகள்-படம்**



### 3.2.7.2. மலையாளத்தில் உயர்திணைப்பன்மை விகுதிகள்

தற்கால மலையாளத்தில் "-கள்", "-மார்", "-அர்", "-ஆர்", என்பன உயர்திணைக்குரிய பன்மை உருபுகளாக வழக்கில் உள்ளன.

### 3.2.7.3. மலையாளத்தில் அஃறிணைப்பன்மை விகுதிகள்

"-அ", "-கள்" என்பவை தற்கால மலையாளத்தில் அஃறிணைப்பன்மை சுட்டும் விகுதிகள் ஆகும். "-க்கள்" என்ற விகுதியும் மலையாளத்தில் உள்ளது. பிற மலையாள இலக்கண வல்லுனர்களும் இவற்றையே சுட்டுகின்றனர். (Dr.K.M.George, Malayalam Grammar and Reader, Dr. R.E.Asher and T.C.Kumari, Malayalam).

### 3.2.8.1. தமிழில் ஆண்பால்பன்மை விகுதி

தற்காலத்தமிழில் ஆண்பாலைக்காட்டும் பன்மை உருபுகளாக "-கள்" ,"-மார்" , "-மார்கள்", "-அர்" , "-அர்கள்" , "-வர்" , "-வர்கள்" போன்றன பயன்படுத்தப்படுகின்றன.

சான்று

ஆண்கள் அண்ணன்மார் தம்பிமார்கள்

அரசர் அரசர்கள் தலைவர் தலைவர்கள்

### 3.2.8.2. மலையாளத்தில் ஆண்பால்பன்மை விகுதி

தற்கால மலையாளத்தில் ஆண்பால் பன்மை விகுதியாக '-மார்' அதிகமாகப் பயன்படுத்தப்படுகிறது.

சான்று

புருஷன்மார் (ஆண்கள்)

அத்யாபகன்மார் (ஆசியர்கள்)

கள்ளன்மார் (திருடர்கள்)

### 3.2.9. தமிழிலிருந்து மலையாளத்துக்கு ஆண்பால் பன்மைப்பெயர்களை மொழிபெயர்த்தல்

ஆண்பால் பன்மைப்பெயர்கள் தமிழிலிருந்து மலையாளத்துக்கு மொழிபெயர்க்கப்படும்போது, நிகழும் பலவகை மாற்றங்கள் கீழே கொடுக்கப்படுகின்றன.

பன்மை உருபு ஒன்று தமிழிலிருந்து மலையாளத்துக்கு மொழிபெயர்க்கப்படுகையில் அது கீழ்க்கண்டவாறு அவை ஏற்கப்படும் சொற்களுக்கு ஏற்ற பண்புகளைப்பெற்று மலையாளப்பன்மை உருபாக மாறுகின்றது.

#### 3.2.9.1. ஆண்பால் (-கள்) ஒட்டு மாறும் விதம்

சான்று:

| தமிழ் | | மலையாளம் |
|---|---|---|
| ஆண்கள் | | புருஷன்மார் |
| | [கள் →மார்] | |
| அவன்கள் | | அவன்மார் |
| | [கள் →மார்] | |
| அண்ணன்கள் | | ஜேஷ்டன்மார் |
| | [கள் →மார்] | |
| தம்பிகள் | | அனுஜன்மார் |
| | [கள் →மார்] | |
| மகன்கள் | | புத்ரன்மார் |
| | [கள் → மார்] | |
| வேலைகாரன்கள் | | வேலக்காரன்மார் |
| | [கள் → மார்] | |

தமிழில் "-கள்" என முடியும் ஆண்பால் பெயர்கள் மலையாளத்தில் "-மார்" என்று முடிகின்றன. எனவே தமிழிலிருந்து அவை மலையாளத்துக்கு மொழிபெயர்க்கப்படுகையில் "-மார்" என்று மாற்றப்படல் வேண்டும்.

### 3.2.9.2. ஆண்பால் (-மார்) ஒட்டு மாறும் விதம்

சான்று:

| **தமிழ்** | | **மலையாளம்** |
|---|---|---|
| அண்ணன்மார் | | ஜேஷ்டன்மார் |
| | **[மார் = மார்]** | |
| தம்பிமார் | | அனுஜன்மார் |
| | **[மார் = மார்]** | |
| அரசன்மார் | | ராஜாக்கன்மார் |
| | **[மார் = மார்]** | |

இங்கே தமிழின் ஆண்பால் பெயர்களைப்போலவே மலையாள ஆண்பால் பெயர்களும் பன்மை ஒட்டான "-மார்" ஐ ஒரே போல் ஏற்கின்றன. எனவே இவ்விடம் பன்மை விகுதி மாறத்தேவையில்லை.

### 3.2.9.3. ஆண்பால் (-மார்கள்) ஒட்டு

தற்காலத்தமிழில் இம்மாதிரியான பன்மை காட்டும் ஒட்டுக்கள் ஏராளமாக உள்ளன.

"-மார்கள்" எனும் உருபு இரட்டைப் பன்மை உருபு (Double Plural) ஆகும். "-மார்", "-கள்" என்று இரண்டு பன்மை உருபுகளை இது கொண்டுள்ளதால் "இரட்டைப்பன்மை உருபு" எனப்படுகின்றது.

இது ஆண்பாலுக்கும் பெண்பாலுக்கும் பொதுவான பன்மை ஒட்டாக உள்ளது.

### 3.2.9.4. ஆண்பால் (-மார்கள்) ஒட்டு மாறும் விதம்

சான்று

| தமிழ் | | மலையாளம் |
|---|---|---|
| அண்ணன்மார்கள் | | சேட்டன்மார் |
| | [மார்கள்→மார்] | |
| தம்பிமார்கள் | | அனுஜன்மார் |
| | [மார்கள்→மார்] | |
| அரசன்மார்கள் | | ராஜாக்கன்மார் |
| | [மார்கள்→மார்] | |

தமிழில் இரட்டைப்பன்மை வரும் இடத்தில் மலையாளத்தில் ஒரு பன்மையுருபே வருகின்றது அதாவது தமிழில் "-மார்கள்" வரும் இடத்தில் மலையாளத்தில் "-மார்" மட்டுமே வருகின்றது தற்காலத்தில் வழங்கும் தமிழ் மற்றும் மலையாள மொழிகளில் பன்மையுருபு ஏற்கப்படும் சூழலில் அமையும் முக்கிய வேறுபாடுகளுள் இதுவும் ஒன்றாகும்

### 3.2.9.5. ஆண்பால் (-அர்) ஒட்டு மாறும் விதம்

சான்று

| தமிழ் | | மலையாளம் |
|---|---|---|
| திருடர் | | கள்ளன்மார் |
| | [அர்→மார்] | |
| தடியர் | | தடியன்மார் |
| | [அர்→ மார்] | |
| தந்தையர் | | அச்சன்மார் |
| | [அர்→ மார] | |

இவ்விடம் ஆண்பால் ஒட்டான "-அர்" உடைய சொற்கள் மலையாளத்திற்கு மாற்றப்படுகையில் அம்மொழியின் ஆண்பால் பன்மை

ஒட்டான "-மார்" விகுதியினை ஏற்று வருகின்றது. இவ்விடத்திலுள்ள வேறுபாடு இங்கே கணினி மூலம் மொழிபெயர்க்கப்படுகையில் முக்கியமாகக் குறிப்பிடப்படவேண்டிய ஒன்று ஆகும்.

### 3.2.9.6. ஆண்பால் (-அர்கள்) ஒட்டு மாறும் விதம்

"-அர்கள்" ஒரு இரட்டைப்பன்மை உருபு ஆகும். இது ஆண்பால் பெயர்களுக்கு மட்டுமின்றி பெண்பால் பெயர்களுக்கும் வரும். "-அர்கள்" மலையாளத்திற்கு மாற்றப்படுகையில் "-மார்" என்று மட்டும் வருகின்றது.

சான்று:

| தமிழ் | | மலையாளம் |
|---|---|---|
| திருடர்கள் | | கள்ளன்மார் |
| | [அர்கள்→மார்] | |
| குருடர்கள் | | குருடன்மார்,அந்தன்மார் |
| | [அர்கள்→மார்] | |
| ஆசிரியர்கள் | | அத்யாபகன்மார் |
| | [அர்கள்→மார்] | |
| சகோதரர்கள் | | சகோதரன்மார் |
| | [அர்கள்→மார்] | |
| தந்தையர்கள் | | அச்சன்மார் |
| | [அர்கள்→மார்] | |

தமிழில் "-அர்கள்" என்று இரட்டைப்பன்மையால் குறிக்கப்படும் ஆண்பால் பெயர்கள் மலையாளத்தில் "-மார்" என்று குறிக்கப்படுதலே இவ்விடத்தில் வேறுபாடு ஆகும்.

### 3.2.9. தமிழில் பெண்பால் பன்மை விகுதிகள்

தற்காலத்தமிழில் பன்மை விகுதிகளாக "-கள்" , "-மார்" , "-மார்கள்" , "-இர்" , "-இர்கள்" போன்றன வழக்கத்தில் உள்ளன.

சான்று:

பெண்கள் அக்காமார் தங்கைமார்கள் மகளிர்

மகளிர்கள்.

### 3.2.10. மலையாளத்தில் பெண்பால் பன்மை விகுதிகள்

தற்கால மலையாளத்தில் பெண்பால் பன்மை விகுதிகளாக "-கள்" , "-மார்" போன்றன காணப்படுகின்றன.

### 3.2.11. தமிழிலிருந்து மலையாளத்துக்கு பெண்பால்பன்மைப் பெயர்களை மொழிபெயர்த்தல்

#### 3.2.11.1. பெண்பால் (-கள்) ஒட்டு மாறும் விதம்

சான்று:

| தமிழ் | | மலையாளம் |
|---|---|---|
| ஆசிரியைகள் | | அத்யாபிகமார், அத்யாபிககள் |
| | [கள்→மார்] | |
| தங்கைகள் | | அனுஜத்திமார் |
| | [கள்→மார்] | |
| பெண்கள் | | ஸ்திரீகள்,வனிதகள் |
| | [கள்=கள்] | |
| திருடிகள் | | கள்ளிகள் |
| | [கள்=கள்] | |
| மகள்கள் | | புத்ரிகள் |
| | [கள்=கள்] | |

| | |
|---|---|
| மாணவிகள் | வித்யார்த்தினிகள் |
| [கள்=கள்] | |
| வேலைக்காரிகள் | வேலக்காரிகள் |
| [கள்=கள்] | |
| சகோதரிகள் | சகோதரிகள் |
| [கள்=கள்] | |

பெண்பால் பன்மையுருபு "-கள்" ஏற்ற சொற்கள் மலையாளத்தில் "-மார்" என்று வருவதே இவ்விடத்தில் வேறுபாடு ஆகும்

### 3.2.11.2. பெண்பால் (-மார்) ஒட்டுக்கள் மாறும் விதம்

பெண்பால் ஒட்டு "-மார்" எவ்விதமாற்றமும் இன்றி மலையாளப்பெண்பால் பெயர்களில் வருகின்றது.

சான்று:

| தமிழ் | மலையாளம் |
|---|---|
| அக்காமார் | சேச்சிமார் |
| [மார்= மார்] | |
| அரசிமார் | ராணிமார், ராக்ஞ்னிமார் |
| [மார்=மார்] | |
| தங்கைமார் | அனுஜத்திமார் |
| [மார்=மார்] | |

### 3.2.11.3. பெண்பால் (-மார்கள்) ஒட்டுக்கள் மாறும் விதம்

சான்று:

| தமிழ் | மலையாளம் |
|---|---|
| அக்காமார்கள் | சேச்சிமார் |

[மார்கள்→மார்]

| | |
|---|---|
| தங்கைமார்கள் | அனுஜத்திமார் |

[மார்கள்→மார்]

| | |
|---|---|
| தாய்மார்கள் | அம்மமார் |

[மார்கள்→மார்]

இவ்விடத்தில் தமிழின் பெண்பால்பன்மை உருபு "-மார்கள்" ஒரு இரட்டைப்பன்மை உருபு ஆகும். இது மலையாளத்துக்கு மொழிபெயர்க்கப்படும் போது மலையாளப் பெண்பால் பெயர்களில் "-கள்" உருபு நீக்கப்பட்டு, "-மார்" உருபு மட்டும் பன்மை உருபாக சேர்க்கப்படுகிறது.

**3.2.11.4. பெண்பால் (-அர்) ஒட்டு மாறும் விதம்**

சான்று:

| **தமிழ்** | **மலையாளம்** |
|---|---|
| மாணவியர் | வித்யார்த்தினிகள் |
| [அர்→கள்] | |
| தங்கையர் | அனுஜத்திமார் |
| [அர்→மார்] | |
| செவிலியர் | நேழ்சுமார் |
| [அர்→மார்] | |

இங்கு "-அர்" விகுதி "-கள்" மற்றும் "-மார்" என்று இரு விதங்களில் மாறுகின்றது.

**3.2.11.5. பெண்பால் (-அர்கள்) ஒட்டு மாறும் விதம்**

சான்று:

| **தமிழ்** | **மலையாளம்** |
|---|---|
| மாணவியர்கள் | வித்யார்த்தினிகள் |

**[அர்கள்→கள்]**

தங்கையர்கள் அனுஜத்திமார்

**[அர்கள்→கள்]**

தமிழின் இரட்டைப்பன்மையுருபு "-அர்கள்" மலையாளத்தில் "-கள்" என்று மட்டும் மாறுவது இவ்விடத்தின் வேறுபாடு ஆகும்.

**3.2.11.6. பெண்பால் (-இர்) மாறும் விதம்**

சான்று:

| **தமிழ்** | **மலையாளம்** |
|---|---|
| மகளிர் | ஸ்த்ரீகள்,வனிதகள் |
| **[இர்→கள்]** | |
| பெண்டிர் | ஸ்த்ரீகள்,வனிதகள் |
| **[இர்→கள்]** | |

தமிழின் பெண்பன்மை ஒட்டான "-இர்" மலையாளத்தில் "-கள்" எனும் ஒட்டாக மாறுகின்றது.

**3.2.11.7. பெண்பால் (-இர்கள்) மாறும் விதம்**

சான்று:

| **தமிழ்** | **மலையாளம்** |
|---|---|
| மகளிர்கள் | ஸ்த்ரீகள், வனிதகள் |
| **[இர்கள்→கள்]** | |
| பெண்டிர்கள் | ஸ்த்ரீகள்,வனிதகள் |
| **[இர்கள்→கள்]** | |

தமிழில் பெண்பன்மை ஒட்டான "-இர்கள்" மலையாளத்தில் "-கள்" எனும் பெண்பன்மை ஒட்டாக வருவது இவ்விடத்தின் வேறுபாடு ஆகும்.

தமிழ் மலையாளத்தில் பன்மை விகுதிகள் ஏற்கும் விதத்தில் உள்ள வேறுபாடுகள் கீழே தொகுத்துத் தரப்படுகின்றன.

### 3.2.12. வேறுபாடுகள்

1. தமிழில் "-கள்" என முடியும் ஆண்பால் பெயர்கள் மலையாளத்தில் "-மார்" என்று முடிகின்றன.
2. தமிழில் இரட்டைப்பன்மை வரும் இடத்தில் மலையாளத்தில் ஒரு பன்மையுருபே வருகின்றது. அதாவது தமிழில் "-மார்கள்" வரும் இடத்தில் மலையாளத்தில் "-மார்" மட்டுமே வருகின்றது.
3. ஆண்பால் ஒட்டான "-அர்" உடைய சொற்கள் மலையாளத்திற்கு மாற்றப்படுகையில் அம்மொழியின் ஆண்பால் பன்மை ஒட்டான "- மார்" விகுதியினை ஏற்று வருகின்றது.
4. தமிழில் "-அர்கள்" என்று இரட்டைப்பன்மையால் குறிக்கப்படும் ஆண்பால் பெயர்கள் மலையாளத்தில் "-மார்" என்று குறிக்கப்படுகின்றது.
5. பெண்பால் பன்மையுருபு "-கள்" ஏற்ற சொற்கள் மலையாளத்தில் "-மார்" என்று வருகின்றன.
6. தமிழின் பெண்பால்பன்மை உருபு "-மார்கள்" மலையாளத்துக்கு மொழிபெயர்க்கப்படும் போது மலையாளப் பெண்பால் பெயர்களின் "-கள்" உருபு நீக்கப்பட்டு, "-மார்" உருபு மட்டும் பன்மை உருபாகச் சேர்க்கப்படுகிறது.
7. தமிழின் பெண்பன்மையுருபு "-அர்" ; "-கள்" மற்றும் "-மார்" என்று இரு விதங்களில் மாறுகின்றது.
8. தமிழின் இரட்டைப் பெண்பாற்பன்மையுருபு "-அர்கள்" மலையாளத்தில் "-கள்" எனும் ஒற்றைப்பன்மையுருபாக மாறுகின்றது.
9. தமிழின் பெண்பன்மை ஒட்டான "-இர்" மலையாளத்தில் "-கள்" எனும் ஒட்டாக மாறுகின்றது.
10. தமிழில் பெண்பன்மை ஒட்டான "-இர்கள்" மலையாளத்தில் "-கள்" எனும் பெண்பன்மை ஒட்டாக வருகின்றது.

## 3.3. தமிழிலும் மலையாளத்திலும் பதிலிடுபெயர்கள்/ மாற்றுப்பெயர்கள்

3.3.1. பதிலிடுபெயர்கள் (Pronouns)

3.3.2 மூவிடப்பெயர்கள் (Personal Pronouns)

3.3.3.1. தன்மை (I[st] Person)

3.3.3.1.1. தன்மை ஒருமை (I[st] Person Singular)

3.3.3.1.2. தன்மைப்பன்மை (I[st] Person Plural)

3.3.3.1.2.1. உளப்பாட்டுத்தன்மைப்பன்மை (I[st] Person Plural Inclusive)

3.3.3.1.2.2. உளப்படுத்தாத் தன்மைப் பன்மை (I[st] Person Plural Exclusive)

3.3.3.2. முன்னிலை (II[nd] Person)

3.3.3.2.1. முன்னிலை ஒருமை (II[nd] Person Singular)

3.3.3.2.1.1. முன்னிலை உயர்வுப்பன்மை (II[nd]Person Honorific/Singular/ Plural)

3.3.3.2.1.1.1. தமிழ் - மலையாளத்தில் முன்னிலை உயர்வுப் பன்மைகள்

3.3.3.2.1.1.1.1 இயல்பு ஒருமை

3.3.3.2.1.1.1.2 சிறப்பு ஒருமை

3.3.3.2.1.1.1.3 சிறப்பு உயர்வு ஒருமை

3.3.3.2.2. முன்னிலைப் பன்மை

3.3.3.3. படர்கைப்பதிலிடு பெயர்கள் (III[rd] Person)

3.3.3.4. மூவிடப்பெயர்கள் மலையாளத்தில் பெயர்க்கப்படுகையில் ஏற்படும் மாற்றங்கள்

3.3.3.4.1. தன்மைப்பெயர்கள் மாற்றம்

3.3.3.4.1.1. தன்மை ஒருமை

3.3.3.4.1.1.1. உளப்பாட்டு தன்மைப்பன்மை

3.3.3.4.1.1.2. உளப்படுத்தாத்தன்மைப்பன்மை

3.3.3.4.2. முன்னிலைப்பெயர்கள் மாற்றம்

3.3.3.4.2.1. முன்னிலை ஒருமை

3.3.3.4.2.2. உயர்வு ஒருமை

3.3.3.4.2.2.1. இயல்பு உயர்வு ஒருமை

3.3.3.4.2.2.2. சிறப்பு உயர்வு ஒருமை

3.3.3.4.2.2.3. கூடுதல் சிறப்பு உயர்வு ஒருமை

## 3.3. தமிழிலும் மலையாளத்திலும் பதிலிடுபெயர்கள்/ மாற்றுப்பெயர்கள்

### 3.3.1. பதிலிடுபெயர்கள் (Pronouns)

மொழியில் ஒரு பெயர்ச்சொல்லை மீண்டும் மீண்டும் கூறுவதற்குப்பதில் அப்பெயர்ச்சொல்லைக் குறிக்க வேறு சொற்களைப் பயன்படுத்துகிறோம். இந்த வேறு வகையான சொற்களே பதிலிடு பெயர்கள் அல்லது மாற்றுப்பெயர்கள் எனப்படும். தமிழ் மற்றும் மலையாள மொழிகளில் இந்தப்பதிலிடுபெயர்கள் முக்கியமான இலக்கணக்கூறுகளாகக் கருதப்படுகின்றன. மலையாளத்தில் இப்பெயர்கள் "சர்வநாமங்ஙள்" என அழைக்கப்படுகின்றன. இவ்விரு மொழிகளிலும் இருவகையான பதிலிடுபெயர்கள் உள்ளன. அவை,

1. மூவிடப்பெயர்கள
2. மூவிடப்பெயரல்லா மாற்றுப்பெயர்கள் என்பன ஆகும்.

தற்காலத் தமிழ் மற்றும் மலையாள மொழிகளில் இவ்விருவகைப்பெயர்களும் பெரிய அளவில் வேறுபாடுகள் எதுவும் இன்றி வழங்கி வருகின்றன ஆனால் இவற்றிற்கிடையே நுட்பமான வேறுபாடு அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கதாகும் ஒரு இயற்கை மொழியினை இயந்திர மொழிபெயர்ப்பிற்கு உட்படுத்துகையில் இவ்வகை நுட்பமான வேறுபாடும் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது ஆகும்.

### 3.3.2. மூவிடப்பெயர்கள் (Personal Pronouns)

மூவகை இடங்களைச்சுட்டும் பெயர்களை மூவிடப்பெயர்கள் என்கிறோம். தமிழில் இவை,

1. தன்மை (Ist Person)

2. முன்னிலை (IInd Person)

3. படர்கை (IIIrd Person)

எனப்படுகின்றன

மலையாளத்தில்,

1 உத்தம புருஷன்

2 மத்யம புருஷன்

3 பிரதமபுருஷன்

என மூவிடப்பெயர்கள் அழைக்கப்படுகின்றன

**சான்று:**

| தமிழ் | | மலையாளம் |
|---|---|---|
| தன்மை | (நான்) | ஞான் |
| முன்னிலை | (நீ) | நீ |
| படர்கை | (அவன்) | அவன் |

### 3.3.3.1. தன்மை (Ist Person)

பேசுகின்றவரைக் குறிப்பது தன்மை தமிழிலும் மலையாளத்திலும் தன்மை இருவகைப்படும் அவை,

1. தன்மை ஒருமை 2 தன்மைப் பன்மை.

#### 3.3.3.1.1. தன்மை ஒருமை (Ist Person Singular)

பேசுகின்றவர் ஒருமை எனில் அது தன்மை ஒருமை ஆகும் தற்காலத் தமிழில் "நான்" என்ற வடிவம் தன்மை ஒருமைப் பதிலிடு

பெயராக வழங்கப்படுகிறது. மலையாளத்தில் "ஞான்" என்ற வடிவம் தன்மை ஒருமைப் பதிலிடு பெயர் ஆகும்.

**சான்று:**

| தமிழ் | മലയാളം |
|---|---|
| நான் படிக்கிறேன் | ஞான் படிக்குன்னு |
| நான் ஆய்வாளராக உள்ளேன் | ஞான் ஒரு கவேஷகயாணு. |

**3.3.3.1.2. தன்மைப்பன்மை (I[st] Person Plural)**

பேசுபவர் ஒன்றுக்கு மேற்பட்டவர்கள் எனில் அது தன்மைப்பன்மை எனப்படும். தமிழிலும் மலையாளத்திலும் இத்தன்மைப்பன்மை இருவகைகளாகக் காணப்படுகின்றன. அவை,

1. உளப்பாட்டுத்தன்மைப்பன்மை
2. உளப்படுத்தாத் தன்மைப்பன்மை என்பன.

**3.3.3.1.2.1. உளப்பாட்டுத் தன்மைப்பன்மை (I[st] Person Plural Inclusive)**

பேசுபவர் யாரிடம் பேசுகிறாரோ அவரையும் சேர்த்துக்கொண்டு பேசுவது உளப்பாட்டுத்தன்மைப்பன்மை எனப்படும். இதற்கு "நாம்" என்ற பதிலிடுபெயர் தற்காலத் தமிழில் வழங்குகிறது. (முனைவர் ஆர். சரண்யா, முனைவர் முபாரக் அலி - தமிழ் உருபனியல் - பக் - 38).

தற்கால மலையாளத்தில் உளப்பாட்டுத் தன்மைப்பன்மையைக் குறிக்க இரண்டு பதிலிடு பெயர்கள் வழங்குகின்றன.

அவை, 1. நாம் மற்றும் 2. நம்மள் என்பன.

இங்கு "நாம்" என்பது அதிகாரத்தை வெளிப்படுத்தும் மரியாதை தன்மை ஒருமை வடிவமாக முற்காலத்தில் வழங்கப்பட்டது. (ஏ.ஆர்.இராஜ இராஜவர்மா, கேரளபாணினியம், 2000 - பக் - 174). மேலும் முற்காலத்தில்

உயர்குலத்து நம்பூதிரி பிராமணர்கள் தாழ்ந்த குலத்தினருடன் உரையாடும் வேளைகளில் மரியாதை தன்மை ஒருமையாக "நாம்" எனப் பயன்படுத்தி வந்தனர். (சந்திர சேகர், Personal Pronouns and pronominal forms in Malayalam 1970 - பக் 270) ஆனால் தற்கால மலையாளத்தில் இது உளப்பாட்டுத்தன்மை பன்மைப் பதிலிடு பெயராக வழக்கத்தில் உள்ளது.

"நம்மள்" எனும் மாற்றுப்பெயர் வடிவம் (நாம் + கள்) என்ற இரட்டைப்பன்மை வடிவம் என்று சந்திரசேகர் அவர்கள் கூறுகின்றார்.

சான்று:

| தமிழ் | மலையாளம் |
|---|---|
| 1. "நாம்" எல்லோரும் ஒற்றுமையாக வாழ்தல் வேண்டும். | 1. "நாம்" எல்லாம் ஒருமையோடெ ஜீவிக்கணம் |
| 2."நாம்" இந்திய நாட்டினர். | 2."நம்மள்" பாரதீயராணு. |

**3.3.3.1.2.2. உளப்படுத்தாத் தன்மைப்பன்மை (I^st Person Plural Exclusive)**

பேசுபவர் யாரிடம் பேசுகிறாரோ அவரை உட்படுத்தாமல் பேசுவது உளப்படுத்தாத் தன்மைப்பன்மை எனப்படும். இக்கருத்தினை வெளிப்படுத்தத் தமிழில் "நாங்கள்" என்ற மாற்றுப்பெயர் காணப்படுகின்றது. மலையாளத்தில் இதற்கு இணையான வடிவமாக "ஞங்ஙள்" என்ற வடிவம் வழங்கிவருகின்றது.

**சான்று:**

| தமிழ் | மலையாளம் |
|---|---|
| "நாங்கள்" அப்படிச் செய்யமாட்டோம். | "ஞங்ஙள்" அங்ஙன செய்யில்லா. |
| "நாங்கள்" வரமாட்டோம். | "ஞங்ஙள்" வரில்லா. |

### 3.3.3.2. முன்னிலை (I[st] Person)

பேசுபவரின் பேச்சைக் கேட்டுக்கொண்டு இருப்பவரையோ அல்லது இருப்பவர்களையோ குறிப்பது முன்னிலை இடம் ஆகும். தமிழ் மலையாளம் இருமொழிகளிலும் இருவகையான முன்னிலைகள் உண்டு. அவை, 1. முன்னிலை ஒருமை 2. முன்னிலைப்பன்மை என்பன.

### 3.3.3.2.1. முன்னிலை ஒருமை (II[nd] Person Singular)

பேசுபவரின் பேச்சைக் கேட்டுக்கொண்டு இருப்பவர் ஒருவர் எனில் அது முன்னிலை ஒருமை எனப்படும். தற்காலத் தமிழ் மற்றும் மலையாளத்தில் "நீ" என்ற முன்னிலை ஒருமை வடிவமே வழங்குகின்றது. மேலும் இது மரியாதையற்ற , மதிப்பற்ற வடிவமாக இரு மொழிகளிலும் கருதப்படுகின்றது.

**சான்று:**

| **தமிழ்** | **மலையாளம்** |
|---|---|
| நீ இங்கே வா | நீ இவிடெ வரூ. |
| நீ நன்றாகப் படிக்க வேண்டும் | நீ நன்னாயிப் படிக்கணம் |

### 3.3.3.2.1.1. முன்னிலை உயர்வுப்பன்மை (II[nd] Person Honorific Singular/Plural)

முன்னிலையிடத்தில் இருப்பவர் மரியாதைக்குரியவரா வயதில் மூத்தவரா எனபதைக்கருத்தில் கொண்டு மரியாதையை வெளிப்படுத்தும் முன்னிலை வடிவங்கள் இருமொழிகளிலும் வழங்கிடக்காண்கிறோம். இவ்வாறு தமிழில் மரியாதை மூன்று நிலைகளில் காணப்படுகின்றது. அவை,

1. இயல்பு உயர்வு ஒருமை

2. சிறப்பு உயர்வு ஒருமை

3. கூடுதல் சிறப்பு உயர்வு ஒருமை போன்றனவாகும்

இம்மூன்று நிலைகளை வெளிப்படுத்திட மூன்று வெவ்வேறு வடிவங்கள் தமிழில் உள்ளன "நீர்" , "நீங்கள்" , "தாங்கள்" என்பவையே அம்மூன்று வடிவங்கள் ஆகும் ((முனைவர் ச அகத்தியலிங்கம், தமிழ் மொழி அமைப்பியல் - 2002 -பக் - 92)

தற்கால மலையாளத்தில் முன்னிலையில் மரியாதை வெளிப்படுத்தும் வடிவங்களாக மூன்று பதிலிடுபெயர்கள் வழங்கிடக் காண்கிறோம் அவை "நிங்ஙள்" , "தாங்கள்" மற்றும் "அங்ங்" என்பன இவைகளின் மூலம் மலையாளத்திலும் முன்னிலையில் மூன்று நிலைகளில் மரியாதை வெளிப்படுத்தப்படுவதனை அறிய இயல்கின்றது



#### 3.3.3.2.1.1.1. தமிழ் - மலையாளத்தில் முன்னிலை உயர்வுப் பன்மைகள்

##### 3.3.3.2.1.1.1.1 இயல்பு ஒருமை

சான்று

| தமிழ் | மலையாளம் |
|---|---|
| "நீர்" எங்கே இருக்கிறீர்? | "நிங்ஙள்" எவிடெயாணு? |
| "நீர்" கொஞ்சம் பேசாமல் இரும். | "நிங்ஙள்" குறைச்ச்நேரம் மிண்டாதிரிக்குமோ? |

##### 3.3.3.2.1.1.1.2 சிறப்பு ஒருமை

| | |
|---|---|
| நீங்கள் நலமா ஐயா? | தாங்கள்க்கு சுகமாணோ சார்? |
| நீங்கள் எப்போது வருவீர்கள்? | நிங்ஙள்/தாங்கள் எப்போள் வரும்? |

##### 3.3.3.2.1.1.1.3 சிறப்பு உயர்வு ஒருமை

| | |
|---|---|
| தாங்கள் சுற்றம்சூழ வருகை தரவேண்டும். | தாங்கள் குடும்பசமேதம் வருமல்லோ? |
| தாங்கள் சொல்லுங்கள் ஐயா! | அங்ஙு பரஞ்ஞாலும்! |

#### 3.3.3.2.2. முன்னிலைப் பன்மை

தமிழில் முன்னிலைப் பன்மையைச் சுட்ட "நீங்கள்" என்னும் வடிவம் உள்ளது. மலையாளத்தில் அதற்கு இணையாக "நிங்ஙள்" என்ற மாற்றுப்பெயர் வடிவம் காணப்படுகின்றது.

சான்று

| தமிழ் | மலையாளம் |
| --- | --- |
| நீங்கள் அனைவரும் நலமா? | நிங்ஙள் எல்லாவரும் சுகமாணோ? |
| நீங்கள் இருவர் வாருங்கள்! | நிங்ஙள் ரண்டு பேர் வரூ! |

### 3.3.3.3. படர்கைப்பதிலிடு பெயர்கள் (III[rd] Person)

தன்மை, முன்னிலை அல்லாது மூன்றாவது இடத்தில் இருக்கும் ஒருவரை அல்லது பலரை, ஒன்றினை அல்லது பலவற்றைக் குறிப்பிட பயன்படுத்தும் மாற்றுப்பெயர்கள் "படர்கைப்பதிலிடு பெயர்கள்" எனப்படும். தமிழைப் பொறுத்தமட்டில் சுட்டுப்பெயர்களும் படர்கைப்பதிலிடு பெயர்களாகவே உள்ளன. சுட்டுப்பெயர்கள் தமிழில் இருவகைப்படும்.அவை

1. அண்மைச்சுட்டு மற்றும் 2. சேய்மைச்சுட்டு.

இவ்விரு சுட்டுவடிவங்களும் சேர்ந்து தற்காலத்தமிழில் மொத்தம் பதினான்கு படர்கைப் பதிலிடு பெயர்வடிவங்கள் உள்ளதாக தற்காலத் தமிழ் இலக்கணவியலார் குறிப்பிடுவர். அவை முறையே,

1. அவன் 2. அவள் 3. அவர் 4. அவர்கள்(உயர்வு) 5. அவர்கள்(பன்மை) 6. அது 7. அவை

1. இவன் 2. இவள் 3. இவர் 4. இவர்கள் (உயர்வு) 5. இவர்கள்(பன்மை) 6. இது 7. இவை

மலையாளத்திலும் இவ்வகையான பாகுபாடு அமைந்திருப்பது அதன் பதிலிடு பெயர்களை ஆராய்கையில் புலப்படுகின்றது. ஆனால் "அவர்கள்" என்ற சிறப்பு உயர்வு ஒருமையின் அண்மைசுட்டுப் பதிலிடு பெயரான "இவர்கள்" என்ற ஒருமைப்பெயரைத் தவிர மீதி தமிழுக்கு இணையான

பதிமூன்று பதிலிடுபெயர் வடிவங்கள் தற்கால மலையாளத்தில் வழக்கத்தில் உள்ளமை கண்டறியப்பட்டது. அவை முறையே,

1. அவன் 2. அவள் 3. அத்தேகம்(உயர்வு) 4. அவர்(பன்மை) 5. அவர்கள் (உயர்வு) 6. அது 7.அவ

1. இவன் 2. இவள் 3. இத்தேகம்(உயர்வு) 4. இவர்(பன்மை) 5. இது 6. இவ

என்பனவாகும்.

**3.3.3.4.மூவிடப்பெயர்கள் மலையாளத்தில் மொழிபெயர்க்கப்படுகையில் ஏற்படும் மாற்றங்கள்**

**3.3.3.4.1. தன்மைப்பெயர்கள் மாற்றம்**

**3.3.3.4.1.1. தன்மை ஒருமை**

**சான்று**

| **தமிழ்** | **மலையாளம்** |
|---|---|
| நான் படிக்கிறேன் | ஞான் படிக்குந்நு |
| நான் நல்லவன் | ஞான் நல்லவன் ஆணு. |

[ நான் = ஞான் ]

**3.3.3:4.1.1.1. உளப்பாட்டு தன்மைப்பன்மை**

| **தமிழ்** | **மலையாளம்** |
|---|---|
| நாம் தமிழ் நாட்டவர் | நாம் தமிழ்நாட்டுகார் ஆணு. |
| நாம் கல்வியறிவு பெற்றவர்கள் | நாம்/நம்மள் வித்யாசம்பன்னராணு. |

நாம் கல்லூரிக்குச்செல்ல வேண்டும். நாம்/நம்மள் கோலேஜில் போகணம்.

உளப்பாட்டுத் தன்மைப்பன்மை "நாம்" தமிழில் ஒரு வடிவமே உள்ளதையும் மலையாளத்தில் இரு வடிவங்கள் இருப்பதனையும் அறியலாம்.

**3.3.3.4.1.1.2. உளப்படுத்தாத் தன்மைப்பன்மை**

| தமிழ் | மலையாளம் |
|---|---|
| நாங்கள் நலமுடன் இருக்கிறோம் | ஞங்ஙள்க்கு சுகமாணு. |

**[ நாங்கள் = ஞங்ஙள்]**

**3.3.3.4.2. முன்னிலைப்பெயர்கள் மாற்றம்**

**3.3.3.4.2.1. முன்னிலை ஒருமை**

| தமிழ் | மலையாளம் |
|---|---|
| நீ இன்று வருவாயா? | நீ இன்னு வருமோ? |
| நீ சாப்பிட்டாயா? | நீ கழிச்சோ? |

**[ நீ = நீ ]**

**3.3.3.4.2.2. உயர்வு ஒருமை**

**3.3.3.4.2.2.1. இயல்பு உயர்வு ஒருமை**

| தமிழ் | மலையாளம் |
|---|---|
| நீர் எங்கே இருக்கிறீர்? | நிங்ஙள் எவிடெயாணு |
| நீர் உண்மையைச்சொல்லும்! | நிங்ஙள் சத்யம் பரயூ! |

**[நீர் = நிங்ஙள்]**

### 3.3.3.4.2.2.2. சிறப்பு உயர்வு ஒருமை

| தமிழ் | மலையாளம் |
|---|---|
| நீங்கள் அவசியம் வரவேண்டும்! | நிங்ஙள்/தாங்கள் தீர்ச்சயாயும் வரணம்! |
| நீங்கள் நன்றாக உறங்கினீர்களா? | நிங்ஙள்/தாங்கள் நன்னாயி உறங்ஙியோ? |

[ நீங்கள் = நிங்ஙள்/தங்கள் ]

### 3.3.3.4.2.2.3. கூடுதல் சிறப்பு உயர்வு ஒருமை

| தமிழ் | மலையாளம் |
|---|---|
| தாங்கள் சுற்றம் சூழ வரவேண்டும் | தாங்கள் குடும்பசமேதம் வருமல்லோ! |
| திருவனந்தபுரம் தங்களை அன்புடன் வரவேற்கிறது! | திருவனந்தபுரம் நிங்ஙளெ / தாங்களெ ஸ்னேகத்தோடெ சு(ஸ்)வாகதம் செய்யுந்நு. |

[ தாங்கள் = தாங்கள்]

### 3.3.3.4.2.2. முன்னிலைப்பன்மை

| தமிழ் | மலையாளம் |
|---|---|
| நீங்கள் அனைவரும் நாளை வருவீர்களா? | நிங்ஙள் எல்லாவரும் நாளெ வருமோ? |

| | |
|---|---|
| நீங்கள் அனைவரும் வரிசையில் நில்லுங்கள் | நிங்ஙள் எல்லாவரும் லைனில் நில்க்கூ |

[நீங்கள் = நிங்ஙள்]

3.3.3.4.3. படர்கைப்பதிலிடு பெயர்கள் மாற்றம்

3.3.3.4.3.1. ஆண்பால் ஒருமை

| தமிழ் | மலையாளம் |
|---|---|
| அவன் எப்படிப்படிக்கிறான்? | அவன் எங்ஙனெ படிக்குன்னு? |
| இவன் திறமைசாலி | இவன் மிடுக்கனாணு. |

[அவன் = அவன்]

[இவன் = இவன்]

3.3.3.4.3.2. பெண்பால் ஒருமை

| தமிழ் | மலையாளம் |
|---|---|
| அவள் கோவிலுக்கு சென்றாளா? | அவள் அம்பலத்தில் போயோ? |
| இவள் நலமா? | இவள்க்கு சுகமாணோ? |

[அவள் = அவள்]

[இவள் = இவள்]

3.3.3.4.3.3. உயர்வு ஒருமை

| தமிழ் | மலையாளம் |
|---|---|
| அவர் பெரிய பணக்காரர் | அத்தேகம் வலிய காசுகாரன் ஆணு. |
| இவர் தமிழ்த் துறைத்தலைவர் | இத்தேகம் தமிழ்விபாகம் வகுப்பத்யக்ஷன் / மேதாவி ஆணு |

[ அவர் = அத்தேகம்]

[ இவர் = இத்தேகம்]

"அவர்" என்ற பதிலிடுபெயர் மலையாளத்தில் பெண்பால் உயர்வு ஒருமையக் குறிக்கவும் பயன்படுகிறது. (கேரள பாணினியம் பக் -159).

| தமிழ் | மலையாளம் |
|---|---|
| ஆசிரியை மேரி அவர்களைக்கண்டேன். அவர்கள் நன்றாக இருக்கிறார்கள். | மேரி டீச்சரைக்கண்டு.அவர் சுகமாயிட்டு இருக்கின்னு. |

3.3.3.4.3.4. சிறப்பு உயர்வு ஒருமை

| தமிழ் | மலையாளம் |
|---|---|
| இப்போது முனை.இராமச்சந்திரன் அவர்கள் உரையாற்றுவார்கள். | இப்போள் டோக்டர்.ராமசந்திரன் அவர்கள் சம்ஸ்சாரிக்குந்நு. |

மலையாளத்தில் மேடைப்பேச்சுகளில் மட்டுமே "அவர்கள்" என்ற வடிவம் வழக்கில் உள்ளது.

"பேராசிரியர் ஐயா அவர்களைப்பார்த்தேன்; அவ்ர்கள் மிகவும் நல்லவர்கள்"

"சோனியா அவர்களைப் பார்த்தேன். அவர்கள் எனக்கு உதவி செய்வதாகச் சொன்னார்கள்"

இங்கே "அவர்கள் மிகவும் நல்லவர்கள்" , "அவர்கள் எனக்கு உதவி செய்வதாகச் சொன்னார்கள்" போன்ற தொடர்களில் வரும் "அவர்கள்" என்பது உயர்வு ஒருமை. தமிழில் இது சரளமாகப் பயன்படுத்தப்படும் வழக்கு ஆகும். மலையாளத்தில் இவ்வாறு பயன்படுத்தப்படுவது இல்லை. அதற்குப் பதிலாக,

"ஞான் ப்ரொபசரெக்கண்டு. அத்தேகம் வளரெ நல்ல மனுஷனாணு"

"சோனியா காந்தியெ காணுகயுண்டாயி; அவர் எனிக்கு சகாயிக்காம் எந்நு பரஞ்னு".

இவ்வாறு தமிழில் ஆண்பாலுக்கும் பெண்பாலுக்கும் "அவர்கள்" என்ற உயர்வு ஒருமை பயன்படுத்தப்படுகிறது. மலையாளத்தில் ஆண்பாலுக்கு "அத்தேகம்" மற்றும் பெண்பாலுக்கு "அவர்" என்ற உயர்வு ஒருமைகளே பயன்படுத்தப்படுகிறது.

**3.3.3.4.3.5. "இவர்கள்" எனும் அண்மைச்சுட்டுப் பதிலிடு பெயர்**

மூத்தவர்கள் புத்திசாலி; இவர்கள் கொஞ்சம் மட்டம்தான்!! என "இவர்கள்" என்ற உயர்வு ஒருமை வடிவம், தற்காலத்தமிழில் சாதாரணமாக பயன்படுத்தப்படுகிறது ஆனால் இந்த வடிவம் தற்கால மலையாள வழக்கில் இல்லை.

**3.3.3.4.3.6. பலர்பால் பன்மை**

| தமிழ் | மலையாளம் |
|---|---|
| 1.அவர்கள் எல்லோரும் உயரமானவர்கள். | அவர் எல்லாவரும் உயரமுள்ளவராணு |
| 2.இவர்கள் எல்லோரும் குட்டையானவர்கள். | இவர் எல்லாவரும் குள்ளராணு. |

**[அவர்கள் = அவர்]**

**[இவர்கள் = இவர்]**

தமிழில் படர்கைப் பன்மை பதிலிடு பெயர் வடிவம் அவர்கள் , இவர்கள் ஆகும். மலையாளத்தில் இவ்வடிவங்கள் "அவர்" மற்றும் "இவர்" என்பன.

**3.3.3.4.3.7. அஃறிணை ஒன்றன்பால்**

| **தமிழ்** | **மலையாளம்** |
|---|---|
| அது மிகப்பெரிய கோவில் | அது வலிய அம்பலம் ஆணு |
| இது எனது சொந்த விருப்பம் | இது என்றெ சொந்தம் இஷ்டமாணு |

[அது = அது]

[இது = இது]

**3.3.3.4.3.8. அஃறிணைப் பலவின்பால்**

| **தமிழ்** | **மலையாளம்** |
|---|---|
| அவை மிகச்சிறிய பொருட்கள். | அவ வளரெச் செறிய வஸ்துக்களாணு. |
| இவை புதிய செய்திகள் | இவயெல்லாம் ப்ரதானப்பட்ட வார்த்தகள் ஆணு |
| அவைகள் அழகிய படங்கள் | அவயொக்கெ மனோகரமாய சித்ரங்ஙள் ஆணு |
| இவைகள் என் பழைய உடைகள் | இதொக்கெ என்றெ பழைய ட்ரெஸ்ஸுகளாணு |

**[ அவை, அவைகள் = அவ ]**

***[ இவை, இவைகள் = இவ ]***

தமிழில் அஃறிணைப்பன்மை வடிவங்களாக அவை, அவைகள், இவை, இவைகள் என நான்கு வடிவங்கள் வழக்கில் உள்ளன ஆனால் மலையாளத்தில் இரு வடிவங்களே உண்டு பன்மை உருபு "கள்" சேர்ந்த இரு வடிவங்கள் மலையாளத்தில் இல்லை

ஆனால் மலையாளத்தில் இப்பதிலிடுபெயர்கள் "எல்லாம்", "ஒக்கெ" போன்ற முழுமைப் பதிலிடுபெயர்களையும் இணைத்துக்கொண்டு வருகின்றன. அல்லது அஃறிணை ஒருமைப்பெயருடன் "எல்லாம்" , "ஒக்கெ" போன்ற முழுமைப் பதிலிடுபெயர்களை இணைத்துக்கொண்டு அஃறிணைப்பன்மையினை வெளிப்படுத்துகின்றன.

### 3.3.3.4.3.9. தமிழ் மலையாளப் பதிலிடு பெயர்கள் - வேறுபாடுகள்

தற்கால தமிழ்மொழியின் பதிலிடு பெயர்களை மலையாள மொழியில் மொழிபெயர்த்துப் பார்த்தபொழுது கீழ்க்கண்ட வேறுபாடுகள் இருப்பது கண்டுபிடிக்கப்பட்டன

1) தமிழில் உளப்பாட்டுத் தன்மைப்பன்மையினை வெளிப்படுத்த 'நாம்' என்ற ஒரு வடிவமே காணப்படுகிறது ஆனால் மலையாளத்தில்,

   1) நாம்

   2) நம்மள்

   என்ற இரண்டு வடிவங்கள் வழக்கத்தில் உள்ளன இதில் 'நாம்' என்பது ஒருமைப்பன்மை வடிவம். 'நம்மள்' இரட்டைப்பன்மை வடிவம். எனவே தமிழில் 'நாம்' என்ற ஒருமைப்பன்மை வடிவம் மட்டுமே வழங்குகின்றது.

2) தமிழில் முன்னிலை இயல்பு உயர்வு ஒருமை 'நீர்' என்ற ஒருமைப்பன்மை வடிவமாக உள்ளது. மலையாளத்தில் முன்னிலை இயல்பு உயர்வு ஒருமை 'நிங்ஙள்' என்ற இரட்டைப்பன்மை வடிவமாக வழங்குகின்றது.

3) தமிழில் மரியாதையை வெளிப்படுத்தும் சிறப்பு உயர்வு ஒருமை வடிமாக 'நீங்கள்' என்ற பதிலிடு பெயர் உள்ளது. ஆனால் மலையாளத்தில் அதற்கு இணையானது போல் தோன்றும் 'நிங்ஙள்'

என்ற வடிவம் எப்போதும் சிறந்த மரியாதையை உணர்த்தும் வடிவமாகப் பயன்படுத்தப்படுவது இல்லை. கேரளத்தின் பல இடங்களிலும் இரு முறைகளும் இவ்வாறான இருவேறு பொருள்களில் வழங்கப்படுகின்றது. நிங்ஙள் மரியாதை குறைவாகக் கருதப்படும் வேளைகளில் 'தாங்கள்' என்ற வடிவம் தகுந்த மரியாதை தரும் வடிவமாகப் பயன்படுத்தப்படுகிறது

4) தமிழில் 'அவர்கள்' என்ற படர்கைச் சிறப்பு உயர்வு ஒருமை வடிவம் தற்காலத்தமிழில் வழங்கி வருகின்றது. ஆனால் மலையாளத்தில் இது மேடைப்பேச்சுக்களிலும், தொலைக்காட்சி உரையாடல்களிலும் மட்டுமே வழங்கி வருகின்றது.

5) 'இவர்கள்' என்ற வடிவம் தற்கால மலையாளத்தில் இல்லை.

6) தமிழில் படர்கை உயர்வு ஒருமை வடிவமாக 'அவர்' 'இவர்' என்று பயன்படுத்துகிறோம். மலையாளத்தில் இது படர்கைப்பன்மை வடிவம் ஆகும். ஆனால் பெண்களை மரியாதையுடன் குறிப்பிடுகையில் படர்கை உயர்வு ஒருமை வடிவமாக இவ்வடிவங்களைப் பயன்படுத்துவர்.

7) தமிழில் படர்கைப் பலர்பால் பன்மை வடிவமாக 'அவர்கள்' , 'இவர்கள்' என்பன வழக்கில் உள்ளன. மலையாளத்தில் இதற்கு இணையாக 'அவர்' , 'இவர்' என்பன பன்மை வடிவங்கள்.

8) அஃறிணைப் பலவின் பாலுக்குத்தமிழில் 'அவை' , 'இவை' , 'அவைகள்' , இவைகள் என நான்கு வடிவங்கள் உள்ளன. மலையாளத்தில் 'அவ' , 'இவ' என இரண்டு வடிவங்களே உள்ளன. ஆனால் பெரும்பாலும் இவை தனித்து வருவதில்லை. சில முழுமைப் பதிலிடுபெயர்களை (எ.கா: அவயொக்கெ அவயெல்லாம்) இணைத்துக்கொண்டே வருகின்றன.

# 4. தமிழிலும் மலையாளத்திலும் வேற்றுமை உருபுகளும் வேற்றுமை மயக்கமும்

## 4.1 வேற்றுமைகள்- முன்னுரை

4.1.1 தமிழில் வேற்றுமைகள்
4.1.2. வேற்றுமை-விளக்கம்
4.1.3. வேற்றுமை குறித்து பிற இலக்கணிகளின் கருத்துக்கள்
4.1.4. வேற்றுமை உருபு
4.1.5. வேற்றுமை-சொல்லின் பொருள்
4.1.6. மலையாளத்தில் வேற்றுமைகள்
4.1.7. தமிழில் வேற்றுமைகளின் எண்ணிக்கை
4.1.8. மலையாளத்தில் வேற்றுமைகளின் எண்ணிக்கை
4.1.9. வேற்றுமைப் பெயர்கள்
4.1.10. வேற்றுமைகளும் மொழிமாற்று இலக்கணமும்

## 4.2. தமிழிலும் மலையாளத்திலும் செயப்படுபொருள் வேற்றுமை

4.2.1. செயப்படுபொருள் வேற்றுமையின் பணி
4.2.2. இன் சாரியை
4.2.3. தமிழ் - மலையாளச் செயப்படுபொருள் வேற்றுமை
4.2.3.1. செயப்படுபொருள் வேற்றுமை-தமிழ்
4.2.3.2. செயப்படுபொருள் வேற்றுமை- மலையாளம்
4.2.4. செயப்படுபொருள் வேற்றுமைத்தொடர்கள் - மொழிபெயர்ப்புகள்
4.2.4.1. உயர்திணைப் பெயருடன் செயப்படுபொருள் வேற்றுமை
4.2.4.2. சிறப்புப்பெயருடன் செயப்படுபொருள் வேற்றுமை
4.2.4.3. உடைமைப் பதிலிடு பெயருடன் செயப்படுபொருள் வேற்றுமை
4.2.4.4. சுட்டுப்பெயரடையுடன் செயப்படுபொருள் வேற்றுமை
4.2.4.5. செயப்படுபொருள் வேற்றுமை உருபு பெயரைச் சுட்டுதல்
4.2.4.6. அஃறிணைப்பொதுப்பெயரும் செயப்படுபொருள் வேற்றுமையும்
4.2.4.7. உயர்திணைப்பெயர்கள் பொதுவாகக்கூறப்படுதல்
4.2.5. மலையாளத்தில் செயப்படுபொருளின் வருகை
4.2.5.1. மலையாளத்தில் அஃறிணைப்பெயர்களும் செ.வே.யும்.

## 4.4. தமிழிலும் மலையாளத்திலும் உடனிகழ்ச்சி வேற்றுமை

4.4.1. தமிழில் உடனிகழ்ச்சி வேற்றுமை
4.4.2. உடனிகழ்ச்சி வேற்றுமை உருபுகள்
4.4.3. மலையாளத்தில் உடனிகழ்ச்சி வேற்றுமை
4.4.4. மலையாளத்தில் உடனிகழ்ச்சி வேற்றுமை உருபுகள்
4.4.5. உடனிகழ்ச்சி வேற்றுமைத்தொடர்கள் - மொழிபெயர்ப்புகள்
4.4.5.1. ஓடு உருபு உடனிகழ்ச்சிப்பொருளில் வருதல்
4.4.5.2. ஓடு உருபு உடனிருப்புப் பொருளில் வருதல்
4.4.5.3. "உடன்" உருபு உடனிகழ்ச்சிப்பொருளில் வருதல்
4.4.5.4. "கூட" உருபு உடனிகழ்ச்சிப்பொருளில் வருதல்
4.4.5.5. தமிழ்-மலையாளத்தில் உடனிகழ்ச்சிப்பொருளை ஏற்ற பதிலிடு பெயர்வடிவங்கள்
4.4.5.6. உடனிகழ்ச்சிப்பொருள் வேற்றுமை - வேறுபாடுகள்

## 4.5. தமிழிலும் மலையாளத்திலும் கொடைப்பொருள் வேற்றுமை

4.5.1. தமிழில் கொடை வேற்றுமை
4.5.2. தமிழில் கொடை வேற்றுமை உருபுகள்
4.5.3. மலையாளத்தில் கொடை வேற்றுமை
4.5.4. மலையாளத்தில் கொடை வேற்றுமை உருபுகள்
4.5.5. கொடை வேற்றுமை உணர்த்தும் பிற பொருள்கள்
4.5.5.1. கொடை வேற்றுமை இலக்கைக் குறித்தல்
4.5.5.2. கொடை வேற்றுமை உருபு நோக்கத்தினைக் குறித்தல்
4.5.5.3. கொடை வேற்றுமை உருபு காலவரையறையினைக் குறித்தல்.
4.5.5.3.1. குறிப்பிட்ட காலம்
4.5.5.3.2. மொத்த நேரம்
4.5.5.4. கொடை வேற்றுமை உருபு கிழமைப்பொருளைக் குறித்தல்
4.5.5.5. கொடை வேற்றுமை உருபு உடைமைப்பொருளைக் குறித்தல்
4.5.5.6. கொடை வேற்றுமை உருபு சார்த்துநிலையினைக் குறித்தல்
4.5.5.7. கொடை வேற்றுமை உருபு துறைச்சிறப்பினைக் குறித்தல்
4.5.5.8. கொடை வேற்றுமை உருபு ஏற்புடைமையினைக் குறித்தல்

## 4.6. தமிழிலும் மலையாளத்திலும் நீங்கல் வேற்றுமை

## 4.7. தமிழிலும் மலையாளத்திலும் உடைமை வேற்றுமை

4.7.1. உடைமைப்பொருள் வேற்றுமை
4.7.3 தமிழில் உடைமைப்பொருள் வேற்றுமை
4.7.4. மலையாளத்தில் உடைமைப்பொருள் வேற்றுமை
4.7.5. தமிழில் உடைமை வேற்றுமை உருபுகள்
4.7.6. மலையாளத்தில் உடைமை வேற்றுமை உருபுகள்
4.7.7. தமிழ் உடைமை வேற்றுமைத் தொடர்கள்-மொழிபெயர்ப்பு
4.7.7.1. பெயர்ச்சொல் உடைமை உருபின்றி உடைமைப்பொருள் தருதல்
4.7.7.2. மாற்றுப்பெயர் வடிவங்கள் உடைமைப்பொருளில் வருதல்
4.7.7.3.1. தற்கிழமை
4.7.7.3.1.1 தற்கிழமை-குணம்
4.7.7.3.1.2. தற்கிழமை - தொழில்
4.7.7.3.1.3. தற்கிழமை - உறுப்பு
4.7.7.3.2. பிறிதின் கிழமை
4.7.7.3.2.1. பிறிதின் கிழமை மாற்றமின்றி அமைதல்
4.7.7.4. கிழமை வேற்றுமை உறவுமுறைகளை வெளியிடல்
4.7.7.5 தமிழ்-மலையாளத்தில் கிழமைப்பொருள் வேற்றுமை ஏற்ற பதிலிடு பெயர்வடிவங்கள்.
4.7.7.6. கிழமை வேற்றுமை - வேறுபாடுகள்

## 4.8. தமிழிலும் மலையாளத்திலும் இடப்பொருள் வேற்றுமை

4.8.1. இடப்பொருள் வேற்றுமை
4.8.2. தமிழில் இடப்பொருள் வேற்றுமை
4.8.3. மலையாளத்தில் இடப்பொருள் வேற்றுமை
4.8.4. தமிழில் இடவேற்றுமை உருபுகள்
4.8.5. மலையாளத்தில் இடவேற்றுமை உருபுகள்
4.8.6.1. இடவேற்றுமை தொழில் நிகழும் இடத்தைக் குறித்தல்
4.8.6.2. இடவேற்றுமை தொழில் நிகழும் காலத்தைக் குறித்தல்
4.8.6.3. உயிரில்லாப் பொருட்பெயர்களுடன் இல் உருபு மட்டும் வருதல்
4.8.6.4. உயிருடைப் பெயர்கள் இடவேற்றுமையுருபினை ஏற்றல்
4.8.6.4.1. அஃறிணைப் பெயர்கள் - இல் உருபு

## 4.1. வேற்றுமைகள் - முன்னுரை

### 4.1.1 தமிழில் வேற்றுமைகள்

பொருளை வேறுபடுத்தி வெளிப்படுத்த, கருத்தைப் புலப்படுத்த ஒரு மொழியில் வழங்கிடும் பலவேறு வகையான பொருள் புலப்பாட்டு உத்திகளுள் "வேற்றுமை" என்ற இலக்கண உத்தியும் மிக முக்கியமான ஒன்றாகும். தமிழ்மொழியில் இவ்வேற்றுமையானது மரபு இலக்கணிகளாலும் தற்கால இலக்கணவியலாளர்களாலும் பலவாறு விளக்கப்பட்டுள்ளது. (நன்னூல் (291), இலக்கணவிளக்கம் (193), தொன்னூல் விளக்கம் (55), கு.பரமசிவம் (137), தமிழ் மொழி அமைப்பியல் (116).

தமிழ் இலக்கணத் தொன்னூலான "தொல்காப்பியம்" வேற்றுமை குறித்து மிக விரிவாகப்பேசுகின்றது. (தொல். சொல். (546-639).

1. வேற்றுமையியல்
2. வேற்றுமை மயங்கியல்
3. விளிமரபு

என்ற மூன்று இயல்களும் வேற்றுமை குறித்த செய்தியினைக் கூறுகின்றன. தமிழை ஆய்ந்த தற்கால இலக்கணவியலாளர்களாலும் "வேற்றுமை" என்ற இலக்கணக்கூறானது மிக விரிவாக ஆராயப்பட்டுள்ளது. "தமிழ்மொழி வேற்றுமைகளை அதிகமாகக் கொண்ட மொழி" என்று தமிழ் இலக்கணத்தைப் பலவாறும் ஆய்ந்த முனை. அகத்தியலிங்கம் அவர்கள் குறிப்பிடுவார். ( டாக்டர். அகத்தியலிங்கம், தமிழ்மொழி அமைப்பியல், 2002, பக் - 16). இதன் மூலம் தமிழ்மொழியில்

வேற்றுமை என்ற இலக்கணக்கூறின் முக்கியத்துவத்தை நன்கு அறிய முடியும்.

### 4.1.2. வேற்றுமை-விளக்கம்

தொல்காப்பியம் வேற்றுமை குறித்து மிக விரிவாகப்பேசியிருப்பினும் "வேற்றுமை" என்ற கருத்தினை விளக்கிக்கூறவில்லை. (டாக்டர் இரா.காசிராஜன், இலக்கணஒளி-சொல். பக் 16). ஆனால் தொல்காப்பியர் வேற்றுமைக்குரிய பண்புகளாகச் சுட்டுகின்ற அனைத்தினின்றும் வேற்றுமை இலக்கணத்தினை இலக்கணிகள் பலவாறு விளக்க முற்பட்டுள்ளனர்.

### 4.1.3. வேற்றுமை குறித்து பிற இலக்கணிகளின் கருத்துக்கள் கீழ்வருமாறு

➢ உரையாசிரியர் தெய்வச்சிலையார் "வேற்றுமை என்பது பொருளை வேறுபடுத்தினமையாற் பெற்ற பெயர்" என்பார். ( தொல்.சொல்லதிகாரம். 61, தெய்வச்சிலையார் உரை ).

➢ "வேற்றுமைப்படுத்தலின் வேற்றுமை" என்கிறது தொன்னூல் விளக்கம் (தொன்.சொல். 55).

➢ "பொருள் வேற்றுமை செய்வன" என்பார் நன்னூலார் (நன்.சொல்.291). தற்காலத்தமிழ் மொழியை ஆராய்ந்த டாக்டர் அகத்தியலிங்கம், "பெயர்ச்சொல்லுக்கும் வினைச்சொல்லுக்கும் இடையே உள்ள அடிப்படைப்பொருள் தொடர்பைக்காட்டுவது வேற்றுமை "என்கின்றார். (டாக்டர்.அகத்தியலிங்கம், தமிழ்மொழி அமைப்பியல், 2002, பக் - 116) மொழியியல் வல்லுனரான டாக்டர் கு.பரமசிவம் வேற்றுமை என்றால் வேறுபாடு; அதாவது பொருளில்

வேறுபாடு; வேற்றுமை உருபினை ஏற்பதனால் ஒரு சொல்லின் இலக்கணப்பொருள் மாறுபடுகின்றது. அதன் மூலம் அச்சொல் வாக்கியத்தில் செயல்படும் முறை மாறுகின்றது" என்ற விளக்கத்தைத் தருகின்றார். (டாக்டர்.கு. பரமசிவம், இக்காலத்தமிழ்மரபு, 1983, பக் 137-138).

➢ இலக்கண அறிஞர் டாக்டர் பொற்கோ அவர்கள் வேற்றுமையினை விளக்குகையில் "தொடர் ஒன்றில் பெயருக்கும் வினைக்கும் உள்ள **தொடரியல் உறவே** .வேற்றுமை" என்று கூறியுள்ளார். ( Dr.Porko, A Grammar of contemporary Literary Tamil, 1997, page 33.)

➢ தொடரில் ஒரு பெயர்ச்சொல்லுக்கும் ஒரு வினைச்சொல்லுக்கும் இடையேயுள்ள **பொருட்தொடர்பாகிய இலக்கண உறவே வேற்றுமை** எனப்படும்" (டாக்டர். ஆதித்தன், மொழியியல், அனைத்திந்திய தமிழ் மொழியியல் கழகத்தின் காலாண்டு இதழ், தொகுதி 5 ,1981, பக் - 390).

➢ டாக்டர் தாமசு லேமன் அவர்கள் வேற்றுமையை விளக்க முற்படுகையில் "ஒரு பெயர் அல்லது பெயர்த்தொடருக்கும் வினைக்கும் இடையே அமைந்த **தொடரியல் உறவும் பொருள் தொடர்பும்**, இரு பெயர்கள் அல்லது பெயர்த்தொடர்களுக்கும் இடையே அமைந்த தொடரியல் உறவும் பொருள் தொடர்பும் வேற்றுமை" எனப்படுகின்றது என்று விளக்குகின்றார். (Thomas Lehmann, A Grammar of Modern Tamil, 1989, page 23).

இதுகாறும் கூறப்பட்ட விளக்கங்களால் ஒரு வாக்கியத்தில் பெயருடன் சேர்ந்து நின்றுகொண்டு, அவ்வாக்கியத்தில் உள்ள வினையுடன் தொடரியல் உறவுகொண்டு, அவ்வாக்கியத்தின் அடிப்படைப்பொருளை வேறுபடுத்திக்

காட்டுவதே "வேற்றுமை" என்று கருத இயலுகின்றது. மேலும், ஒரு தொடரில் வேற்றுமை உருபேற்ற பெயர்ச்சொல்லுக்கும், வினைச்சொல்லுக்குமிடையே இரண்டு வகையான தொடர்புகள்/உறவுகள் நிலவுகின்றன. ( மருதூர் அரங்கராசன், தமிழில் வேற்றுமைகள், 2000, பக் 48) அவை,

1. இலக்கண உறவு 2. அடிப்படைப்பொருள் தொடர்பு என இருவகைத்தொடர்புகள் ஆகும். தொடர் ஒன்றில் பெயர்ச்சொல்லில் வேற்றுமை மாறுவதைப்பொறுத்து இவ்விரு பண்புகளும் மாறிக்கொண்டே இருக்கும்.

சான்று1.




இங்கு "மாலா" என்ற பெயர்ச்சொல் "அழைத்தாள்" என்ற வினைமுற்றுடன் 1.இலக்கண உறவையும், 2.அடிப்படைப்பொருள் தொடர்பையும் கொண்டுள்ளது. மேற்குறிப்பிட்ட தொடரில் அமைந்துள்ளது மரபிலக்கண அறிஞர்கள் "எழுவாய் வேற்றுமை" என்ற பெயரால் குறிப்பிடும் **எழுவாய் இலக்கணத்தொடர்பு** ஆகும்.

சான்று 2.

மாலாவை அழைத்தாள்.

இவ்வாறு பெயர்ச்சொல்லுடன் 'ஐ' எனும் உருபு வந்து சேர்ந்ததும் எழுவாய் இலக்கண உறவானது செயப்படுபொருள் இலக்கண உறவாக மாறுகின்றது. "மாலா" என்ற பெயர்ச்சொல் "அழைத்தாள்" என்ற

வினையுடன் செயப்படுபொருள் இலக்கண உறவில் உள்ளது. இவ்விலக்கண உறவு எழுவாயினின்றும் செயப்படுபொருள் உறவாக மாறும் போது அத்தொடரில் அடிப்படைப்பொருளும் மாறிவிடுகின்றது. இதன்படி இலக்கண உறவு மாறினால் அத்தொடரின் அடிப்படைப்பொருளும் மாறிவிடுகின்றது என்பதனை அறியலாம்.

எனவே ஒரு பெயர்ச்சொல்லானது,

1) எழுவாய் வேற்றுமை ஏற்றால்; எழுவாய் இலக்கண உறவையும்,
2) செயப்படுபொருள் வேற்றுமை ஏற்றால்; செயப்படுபொருள் இலக்கண உறவையும்
3) கருவி வேற்றுமை ஏற்றால் ; கருவிப்பொருள் இலக்கண உறவையும்
4) கொடை வேற்றுமை ஏற்றால்; கொடைப்பொருள் இலக்கண உறவையும்
5) நீங்கல் வேற்றுமை ஏற்றால்; நீங்கற்பொருள் வேற்றுமை உறவையும்
6) உடைமை வேற்றுமை ஏற்றால்; உடைமைப்பொருள் உறவையும்
7) இடவேற்றுமை ஏற்றால் இடப்பொருள் இலக்கண உறவும்
8) விளி வேற்றுமை ஏற்றால் விளிப்பொருள் இலக்கண உறவையும்

ஒரு வினைமுற்று பெயர்ச்சொல்லுடன் ஏற்படுத்திக்கொள்கிறது.. இங்கு உடைமை வேற்றுமையை ஏற்ற பெயர்ச்சொல் மட்டும் வினைமுற்றுடன் அல்லாது பெயருடன் உடைமை/கிழமைப்பொருள் உறவினை மேற்கொள்ளும். இவ்வாறு பெயரொன்றில் வேற்றுமை மாறுவதற்கு ஏற்ப அவ்வாக்கியத்தில் பெயர் - வினை அடிப்படைப்பொருள் தொடர்பும் மாறும். இவ்வாறு ஒரு தொடரின் அடிப்படைப்பொருளை மாறுபடுத்துவதால்/வேறுபடுத்துவதால் இவ்விலக்கணக் கருத்துரு

"வேற்றுமை" என்று தமிழ் இலக்கணங்களில் அழைக்கப்படுகின்றது. இவ்வாறே ஒரு மொழியில் எத்தனை இலக்கணப்பொருள் தொடர்புகள் இருக்கின்றனவோ அத்தனை வேற்றுமைகள் அம்மொழியில் அமைந்திருக்கும்; அல்லது ஒரு மொழியில் அமையும் அடிப்படைப்பொருளுக்கு ஏற்ப, அம்மொழியில் வந்தமையும் வேற்றுமைகளின் எண்ணிக்கையும் மாறுபடும் எனக்கொள்ளலாம்.

எனவே தொல்காப்பியர் வேற்றுமை ஏழு + 1 என்பதன் மூலம் அவர்காலத்தமிழில் எட்டு வேற்றுமைகள் அல்லது எட்டு வகையான பெயர் வினை இலக்கணப்பொருள் உறவுகள் இருந்ததாக அறிகின்றோம். நன்னூலார் 'எட்டே வேற்றுமை" என்பதால் அவர் காலத்திய மொழியின் பெயர்-வினை இலக்கணப்பொருள் உறவுகள் எட்டு என்று அறிய முடிகின்றது.

மேலும், இலக்கணப்பொருள் தொடர்பு என்பது தொடர் நிலையில் வேற்றுமையினை விளக்குவது, வேற்றுமைப்பொருள் என்பது சொல் நிலையில் வேற்றுமையை விளக்குவது என்றும் கொள்ளலாம்.

**4.1.4. வேற்றுமை உருபு**

ஒரு தொடரில் அமையும் பெயர் வினை தொடர்புகளுக்கிடையேயான இலக்கணப்பொருள் உறவை எழுத்துவடிவில் தெரிவிக்க வரும் சொல்வடிவம் வேற்றுமை உருபு எனப்படுகின்றது.

தமிழில் அமையும் எல்லா வேற்றுமை இலக்கணப்பொருள் உறவுகளுக்கும் அதனைப்புலப்படுத்தும் தனித்தனி வேற்றுமை உருபுகள் இல்லை. சான்றாக எழுவாய் வேற்றுமைக்கு உருபு கிடையாது. மேலும் அனைத்து மொழிகளுக்கும் வேற்றுமை இலக்கணப்பொருள் தொடர்பு என்பது பொதுவானது. அதனை உணர்த்தும் வேற்றுமை உருபுகளே மாறுபடுவன என அறிய முடிகின்றது.

### 4.1.5. வேற்றுமை-சொல்லின் பொருள்

வேற்றுமை என்ற சொல்லானது தமிழ் இலக்கண வரலாற்றில் பொதுவாக வேற்றுமைப் ***பொருளுக்கும்***, வேற்றுமை ***உருபுக்கும்*** பயன்படுத்தப்பட்டுள்ளது. தமிழ்மொழியில் வேற்றுமை எனுஞ்சொல் நான்கு பொருள்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பார் மருதூர் அரங்கராசன். அவையாவன,

1.பொருள் மாற்றத்தை ஏற்படுத்தும் விகுதி அல்லது வேற்றுமை உருபும் "வேற்றுமை" என்றே கையாளப்பட்டுள்ளது.

சான்று:.

*"வேற்றுமைதாமே ஏழென மொழிப....*

*.....அவைதாம் ஐ, ஒடு, கு, இன், அது, கண்,விளி என்னும்....."*

*(தொல்.சொல். 546 -548).*

2.பெயருடன் வினைக்குள்ள அடிப்படைப்பொருள் தொடர்பும் "வேற்றுமை" எனப்படுகிறது.

3. உருபை ஏற்ற சொல்லும் "வேற்றுமையே".

4. உருபை முடிக்க வருஞ்சொல்லும் "வேற்றுமையே".

(மருதூர் அரங்கராசன்,தமிழில் வேற்றுமைகள், 2000 பக் 54).

ஆங்கில மொழியின் இலக்கண வரலாற்றிலும் வேற்றுமையைக்குறிக்கும் "Case" எனுஞ்சொல் வேற்றுமை உறவுகளையும் வேற்றுமை உருபினையும் ஒருங்கே குறிக்க பயன்படுத்தப்பட்டுள்ளது. (Dr.V.P.Gopinathan Case System in Malayalam,Ph.D Thesis, Annamalai University, 1983, page 1).

### 4.1.6. மலையாளத்தில் வேற்றுமை

மலையாள மொழியின் பழைய இலக்கண நூல்கள் பலவும் மணிப்பிரவாள நடைக்கு இலக்கணம் எழுத முற்பட்டுள்ளன. எனவே அவ்விலக்கணவியலாளர்கள் சமசுகிருதத்தை பின்பற்றியே மலையாள இலக்கணத்தினை எழுதிட முயன்றுள்ளனர். ஆனால் திராவிட மொழிக்குடும்பத்தில் உட்படும் தமிழ் மொழியிலிருந்து பிரிந்த மலையாளத்துக்கு சமசுகிருதத்தினைப்பேணி இலக்கணம் வகுக்க முயன்று தமிழைப்பின்பற்றுவதா சமசுகிருத்ததைப்பின்பற்றுவதா என்று தெளிவற்று இருந்த நிலையினை மலையாள மொழியின் அனைத்து இலக்கண நூல்களிலும் தெளிவாகக்காண முடிகின்றது இக்குழப்பமான சூழ்நிலை அம்மொழியின் வேற்றுமைகளை விளக்குமிடத்தும் காணலாம். (சான்று. கேரளபாணினியம், விபக்திபிரகரணம்). பழைய இலக்கணவியலாளர்கள் பலரும் சமசுகிருத வேற்றுமைகளையே மலையாளத்துக்கும் போதுமெனக் கருதுவர் என்பர். ( Case in Malayalam - A Computational Approach, Parvathy .S. Ph.D thesis, 1995, University of Kerala). ஆனால் மலையாள மொழியில் வேற்றுமைக்கோட்பாடானது சமசுகிருத மொழியின் வேற்றுமைக்கோட்பாட்டின் அடிப்படையிலேயே இலக்கணிகளால் விளக்கப்படுகின்றது. (சான்று. சேசகிரிப்பிரபுவின் வியாகரணமித்திரம்). வேற்றுமையைக்குறிக்கும் "விபக்தி" எனும் சமசுகிருதச்சொல்லும் வேற்றுமைப்பொருள்களான காரகக்கோட்பாடுகளும் (பெயருக்கு வினையோடுள்ள தொடர்பே காரகமாம் - கேரளபாணினியம், நாமாதிகாரம், காரகப்பிரகரணம், காரிகை-75). அவ்வாறே மலையாளத்தில் எடுத்தாளப்பெற்றுள்ளன. (சான்று வியாகரண மித்ரம், மலயாள பாஷா வியாகரணம்).

மலையாள மொழியின் முதல் இலக்கண நூலான "லீலாதிலகமும்", மலையாளத்துக்கு முதன் முதலில் அறிவியல் முறைப்படி எழுதப்பட்ட இலக்கணம் என்ற பெருமையினை உடைய எர்மன் குண்டர்ட்டு (Dr.Hermann Gundert) அவர்களின் "மலயாள பாஷா வியாகரணமும்", மலையாளமொழிக்கு முதன் முதலில் மலையாளத்தில் ஜார்ஜ் மாத்தன் (Rev. George Mathan) என்பவரால் எழுதப்பட்ட "மலெயாழ்மயுடெ வியாகரணமும்" , சேசகிரிப்பிரபுவின் "வியாகரணமித்திரம்" என்ற இலக்கண நூலும் இவ்வாறே பெரும்பாலான மலையாள இலக்கணங்களும் சமசுகிருதத்தின் வேற்றுமைக்கோட்பாட்டையே பின்பற்றுகின்றன.

1896 ஆம் ஆண்டு ஏ.ஆர்.இராஜ இராஜ வர்மா என்ற மலையாள இலக்கணப்பேரறிஞரால் எழுதப்பெற்ற " கேரள பாணினியம்" என்ற இலக்கண நூல் மட்டும் இவ்விலக்கண நூல்களினின்றும் மாறுபட்டு, திராவிட மொழிகளின் வேற்றுமைக்கோட்பாட்டை பின்பற்றியுள்ளமை காணமுடிகின்றது. ஆனாலும் இவரும் விபக்தி, காரகம் என சமசுகிருதத்தின் பெயர்களை மேன்மொழி/மீமொழி (Meta Language) கலைச்சொற்களாகப் பயன்படுத்தியுள்ளமையைக் காண இயலுகின்றது.

வேற்றுமை குறித்த அடிப்படைக்கருத்து மலையாளத்திலும் பல இலக்கணிகளால் பலவாறு விளக்கப்பட்டுள்ளது. லீலாதிலகம் 14 ஆம் நூற்றாண்டு வழங்கப்பட்ட மலையாள மொழியின் யாப்பிலக்கண அமைப்பினையே அதிகமாகப்பேசுகின்றது. அது மலையாள மொழியின் முழு அமைப்பினையும் முழுமையாக விளக்கும் நூல் அல்ல..( பேரா. நடுவட்டம் கோபாலகிருட்டிணன், அனைத்துலகத் திராவிட மொழியியல் பள்ளி, (I.S.D.L) புதன் வட்டக்கருத்தரங்கு, 2013) எனவே, வேற்றுமை குறித்த விளக்கம் அதில் விரிவாக இடம்பெறவில்லை. ஆனால்

"பாஷையில் பொருளை வேறுபடுத்துவதற்கு ஒட்டுக்கள் உள்ளன" என்று லீலாதிலகம் கூறுகின்றது. ( Linguistics Interpretation of Leelathilakom, Dr.A.R.Gopala Pillai, 1985, பக்- 127). குண்டர்ட்டின் மலையாள பாஷா வியாகரணத்தில் வேற்றுமை குறித்து விரிவாகப் பேசப்படுகின்றது. பெயர்ச்சொல்லின் ஒரு பகுதியாக வேற்றுமை இந்நூலில் விளக்கப்படுகின்றது.

ஜார்ஜ் மாத்தன் வேற்றுமைப்பொருள்களை விளக்குகின்றார். இவர் வேற்றுமைகளை "விவரண விபக்தி" மற்றும் "ஆன்த்தர விபக்தி" என இருவகையாகப்பிரிக்கின்றார்.

விவரண விபக்தி

வேற்றுமைப்பொருள்களை *உருபுகள்* மூலம் உணர்த்தும் வேற்றுமைகள் இவ்வகையின் கீழ் அடங்குவன.

ஆன்த்தர விபக்தி

வேற்றுமைப்பொருள்கள் *ஒட்டுக்கள் எதுவுமின்றி* உணர்த்தப்பட்டால் அது "ஆன்த்தர விபக்தி" எனப்படும்.

ஏ.ஆர்.இராஜ இராஜ வர்மா, " ஏனைய சொற்களோடுள்ள தொடர்பைக் குறிப்பதற்கு பெயர்களோடு சேர்க்கப்படும் உருபுகளே வேற்றுமை என்று வேற்றுமைக்கு இலக்கணம் தருகின்றார். (கேரள பாணினியம் பக்-166). இவர் வேற்றுமைகளுக்குத் தனித்தனியே பெயர்கள் இட்டுள்ளமை இவரது தனிச்சிறப்பு ஆகும். பிற இலக்கணிகள் சமசுகிருத வேற்றுமைகளே மலையாளத்துக்கும் போதுமானது என்று எண்ணியிருந்த வேளையில் ஏ.ஆர். இராஜ இராஜ வர்மா அவர்கள் சமசுகிருதத்தைச் சாராத, மலையாள மொழிக்கே உரித்தான வேற்றுமை உருபுகளைப் பிரித்துக்காட்டி அதன் தனித்தன்மைகளை விளக்குகின்றார்

தற்கால மலையாள மொழிக்கு இலக்கணம் எழுதிய டாக்டர் கே.எம்.ஜார்ஜ் அவர்கள், "ஒரு தொடரிலுள்ள பெயரோ அல்லது பிரதிப்பெயரோ அடுத்துள்ள பிற சொற்களுடன் ஏற்படுத்திக்கொள்ளும் உறவே வேற்றுமை" என்று வேற்றுமையினை விளக்குவார். (Dr.K.M.George, Malayalam Grammar and Reader, 1983, page 75).

### 4.1.7. தமிழில் வேற்றுமைகளின் எண்ணிக்கை

தமிழ் மொழியில் வேற்றுமைகளின் எண்ணிக்கை காலந்தோறும் மாறுபட்டுக்கொண்டே வந்திருப்பதனை தமிழ் இலக்கண நூல்களின் மூலம் அறியமுடிகின்றது. தொல்காப்பியம் தமிழில் ஏழு வேற்றுமைகள் உண்டு எனவும் விளியொடு எட்டு என்றும் கூறுகின்றது. நன்னூலோ வேற்றுமைகள் மொத்தம் எட்டு என்கிறது. ஒரு மொழியிலுள்ள வேற்றுமைகளின் எண்ணிக்கை அம்மொழி பேசுவோருடைய எண்ண ஓட்டத்தின்படி அமையும் என்கிறார் இராபர்ட்டு கால்டுவெல். ஒரு மொழியிலுள்ள வேற்றுமைகளின் எண்ணிக்கையை வரையறை செய்வது இயலாததாக உள்ளது (டாக்டர்.கு.பரமசிவம், இக்காலத்தமிழ் மரபு, பக்-138). தமிழ் மொழி வேற்றுமைகளை அதிகமாகக் கொண்ட மொழி என்கிறார் டாக்டர் அகத்தியலிங்கம் இவ்வாறு பல கருத்துக்கள் வேற்றுமைகளின் எண்ணிக்கையைப் பொறுத்தமட்டிலும் தற்கால இலக்கணிகளிடையே நிலவுகின்றன.

தமிழ் இலக்கணத்தில் வேற்றுமைப்பொருள்கள் பெரும்பாலும் உருபுகளாலேயே குறிக்கப்படுகின்றன. ஆனால் சில வேற்றுமைகளுக்கு உருபுகள் இல்லை. அவை வேற்றுமைப்பொருளாலேயே சுட்டப்படுகின்றன.

சான்று:

எழுவாய் வேற்றுமை, விளி வேற்றுமை.

ஆனால் வேறு சில வேற்றுமைகள் ஒரே வேற்றுமைப்பொருளின் கீழ் அடக்கப்பட்டுவிடுகின்றன.

சான்று:

தொல்காப்பியர் கருவியையும் உடனிகழ்ச்சியையும் ஒரே பொருளில் அடக்குகின்றார். இவ்வாறு மட்டுமின்றி, வேற்றுமையானது தமிழில் எந்த அடிப்படையில் எட்டு என வரையறுக்கப்பட்டது என்பது தெளிவாகத் தெரியவில்லை என்பர். (டாக்டர்.கு.பரமசிவம், இக்காலத்தமிழ்மரபு பக் - 139).

இக்கூற்றுகளை அடிப்படையாகக்கொண்டு பார்க்கும் போது தமிழில் வேற்றுமைகள் பல முழுமையற்ற அடிப்படைகளில் வரையறுக்கப்பட்டுள்ளதனை அறிய முடிகின்றது. தொல்காப்பியனாரும் நன்னூலாரும் வேற்றுமையினை வேற்றுமை உருபுகளின் அடிப்படையிலும், வேற்றுமைப்பொருள்களின் அடிப்படையிலும் எட்டு என்று வகுத்துள்ளமையினை அறிய இயலுகின்றது.

இவ்வேற்றுமைகளின் எண்ணிக்கை கால வளர்ச்சிக்கு ஏற்ப மொழியில் மாறுபட்டு வந்துள்ளமையினைக் காணலாம்.. தற்காலத்தமிழில் வேற்றுமைகளின் எண்ணிக்கையினை அறிஞர்கள் பலவாறாகக் கூறுவர். அவர்கள் கருத்துக்களிலும் ஒருமைப்பாடு இல்லை.

- டாக்டர்.அகஸ்தியலிங்கம் 13
- டாக்டர்.பொன் கோதண்டராமன் 10
- டாக்டர். கு.பரமசிவம் 9
- டாக்டர். ஆதித்தன் 29

எனவே ஒரு மொழியில் அதன் வேற்றுமைக்கொள்கைகளும் கோட்பாடுகளும் வளர வளர அதன் வேற்றுமைகளின் எண்ணிக்கையும் வளர்ந்துகொண்டும் மாறுபட்டுக்கொண்டும் இருக்கும் என்றும்,

வேற்றுமைகளின் எண்ணிக்கை என்பது நிலையான ஒன்று அல்ல என்பதும் இதன் மூலம் தெளிவாகின்றது.

### 4.1.8. மலையாளத்தில் வேற்றுமைகளின் எண்ணிக்கை

மலையாளமொழியில் லீலாதிலகம் வேற்றுமைகளின் எண்ணிக்கையை எட்டு என்று சுட்டுகின்றது. குண்டர்ட்டு விளியை வேற்றுமையாகச் சேர்க்காமல் ஏழு என்பார். ஜார்ஜ் மாத்தன் வேற்றுமைகளை எட்டாகவே வரையறுப்பார். கேரள பாணினியம் ஏழு என்கிறது. சேசகிரிப்பிரபுவும் ஏழு என்றே குறிப்பிடுவார்

தற்கால மலையாளத்தினை ஆய்ந்து அதற்கு இலக்கணம் வகுத்த டாக்டர்.ஆர்.இ.ஆசரும் (R.E.Asher) வேற்றுமைகள் ஏழு என்றே குறிப்பிடுகின்றார். அதே போல் தற்கால மலையாளத்தில் வேற்றுமைகள் ஏழு என்று டாக்டர் கே.எம்.ஜார்ஜ் அவர்களும் குறிப்பிடுகின்றார்.

தற்காலத்தமிழ்மொழி பல்வேறு கோட்பாடுகளின் அடிப்படையில் விரிவாக ஆராயப்பட்டது போல் மலையாளம் ஆராயப்படவில்லை. ஆனால் திராவிட மொழிகளை ஆய்வு செய்த கால்டுவெல் கூறுவது போல் திராவிட மொழிகள் பல பொதுப்பண்புகளைக் கொண்டவையாதலால் தமிழுக்குக்கூறப்படும் பல புதிய வேற்றுமைகளும் மலையாளத்திலும் காணப்படும் எனக்கருத இடமுண்டு.

### 4.1.9. வேற்றுமைப் பெயர்கள்

தமிழ் மொழியில் வேற்றுமைப்பெயரீடு ஒரே அடிப்படையில் அமைந்ததாகக்கொள்ள இயலவில்லை. வேற்றுமைப்பெயரீட்டுக்கான அடிப்படைகளின் மீது செய்யப்பட்ட முனை. அகத்தியலிங்கம், முனை.கு.பரமசிவம் போன்ற இலக்கணவியலாரின் ஆய்வுகள் இதனை வெளிப்படுத்துகின்றன. "தொல்காப்பியம் மூன்று அடிப்படைகளில் எட்டு

வேற்றுமைகளுக்குப் பெயரிட்டுள்ளது; அவை, 1. உருபு அடிப்படை, 2. எண் அடிப்படை, 3 பொருள் அடைப்படை" என்பர். (மருதூர் அரங்கராசன், தமிழில் வேற்றுமைகள், 2000, பக் - 63) டாக்டர் கு.பரமசிவம் "தமிழ் இலக்கணவியலார் எண்ணுப்பெயர்களால் வேற்றுமைகளை அழைத்தனர் என்பார். (இக்காலத்தமிழ் மரபு, பக்-140)

நன்னூலோ,

*" பெயரே ஐ ஆல் கு இன் அது கண்*

*விளியென் றாகு மவற்றின் பெயர்முறை" (292)*

என்று உருபுகளின் அடிப்படையிலும்,

இரண்டாவது, மூன்றாவது , நான்காவது, ஐந்தாவது, ஆறன், ஏழன், எட்டன் என எண்ணுப்பெயர்களின் அடிப்படியிலும் வேற்றுமைகளைப் பெயரீடு செய்கிறது.

ஆனால் இக்கால இலக்கணிகள் இக்காலத் தமிழுக்கான வேற்றுமைகளைப் பொருள் அடிப்படையிலேயே பெயரிட்டு வழங்குவதனை வெகுவாகக் காணமுடிகிறது. டாக்டர்.அகத்தியலிங்கம் தாம் கூறும் பதிமூன்று வேற்றுமைகளை,

1) எழுவாய் வேற்றுமை 2) செயப்படு பொருள் வேற்றுமை 3) கருவிவேற்றுமை 4) பொருள் வேற்றுமை 5) காரண வேற்றுமை 6) உடனிகழ்ச்சி வேற்றுமை 7) குறி வேற்றுமை 8) நோக்க வேற்றுமை 9) நீங்கல் வேற்றுமை 10) உடைமை வேற்றுமை 11) இட வேற்றுமை 12) கால வேற்றுமை 13) விளி வேற்றுமை

என அவ்வேற்றுமைப்பொருள்களின் அடிப்படையில் பெயரிட்டுள்ளார் டாக்டர் கு.பரமசிவமும் பொருள் அடிப்படையிலேயே பெயரிடுகின்றார். டாக்டர் தாமசு லேமனும் எழுவாய் , செயப்படு பொருள்,

கொடை, கருவி போன்று (A Grammar of Modern Tamil, பக் -24). பொருள் அடிப்படையினையே பின்பற்றுகின்றார். இவற்றிலிருந்து இக்காலத்தமிழ் மொழியில் வழங்கும் வேற்றுமைகளைப் பெயரிடுவதற்குப் பொருளடிப்படையே பொருத்தமான முறை என்பது பெறப்படுகின்றது. ஏனெனில் எண் அடிப்படையில் தற்கால வேற்றுமைகளைப் பெயரிட்டால் ஏராளமாகிவிடும். காலத்தால் மாறுபட்டுவிடும் வரிசை எண் மாறிக் குறிக்கப்பட்டுக் குழப்பம் உண்டாகும். தற்காலத்தமிழ் மொழியில் வேற்றுமைப்பொருள்களின் எண்ணிக்கை வளர்ந்துள்ள நிலையில் அவற்றைக் குறிக்க வேற்றுமை உருபுகள் மட்டுமின்றி; சொல்லுருபுகளும் அதிகமாகப் பயன்படுகின்றன இக்காலத்தமிழை ஆய்வு செய்யும் இலக்கணிகளின் கருத்துப்படி தற்காலத்தமிழ் மொழியில் மொத்தம் இருபத்தியொன்பது வேற்றுமைகள் வழங்கப்படுவதாக முனைவர்.ஆதித்தன் கூறுகின்றார் ( ஏ.ஆதித்தன், அரிமா நோக்கு. 5:3, அக்டோபர், 2011, பக் 50). மேற்கண்ட இக்கருத்துகளின் மூலம் இக்காலத்தில் வழங்கும் வேற்றுமைகளைப் பெயரடிப்படையிலோ, எண் அடிப்படையிலோ பெயரிட்டு அழைப்பது தேவையற்ற விரிவையும், குழப்பத்தையும் விளைவிப்பது என்பது வெளிப்படை. எனவே அவற்றைப் பொருள் அடிப்படையில் அழைப்பதே சரியாகப்புரிந்துகொள்ளத் தெளிவானது ஆகும்.

மலையாள இலக்கணங்களில் வேற்றுமைகளின் பெயர்கள் சமசுகிருத எண் அடிப்படையிலும் பொருள் அடைப்படையிலும் பெயரிடப்பட்டுள்ளன. மலையாளத்தின் மரபிலக்கணங்களான, லீலாதிலகமும், மலயாள பாஷா வியாகரணமும், மலயாழ்மயுடெ வியாகரணமும், வியாகரணமித்ரமும் சமசுகிருத எண் அடிப்படையிலேயே வேற்றுமைகளுக்குப்பெயர் சூட்டியுள்ளன. சமசுகிருதத்தில் பாணினியும்

பிற இலக்கண வல்லாரும் (சான்று: ஆச்சார்யசர்வவர்மா எழுதிய காதந்திரவியாகரணம்) வேற்றுமைகளுக்குப் பெயரிடுகையில் 1) பிரதமா 2) திதியா 3) திருதியா 4) சதுர்த்தி 5) பஞ்சமி 5) அஷ்டமி 6) ஷஷ்டி 7) சப்தமி என சமசுகிருத எண் அடிப்படையில் பெயர் சூட்டியுள்ளனர். இம்முறையை அப்படியே மலையாள இலக்கணங்கள் பின்பற்றுகின்றன. ஆனால் கேரளபாணினியம் மட்டும் இம்முறையினின்றும் வேறுபட்டு நிற்கிறது. இவ்வாசிரியர் ஒவ்வொரு வேற்றுமைக்கும் தனித்தனிப் பெயரிடுகிறார். சமசுகிருத்தின் பெயரிடுமுறை மலையாளத்துக்குச் சிறிதும் பொருந்தாது; அதனால் இவ்வாறு பொருள் அடிப்படையில் பெயரிடுவதாக அவர் குறிப்பிடுகின்றார். ( ஏ.ஆர்.இராஜ இராஜ வர்மா, கேரள பாணினியம், 1969, பக்-168).

வேற்றுமைகளுக்கு அவர் இட்டுள்ள பெயர்கள் பின்வருமாறு:

1) நிர்தேசிகா (எழுவாய் வேற்றுமை)
2) பிரதிக்ராகிகா (செயப்படுபொருள் வேற்றுமை)
3) சம்யோஜிகா (உடனிகழ்ச்சி வேற்றுமை)
4) உத்தேசிகா (கொடை வேற்றுமை)
5) பிரயோஜிகா (கருவி வேற்றுமை)
6) சம்பந்திகா (உடைமை வேற்றுமை)
7) ஆதாரிகா (இடப்பொருள் வேற்றுமை).

### 4.1.10. வேற்றுமைகளும் மொழிமாற்று இலக்கணமும்

இனி, தற்காலத் தமிழில் வழங்கும் வேற்றுமைகளை அவற்றின் வேற்றுமைத் தொடர்களுடன் மலையாள மொழிக்கு மொழிபெயர்த்து இரு மொழிகளிலும் வேற்றுமைகள் அமையும் முறை கணினி மொழிபெயர்ப்பு நோக்கில் ஆராயப்படுகிறது. மேலும் இரு மொழிகளிலும் ஒவ்வொரு

வேற்றுமையும் வேறுபடுகின்ற இடங்கள் கணினிமொழிபெயர்ப்பிற்கு ஏற்றவாறு கண்டுபிடிக்கப்படுகிறது.

தற்காலத்தமிழின் வேற்றுமைகளாக முனை.கு.பரமசிவம், முனை.தாமசு லேமன் போன்றோர் எட்டு வேற்றுமைகளைக் குறிப்படுகின்றனர்.

அவையாவன,

1) எழுவாய் வேற்றுமை
2) செயப்படுபொருள் வேற்றுமை
3) கருவிப்பொருள் வேற்றுமை
4) உடனிகழ்ச்சி வேற்றுமை
5) கொடைப்பொருள் வேற்றுமை
6) நீங்கல் வேற்றுமை
7) கிழமைப்பொருள் வேற்றுமை
8) இடப்பொருள் வேற்றுமை
9) விளி வேற்றுமை

இவ்வேற்றுமைகளுள், எழுவாய் வேற்றுமை , விளி வேற்றுமை இரண்டும் தமிழிலும் மலையாளத்திலும் ஒரே போன்றே அமைகின்றன. எனவே இவை தவிர பிற ஏழு வேற்றுமைகளும் தமிழ் - மலையாள இயந்திர மொழிபெயர்ப்பிற்காக மொழிபெயர்க்கப்பட்டு; அவை ஒன்றுபடும் சூழல்கள், வேறுபடுமிடங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இம்மொழிமாற்று இலக்கணம் தமிழிலிருந்து மலையாளத்திற்கு இயந்திர மொழிபெயர்ப்பு செய்யும் நோக்கத்தினைக் கொண்டுள்ளதால் தமிழ் வேற்றுமைத் தொடர்கள் மலையாளத்திற்கு மொழிபெயர்க்கப்படுகின்றன. பின்பு அவற்றிடையே நிலவும் ஒற்றுமைகள், வேற்றுமைகள் கண்டுபிடிக்கப்படுகின்றன

## 4.2. தமிழிலும் மலையாளத்திலும் செயப்படுபொருள் வேற்றுமை

### முன்னுரை

தற்காலத்தமிழிலும் மலையாளத்திலும் அமையும் செயப்படுபொருள் வேற்றுமை குறித்தும் அவை வேற்றுமை உருபினை ஏற்றும் ஏற்காமலும் வரும் சூழல்கள் காரணங்கள் குறித்தும் இவ்வாறு தமிழ் மலையாளத்தில் வேற்றுமை உருபுகள் அமையும் போது ஏற்படும் வேறுபாடுகள் குறித்தும் இங்கு ஆராயப்படுகின்றன.

தொல்காப்பியத்திலும் நன்னூலிலும் "இரண்டாம் வேற்றுமை" என்று செயப்படுபொருள் வேற்றுமை கூறப்படுகின்றது. "செயல் படுகின்ற பொருள்" என்பார் முனை. அகத்தியலிங்கம். செயப்படுபொருள் என்பது வினைக்குத் தகுந்தபடி மாறுகின்ற ஒன்று. எனவே செயப்படுபொருளை வரையறுப்பது கடினம் எனபார் முனை. கு.பரமசிவம். (இக்காலத்தமிழ் மரபு, 1983, பக் - 138).

தமிழிலும் மலையாளத்திலும் செயப்படுபொருளை ஏற்கும் சொற்களாக இருப்பவை பெயர்களும், பதிலிடு பெயர்களும் ஆகும். எனவே இதன் உருபுகள் பெயரிலும் பதிலிடு பெயரிலும் அமையும் என்பது இதனால் பெறப்படுகின்றது.

ஆங்கில மொழியில் சொல்வரிசைமூலம் செயப்படுபொருள் குறிக்கப்படுகின்றது. (Dr.K.M.George, Malayalam Grammar and Reader, 1983, page -77). ஆனால் தமிழிலும் மலையாளத்திலும் பெயர்ச்சொற்களில் குறிப்பிடப்படும் அளவில் மாற்றத்தினை ஏற்படுத்தி செயப்படுபொருள் சுட்டப்படுகின்றது. அதனால் தமிழிலும் மலையாளத்திலும் சொல்வரிசைக் கட்டுப்பாடு இல்லை.

தமிழில் செயப்படுபொருள் வேற்றுமை உருபு "ஐ".

*"ஐ" யெனப் பெயரிய வேற்றுமைக்கிளவி என்பது தொல்காப்பியம்*

(தொல்.சொல்.555)

நன்னூலாரோ *இரண்டாவனதனுருபு "ஐ" யே* என்பார்.

(நன்னூல் 299).

தமிழில் செயப்படுபொருளை உணர்த்தும் உருபாக "ஐ" மட்டுமே உள்ளது. மலையாளத்தில் இவ்வுருபு "எ" ஆகும்.

*"ப்ரதிக்ராகிக கர்மம் எ"* என்று இரண்டாம் வேற்றுமையின் பெயர் ப்ரதிக்ராகிக; அதன் வேற்றுமை உருபு "எ" என்கிறது கேரளபாணினியம். ( கேரளபாணினியம், நாமாதிகாரம், விபக்திபிரகரணம், காரிகை 55, பக்-169).

சான்று:

| **தமிழ்** | **மலையாளம்** |
|---|---|
| கண்ணன் + ஐ = கண்ணனை | கண்ணன்+ எ= கண்ணனெ |
| மரங்கள் + ஐ = மரங்களை | மரங்ஙள் + எ= மரங்ஙளெ |
| *சீதை + ஐ = சீதையை* | *சீத + எ = சீதயெ* |

### 4.2.1 செயப்படுபொருள் வேற்றுமையின் பணி

"செயப்படுபொருள் குன்றா வினையுள்ள ஒரு தொடரில் செயப்படுபொருள் இது என்று காட்டுவதே செயப்படுபொருள் வேற்றுமையின் பணி" என்பார் தாமசு லேமன். ( A Grammar of Modern Tamil, 1989, page-27).

### 4.2.2. இன் சாரியை

தமிழில் பெயர்கள் "ஐ" உருபினை ஏற்கும்போது "இன்" சாரியை பெரும்பாலும் விருப்பத்தேர்வாகவே (Optional) அமைகின்றது ஆனால் மலையாளத்தில் பெரும்பாலும் அது கட்டாயச்சாரியையாகவே (Obligatory) அமைகின்றது

**சான்று:**

| தமிழ் | மலையாளம் |
|---|---|
| ஆண்+ஐ=ஆணை | ஆண்+எ=ஆணினெ |
| கண்+ஐ=கண்ணை | கண்+எ=கண்ணினெ |
| வீடு+ஐ=வீட்டினை/வீட்டை | வீடு+எ=வீட்டினெ |
| குயில்+ஐ=குயிலினை/குயிலை | குயில்+எ=குயிலினெ |
| பாம்பு+ஐ=பாம்பினை/பாம்பை | பாம்பு+எ=பாம்பினெ |

### 4.2.3. தமிழ் - மலையாளச் செயப்படுபொருள் வேற்றுமை

இனி, கீழ்வரும் தமிழ் மலையாள வேற்றுமைத்தொடர்களைக் காண்போம்

| | |
|---|---|
| தமிழ் | மணி ஒரு மாடு / மாட்டை வாங்கினான் |
| மலையாளம் | மணி ஒரு பசுவினெ வாங்ஙி. |
| தமிழ் | இராதை அம்மாவை அழைத்தாள் |
| மலையாளம் | ராத அம்மயெ விளிச்சு |
| தமிழ் | நான் பழம் / பழத்தைப் பறித்தேன். |
| மலையாளம் | ஞான் பழம் பறிச்சு |

மேற்குறிப்பிட்டுள்ள சான்றுகளிலிருந்து சில உண்மைகள் புலப்படுகின்றன. தொடர் ஒன்றில் செயப்படுபொருளைச்சுட்டும் உருபு தொடரில் பெயருடன் எல்லாச்சூழல்களிலும் அமைந்து காணப்படுவதில்லை. தமிழிலும் மலையாளத்திலும் இதே நிலையினைக் காணமுடிகிறது. இவை தற்காலத்தமிழ் மொழியில் எந்தெந்த இடங்களில் வருகின்றன, ஏன் வருகின்றன என்று தமிழ் இலக்கணவியலாளர்கள் கூறும் கருத்துப்படி ஆராயப்பட்டு அக்குறிப்பிட்ட தமிழ்த்தொடர்கள் மலையாளத்தில் மொழிபெயர்க்கப்பட்டு அங்கு செயப்படுபொருள் வேற்றுமை உருபுக்கு ஏற்படும் மாற்றங்கள், உருபு கட்டாயமாக வெளிப்படும் இடங்கள், கட்டாயமாக வெளிப்படாதிருக்கும் இடங்கள், விருப்பத்தேர்வாக வெளிப்படும் இடங்கள், இருமொழிகளிலும் இந்நிலையில் காணப்படும் வேறுபாடுகள் ஆகியவை இங்கு கண்டறியப்படுகின்றன. இக்காலத்தமிழ் மொழியில் வழங்கும் செயப்படுபொருள் வேற்றுமையினைக் குறித்து அறிவதற்கு முனை. தாமசு லேமன், முனை. கு.பரமசிவம், முனை.அகத்தியலிங்கம் போன்றவர்களின் நூல்கள் எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன. தற்கால மலையாள மொழியில் வழக்கிலுள்ள செயப்படுபொருள் வேற்றுமையின் பயன்பாடுகளைக் குறித்து அறிவதற்கு முனை.ஆர்.இ.ஆசர் மற்றும் குமாரி, (Malayalam, 1997), முனை .கே.எம்.ஜார்ஜ் (Malayalam Grammar and Reader), போன்றோரின் நூல்கள் எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன. இவ்வாய்வினைக்கீழே காணலாம்.

### 4.2.3.1. செயப்படுபொருள் வேற்றுமை-தமிழ்

தமிழில் உயர்திணை, அஃறிணை இரண்டிலும் குறிப்பிட்ட ஒன்றையோ ஒருவரையோ சுட்டும் பெயர்கள் "ஐ" உருபைப்பெற்றே வருமென்றும், அவ்வாறு சுட்டாத பெயர்கள் அவ்வுருபைப்பெறாமல்

வருமென்றும் முனை.கு.பரமசிவம் கூறுகின்றார். (இக்காலத்தமிழ் மரபு, 1983, பக் -139).

செயப்படுபொருள் குன்றா வினையொன்றில் செயப்படுபொருள் குறிப்பிட்டுச்சுட்டப்பட்டால் "ஐ" வேற்றுமை உருபு கட்டாயம் இடம்பெறும் (Obligatory) என்றும், செயப்படுபொருள் குறிப்பாகச் சுட்டப்படுவதாக இருந்தால்,

1.அவ்வுருபேற்கும் பெயர் சிறப்புப்பெயராக இருக்கும்

2.உடைமைப் பதிலிடுபெயர்களைப் பெற்று வரும்

3.சுட்டுப்பெயரடைகளை ஏற்று வரும் என்று தாமசு லேமன் கூறுகின்றார். ( A Grammar of Modern Tamil, 1989, page-27).

#### 4.2.3.2. செயப்படுபொருள் வேற்றுமை - மலையாளம்

மலையாளத்தில் உயர்திணைப்பெயர்களுடனும் (Human), பெரும்பாலான அஃறிணை உயிருடைப்பெயர்களுடனும், கடவுள்களின் பெயர்களுடனும் செயப்படுபொருள் உருபு கட்டாயம் இடம்பெறும். அஃறிணை உயிரற்ற பொருட்களின் பெயர்களுடன் மலையாளச் செயப்படுபொருள் வேற்றுமை உருபு "எ" இடம்பெறுவதில்லை. ( R.E.Asher and Kumari, Malayalam, 1997, பக் - 202).

### 4.2.4. செயப்படுபொருள் வேற்றுமைத்தொடர்கள் - மொழிபெயர்ப்புகள்

தமிழ், மலையாள மொழிகளில் இலக்கணிகள் கூறியுள்ள செயப்படுபொருள் வேற்றுமையினைத் தாங்கியுள்ள தொடர்கள்

மொழிபெயர்க்கப்பட்டு அவற்றிடையே நிலவும் வேறுபாடுகள் கீழே கண்டறியப்படுகின்றன.

### 4.2.4.1. உயர்திணைப் பெயருடன் செயப்படுபொருள் வேற்றுமை

சான்று:

தமிழ் (1) குமார் கமலாவைக் காதலிக்கிறான்

மலையாளம் (2) குமார் கமலயெ ஸ்னேகிக்குன்னு

தமிழில் "கமலாவை" எனச்சுட்டிக்கூறப்படுவதால் செயப்படுபொருள் வேற்றுமை "ஐ" உருபு அப்பெயரில் இடம்பெறுகிறது என்கிறார் தாமசு லேமன். மலையாளத்தில் உயர்திணைப்பெயர்கள் அனைத்துமே இவ்வேற்றுமையான "எ" வினைப் பெற்றே வரும் என்கிறார் ஆசர். எனவே இங்கு அமைப்பு அளவில் வேறுபாடு எதுவும் இல்லை.

**[ கமலாவை=கமலயெ ]**

### 4.2.4.2. சிறப்புப்பெயருடன் செயப்படுபொருள் வேற்றுமை

"சிறப்புப்பெயர்கள் எல்லாம் தனித்தனியே ஒவ்வொருவரைக் குறிப்பன. ஆதலால் அவை "ஐ" உருபினைப்பெற்றே வரும் என்பார் கு.பரமசிவம்.

சான்று:

தமிழ் (3) இராமன் சீதையை நோக்கினான்

மலையாளம் (4) இராமன் சீதயெ நோக்கி.

இங்கு செயப்படுபொருள் ஏற்கும் பெயரில் அமைப்பில் மாறுபாடு எதுவும் இல்லை.

**[ சீதையை=சீதெயெ ]**

#### 4.2.4.3. உடைமைப்பதிலிடு பெயருடன் செயப்படுபொருள் வேற்றுமை

சான்று:

தமிழ் (5) நான் என் சாவியைத் தொலைத்தேன்

மலையாளம் (6) ஞான் தாக்கோலு களஞ்னு.

இங்கு "சாவி" என்ற உயிரற்ற அஃறிணைப்பெயருடன் "ஐ" உருபு வருவதற்கான காரணம் அது "என்" என்ற உடைமைப்பதிலிடுபெயரால் சுட்டப்படுவதால்தான் என்கிறார் தாமசு லேமன். ஆனால் மலையாளத்தில் "சாவி" என்ற சொல்லுக்கு இணையான "தாக்கோல்" என்ற அஃறிணை, உயிரற்ற பொருட்பெயர்களுடன் செயப்படுபொருள் வேற்றுமை உருபு இடம் பெறாது என்பார் முனை. கே.எம் ஜார்ஜ் மற்றும் ஆசர் போன்றோர். எனவே தமிழில் இவ்விடம் செயப்படுபொருள் அமையும். மலையாளத்தில் அமையாது. எனவே இது இருமொழிகளிலும் செயப்படுபொருள் வேற்றுமை ஏற்கும் பெயரில் அமைப்பு அடிப்டையில் காணப்படும் வேறுபாடாகக் கொள்ளப்படுகிறது.

**[சாவியை=தாக்கோல்]**

#### 4.2.4.4. சுட்டுப்பெயரடையுடன் செயப்படுபொருள் வேற்றுமை

சான்று:

தமிழ் (7) இந்தப் புத்தகத்தைக் கொடுங்கள்

மலையாளம் (8) ஈ புஸ்தகம் (எனிக்கு) தரூ

தமிழில் "புத்தகம்" என்ற அஃறிணை உயிரற்ற பொருட்பெயரின் முன் "இந்த" என்ற சுட்டுப்பெயரடை அமைந்து அப்பெயரைச்சுட்டிக்காட்டுவதால் "ஐ" உருபு கட்டாயம் இடம்பெறுகிறது. ஆனால் மலையாளத்தில் அதே பெயர் "ஈ" என்ற (ஈ=இந்த) சுட்டுப்பெயரால் சுட்டிக்காட்டப்பட்டாலும் கூட

அஃறிணை உயிரற்ற பொருட்பெயராதலால் அப்பெயர் செயப்படுபொருள் வேற்றுமை உருபு "எ" யினை எடுப்பதில்லை. எனவே இங்கு செயப்படுபொருள் வேற்றுமை ஏற்ற அமைப்பில் இருமொழியிலும் வேறுபாடு அமைவதனைக் காணலாம்.

[புஸ்தகத்தை=புஸ்தகம்]

### 4.2.4.5. செயப்படுபொருள் வேற்றுமை உருபு பெயரைச் சுட்டுதல்

தமிழில் பெயருடன் செயப்படுபொருள் வேற்றுமை "ஐ" மட்டும் இணைந்தாலும் அது பெயரைக் குறிப்பிட்டுக்காட்டும்.

சான்று:

| | |
|---|---|
| தமிழ் | (9) குமார் இட்லியைச் சாப்பிட்டான் |
| மலையாளம் | (10) குமார் இட்லி யாணு கழிச்சது |

மேற்காணும் தொடர் (9) ல் , தமிழில் "ஐ" உருபு பெயருடன் இணைந்து அப்பெயரினைச் சுட்டி/குறிப்பிட்டுக்காட்டும். எனவே "ஐ" உருபு அங்கே கட்டாயம் இடம்பெறுகிறது. அதே பெயர் மலையாளத்தில் வரும்போது அம்மொழியின் விதிக்கு ஏற்ப அவ்வுருபு அங்கே இடம்பெறவில்லை. அதனால் தமிழில் அவ்வுருபினால் வெளிப்படுத்தப்படும் சுட்டிக்காட்டும் தன்மை மலையாளத்தில் இல்லையென்று சொல்லிவிடமுடியாது. அப்பண்பு அங்கு செயப்படுபொருள் உருபினால் அல்லாது "ஆணு" எனும் சொல்லால் வெளிப்படுத்தப்படுகின்றது. இதன் மூலம் "எ" எனும் செயப்படு பொருள் வேற்றுமை உருபு "இட்லி" எனும் அஃறிணை உயிரற்ற பொருட்பெயருடன் கட்டாயமாக நீக்கப்படுவதனைக் காணலாம்.

[இட்லியை=இட்லியாணு]

#### 4.2.4.6. அஃறிணைப்பொதுப்பெயரும் செயப்படுபொருள் வேற்றுமையும்

தமிழில் அஃறிணைப்பொதுப்பெயர் ஒன்றுடன் அப்பெயரைச் சுட்டிக்காட்ட வரும் சொற்கள் எதுவும் இடம்பெறாமலும், "ஐ" உருபும் இடம்பெறாமலும் வந்தால் அச்சொல் குறிப்பிட்டுச்சொல்லப்படவில்லை என்று தெளிகிறோம்.

சான்று:

தமிழ் (11) குமார் இட்லி சாப்பிட்டான்

மலையாளம் (12) குமார் இட்லி கழிச்சு

இங்கு, தமிழில் (11) இட்லி பொதுவாகக்குறிக்கப்படுகின்றது. அதனால் "ஐ" உருபு இடம்பெறவில்லை. மலையாளத்தில் "எ" உருபு இல்லாததன் காரணம் இட்லி எனும் சொல் பொதுவாகக் கூறப்படுவதால் அல்ல; அச்சொல் அஃறிணை உயிரற்ற பொருளாக இருப்பதே காரணம் ஆகும். ஆகவே மேற்காட்டப்பட்ட தமிழ், மலையாளத்தொடர்களில் (11) மற்றும் (12) இருவேறு காரணங்களால் செயப்படுபொருள் வேற்றுமை உருபு இடம்பெறவில்லை. எனவே அவை எழுவாய் வேற்றுமை போல் அமைகின்றன.

[இட்லி=இட்லி]

**4.2.4.6.1.** அஃறிணைப்பொதுப்பெயர்கள் குறிப்பிட்டுக் கூறப்படாமல் பொதுவாகக் கூறப்பட்டால் அப்பெயர்கள் "ஐ" உருபற்று எழுவாய் வேற்றுமையில் அமைகின்றன.

சான்று:

தமிழ் (13) அவன் தண்ணீர் கேட்டான்

மலையாளம் (14) அவன் வெள்ளம் சோதிச்சு

தமிழ் (15) அவன் பணம் கேட்டான்

மலையாளம் (16) அவன் பணம் சோதிச்சு

மேற்கூறப்பட்ட தொடர்களில் தமிழில், பெயர்கள் பொதுவாகக்கூறப்பட்டதால் "ஐ" உருபினை அவை ஏற்கவில்லை. மலையாளத்தொடர்களோ அஃறிணை உயிரற்ற பொருட்பெயர்களாதலால் "எ" உருபினை அவை ஏற்கவில்லை எனவே அமைப்பு அளவில் இரு மொழிச்சொற்களிலும் வேறுபாடு காணப்படவில்லை

[தண்ணீர்=வெள்ளம்]

[பணம்=பணம்]

**4.2.4.6.2.** அஃறிணைப்பெயர்கள் பொதுவாகக் கூறப்பட்டு; பொதுமையைக் குறிக்கும் சொற்களுடனும் வந்தால் செயப்படுபொருள் வேற்றுமை உருபு தமிழில் விருப்பத்தேர்வாக அமையும்.

சான்று:

தமிழ் (17) குமார் ஒரு பெட்டியை வாங்கினான்

மலையாளம் (18) குமார் ஒரு பெட்டி வாங்ஙி

தமிழ் (19) குமார் ஒரு பெட்டி வாங்கினான்

மலையாளம் (20) குமார் ஒரு பெட்டி வாங்ஙி

இவ்விடம், மலையாளத்தில் "ஒரு" என்ற பொதுமைப்படுத்தும் சொல், அஃறிணைப்பெயரில் "எ" உருபேற்பதில் எவ்வித மாற்றத்தையும் ஏற்படுத்துவது இல்லை இங்கே தமிழில் "பெட்டியை" என்று வந்தாலும், மலையாளத்தில் "பெட்டியெ" என்று வரவில்லை மாறாக தமிழில் "பெட்டி" என்று வந்தாலும் மலையாளத்தில் "பெட்டியெ" என்று வரவில்லை. அப்படி

வந்தால் அது மலையாளத்தின் தவறான வழக்கு ஆகும். இங்கு மலையாளத்தில் "பெட்டி" என்று மட்டுமே வரும், எனவே இங்கு தெளிவான அமைப்பு வேறுபாட்டினைக் காண்கின்றோம்.

[பெட்டியை=பெட்டி]

[பெட்டி=பெட்டி]

#### 4.2.4.7. உயர்திணைப்பெயர்கள் பொதுவாகக்கூறப்படுதல்

தமிழில் உயர்திணைப்பெயர்கள் பொதுவாகக்கூறப்பட்டால் "ஐ" உருபு கட்டாயம் இடம் பெறும் என்பது தமிழின் விதியாகக்கூறுவார் தாமசு லேமன்.

சான்று:

தமிழ் (21) குமார் ஒரு பையனைப் பார்த்தான்

மலையாளம் (22) குமார் ஒரு பையனெக் கண்டு.

இங்கு தமிழில் "ஒரு" எனும் பொதுமைப்படுத்தும் சொல் உயர்திணைப்பெயருக்கு முன் இடம்பெற்று அப்பெயரைப் பொதுவாகக் காட்டியது அதனால் அப்பெயர் "ஐ" உருபினை ஏற்றது. மலையாளத்திலும் அதன் செயப்படுபொருள் உருபு "எ" இடம்பெற்றது. ஆனால் அதற்கான காரணம் தமிழுக்கான காரணம் போல் அல்ல. மாறாக, உயர்திணைப் பெயர்கள் அனைத்துமே "எ" உருபு பெறும் என்பது அம்மொழி பின்பற்றும் விதியாகும் எனவே இவ்விடம் "ஒரு" என்ற பொதுமைப்படுத்தும் சொல் இடம் பெற்றாலும் பெறாவிட்டாலும் அப்பெயருடன் "எ" உருபு இடம்பெறும்.

[பையனை=பையனெ]

இதுகாறும் தாமசு லேமன் அவர்களின் தற்காலத்தமிழில் "ஐ" வேற்றுமை குறித்த கருத்துக்கள் மலையாள செயப்படுபொருள் வேற்றுமை

குறித்த கருத்துக்களோடு ஒப்பிடப்பெற்று தற்காலத் தமிழ் மற்றும் மலையாள மொழிகளின் செயப்படுபொருள் வேற்றுமையும் , அதன் உருபுகளின் வருகை குறித்த ஒற்றுமைகளும் வேற்றுமைகளும் காணப்பட்டன. அவற்றிற்கான காரணங்களும் அலசப்பட்டன. இனி ஆசரின் செயப்படு பொருள் குறித்த கருத்துக்களைக் கொண்ட மலையாளத்தொடர்களை தமிழுக்கு மொழிபெயர்த்து இரு மொழியிலும் அமையும் வேறுபாடுகள் காணப்படுகின்றன

#### 4.2.5. மலையாளத்தில் செயப்படுபொருளின் வருகை

தற்கால மலையாள மொழியை ஆய்ந்த ஆசர் (1997) மலையாளத்தில் செயப்படுபொருளின் வருகையைப் பின்வருமாறு விளக்குகின்றார்.

1. உயர்திணைப்பெயர்கள் அனைத்திலும் “எ” உருபு வரும்.
2. பெரும்பாலான அஃறிணை உயிருடைப்பெயர்களிலும் “எ” உருபு இடம்பெறும்
3. தெய்வங்கள் போன்ற கடவுளர்களின் பெயர்களுடனும் “எ” உருபு இடம் பெறும்.
4. பிற அனைத்துப்பெயர்களும் “எ” உருபினைப் பெறாமல் எழுவாய் வடிவிலேயே வரும்

சான்று:

மலையாளம் (23) அவன் குட்டியெ அடிச்சு

தமிழ் (24) அவன் குழந்தையை அடித்தான்

மலையாளம் (25) அவன் ஒரு பசுவினெ வாங்ஙி

தமிழ் (26) அவன் ஒரு மாட்டை/மாடு வாங்கினான்

மலையாளம் (27) அவன் உறும்பினெக் கொன்னு

தமிழ் (28) அவன் எறும்பைக் கொன்றான்

ஆசரின் சான்றுகளை மொழிபெயர்த்துப்பார்த்த போது அவை மேற்கூறிய விளக்கங்களோடு பொருந்தியே வருவதால் அவை கூறுவது கூறல் ஆகையால் இங்கு தவிர்க்கப்படுகின்றன. அவை அனைத்தும் முன்பு கூறப்பட்டவை போன்றே வருதல் காணலாம்.

**4.2.5.1. மலையாளத்தில் அஃறிணைப்பெயர்களும் செ.வே.யும்.**

மலையாளத்தில் உயிரற்ற பொருட்களில் "எ" உருபு வருவதில்லை.

சான்று:

மலையாளம் (29) ஞான் தேங்ங வாங்ஙி

தமிழ் (30) நான் தேங்காய் வாங்கினேன்

மலையாளம் (31) அவன் புஸ்தகம் வாயிச்சு

தமிழ் (32) அவன்புத்தகம்/புத்தகத்தை வாசித்தான்

தமிழில் அஃறிணை உயிரற்ற பெயர்கள் "ஐ" உருபேற்றோ ஏற்காமலோ வருகின்றன. மலையாளத்தில் இப்பெயர்கள் "எ" உருபினை ஏற்பதில்லை.

**4.2.5.1.1.** மலையாளத்தில் அஃறிணை உயிரற்ற பெயர்கள் சில சூழல்களில் "எ" உருபைப் பெறுகின்றன.

சான்று:

மலையாளம் (33) அவள் சில்பத்தெ தொழுது

தமிழ் (34) அவள் சிலையை வணங்கினாள்

மலையாளம் (35) மரம் செடியெ மறச்சு

தமிழ் (36) மரம் செடியை மறைத்து

மேற்கண்ட இரு இடங்களிலும் மலையாளத்தில் அஃறிணை உயிரற்ற பொருட்களுடன் "எ" உருபு வந்தாலும் இது மிக அரிதான அமைப்பே ஆகும். ஆனால் தமிழில் "ஐ" உருபு இவ்விடம் சுட்டப்படுவதால் வந்தது என்பர் தமிழ் இலக்கணிகள். இங்கு அமைப்பளவில் செயப்படுபொருள் உருபேற்ற இருமொழிச்சொற்களிலும் வேறுபாடு காணப்படவில்லை.

### 4.2.6. செ.வே. யும் பெயர்-வினைக்கூட்டுச்சொல்லும்

சில வினைச்சொற்கள் பெயர்ச்சொல்லுடன் "பெயர்-வினைக்கூட்டாக" அமைவதால் (Noun-Verb Compound) அப்பெயர் உயர்திணையில் அமைந்தாலும் செயப்படுபொருள் வேற்றுமை உருபினை ஏற்காது

சான்று:

மலையாளம் (37) அவள் பேன் பெறுக்கி

தமிழ் (38) அவள் பேனைச்/பேன் சீவினாள்

சான்று (37) ல் "பேன் பெறுக்கி" என்பது மலையாளத்தில் அமையும் பெயர்-வினைக்கூட்டு வடிவம் ஆகும். ஆகவே "பேன்" என்ற அஃறிணைப்பெயர் வடிவம் "எ" உருபினைப்பெறாமல் எழுவாய் வேற்றுமை போல் அமையும் என்பது ஆசரின் கருத்தாகும்.

ஆனால் தமிழில் பேன் சீவினாள் , பேனைச்சீவினாள் என இரு வடிவிலும் இப்பெயர் வரக்காண்கிறோம். அமைப்பளவில் காணப்படும் வேறுபாட்டினை இங்கு காணமுடிகின்றது.

**[பேன்=பேன்]**

**[பேன்=பேனை]**

### 4.2.7. சொல்லுருபுகளும் செ.வே.யும்

சொல்லுருபுகளின் முன்னிலையில் செயப்படுபொருள் வேற்றுமை உருபின் வருகை இனிப்பேசப்படுகிறது.

மலையாளத்தில் சொல்லுருபுகளான கொண்டு, பற்றி, குறிச்சு, கூட்டாதெ போன்ற சொற்கள் செயப்படுபொருள் வேற்றுமை "எ" யினைத் தன் முன்னால் கட்டாயமாக ஏற்றே வருகின்றன. இச் சொல்லுருபுகளைப்பெற்று வரும் மலையாளத்தொடர்களைத் தமிழில் மொழிபெயர்த்துப்பார்த்தபோது இச்சொல்லுருபு இடம்பெறும் தொடர்களும் "ஐ" உருபினைப்பெற்று வருவது கண்டுபிடிக்கப்பட்டது.

சான்று:

மலையாளம் (39) குட்டி அம்மயெக்கொண்டு ஜோலி செய்யிச்சு

தமிழ் (40) மகள் அம்மாவை வைத்து வேலையைச் செய்தாள்

**[அம்மயெக்கொண்டு = அம்மாவை வைத்து]**

மலையாளம் (41) குட்டி அம்மயெ பற்றி/குறிச்சு சோதிச்சு

தமிழ் (42) குழந்தை அம்மாவைக்குறித்து வினவியது.

**[அம்மயெ பற்றி/குறிச்சு= அம்மாவைக்குறித்து]**

மலையாளம் (43) மகள் அம்மையெகூட்டாதெ போயி

தமிழ் (44) மகள் அம்மாவைச் சேர்க்காமல்/கூட்டிக்கொள்ளாமல் போனாள்.

**[அம்மையெகூட்டாதெ=அம்மாவைச்சேர்க்காமல்/கூட்டாமல்]**

இங்கே தமிழும் மலையாளமும் ஒருபோல செய்லபடுவதனைக்காண இயலுகின்றது. மலையாளத்தில் சொல்லுருபுகள் வருகின்ற இடங்களில் உயர்திணையானாலும் அஃறிணையானாலும் "எ" உருபு கட்டாயமாக இடம்பெறுகின்றது. அதே போன்றே தமிழிலும் "ஐ" உருபு கட்டாயமாக இடம்பெறுவதனைக் காண்கிறோம்.

### 4.2.8. செ.வே.உருபு, பொருள் மயக்கம் நீக்குதல்

மலையாளத்தில் அஃறிணை உயிரற்றபெயர்கள் எழுவாய், செயப்படுபொருளாக ஒரே தொடரில் "எ" உருபு பெறாமல் வரும் போது இச்சூழலில் செயப்படுபொருள் எது என்னும் குழப்பம் ஏற்பட ஏதுவாகின்றது. இச்சிக்கலானது அத்தொடரில் வரும் வினைமுற்றின் பொருண்மைக்கூற்றின் மூலம் தீர்க்கப்படுகின்றது, அதாவது அத்தொடரின் வினைமுற்றின் பொருண்மைக்கூறு, எது செயப்படுபொருள் என்று உணர உதவுகின்றது. ஆனால் தமிழில் இம்மாதிரியான இரண்டு பெயர்களும் உயிரற்றவையாய் வரும் சூழல்களில் "எ" உருபு அங்கு சேர்க்கப்பட்டு பொருள்மயக்கம் நீக்கப்படுகின்றது. தமிழில் "எ" உருபு செயப்படுபொருள் "எது" என்று பிற உணர்த்திடும் முக்கியப்பணியினைச் செய்கின்றது. எனவே மலையாளத்தில் இச்சூழலில் பெயர்கள் "எ" உருபினைப்பெறாமலும் தமிழில் அப்பெயர்கள் "ஐ" உருபினைப்பெற்றும் அமைகின்றன.

சான்று:

மலையாளம் (45) தீய் குடிலு நசிப்பிச்சு

தமிழ் (46) தீ குடிசையை அழித்தது

மலையாளம் (47) வெள்ளம் தீ கெடுத்தி

தமிழ் (48) தண்ணீர் தீயை அணைத்தது.

அமைப்பு அளவில் செயப்படுபொருளை ஏற்கும் மலையாளச்சொற்கள் வேறுபடுவதனை இங்கு காண இயலுகின்றது.

[குடிலு= குடிசையை]

[தீ = தீயை]

மலையாளத்தில் (45),(46) போன்ற தொடர்கள் வருகையில் சில சமயம் அஃறிணை உயிரற்ற பொருட்பெயர்களுடன் "எ" உருபே வந்து அமைந்து பொருட்சிக்கலை களைவதும் உண்டு.இம்மாதிரியான சூழல்களில் அஃறிணை உயிரற்ற பெயர்களுடன் செயப்படுபொருள் வேற்றுமை உருபு வந்தமைவது காணலாம்.

சான்று:

மலையாளம் (49) கப்பல் திரமாலகளெ பேதிச்சு

தமிழ் (50)கப்பல் கடலலைகளை பிளந்துகொண்டு விரைந்தது.

மலையாளம் (51) திரமாலகள் கப்பலினெ பேதிச்சு

தமிழ் (52) கடலலைகள் கப்பலைப் பிளந்தன.

[திரமாலகளெ= கடலலைகளை]

[கப்பலினெ= கப்பலை]

மேற்கூறப்பட்ட மலையாள மொழிச்சான்று:களில் (49) , (51) உயிரற்ற பொருட்பெயர்களுடன் "எ" உருபு வந்தமைவதைக் காணலாம். ஆனால் அதன் தமிழ்த்தொடரில் (50) , (52) இயற்கையாகவே/வழக்கமாகவே "ஐ" உருபு வந்தமைகின்றது.

### 4.2.9. ஒப்பீட்டுச்சொற்களும் செ.வே.யும்

மலையாளத்தில் ஒப்பிட்டுப் பார்க்கின்ற சொற்களோடு செய்ப்படுபொருட்பெயர்கள் அமையும் போது அப்பெயர்களின் முன் "எ" உருபு கட்டாயமாக இடம்பெறுகின்றது.

சான்று:

மலையாளம் (53) அது இதினெக்காள் நல்லதாணு

தமிழ் (54) அது இதை விட/இதனைவிட/காட்டிலும்/பார்க்கிலும் நல்லது

தமிழிலும் அதற்கிணையான சொற்களில் "ஐ" உருபு கட்டாயம் இடம்பெறுவதனைக் காணலாம்.

**[இதினெ=இதனை/இதை]**

சமநிலை காட்ட வரும் சொற்களின் முன் மலையாளத்தில் செயப்படுபொருள் வேற்றுமை கட்டாயம் இடம் பெறுகின்றது. தமிழில் இது விருப்பத்தேர்வாக அமைகின்றது.

சான்று:

மலையாளம் (55) அவனெ போலெ ஆரும் இல்லா.

தமிழ் (56) அவனைப்போல் யாரும் இல்லை.

தமிழ் (57) அவன்போல் யாரும் இல்லை.

எனவே அமைப்பளவில் இங்கு இருமொழித்தொடரிலும் செயப்படுபொருள் வேற்றுமை வேறுபடுவதனை அறியலாம்.

**[அவனெ போலெ=அவன்போல்]**

4.2.10. தமிழ்-மலையாளத்தில் செயப்படுபொருளை ஏற்ற பதிலிடு பெயர்வடிவங்கள்

| எண் | பதிலிடுபெயர் | தமிழ் | மலையாளம் |
|---|---|---|---|
| 1 | தன்மை-ஒருமை | என்னை | என்னெ |
| 2 | உ த.பன் | நம்மை | நம்மெ/நம்மளெ |
| 3 | உதா.த.பன் | எங்களை | ஞங்ஙளெ |
| 4 | முன்.ஒரு. | உன்னை நின்னை | நின்னெ |
| 5 | முன்.மரி. பன். | உங்களை | நிங்ஙளெ |
| 6 | முன்.சிற.உய்.ஒரு. | தாங்களை | தாங்களெ |
| 7 | முன்.பன் | உங்களை | நிங்ஙளெ |
| 8 | பட.ஒரு.ஆ. | அவனை | அவனெ |
| 9 | பட.ஒரு.பெ. | அவளை | அவளெ |
| 10 | பட.மரி..பன். | அவர்களை | அத்தேகத்தெ |
| 11 | பட.பன். | அவர்களை | அவரெ |
| 12 | பல.பால்.ஒரு. | அதை/அதனை | அதினெ |
| 13 | பல.பால்.பன். | அவற்றை | அவயெ |

### 4.2.11. செயப்படுபொருள் வேற்றுமை - வேறுபாடுகள்

தமிழ் மலையாளத்தில் செயப்படுபொருள் வேற்றுமை ஏற்கும் சூழலில் நிலவும் ஒற்றுமைகளும் வேறுபாடுகளும் இதுவரைக் கண்டறியப்பட்டன. இவ்வாறு கண்டறியப்பட்ட வேறுபாடுகள் கீழே தொகுத்துக் கூறப்படுகின்றன.

1) மலையாளத்தில் செயப்படுபொருள் வேற்றுமையுருபினை ஏற்கையில் இடம்பெறும் "இன்" சாரியை பெரும்பான்மை கட்டாயச்சாரியையாகவே உள்ளது. தமிழில் இது சிறிய அளவிலேயே வழக்கில் உள்ளது.

சான்று:

தமிழ்-கண்+ஐ=**கண்ணை** மலையாளம்-கண்+எ=**கண்ணினெ**

2) தமிழில் அஃறிணை உயிரற்ற பெயர்களுடன் "ஐ" உருபு வருவது விருப்பத்தேர்வு. ஆனால் மலையாளத்தில் கட்டாயம் செயப்படுபொருள் வேற்றுமை உருபு அஃறிணை உயிரற்ற பெயர்களுடன் வருவதில்லை.

சான்று.

தமிழ் நான் என் சாவியைத் தொலைத்தேன்.

மலையாளம் ஞான் என்றெ தாக்கோலு களஞ்து.

3) தமிழில் சுட்டுப்பெயர்களால் செயப்படுபொருள் ஏற்கும் அஃறிணை உயிரற்ற பெயர்கள் சுட்டப்பட்டால் அவை "ஐ" உருபினைக் கட்டாயம் ஏற்கும். ஆனால் மலையாளத்தில் சுட்டுப்பெயர் இடம்பெற்றாலும் அப்பெயர்கள் "எ" உருபினை ஏற்பதில்லை.

சான்று:

தமிழ் இந்தப் புத்தகத்தைக் கொடுங்கள்

மலையாளம் ஈ புஸ்தகம் (எனிக்கு) தரூ

4) தமிழில் "ஐ" உருபு உயர்திணைப் பெயர்களுடனும், அஃறிணைப் பெயர்களுடனும் இணைந்து அதைக் குறிப்பிட்டு/சுட்டிக்காட்டும். மலையாளத்தில் இவ்வாறு அஃறிணை உயிரற்ற பெயர்களைச்சுட்டிக்காட்ட, செயப்படுபொருள் உருபு "எ" பயன்படுவதில்லை. அதற்குப்பதில் "ஆணு" போன்ற அழுத்திச்சொல்லும் சொற்கள் மலையாளத்தில் பயன்படுகின்றன.

சான்று:

தமிழ் குமார் இட்லியைச் சாப்பிட்டான்
மலையாளம் குமார் இட்லியாணு கழிச்சது.

5) தமிழில் அஃறிணைப்பெயர்கள் பொதுவாகக் கூறப்பட்டு அப்பொதுமையைக் குறிக்கும் "ஒரு" போன்ற சொற்களுடன் வந்தால் செயப்படுபொருள் வேற்றுமை உருபு விருப்பத்தேர்வாக அமையும். ஆனால் மலையாளம் விருப்பத்தேர்வாகவோ, கட்டாயமாகவோ "எ" உருபினை ஏற்காது.

சான்று:

தமிழ்: குமார் ஒரு பெட்டியை வாங்கினான்

மலையாளம்:குமார் ஒரு பெட்டி வாங்ஙி

6) மலையாளத்தில் சில பெயர்வினைச்சொற்கள் கூட்டாகக் காணப்படுவதால் (Noun-Verb Compound) அப்பெயர்களுடன் செயப்படுபொருள் வேற்றுமை உருபு "எ" இடம்பெறுவதில்லை.

தமிழிலும் இதேபோன்ற தொடர்கள் மொழிபெயர்க்கப்பட்டால் அவை "ஐ" உருபை ஏற்றோ ஏற்காமலோ ( Optional ) அமைகின்றன.

சான்று::

மலையாளம் அவள் **பேன்** பெறுக்கி

தமிழ் அவள் **பேனை/பேன்** சீவினாள்

7) சமநிலை காட்ட வரும் பெயர்களில் மலையாளத்தில் "எ" உருபு கட்டாயம் இடம்பெறுகிறது. தமிழில் இவ்விடம் "ஐ" உருபேற்பது விருப்பத்தேர்வாக அமைகிறது.

சான்று::

மலையாளம்:அவனெ போலெ ஆரும் இல்லா.

தமிழ்: அவனைப்போல் யாரும் இல்லை.

தமிழ்: **அவன்போல்** யாரும் இல்லை.

8). மலையாளத்தில் உயிரற்ற அஃறிணைப்பெயர்கள் ஒரே தொடரில் அமையும்போது செயப்படுபொருள் எது என்று அத்தொடரில் இடம்பெறும் வினைமுற்று பொருண்மைக்கூற்றின் மூலம் புலப்படுத்துகின்றது. இச்சூழலில் மலையாளத்தில் அப்பெயர்கள் "எ" உருபினைப்பெறாமலும் தமிழில் அப்பெயர்கள் "ஐ" உருபினைப்பெற்றும் அமைகின்றன.

சான்று:

மலையாளம் தீய் குடிலு நசிப்பிச்சு

தமிழ் தீ குடிசையை அழித்தது

## 4.3. தமிழிலும் மலையாளத்திலும் கருவிப்பொருள் வேற்றுமை

### 4.3.1. தமிழில் கருவி வேற்றுமை

தமிழ் மரபிலக்கணங்களில் கருவிப்பொருள்வேற்றுமை மூன்றாவது வேற்றுமையில் ஒன்றாகக் கூறப்படுகின்றது.

> மூன்றாகுவதே
> ஒடு எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
>
> (தொல்.சொல். 557)

என்பது தொல்காப்பியம்.

நன்னூலார்,

> மூன்றாவதன் உருபு ஆல் ஆன் ஓடு ஒடு
> கருவி கருத்தா உடனிகழ்வு அதன் பொருள்.
>
> (நன். சொல். 297)

என்கின்றார். தொல்காப்பியத்திலும் நன்னூலிலும் கூறப்படும் கருவி வேற்றுமை கருவிப்பொருளையும் உடனிகழ்ச்சிப்பொருளையும் ஒருங்கே கொண்டுள்ளது. இவை இரண்டு வெவ்வேறு வேற்றுமைப்பொருள்கள் ஆதலால் இதனைத் தனித்தனியே கூறவேண்டும் என்பார் கால்டுவெல். *( Robert Caldwell,A comparative Grammar of the Dravidian or South Indian Family of Languages, Page 279-280).* சேனாவரையர் காலத்திலேயே மூன்றற்குரிய ஒடுவும் ஆனும் தனித்தனி வேற்றுமைகளாக வேண்டற்பாலன எனும் கருத்து நிலவியது. (முனை. மருதூர் அரங்கராசன், தமிழில் வேற்றுமைகள், 2000, பக் - 63). தற்காலத்தமிழில் "-ஆல்" வேற்றுமை உருபும், "கொண்டு" என்ற சொல்லுருபும், "-ஐக்கொண்டு" , "-ஐவைத்து" போன்ற செயப்படுபொருள் வேற்றுமையும் சொல்லுருபுகளும் இணைந்த

வடிவங்களும் கருவிப்பொருளை உணர்த்த மொழியில் பயன்படுகின்றன. கு.பரமசிவமும் பிற இலக்கணிகளும் கருவி வேற்றுமை தொழிலுக்குக் கீழ்க்காணும் பொருள்களைக் குறிக்கிறது என்பர். அவையாவன,

3.1. கருவி

3.2. முதல்பொருள் அல்லது மூலப்பொருள்

3.3. முதல் வகைக்காரணம்

3.4. இரண்டாம் வகைக் காரணம்

3.5. வினைமுதல் அல்லது கருத்தா

3.6. திறமை

**4.3.2. மலையாளத்தில் கருவி வேற்றுமை**

மலையாளத்தில் "-ஆல்" என்பது கருவி வேற்றுமை உருபு. ஆனால் "கொண்டு" எனும் சொல்லுருபே தற்கால மலையாளத்தில் கருவிப்பொருளை உணர்த்த பெரும்பாலும் பயன்படுகிறது. செயப்பாட்டு வினைத்தொடர் ஒன்றில் "-ஆல்" உருபு கருவிப்பொருளையோ, கருவி இல்லாத பொழுது கருத்தாப்பொருளையோ உணர்த்தும் என்பார் ஆசர். *(Malayalam , 1997, Page 210).*

மலையாளத்தில் செயப்பாட்டு வினைத்தொடரில் "-ஆல்" உருபு கட்டாயம் இடம்பெறுகிறது. செய்வினைத்தொடர்களில் "-ஆல்" உருபுக்குப் பதிலாக "கொண்டு" எனும் சொல்லுருபே பெரும்பான்மையும் பயன்படுகின்றது. மலையாளமொழி செயப்பாட்டு வினைத்தொடர்களை விட செய்வினைத்தொடர்களையே அதிகம் பயன்படுத்துவதாக டாக்டர். கே. எம். ஜார்ஜ் குறிப்பிடுவார். *( Dr.K.M.George, Malayalam Grammar and Reader, 1982, page 87).*

**4.3.3. கருவிப்பொருள் உருபுகள்**

தற்காலத்தமிழ், கருவிபொருள் வேற்றுமைக்கு "-ஆல்" எனும் வேற்றுமை உருபினையும் செயப்படுபொருள் வேற்றுமை "-ஐ" யுடன்

கூடிய "கொண்டு" , "வைத்து" முதலான சொல்லுருபுகளையும் பயன்படுத்துகிறது. தற்கால மலையாளம் "-ஆல்" எனும் கருவி வேற்றுமை உருபையும் "கொண்டு" , "வெச்சு" , "-எ கொண்டு" எனும் செயப்படுபொருள் வேற்றுமையினை இணைத்த சொல்லுருபுகளையும் பயன்படுத்துகிறது. தமிழில் கருவி வேற்றுமையான "-ஆல்" செய்வினைத்தொடரில் கருவிப்பொருளையும், செயப்பாட்டு வினைத்தொடரில் கருத்தாப்பொருளையும் உணர்த்தும். "கொண்டு", "வைத்து" போன்ற சொல்லுருபுகள் கருவிப்பொருளையும், தூண்டப்பட்ட கருத்தாப்பொருளையும் *(Instigated Agent)* உணர்த்தும். மலையாளத்தில் "-ஆல்" உருபு கருவிப்பொருளையும், செயப்பாட்டு வினைத்தொடரில் கருத்தாப்பொருளையும் உணர்த்தும். "கொண்டு" மற்றும் "வெச்சு" போன்ற சொல்லுருபுகள் கருவிப்பொருளையும், தூண்டப்பட்ட கருத்தாப்பொருளையும் உணர்த்தும். *( Dr.S.Rajendran, Case System in Tamil and Malayalam, Bulletin of Deccan College Research Institute, Vol. 37,page 128-140, 1977, 78).*

**4.3.4. கருவிப்பொருள் வேற்றுமைத்தொடர்கள் - மொழிபெயர்ப்புகள்**

கருவிப்பொருள் வேற்றுமையினைத் தாங்கி வரும் தொடர்கள் தமிழிலிருந்து மலையாளத்திற்கு மொழிபெயர்க்கப்பட்டு; இரு மொழிகளிலும் அவை ஒன்றுபடும் வேறுபடும் இடங்கள் கீழே ஆராயப்படுகின்றன. வேறுபாடுகள் கண்டுபிடிக்கப்பட்டு தொகுக்கப்படுகின்றன.

**4.3.4.1. கருவி வேற்றுமை "-ஆல்" கருவிப்பொருளில் வருதல்**

சான்று:

தமிழ் (1) குமார் கத்தியால் பழத்தை வெட்டினான்

மலையாளம் (2) குமார் கத்தி கொண்டு பழம் முறிச்சு

தமிழில் (1)-ல் கருவிப்பொருளைச் சுட்டுவதற்கு "-ஆல்" உருபு வந்துள்ளது. இதனை மலையாளத்தில் மொழிபெயர்க்கையில் தமிழின் கருவி வேற்றுமை உருபானது மலையாளத்தில் "கொண்டு" என்ற சொல்லுருபாக மாறிவந்துள்ளது (2). மலையாளத்தில் "-ஆல்" வேற்றுமையுருபு இருந்தும் அது இவ்விடம் கருவிப்பொருளில் வரவில்லை. மேலும், தமிழில் "-ஆல்" வேற்றுமையுருபு பரவலாகப் பயன்படுத்தப்படுவது போல் மலையாளத்தில் பயன்படுத்தப்படுவது இல்லை. அதற்குப்பதிலாக "கொண்டு" என்ற சொல்லுருபே அம்மொழியில் பெருவழக்கு ஆகும். எனவே இங்கு கருவிப்பொருளானது "கொண்டு" என்ற சொல்லுருபின் மூலம் வெளிப்படுத்தப்படுகின்றது. அமைப்பளவில் இருமொழிகளும் இவ்விடம் வேறுபடுவதனை இங்கு காணமுடிகிறது.

**[-ஆல்=கொண்டு]**

**4.3.4.2. சொல்லுருபு "கொண்டு" கருவிப்பொருளில் வருதல்**

சான்று:

தமிழ் (3) குமார் கத்தி கொண்டு பழத்தை வெட்டினான்

மலையாளம் (4) குமார் கத்தி கொண்டு பழம் முறிச்சு

மலையாளத்தில் காணப்படுவது போல் தமிழிலும் "கொண்டு" சொல்லுருபை மட்டும் பயன்படுத்தி கருவிப்பொருள் வெளிப்படுத்தப்படுகின்றதனை மேலே சான்று: (3) ல் காணலாம். இங்கு "பழத்தை" எனும் சொல்லில் வரும் செயப்படுபொருள் வேற்றுமை உருபு "-ஐ" விருப்பத்தேர்வு ஆகும். ஆனால் மலையாளத்தில் செயப்படுபொருள் வேற்றுமை உருபு "எ" கட்டாயமாக "பழம்" என்ற சொல்லுடன் சேர்வது இல்லை. ஏனெனில் உயிரற்ற பொருட்களுடன் "எ" வேற்றுமை வெளிப்படுவதில்லை என்று கண்டோம்.

சான்று. (5), (6)

தமிழ்(5) குமார் கத்தி கொண்டு பழம்/பழத்தை வெட்டினான்

மலையாளம் (6) குமார் கத்தி கொண்டு பழம் முறிச்சு

அமைப்பு அளவில் கருவிப்பொருளை வெளிப்படுத்தும் சொல்லுருபு "கொண்டு" தமிழிலும் மலையாளத்திலும் ஒன்று போல் வருவது இங்கு காணப்படுகிறது. எனவே இவ்விடம் வேறுபாடு அமையவில்லை.

**[கொண்டு=கொண்டு]**

**4.3.4.3. "-ஐக்கொண்டு" கருவிப்பொருளில் வருதல்**

சான்று:

தமிழ் (7) குமார் கத்தியைக் **கொண்டு** பழத்தை வெட்டினான்.

மலையாளம் (8) குமார் கத்தி **கொண்டு** பழம் முறிச்சு

இனி, கருவிப்பொருளானது தமிழில் "-ஐக்கொண்டு" என்ற வேற்றுமை மற்றும் சொல்லுருபின் கூட்டமைப்பாலும் வெளிப்படுத்தப்படும். சான்று: (7). மலையாளத்தில் இதற்கிணையான மொழிபெயர்ப்பில் "கொண்டு" சொல்லுருபு மட்டுமே இடம்பெறுகின்றது. செயப்படுபொருள் வேற்றுமை இங்கு இடம் பெறாததன் காரணம் "கத்தி" எனும் பெயர் அஃறிணை உயிரற்ற பெயர் ஆனதனாலே ஆகும். கருவிப்பொருளை வெளிப்படுத்த இருமொழிகளிலும் அமைப்பு அளவில் வேறுபாடு அமைவதனை இங்கு காண இயலுகின்றது.

**[ -ஐக்கொண்டு = கொண்டு ]**

மலையாளத்தில் "-எகொண்டு" என்ற வடிவம் உயிருடைப் பொருட்களின் பெயர்களுடன் வரும்.

சான்று:

தமிழ்(9)அவன் இராமனைக்கொண்டு இராதையைக் கொன்றான்

மலையாளம் (10) அவன் ராமனெக்கொண்டு ராதயெ கொன்னு

அமைப்பு அளவில் இங்கு மாறுபாடு எதுவும் இல்லாத தன்மையினை இவ்விடம் காண இயலும்.

[-ஐக்கொண்டு = எகொண்டு]

#### 4.3.4.4. "-ஐவைத்து" கருவிப்பொருளில் வருதல்

தற்காலத் தமிழில் இரண்டாம் வேற்றுமை உருபு "-ஐ" யும் "வைத்து" எனும் சொல்லுருபும் இணைந்து வந்து கருவிப்பொருளை வெளிப்படுத்தும்.

சான்று:

தமிழ் (11) குமார் கத்தியை வைத்துப் பழத்தை வெட்டினான்

மலையாளம்(12) குமார் கத்தி கொண்டு பழம் முறிச்சு

தமிழில் "ஐ வைத்து" எனும் வடிவம் மலையாளத்தில் "கொண்டு" எனும் வடிவில் கருவிப்பொருளை உணர்த்தும். இரு மொழிகளிலும் கருவிப்பொருளுணர்த்தும் வடிவில் அமையும் வேறுபாட்டினை இங்கு அறியமுடிகின்றது.

[-ஐ வைத்து = கொண்டு]

தமிழில் கருவிப்பொருளுணர்த்தும் "ஐ வைத்து" உருபு அமைப்பு மலையாளத்தில் "வெச்சு" (வைத்து) என மட்டும் அமைந்து கருவிப்பொருளை வெளிப்படுத்துகின்றது. அம்மொழியில் செயப்படுபொருள் வேற்றுமை உருபு "எ" உயிரற்ற பொருட்பெயரான "கத்தி" யுடன் வருவதில்லையாதலால் "வெச்சு" என்ற சொல்லுருபு மட்டுமே இங்கு இடம்பெறுகிறது. எனவே தமிழில் "ஐ வைத்து"

மலையாளத்தில் "எ வெச்சு" என அமையாது சொல்லுருபான "வெச்சு" என மட்டும் அமைந்து தெளிவான வேறுபாட்டினைக் காண்பிக்கிறது.

சான்று:

தமிழ் (13) குமார் கத்தியை **வைத்து** பழத்தை வெட்டினான்

மலையாளம் (14) குமார் கத்தி **வெச்சு** பழம் முறிச்சு

**[-ஐ வைத்து = வெச்சு]**

**4.3.4.5."-ஆல்"உருபு மூலப்பொருள்/முதல்பொருளில் (Source/ Material) வருதல்**

இதனைப் "பொருள்வேற்றுமை" என்று தனி வேற்றுமையாகக் கூறுகின்றார் முனை.அகத்தியலிங்கம். "ஒரு பொருள் எப்பொருளால் செய்யப்படுகின்றதோ அப்பொருளுக்கும் வினைக்கும் இடையே காணப்படும் வேற்றுமைத்தொடர்பு பொருள் வேற்றுமை" என இவ்வேற்றுமையை அவர் வரையறை செய்கின்றார். மேலை நாட்டார் இதனை "மெட்டீரியல் வேற்றுமை" (Material Case) என்பர். ((முனை.அகத்தியலிங்கம், தமிழ் மொழி அமைப்பியல், 2002, பக் - 127)

சான்று:

தமிழ் (15) கீதா கொண்டைக்கடலை**யால்** குழம்பு செய்தாள்

மலையாளம்(16) கீதா கடல **கொண்டு** கறியுண்டாக்கி

மேலே (15) மற்றும் (16) ல் "கொண்டைக்கடலையால்" எனும் தொடரில் வரும் "-ஆல்" உருபு முதற்பொருள் அல்லது மூலப்பொருளைக் குறிக்கிறது. இத்தொடர் மலையாளத்தில் மொழிபெயர்க்கப்படும்போது "-ஆல்" உருபுக்குப்பதில் "கொண்டு" எனும் சொல்லுருபே அம்மொழியில் முதற்பொருள் அல்லது மூலப்பொருளைக் குறிக்கப் பயன்படுத்தப்படுவதனைக் காண்கிறோம். "கீதா கடலயால்

கறியுண்டாக்கி" என்ற தொடர் சரியான மலையாளத்தொடராகக் கருதப்படுவது இல்லை. எனவே அமைப்பு அடிப்படையில் தமிழிலும் மலையாளத்திலும் இத்தொடர்களில் ((15) , (16)) தெளிவான வேறுபாடு அமைவதனைக்காண முடிகிறது.

[-ஆல்= கொண்டு]

#### 4.3.4.6. இடப்பொருள் வேற்றுமை உருபு முதல்/மூலப்பொருளை உணர்த்துதல்

தமிழில் இங்கு முதல்/மூலப்பொருளை உணர்த்தும் "-ஆல்" உருபுக்குப்பதில் "-இல்" எனும் இடப்பொருள் வேற்றுமை உருபும் வந்து இதே முதல்/மூலப்பொருளை உணர்த்தும்.

சான்று:

தமிழ் (17) மாமி அரிசிமாவால் கொழுக்கட்டை செய்தாள்

தமிழ் (18) மாமி அரிசிமாவில் கொழுக்கட்டை செய்தாள்

மலையாளத்தில் இதே கருத்து வெளியிடப்படுகையில் இருவிதத்தில் வெளிப்படுவதனைக் கீழே காணலாம். ஒன்று தமிழைப்போல் இடப்பொருள் வேற்றுமை உருபாலேயே வெளிப்படுத்தப்படுகின்றது. இவ்விடம் இரு மொழியமைப்பிலும் வேறுபாடு இல்லை.

சான்று:

மலையாளம் (19) மாமி அரிமாவில் கொழுக்கட்ட உண்டாக்கி

[-இல் = இல்]

இன்னொன்று "கொண்டு" எனும் சொல்லுருபால் வெளிப்படுத்தப்படுகின்றது. இம்முறை தமிழில் இல்லாத வழக்காகும். ஆனால் சான்று: (21)-ல் "-ஐ" உருபேற்றே தமிழில் வழங்கப்படுகிறது.

சான்று:

மலையாளம்(20)மாமி அரிமாவு **கொண்டு** கொழுக்கட்ட உண்டாக்கி

தமிழ் (21) மாமி அரிசிமா**வைக்கொண்டு** கொழுக்கட்டை செய்தாள்

எனவே முதல்/மூலப்பொருளை உணர்த்தும் நிலையில் அமைப்பு அடிப்படையில் வேறுபாடு இங்கே காணப்படுகிறது.

**[-ஐக்கொண்டு = கொண்டு]**

**4.3.4.7. "-ஆல்" உருபு காரணப்பொருளில் வருதல்**

தமிழின் கருவிப்பொருள் வேற்றுமை உருபான "-ஆல்" காரணப்பொருளிலும் வெளிப்படுத்தப்படுகின்றது.

**4.3.4.8. காரணம், காரியம்**

முதல் தொழில் நிகழ்ந்தால் இரண்டாவது தொழில் நிகழ்வது தப்பாது என்றால் முதல் தொழில் நிகழ்ந்திருக்காவிட்டால் இரண்டாவது தொழில் நிகழ்ந்திருக்காது என்றால், இரு தொழில்களுக்கும் இடையே ஒரு காரணகாரியத்தொடர்பு உண்டென்று தருக்க (ஏரண) நூலார் கூறுவர். முன்னதைக் காரணம் (Cause) என்றும் பின்னதைக் காரியம் (Effect) என்றும் அழைப்பர். *(கு.பரமசிவம், இக்காலத்தமிழ் மரபு, 1983.பக்-142).*

காரணம் இரண்டு வகை அவை,

1) முதல் வகைக்காரணம் (Cause)

2) இரண்டாம் வகைக்காரணம் ( Reason) என்பன.

முனை. அகத்தியலிங்கம் இவ்விருவகை வேற்றுமைகளையும் "காரண வேற்றுமை" என்று தனி வேற்றுமையாக விளக்குவார்.

#### 4.3.4.8.1. முதல் வகைக்காரணம்

சான்று:

தமிழ் (22) மழை பெய்ததால் பயிர் விளைந்தது.
மலையாளம்(23) மழ **காரணம்** கிருஷி நன்னாயி வளர்னு.
மலையாளம்(24) மழ **காரணம் கொண்டு** கிருஷி நன்னாயி வளர்னு.

மேலே (22) ல் "-ஆல்" உருபு முதல் வகைக் காரணத்தை வெளிப்படுத்தும் உருபாக வருகின்றது. ஆனால் இதே தொடர் மலையாளத்தில் அமையும் போது காரணப்பொருள் "காரணம்" என்ற சொல்லாலும் (23) "காரணம்" மற்றும் "கொண்டு" என்ற சொல்லுருபாலும் (24) வெளிப்படுத்தப்படுகின்றது. இங்கு முதல் தொழில் நடக்கும் பட்சத்தில் இரண்டாவது தொழில் கட்டாயம் நடக்குமென்பதால் இது முதல் வகைக்காரணம் (Cause) எனப்படுகின்றது. எனவே அமைப்பின் அடிப்படையில் தெளிவான வேறுபாடுகளை இங்கே காணமுடிகின்றது.

**[-ஆல் = காரணம்]**

**[-ஆல் = காரணம் கொண்டு]**

தமிழில் சான்று: (22) ஐ கீழ்க்கண்டவாறும் கூறலாம்

சான்று:

தமிழ் (25) மழையின் **காரணத்தால்** பயிர் விளைந்தது

மலையாளம்(26) மழை **காரணம்** கிருஷி நன்னாயி வளர்னு.

தமிழில் உடைமைவேற்றுமை உருபு "-இன்", "காரணம்" என்ற சொல் மற்றும் "-ஆல்" உருபு போன்றன இணைந்து இங்கே (22) காரணப்பொருளை உணர்த்தினாலும் மலையாளத்தில் "காரணம்" எனும்

சொல்லுருபு மட்டுமே இச்செயலைச்செய்வது (26) குறிப்பிடத்தக்க வேறுபாடு ஆகும்.

**[-இன் காரணத்தால் = காரணம்]**

#### 4.3.4.8.2. இரண்டாம் வகைக்காரணம் ( Reason)

முதல் தொழில் நடந்து இரண்டாம் தொழில் நடக்கவோ நடக்காமல் இருக்கவோ செய்தால் அது இரண்டாம் வகைக்காரணம் என்பார் கு.பரமசிவம். முனை. அகத்தியலிங்கம் தற்காலத்தமிழில் இதன் வேற்றுமை உருபுகளாக "-அதன் பேரில்", "-அதன் மூலம்", "-அதன் நிமித்தம்", "-இல்", "-ஒடு" போன்றவற்றைக் கூறுகின்றார்.

சான்று:

தமிழ் (27) வெயிலால் குமார் வரவில்லை

மலையாளம்(28)வெயிலு **காரணம்** குமார் வன்னில்லா

இவ்விடம் தமிழில் காரண வேற்றுமை உருபு "-ஆல்" மலையாளத்தில் "காரணம்" எனும் முழுச்சொல்லால் வெளிப்படுவதனை அறியலாம்.

#### 4.3.4.8.3. காரணப்பொருள் சொல்லுருபுகளால் வெளிப்படுத்தப்படல்

தற்காலத்தமிழில் காரணப்பொருள் சொல்லுருபுகளாலும் வெளிப்படுத்தப்படுகின்றது. "அதன் பேரில்", "அதன் மூலம்" , அதன் நிமித்தம்" போன்ற சொல்லுருபுகள் இக்காரணப்பொருளில் வருவது கீழே காட்டப்பட்டுள்ளது.

##### 4.3.4.8.3.1. அதன்பேரில்

தமிழில் காரணப்பொருள் "அதன்பேரில்" என்னும் அமைப்பின் மூலம் தற்காலத்தமிழில் வெளிப்படுகின்றது.

சான்று:

தமிழ் (29) அவன் சொன்னதன் **பேரில்** உனக்கு உதவி செய்தேன்

மலையாளம்(30)அவன் பரஞ்ஞுது **கொண்டு** ஞான் நின்னெ

சகாயிச்சு.

தற்காலத்தமிழில் (29) "அதன் பேரில்" என்ற உடைமை வேற்றுமையும் "பேரில்" என்ற சொல்லுருபும் சேர்ந்து வந்து காரணப்பொருளை உணர்த்துகின்றது. ஆனால் மலையாளத்தில் இக்கருத்து "கொண்டு" எனும் சொல்லுருபாலேயே வெளிப்படுத்தப்படுகின்றது. இவ்விடம் அமைப்பில் இரு மொழிகளும் மாறுபடுகின்றன.

**[அதன் பேரில்= கொண்டு]**

**4.3.4.8.3.2. அதன் மூலம்**

இதே போன்றே "அதன் மூலம்" என்னும் அமைப்பும் தற்காலத்தமிழில் காரணப்பொருளைத் தரும்.

சான்று:

தமிழ் (31) அவள் சொன்னதன் **மூலம்** நான் தெரிந்துகொண்டேன்

மலையாளம்(32) அவள் பரஞ்ஞுது **கொண்டு** ஞான் அறிஞ்ஞு.

மேலே தமிழ்த்தொடரின்(31) மலையாள வடிவம் "அதன்மூலம்" என்ற அமைப்புக்குப்பதில் "கொண்டு" எனும் சொல்லுருபை ஏற்கும். இருமொழியும் இவ்விடம் வேறுபடுதலைக்காண்க.

**[அதன் மூலம் = கொண்டு]**

**4.3.4.8.3.3. அதன் நிமித்தம்**

சான்று:

தமிழ் (33) அவர் சொன்னதன் **நிமித்தம்** நான் உதவினேன்

மலையாளம்(34) அத்தேகம் பரஞ்ஞுது **கொண்டு**ஞான் சகாயிச்சு.

தமிழில் "அதன் நிமித்தம்" எனும் சொற்கள் சேர்ந்து நின்று காரணப்பொருளை உணர்த்துவதைக் காணலாம்(28). இத்தொடர் மலையாளத்தில் மொழிபெயர்க்கப் படுகையில் "கொண்டு" எனும் சொல்லுருபால் காரணப்பொருள் அம்மொழியில் புலப்படுத்தப்படுகிறது (34).

[அதன் நிமித்தம்=கொண்டு]

சான்று:

தமிழ் (35) மழையில் குளம் நிறைந்தது

மலையாளம்(36) மழயில் குளம் நிரஞ்ஞு.

தமிழிலும் மலையாளத்திலும் இடப்பொருளை உணர்த்தும் "-இல்" உருபு காரணப்பொருளை உணர்த்த வருகின்றது. இங்கு அமைப்பு அளவில் வேறுபாடு எதுவும் இல்லை.

**4.3.4.9. "-ஆல்" உருபு வினைமுதல்/கருத்தாப்பொருளில் வருதல்**

கருவிப்பொருள் வேற்றுமை உருபாகிய "-ஆல்" தமிழில் கருத்தாப்பொருளையும் உணர்த்தும். செயப்பாட்டு வினை வாக்கியங்களில் இவ்வமைப்பு முறையினை தமிழிலும் மலையாளத்திலும் காண்கிறோம்.

சான்று:

தமிழ் (37) கண்ணனால் ராணி கொல்லப்பட்டாள்

மலையாளம்(38) கண்ணனால் ராணி கொல்லப்பெட்டு

**[-ஆல்=-ஆல்]**

இவ்விடம் தமிழிலும் மலையாளத்திலும் "-ஆல்" உருபு எவ்வித வேறுபாடும் இன்றி கருத்தா/வினைமுதற்பொருளில் வருதல்

காணலாம். அமைப்பு அடிப்படையில் எவ்வித வேறுபாடும் அமையாததும் இங்கு குறிப்பிடத்தக்கது.

**4.3.4.10. "-ஆல்" உருபு வினைமுதல்/கருத்தாப்பொருளில் வந்து திறமையைக் குறித்தல்.**

சான்று:

தமிழ் (39) அம்மாவால் தமிழ் பேச முடியும்

மலையாளம்(40) அம்மய்க்கு தமிழ் சம்சாரிக்கான் கழியும்

மேலே குறிப்பிடப்பட்டுள்ள தொடரில் (39) "-ஆல்" உருபு கருத்தாப்பொருளில் வருகின்றது ஆனால் மலையாளத்தில் அதே தொடரின் மொழிபெயர்ப்பு "-க்கு" எனும் கொடை வேற்றுமை உருபைக்கொண்டு இப்பொருளை வெளிப்படுத்துகின்றது. அமைப்பு அடிப்படையில் தெளிவான வேறுபாட்டினை இங்கு காணமுடிகின்றது.

**[-ஆல்= -க்கு]**

4.3.4.11. தமிழ்-மலையாளத்தில் கருவிப்பொருள் வேற்றுமையேற்ற பதிலிடு பெயர்வடிவங்கள் கீழே தரப்படுகின்றன.

| எண் | பதிலிடுபெயர் | தமிழ் | மலையாளம் |
|---|---|---|---|
| 1 | தன்மை-ஒருமை | என்னால் | என்னெக்கொண்டு |
| 2 | உ.த.பன் | நம்மால் | (நம்மெக்கொண்டு, (நம்மளெக்கொண்டு |
| 3 | உ.தா.த.பன் | எங்களால் | (ஞங்ஙளெக்கொண்டு) |
| 4 | முன்.ஒரு. | உன்னால்/ நின்னால் | (நின்னெக்கொண்டு) |
| 5 | முன்.மரி. பன். | உங்களால்/ உம்மால் | (தாங்களெக்கொண்டு |
| 6 | முன்.சிற.உய.ஒரு. | தாங்களால்/ தங்களால் | (அங்ஙயெக்கொண்டு) |
| 7 | முன்.பன் | உங்களால் | (நிங்ஙளெக்கொண்டு) |
| 8 | பட.ஒரு.ஆ. | அவனால் | (அவனெக்கொண்டு) |
| 9 | பட.ஒரு.பெ. | அவளால் | (அவளெக்கொண்டு) |
| 10 | பட.மரி.பன். | அவர்களால்/ அவரால் | அத்தேகத்தெக்கொண்டு) |
| 11 | பட.பன். | அவர்களால் | (அவரெக்கொண்டு) |
| 12 | பல.பால்.ஒரு. | அதனால்/ அதால் | (அதினெக்கொண்டு) |
| 13 | பல.பால்.பன். | அவையால்/ அவற்றால் | (அவயெக்கொண்டு) |

### 4.3.5. கருவிப்பொருள் வேற்றுமை உருபுகள் - வேறுபாடுகள்

1) தமிழில் கருவிப்பொருளைச் சுட்டுவதற்கு "-ஆல்" உருபு வருமிடத்தில் மலையாளத்தில் "கொண்டு" என்ற சொல்லுருபு வருகின்றது.

[-ஆல்=கொண்டு]

2) தமிழில் கருவி வேற்றுமை "-ஐக்கொண்டு" , "-ஐ" என்ற செயப்படு பொருள் வேற்றுமை மற்றும் "கொண்டு" என்ற சொல்லுருபின் கூட்டமைப்பால் வெளிப்படுத்தப்படும். மலையாளத்தில் இதற்கிணையான மொழிபெயர்ப்பில் "கொண்டு" சொல்லுருபு மட்டுமே இடம்பெறுகின்றது.

[ -ஐக்கொண்டு = கொண்டு ]

3) தமிழில் "ஐ வைத்து" எனும் வடிவம் மலையாளத்தில் "கொண்டு" எனும் வடிவில் கருவிப்பொருளை உணர்த்தும்.

[-ஐ வைத்து = கொண்டு]

4) தமிழில் கருவிப்பொருளுணர்த்தும் "ஐவைத்து" அமைப்பு மலையாளத்தில் "வெச்சு(வைத்து)" என மட்டும் அமைந்து கருவி வேற்றுமையை உணர்த்தும்.

[-ஐ வைத்து= வெச்சு]

5) தமிழில் "-ஆல்" உருபு முதற்பொருள் அல்லது மூலப்பொருளையும் குறிக்கும். மலையாளத்தில் "கொண்டு" எனும் சொல்லுருபே அம்மொழியில் முதற்பொருள் அல்லது மூலப்பொருளையும் குறிக்கப் பயன்படுத்தப்படுகிறது.

[-ஆல்= கொண்டு]

6) முதல்/மூலப்பொருளை உணர்த்தும் நிலையில் தமிழில் "-ஐக்கொண்டு" எனும் அமைப்பு வருகின்றது. மலையாளத்தில் "கொண்டு" எனும் சொல்லுருபு மட்டுமே இடம்பெறுகின்றது.

**[-ஐக்கொண்டு = கொண்டு]**

7) தமிழில் "-ஆல்" உருபு முதல் வகைக்காரணத்தை வெளிப்படுத்தும் உருபாக வருகின்றது ஆனால் மலையாளத்தில் முதல் வகைக் காரணப்பொருள் 1)"காரணம்" என்ற சொல்லாலும் 2) "காரணம்", "கொண்டு" என்ற சொல்லுருபாலும் வெளிப்படுத்தப்படுகின்றது

**[-ஆல் = காரணம், காரணம் கொண்டு ]**

8) தமிழில் உடைமைவேற்றுமை உருபு 1) "-இன்", 2) "காரணம்" என்ற சொல் மற்றும் 3) "-ஆல்" உருபு போன்றன இணைந்து காரணப்பொருளை உணர்த்தி நிற்கின்றது மலையாளத்தில் "கொண்டு" எனும் சொல்லுருபு மட்டுமே இப்பொருளை உணர்த்தி நிற்கின்றது.

**[-இன் காரணத்தால் = காரணம்]**

9) தமிழில் "அதன்" என்ற உடைமை வேற்றுமையும் "பேரில்" என்ற சொல்லுருபும் சேர்ந்து வந்து காரணப்பொருளை உணர்த்துகின்றது. ஆனால் மலையாளத்தில் இக்கருத்து "கொண்டு" எனும் சொல்லுருபாலேயே வெளிப்படுத்தப்படுகின்றது.

**[அதன் பேரில்= கொண்டு]**

10) தமிழில் "அதன்மூலம்" என்ற அமைப்புக்குப்பதில் மலையாளத்தில் "கொண்டு" எனும் சொல்லுருபு இடம்பெறும்

**[அதன் மூலம் = கொண்டு]**

11) தமிழில் "அதன் நிமித்தம்" எனும் சொற்கள் சேர்ந்து நின்று காரணப்பொருளை உணர்த்தும். மலையாளத்தில் "கொண்டு" எனும் சொல்லுருபு காரணப்பொருளை புலப்படுத்தும்.

[அதன் நிமித்தம்=கொண்டு]

12) தமிழில் "-ஆல்" உருபு கருத்தாப்பொருளிலும் வருகின்றது. ஆனால் மலையாளத்தில் "-க்கு" எனும் கொடை வேற்றுமை உருபால் இப்பொருள் வெளிப்படுத்துகின்றது.

[-ஆல் = -க்கு]

13) தமிழில் அனைத்துப்பதிலிடு பெயர்களுடனும் கருவி வேற்றுமை "-ஆல்" உருபு இணைத்துக்கூற முடியும்.

சான்று:

தமிழ் என்னால் முடியும்
மலையாளம் எனிக்கு கழியும்/என்னெக்கொண்டு கழியும்

ஆனால் மலையாளத்தில் "-ஆல்" உருபுக்குப்பதில் "கொண்டு" எனும் சொல்லுருபு இணைகின்றது. ஆனால் "கொண்டு" சொல்லுருபைத்தவிர கொடை வேற்றுமை உருபு "-க்கு" கருவி வேற்றுமையில் அதிகம் இடம்பெறுகின்றது. அதே நேரம் தமிழில் அது எல்லாச்சூழலகளிலும் இடம்பெறுவதில்லை. மலையாளத்தில் இது எல்லாச்சூழலிலும் கருவிப்பொருளில் வருவது குறிப்பிடத்தக்க வேறுபாடு ஆகும்

## 4.4. தமிழிலும் மலையாளத்திலும் உடனிகழ்ச்சி வேற்றுமை

### 4.4.1. தமிழில் உடனிகழ்ச்சி வேற்றுமை

தமிழில் மூன்றாம் வேற்றுமையுடனேயே உடனிகழ்ச்சி வேற்றுமையும் கூறப்படுகிறது மூன்றாம் வேற்றுமையுருபுகளே உடனிகழ்ச்சி வேற்றுமைகளாகப் பழந்தமிழில் பயன்பட்டுவந்துள்ளன. தொல்காப்பியத்தில் கருவிப்பொருள் உருபாகவும் உடனிகழ்ச்சி உருபாகவும் இவ்வுருபுகள் வழங்கிவந்துள்ளன. உடனிகழ்ச்சி என்ற தனியொருவகை வேற்றுமை பழந்தமிழ் நூல்களில் கூறப்படவில்லை.

'திராவிடமொழிகளில் உடனிகழ்வு வேற்றுமை பல உருபுகளைப்பெற்று இன்றியமையாத இடத்தைப்பெற்றிருந்தும், அதற்கென தனியொரு இடம் தரப்படவில்லை' என்பார் கால்டுவெல். (திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம், தமிழாக்கம், கா.கோவிந்தன், 2004,பக்-251)

முனை.அகத்தியலிங்கம் தொல்காப்பியத்தில் கூறப்படும் மூன்றாம் வேற்றுமையினைக் கருவி வேற்றுமை, காரண வேற்றுமை, உடனிகழ்ச்சி வேற்றுமை என மூன்றாகக் கருத முடியும் என்று கூறுகின்றார். (ச.அகத்தியலிங்கம் , 1980:82). இவர் ஒரு தொழிலை ஒருவர் செய்யும்போது அதே தொழிலை இன்னொருவரும் உடன் செய்வதைக் குறிப்பிடும் வேற்றுமை உடனிகழ்ச்சி வேற்றுமை என்று இதனை விளக்குவார். (தமிழ்மொழி அமைப்பியல், 2002, பக்-129).

ஒரு செயல் நடந்துகொண்டிருக்கும் போதே அத்துடன் இன்னொரு செயலும் நடைபெறுவது உடனிகழ்ச்சி எனப்படும்.

### 4.4.2. உடனிகழ்ச்சி வேற்றுமை உருபுகள்

பழந்தமிழில் இதன் உருபுகளாக "-ஒடு" மற்றும் "-ஓடு" என்பன வழக்கலிருந்தன. தற்காலத்தமிழில் "-ஓடு", "-உடன்", "-கூட" என்பவை பயன்படுத்தப்படுகின்றன. ( கு.பரமசிவம், பக் - 144).

உடனிகழ்ச்சி வேற்றுமை உருபுகளாகத் தற்காலத்தமிழில் "-ஓடு" என்னும் வேற்றுமையுருபும், "உடன்" என்னும் சொல்லுருபும் வழங்குவதாக தாமசு லேமன் அவர்கள் குறிப்பிடுகின்றார்.

தற்காலத் தமிழில் "ஓடு", "உடன்" "கூட" எனும் பின்னுருபுகள் உடனிகழ்ச்சிப்பொருளை வெளிப்படுத்தப் பயன்படுத்தப்படுவதாக பேரா.இராசேந்திரன் அவர்கள் குறிப்பிடுவார். ( Case System in Tamil and Malayalam, Bulletin of Deccan College Research Institute,Vol.37 128-140 (1977-78).

### 4.4.3. மலையாளத்தில் உடனிகழ்ச்சி வேற்றுமை

கேரளபாணினியத்தில் உடனிகழ்ச்சி வேற்றுமை மூன்றாவதாகக் கூறப்பட்டுள்ளது. இதன் உருபு "-ஓடு" எனவும் இதன் பெயர் "சம்யோஜிகா" என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. (கேரளாபாணினியம், மா.இளையபெருமாள், தமிழ்மொழிபெயர்ப்பு, 1977, பக் - 166).

### 4.4.4. மலையாளத்தில் உடனிகழ்ச்சி வேற்றுமை உருபுகள்

தற்கால மலையாளத்தில் "-ஓடு" என்பதே உடனிக்ழ்ச்சிப் பொருளை வெளிப்படுத்தும் வேற்றுமையுருபு என்பார் டாக்டர் கே.எம் ஜார்ஜ் அவர்கள்.

ஆஷர் அவர்களும் "-ஓடு" என்பதையே தற்கால மலையாளத்தின் உடனிகழ்ச்சி வேற்றுமை உருபாகக்கூறுகிறார். மலையாள இலக்கண அறிஞர்கள் "-ஓடு" உருபினை மட்டும் உடனிகழ்ச்சி உருபாகக்

கூறினாலும், தற்கால மலையாளத்தில் இவ்வுருபு மட்டும் தனியே வந்து உடனிகழ்வுப்பொருளை உணர்த்துவதில்லை. பல வகையான சொல்லுருபுகளும் வந்தமைந்து இப்பொருளினை உணர்த்துகின்றன.

### 4.4.5. உடனிகழ்ச்சிப்பொருள் வேற்றுமைத்தொடர்கள்-மொழிபெயர்ப்புகள்

பேரா.கு.பரமசிவம் அவர்களும், பேரா.ச.அகத்தியலிங்கம் அவர்களும் தற்காலத்தமிழ் மொழியில் உடனிகழ்ச்சி வேற்றுமை வழங்கும் பலவேறு முறைகளைச் சிறப்பாக விளக்கியுள்ளனர். அவ்வறிஞர்கள் கூறும் உடனிகழ்ச்சி குறித்த தொடர்கள் மலையாளத்திற்கு மொழிபெயர்க்கப்பட்டு ஒற்றுமை வேற்றுமை காணப்படுவதுடன், தற்காலத் தமிழில் உடனிகழ்ச்சி உருபுகளான "-ஓடு", "உடன்", "-கூட" என்பவை மலையாளத்தில் எவ்வாறு வருகின்றன, அவை உடனிகழ்ச்சி உருபினை மட்டும் எடுத்து அப்பொருளை உணர்த்துகின்றதா அல்லது உருபையும் பிற சொல்லுருபுகளையும் ஏற்று உடனிகழ்ச்சிப்பொருளை வெளிப்படுத்துகின்றதா என இவற்றின் பல்வேறு சூழல்கள் இவ்விடம் ஆய்ந்தறியப்படுகின்றன.

#### 4.4.5.1. ஓடு உருபு உடனிகழ்ச்சிப்பொருளில் வருதல்

சான்று:

த (1) நெல்லோடு பயறும் வளர்ந்தது

ம (2) நெல்லின்றெ கூடெ பயரும் வளர்னு

இவ்விடம் தமிழில் "-ஓடு" என்ற உடனிகழ்ச்சி வேற்றுமை வருகின்றது. ஆனால் அதன் மலையாளத்தொடர் "-ன்றெ" எனும் உடைமை வேற்றுமையினையும், "-கூடெ" என்ற சொல்லுருபினையும் கொண்டு வருகின்றது. இவ்வாறு மலையாளத்தில் உடனிகழ்ச்சிப்பொருளில் இடம் பெறும் "-கூடெ" எனும் சொல் ஒரு

"சொல்லுருபு" என்பார் ஆசர் அவர்கள் (ஆசர், குமாரி, மலையாளம், 1997, பக் 211) அமைப்படிப்படையில் இருமொழிகளுக்கிடையேயும் அமையும் வேறுபாட்டை இவ்விடம் காணலாம்

[ ஓடு= ன்றெ கூடெ ]

சான்று

த (3) இராஜன் நண்பர்களோடு வந்தான்

ம (4) ராஜன் கூட்டுகாருடெ கூடெ வந்நு

ம (5) ராஜன் கூட்டுகாருமாயி வந்நு

சான்று (3) ல் தமிழில் "-ஓடு" எனும் உடனிகழ்ச்சி வேற்றுமை வருகின்ற இடத்தில் மலையாளத்தில் சான்று (4) , எவ்வித மாற்றமுமின்றி மேற்கூறியவாறு சான்று (2) போல் வருகின்றது ஆனால் அதே தொடர் மலையாளத்தில் "உம்" எனும் இணைப்புச்சொல்லும், "ஆயி" எனும் வினைச்சொல்லும் எடுத்தும் வருகின்றது. "ஆயி" எனும் வினைச்சொல் சொல்லுருபாக வந்து உடனிகழ்ச்சிப்பொருளை வெளிப்படுத்துகின்றது. . இவ்விடம் வரும் "ஆயி" எனும் சொல் சொல்லுருபு என்பார் டாக்டர் இராதாகிருஷ்ணன். ( Postpositions in a Dravidian Language, 1994, Page-224) இருமொழித்தொடர்களும் அமைப்பில் வேறுபடுதலை இவ்விடம் காணலாம்

[ ஓடு = உடெ கூடெ/ ஆயி ]

சான்று.

த (6) மாமரம் வேரோடு சாய்ந்தது

ம (7) மாவு வேரோடு கூடி வீணு

தமிழில் "-ஓடு" வேற்றுமை வந்து உடனிகழ்ச்சிப்பொருளை வெளிப்படுத்தும் வேளை, அதன் மலையாளத்தொடர் "-ஓடு"

உருபினையும் "கூடி" எனும் சொல்லுருபினையும் ஒருங்கே கொண்டு உடனிகழ்ச்சிப்பொருளை வெளிப்படுத்துகின்றது. இருதொடர்களும் இவ்விடம் வேறுபடுதலை இதன் மூலம் அறியலாம்.

[ ஓடு = ஓடு கூடி ]

சான்று:

த (8) மாலா சீலாவோடு படித்தவள்

ம (9) மாலா சீலயுடெ கூடெ படிச்சதாணு

ம (10) மாலா சீலயோடொப்பம் படிச்சதாணு

தமிழில் (8) , ஓடு எனும் உடனிகழ்ச்சி வேற்றுமை வரும் இடத்தில் மலையாளத்தில்; "-ஓடு" எனும் உடனிகழ்ச்சி வேற்றுமையும் "ஒப்பம்" எனும் சொல்லுருபும் வந்து உடனிகழ்ச்சிப்பொருளை வெளிப்படுத்துகின்றன. இவ்விடம் வரும் "ஒப்பம்" எனும் சொல் ஒரு சொல்லுருபு என்பார் டாக்டர். இராதாகிருஷ்ணன். ( Dr.Radhakrishnan Mallassery, Postpositions in a Dravidian Language, 1994, Page 224) அமைப்படிப்படையில் அமையும் வேற்றுமையினை இவ்விடம் காணலாம்.

[ ஓடு = ஓடு ஒப்பம் ]

சான்று:

த (11) கண்ணனோடு இராமன் விளையாடினான்

ம (12) *கண்ணனோடொத்து ராமன் களிச்சு.*

[ ஓடு = ஓடு ஒத்து ]

தமிழில் உடனிகழ்ச்சிப்பொருளில் "-ஓடு" வேற்றுமை உருபு வருகின்ற இடத்தில் மலையாளத்தில் "-ஓடு" எனும் உடனிகழ்ச்சி வேற்றுமையும் "ஒத்து" எனும் சொல்லுருபும் வருவதைக் காணலாம். இதே தமிழ்த்தொடர் கீழ்க்கண்டவாறும் மலையாள மொழிபெயர்ப்புகளைக் கொண்டுள்ளது

சான்று:

ம (13) கண்ணன்றெ கூடெ ராமன் களிச்சு.

ம (14) கண்ணடொப்பம் ராமன் களிச்சு

### 4.4.5.2. ஓடு உருபு உடனிருப்புப் பொருளில் வருதல்

தமிழில் "-ஓடு" எனும் உருபு உடனிகழ்ச்சியைத் தவிர "உடனிருப்பு" (Simultaneous State) எனும் பொருளிலும் வரும் என்கிறார் கு.பரமசிவம் (பக்- 148).

சான்று:

த (15) அவன் நல்ல எண்ணத்தோடு செய்யவில்லை

ம (16) அவன் நல்ல மனசோடெ செய்திில்லா.

இத்தொடரின் மலையாள மொழிபெயர்ப்பு "-ஓடெ" எனும் சொல்லை எடுத்து வருகின்றது. மலையாளத்திலும் இது உடனிகழ்ச்சிப்பொருளை உணர்த்தவில்லை. மாறாக, உடனிருப்பு எனும் பொருளையே வெளிப்படுத்துகிறது.

### 4.4.5.3. உடன் உருபு உடனிகழ்ச்சிப்பொருளில் வருதல்

தற்காலத் தமிழில் உடனிகழ்ச்சிப்பொருளில் "உடன்" எனும் உருபு ஏராளமாக உடனிகழ்வுப்பொருளை வெளிப்படுத்த வருகின்றது. இது "-ஓடு" எனும் உருபுக்குப்பதில் உடனிகழ்ச்சிப்பொருளில் பயன்படுத்தப்படும் உருபாகத் தமிழில் வழங்கி வருகின்றது.

சான்று:

த (17) கண்ணனுடன் இராமன் வந்தான்

ம (18) கண்ணன்றெ கூடெ இராமன் வந்நு

ம (19) கண்ணனோடொப்பம் இராமன் வந்நு

ம (20) கண்ணனோடொத்து இராமன் வந்நு

தமிழின் "உடன்" வேற்றுமையுருபினை ஏற்றுவரும் தொடர் மலையாளத்தில் மூன்றுவிதத்தில் வருவதனைக் காண்க.

**[ உடன் = ன்றெ கூடெ ]**

**[ உடன் = ஓடு ஒப்பம் ]**

**[ உடன் = ஓடு ஒத்து ]**

தமிழின் "உடன்" உருபு மலையாளத்தில் கிழமைப்பொருள் வேற்றுமை உருபையும் "கூடெ" எனும் சொல்லுருபையும் ஏற்று வந்து உடனிகழ்ச்சிப்பொருளை வெளிப்படுத்துகின்றது. அதே போல், "-ஓடு" எனும் உடனிகழ்ச்சி வேற்றுமையும் , "ஒப்பம்" எனும் சொல்லுருபையும் ஏற்றே அப்பொருள் வெளிப்படுகின்றது அதே போன்றே, உடன் உருபு, "-ஓடு" மற்றும் "ஒத்து" எனும் சொல்லுருபினையும் ஏற்று உடனிகழ்வுப்பொருள் உணர்த்துதல் காண்க. அமைப்பளவில் மூன்று மொழிபெயர்ப்புகளும் வேறுபடுதல் இவ்விடம் உணரப்படுகிறது.

"-ஓடு" வேற்றுமையுருபு தமிழில் பிற பொருள்களில் வருவதுபோலவே, உடன் உருபும் பிற பொருள்களில் வரும் என்பார் பேரா. அகத்தியலிங்கம். உடன் வேற்றுமை வினையடைப்பொருளில் வருவதை இவர் சுட்டிக்காட்டுவார். (தமிழ்மொழி அமைப்பியல் பக் 131).

சான்று:

த (21) சந்தோஷத்தோடு விளையாடினான்

ம (22) சந்தோஷத்தோடெ களிச்சு

இவ்வகையான பொருளில் "-ஓடு" உருபு வரும் போது மலையாளத்தில் "ஓடெ" எனும் சொல் வருகின்றது எனவே

அமைப்படிப்படையில் இரு தொடர்களும் இங்கே வேறுபடுதல் காணமுடிகின்றது.

[ ஓடு = ஓடெ ]

### 4.4.5.4. "கூட" உருபு உடனிகழ்ச்சிப்பொருளில் வருதல்

இக்காலத்தமிழில் உடனிகழ்ச்சிப்பொருளை உணர்த்த "-கூட" எனும் சொல் அதிகமாக வழக்கில் உள்ளது. இதனைப் பின்னுருபு (சொல்லுருபு) என்பார் முனை..அகத்தியலிங்கம். (பக் 130). டாக்டர் ஜி.ஜான் சாமுவேலும் அவ்வாறே குறிப்பிடுவார். (திராவிட மொழிகளின் ஒப்பாய்வு, பக் - 153). வேற்றுமையுருபு என்பார் கு.பரமசிவம் (பக் -145). இதன் செயல்பாடு பிற உடனிகழ்ச்சி உருபுகளான "-ஓடு" மற்றும் "உடன்" ஆகியவற்றோடு ஒத்து வருவது குறிப்பிடத்தக்கது ஆகும். "கூட" எனும் இச்சொல் தமிழிலும் மலையாளத்திலும் வழங்கும் முறைகளைக் கீழே காணலாம்.

சான்று:

த (23) அக்கா பிள்ளைகள் கூட ஊருக்குப்போனாள்

ம (24) சேச்சி குட்டிகளுடெ கூடெ நாட்டிலேக்கு போயி

தமிழில் "கூட" எனும் உருபு உடனிகழ்ச்சிப்பொருளை வெளிப்படுத்த வருகையில்; மலையாளத்தில் "உடெ" என்ற கிழமைப்பொருள் உருபும், "கூடெ" எனும் சொல்லுருபும் சேர்ந்த வடிவமாக உடனிகழ்ச்சிப்பொருள் வெளிப்படுத்தப்படுகின்றது. அமைப்பளவிலான வேறுபாடு இவ்விடம் காணப்படுகிறது.

[ கூட = உடெ கூடெ ]

தமிழில் "கூட" எனும் உருபு இடம் பெற்று உடனிகழ்ச்சிப்பொருளை வெளிப்படுத்தும் தொடர் மலையாளத்தில் "ஓடு" எனும் உடனிகழ்ச்சி

உருபும் "ஒப்பம்" எனும் சொல்லுருபும் வந்து அப்பொருளை வெளிப்படுத்தலைக் கீழே காணலாம்.

சான்று:

த (25) செல்வன் வளவன் **கூடச்** சென்றான்

ம (26) செல்வன் வளவனோடொப்பம் போயி

**[ கூட = ஓடு ஒப்பம் ]**

இக்காலத் தமிழில் "கூட" எனும் உருபு வரும் தொடர் மலையாளத்தில் மொழிபெயர்க்கப்படுகையில் "ஓடு ஒத்து" என "ஓடு" வேற்றுமையுருபும், "ஒத்து" எனும் சொல்லுருபும் இணைந்து வந்து உடனிகழ்ச்சிப்பொருளை தருகின்றது.

சான்று:

த (27) செல்வன் வளவன் **கூடச்** சென்றான்

ம (28) செல்வன் வளவனோடொத்து போயி

**[ கூட = ஓடு ஒத்து ]**

4.4.5.5. தமிழ்-மலையாளத்தில் உடனிகழ்ச்சிப்பொருளை ஏற்ற பதிலிடு பெயர்வடிவங்கள் கீழே தரப்படுகின்றன.

| எண் | பதிலிடுபெயர் | தமிழ் | மலையாளம் |
|---|---|---|---|
| 1 | தன்மை-ஒருமை | என்னோடு,<br>என்னுடன் | என்னோடு,<br>என்றெ கூடெ |
| 2 | உ த.பன் | நம்மோடு,<br>நம்முடன் | நம்மோடு,<br>நம்முடெகூடெ |
| 3 | உதா.த பன் | எங்களோடு,<br>எங்களுடன் | ஞங்ஙளோடு,<br>ஞங்ஙளுடெகூடெ |
| 4 | முன்.ஒரு. | உன்னோடு,<br>உன்னுடன் | நின்னோடு,<br>நின்றெ கூடெ |
| 5 | முன்.மரி. பன். | உங்களோடு,<br>உங்களுடன் | நிங்ஙளோடு,<br>நிங்ஙளுடெகூடெ |
| 6 | முன் சிற உய ஒரு. | தங்களோடு,<br>தங்களுடன் | தாங்களோடு,<br>தாங்களுடெகூடெ |
| 7 | முன்.பன் | உங்களோடு<br>உங்களுடன் | நிங்ஙளோடு,<br>நிங்ஙளுடெகூடெ |
| 8 | பட.ஒரு.ஆ. | அவனோடு,<br>அவனுடன் | அவனோடு,<br>அவன்றெ கூடெ |
| 9 | பட.ஒரு.பெ | அவளோடு,<br>அவளுடன் | அவளோடு,<br>அவளுடெகூடெ |
| 10 | பட.மரி..பன் | அவர்களோடு,<br>அவர்களுடன் | அவரோடு,<br>அவருடெகூடெ |

| 11 | பட. பன் | அவர்களோடு<br>அவரோடு, | அவருடெகூடெ |
|---|---|---|---|
| 12 | பல.பால் ஒரு | அதோடு/<br>அத்துடன் | அதினோடு,<br>அதின்றெகூடெ |
| 13 | பல.பால்.பன் | அவற்றோடு,<br>அவற்றுடன் | அவயுடெகூடெ |

#### 4.4.5.6. உடனிகழ்ச்சிப்பொருள் வேற்றுமை உருபுகள்-வேறுபாடுகள்

இதுகாறும் உடனிகழ்ச்சிப்பொருள் வேற்றுமை உருபுகள் தமிழிலும் மலையாளத்திலும் வேறுபடும் இடங்கள் ஆராயப்பட்டன. அவை இங்கே தொகுத்துக் கூறப்படுகின்றன.

1. தமிழில் "-ஓடு" என்ற உடனிகழ்ச்சி வேற்றுமை வருகின்ற இடத்தில் மலையாளத்தில் "-ன்றெ" என்னும் உடைமை வேற்றுமையும், "-கூடெ" என்ற சொல்லுருபும் இடம்பெறுகின்றது.

**[ ஓடு = ன்றெ கூடெ ]**

2. தமிழில் உடனிகழ்ச்சி வேற்றுமை "ஓடு" வருகின்ற இடத்தில் மளையாளத்தில் "ஆயி" எனும் வினைச்சொல் சொல்லுருபாக இடம்பெற்று உடனிகழ்ச்சிப்பொருளை வேறுபடுத்துவதும் உண்டு.

**[ ஓடு = உடெ கூடெ/ ஆயி ]**

3. "ஓடு" வேற்றுமையைக்கொண்ட தமிழ்த்தொடர் ஒன்று மலையாளத்திற்கு மொழிபெயர்க்கப்படுகையில் அம்மொழியின் உடனிகழ்ச்சி வேற்றுமையான "ஓடு" வும், "கூடி" எனும் சொல்லுருபும் இடம்பெறுகின்றன.

**[ ஓடு = ஓடு கூடி ]**

4. தமிழில் "ஓடு" வேற்றுமை வருமிடங்களில் மலையாளத்தில் "ஓடு" வேற்றுமையும், "ஒப்பம்" எனும் சொல்லுருபும் இடம்பெறுவதும் உண்டு.

**[ ஓடு = ஓடு ஒப்பம் ]**

5. தமிழில் "ஓடு" வேற்றுமை இடம்பெறும் தொடர்களில் மலையாளத்தில் "ஓடு" வேற்றுமையும் "ஒத்து" எனும் சொல்லுருபும் வந்தமைந்து உடனிகழ்ச்சிப்பொருளை வெளிப்படுத்தும்

**[ ஓடு = ஓடு ஒத்து ]**

6. தற்காலத் தமிழின் உடனிகழ்ச்சி வேற்றுமை உருபாகக் கருதப்படும் "உடன்" இடம்பெறுகின்ற தொடரினை மலையாளத்தில் மொழிபெயர்க்கும் போது, அது மூன்று விதங்களில் உடனிகழ்ச்சிப்பொருள் வேற்றுமைகளை ஏற்று, அதன் பொருளை வெளிப்படுத்துகின்றன. அங்கு உடன் உருபு கிழமைப்பொருள் வேற்றுமையான "ன்றெ" மற்றும் "கூடெ" எனும் சொல்லுருபால் வெளிப்படுத்தப்படுகின்றது.

**[ உடன் = ன்றெ கூடெ ]**

8. "உடன்" உருபு மலையாளத்தின் உடனிகழ்ச்சி வேற்றுமையுருபான "ஓடு" மற்றும் "ஒப்பம்" எனும் சொல்லுருபால் வெளிப்படுத்தப்படுகின்றது.

**[ உடன் = ஓடு ஒப்பம் ]**

9. "உடன்" உருபு மலையாளத்தில் "ஓடு" உருபு மற்றும் "ஒத்து" எனும் சொல்லுருபால் வெளிப்படுத்தப்படுகின்றது.

**[ உடன் = ஓடு ஒத்து ]**

10. தமிழில் "கூட" எனும் சொல் தற்கால அறிஞர்களால் உடனிகழ்ச்சி வேற்றுமை உருபாக கொள்ளப்படுகிறது. இந்த "கூட" உருபு மலையாளத்தில் கிழமைப்பொருள் உருபான "உடெ" மற்றும் சொல்லுருபு "கூடெ" இவற்றின் மூலம் வெளிப்படுத்தப்படுகிறது

[ கூட = உடெ கூடெ ]

11. "கூட" உருபு வருமிடங்களில் மலையாளத்தில் அதன் உடனிகழ்ச்சி உருபான "ஓடு" உருபும் , சொல்லுருபான "ஒப்பம்" மும் ஒருங்கே வந்து தமிழில் "கூட" உருபு வெளிப்படுத்தும் அதே பொருளை வெளிப்படுத்துகின்றது.

[ கூட = ஓடு ஒப்பம் ]

12. தமிழில் "கூட" உருபு வருமிடத்தில் மலையாளத்தில் "ஓடு" உருபும் "ஒத்து" எனும் சொல்லுருபும் சேர்ந்து அமைந்து உடனிகழ்ச்சிப்பொருளை வெளிப்படுத்துகின்றது

[ கூட = ஓடு ஒத்து ]

## 4.5.தமிழிலும் மலையாளத்திலும் கொடைப்பொருள் வேற்றுமை

### 4.5.1. தமிழில் கொடை வேற்றுமை

தமிழிலும் மலையாளத்திலும் கொடைவேற்றுமை நான்காவது வேற்றுமையாகக் கூறப்படுகின்றது.

*"நான்காகுவதே கு எனப்பெயரிய வேற்றுமைக்கிளவி"* (தொல்.559).

என்பார் தொல்காப்பியர்.

நன்னூலாரோ,

*"நான்காவதற்குரு பாகுங் குவ்வே" (நன் சொல்.298)*

என்கிறார்.

எப்பொருளாயினும் ஈவதோர் பொருளை ஏற்று நிற்பது நான்காம் வேற்றுமை என்று உரை கூறினர் தொல்காப்பிய உரையாசிரியர்கள். (மருதூர் அரங்கராசன், தமிழில் வேற்றுமைகள், 2000 பக்-190).

நான்காம் வேற்றுமை கொடையேயன்றி, பொருட்டு, கருவி, காரணம், உடைமை, இடம், செயப்படுபொருள், ஒப்பு போன்ற பொருட்களையும் உணர்த்துவதை நிறுவுவார் பேரா. செ. வை சண்முகம் அவர்கள். (S.V.Shanmugam, Dravidian Nouns, A Comparative Study, Page 265).

முனைவர் அகத்தியலிங்கம் அவர்கள் இதனை "குறிவேற்றுமை" அல்லது "கொடைவேற்றுமை" என்று அழைக்கிறார். *ஒரு தொழிலைக்குறிக்கும் பயனிலைக்கும் அத்தொழில் எதைக்குறியாக அல்லது இலக்காக அல்லது குறிக்கோளாக வைத்துச்செயல்படுகின்றதோ அதைக்ககுறிக்கும் பெயருக்கும் இடையே உள்ள தொடர்பே "குறி வேற்றுமை" அல்லது "இலக்கு வேற்றுமை" அல்லது "குறிக்கோள் வேற்றுமை" எனப்படும் என்று கொடை வேற்றுமையை இவர் விளக்குவார்.*

கொடை வேற்றுமை "மறைமுகச் செயப்படுபொருள்" (Indirect Object) என்றும் அழைக்கப்படும்.

### 4.5.2. தமிழில் கொடை வேற்றுமை உருபுகள்

தற்காலத் தமிழில் இதன் உருபு "-கு", "-க்கு", மற்றும் "-உக்கு" ஆகும் . (Thomas Lehmann, A Grammar of Modern Tamil, 1989, Page 30). "-அக்கு" என்ற உருபையும் கூறுவார் அகத்தியலிங்கம்.

### 4.5.3. மலையாளத்தில் கொடை வேற்றுமை

மலையாளத்தில் இவ்வேற்றுமை "உத்தேசிகா" என்று அழைக்கப்படுகிறது. "க்கு" என்பதோ ககரம் கெட்டு எஞ்சும் " உ" கரமோ அதன் உருபு என்பார் கேரள பாணினி.

### 4.5.4. மலையாளத்தில் கொடை வேற்றுமை

மலையாளத்தில் கொடை வேற்றுமை உருபுகளான "க்கு" மற்றும் "னு" வேற்றுமை உருபுகள் ஒருமைப்பெயர்களுடனும், '-அன்" என முடியும் பெயர்களுடனும் "-இன்" சாரியையினை ஏற்கும் சில பெயர்களுடனும் வரும். ( ஆசர், குமாரி, மலையாளம், 1997, பக் 192).

### 4.5.5. கொடை வேற்றுமை உணர்த்தும் பிற பொருள்கள்

கொடைப்பொருள் வேற்றுமை கொடைப்பொருளோடு வேறு பலவற்றையும் குறிக்கிறது என்கிறார் கு.பரமசிவம். நன்னூலாரும் இவ்வாறு கூறுவதை இவர் எடுத்துரைக்கின்றார். தற்காலத்தமிழில் இக்கொடைப்பொருள் வேற்றுமை உருபு கொடைப்பொருளோடு கீழ்க்கண்டவற்றையும் குறிக்கிறது. (கு.பரமசிவம், இக்காலத்தமிழ் மரபு , 1983, பக் 151).

அவையாவன,

4.5.5.1. இலக்கு

4.5.5.2. நோக்கம்

4.5.5.3. காலவரையறை

4.5.5.4. கிழமை

4.5.5.5. உடைமை

4.5.5.6. சார்த்து நிலை

4.5.5.7. துறைச்சிறப்பு

4.5.5.8. ஏற்புடைமை

4.5.5.9. விழுக்காடு

4.5.5.10. "ஒவ்வொரு"

போன்றன.

கீழே கு.பரமசிவம், தாமசுலேமன் அகத்தியலிங்கம் ஆகியோரின் கொடைவேற்றுமை குறித்த கருத்துக்கள் மலையாளத்தின் ஆசர், கே.எம் ஜார்ஜ் அவர்களின் கருத்துக்களுடன் ஒப்பிடப்பட்டு, அவர்கள் சுட்டியுள்ள தமிழ் மற்றும் மலையாளத்தொடர்கள் மொழிபெயர்க்கப்பட்டு கொடை வேற்றுமை வருகின்ற சூழல் இருமொழிகளுக்குமிடையேயான ஒற்றுமை, வேற்றுமைகள் கண்டறியப்படுகின்றன.

### 4.5.5.1. கொடை வேற்றுமை இலக்கைக் குறித்தல்

தற்காலத்தமிழில் வருதல், போதல் போன்ற வினைச்சொற்களுடன் வரும் பெயர்கள் "-கு" உருபு ஏற்கும் போது அப்பெயர்கள் இலக்கைக்குறிக்கும் என்கிறார் கு.பரமசிவம். "-கு" உருபு

இப்பொருளில் வரும்போது அவ்வுருபினை ஏற்கின்ற பெயர்கள் உயிரற்ற ( Inanimate Nouns) பெயர்களாகவே வரும் என்கிறார் தாமசு லேமன்

சான்று

த (1) நான் வீட்டுக்குப் போகிறேன்

ம (2) ஞான் வீட்டில் போகுன்னு

இவ்விடம் தமிழில் இலக்குப்பொருளில் "-கு" உருபு வருகையில் மலையாளத்தில் அது இடப்பொருள் வேற்றுமையான '-இல்" உருபு ஏற்றல் காணத்தக்கது. இடவேற்றுமையெனினும் அது இலக்குப்பொருள் சுட்டுதல் குறிப்பிடத்தக்கது ஆகும் அமைப்பு அளவில் இரு பெயர்களும் இவ்விடம் வேறுபடுகின்றது

[வீட்டுக்கு = வீட்டில்]

சான்று

த (3) விமலா நம் அறைக்கு வந்தாள்

ம (4) விமல நம்முடெ ரூமில் வன்னு

மேலே காட்டப்பட்டது போல் (1), (2) , வருதல் எனும் வினையுடன் '-க்கு" உருபு ஏற்ற பெயர் வருகையில் அது "அறைக்கு" , "அறையை நோக்கி" எனும் இலக்குப்பொருளை வெளிப்படுத்துவதனை மேற்கண்ட சான்றின் மூலம் அறியலாம் இத்தொடர் மலையாளத்துக்கு மொழிபெயர்க்கப்படுகையில் இடப்பொருள் வேற்றுமை உருபுடன் கொடைவேற்றுமை தோன்றுதல் காணத்தக்கது. (4). எனவே இவ்விடத்திலும் அதே வேறுபாடு காணப்படுகின்றது

[அறைக்கு= ரூமில்]

சான்று:

த (5) விமலா நம் அறைக்கு வந்தாள்

ம (6) விமல நம்முடெ ரூமிலேக்கு வன்னு

இங்கு மேற்கண்ட அதே தமிழ்த்தொடர் (3) மலையாள மொழியில் சான்று (6)-ல் காண்பது போலவும் வழங்கப்படும். இங்கு தமிழின் "-க்கு" உருபும் மலையாளத்தின் இடப்பொருள் வேற்றுமை உருபும் ஒரு குறைச்சொல் சேர்ந்த "இலேக்கு" எனும் வடிவமாகத் தோன்றுகின்றது இந்த "இலேக்கு" எனும் வடிவில் வரும் "-ஏக்கு" எனும் வடிவம் திசையினைக் குறிக்கும் ஒரு குறைச்சொல் (Clitic) ஆகும். அது கொடை வேற்றுமை உருபு அல்ல என்கிறார் பேராசிரியர் ஆண்ட்ரூஸ் குட்டி அவர்கள் (Malayalam - An Intensive Course, 1971, Page 29). பேரா.ச.இராசேந்திரன் அவர்கள் "இலேக்கு" என்பதனை இடப்பொருள் வேற்றுமையுருபுடன் சேர்ந்த கொடைப்பொருள் வேற்றுமையுருபு என்கிறார் ( Case Sysytem in Tamil and Malayalam, Bulletin of Deccan College Research Institute, Vol.37 128-140 (1977-78). இவ்விடத்தில் அமைப்படிப்படையிலான வேறுபாடு அமைதலைக் காணலாம்.

[அறைக்கு = ரூமிலேக்கு]

#### 4.5.5.2. கொடை வேற்றுமை உருபு நோக்கத்தினைக் குறித்தல்

"கு" உருபினை ஏற்ற பெயர்ச்சொல் தொழில் நிகழ்வதற்கான நோக்கத்தினை வெளிப்படுத்துகின்றது என்கிறார் கு.பரமசிவம்.

சான்று:

த (7) அவன் பணத்துக்கு அலைகிறான்

ம (8) அவன் பணத்தினு வேண்டி அலையுன்னு

சான்று: (7) - ல் "கு" உருபு நோக்கத்தினை வெளிப்படுத்தும் முகமாக அமைவதைக் காணமுடிகிறது. அதற்குச்சமமான மலையாளத்தொடர் அம்மொழியின் "கொடை வேற்றுமை உருபான "னு"

வையும், "வேண்டி" என்ற சொல்லுருபையும் ஏற்று வருகின்றது. எனவே தமிழின் "கு" உருபின் பொருளானது மலையாளத்தின் "னு" உருபோடு "வேண்டி" என்ற சொல்லுருபு ஆகிய இரண்டில் பகிரப்பட்டு அமைந்திருப்பதை அறியலாம். எனவே அமைப்பளவில் இரு மொழிகளும் வேறுபடுவதனைக் காணலாம்.

[பணத்துக்கு = பணத்தினு வேண்டி]

தமிழில் நோக்கத்தினை வெளிப்படுத்தும் கொடை வேற்றுமை உருபு மலையாளத்தில் நோக்கப்பொருளில் வருகையில் அம்மொழியின் கொடைவேற்றுமையுருபு "னு" வையும் "ஆயி" என்னும் சொல்லுருபினையும் ஏற்று வருகின்றது. "ஆயி" என்னும் மலையாள வடிவத்தினை பின்னுருபு (Post Position) என்று டாக்டர் இராதாகிருஷ்ணன் அவர்களும் ( Postposition in a Dravidian Language, 1994 , Page 223-224), "பெனிஃபாக்டிவ்" ( Benefactive ) என்று ஆஷர் அவர்களும் (Malayalam , 1997, Page 209) கூறுகின்றனர். அமைப்பில் இரு தொடர்களும் வேறுபடுகின்றன.

சான்று:

த (9) அவன் பணத்துக்கு அலைகிறான்

ம (10) அவன் பணத்தினாயி அலையுன்னு

[ க்கு = னு+ஆயி ]

#### 4.5.5.3. கொடைவேற்றுமை உருபு காலவரையறையினைக் குறித்தல்

"கு" உருபினை ஏற்ற பெயர்ச்சொல் கால வரையறையினைக் குறிக்கும். இங்கு குறிப்பிடப்படும் காலம் குறிப்பிட்ட ஒரு காலமாகவோ அல்லது மொத்த நேரமாகவோ அமையலாம்.

#### 4.5.5.3.1. குறிப்பிட்ட காலம்

சான்று:

த (11) .முதலமைச்சர் நேற்றைக்கு வந்தார்

ம (12) முக்யமந்த்ரி இன்னலெ வன்னு

பேரா.கு.பரமசிவம் அவர்களின் கருத்துப்படி, தமிழில் "கு" உருபினை ஏற்ற பெயர்ச்சொல் மேலே (11) - ல் குறிப்பிட்ட காலவரையறையினைக் குறிக்கின்றது

நேரத்தினைக்குறிக்கும் மூன்று சொற்கள் நேற்று, இன்று, நாளை என இம்மூன்றும் "கு" உருபினை ஏற்றோ ஏற்காமலோ தமிழில் பயன்படுத்தப்படும். (பேரா.இராசேந்திரன்). ஆனால் மலையாளத்தில் இவை மூன்றுமே "கு" உருபினை ஏற்பதில்லை. என்வே இது எழுவாய் வேற்றுமை போன்றே உருபின்றி அமைகின்றன.

சான்று:

| த | | ம |
|---|---|---|
| நேற்று/ நேற்றைக்கு | = | இன்னலெ |
| நாளை/ நாளைக்கு | = | நாளெ |
| இன்று/ இன்றைக்கு | = | இன்னு |

[நேற்றைக்கு=இன்னலெ]

அமைப்படிப்படையிலான வேறுபாட்டினை இங்கே இரு மொழி வழக்கினிடையிலும் காணமுடிகின்றது

"கு" உருபினை ஏற்ற பெயர்ச்சொல் குறிப்பிட்ட நேரத்தினைக் குறிக்கும் போது தமிழிலும் மலையாளத்திலும் ஒரே போல் கொடை வேற்றுமையுருபினைப் பெற்று வேறுபாடின்றி அமைகின்ற சூழலையும் இரு மொழிகளிலும் காணலாம்.

சான்று:

த (13) சினிமா 5 மணிக்குத் தொடங்குகிறது

ம (14) சினிம 5 மணிக்கு தொடங்ஙும்/ஆரம்பிக்கும்

### 4.5.5.3.2. மொத்த நேரம்

மொத்த நேரத்தைக் குறிப்பிடும் போது தமிழில் "கு" வேற்றுமையுருபு இடம்பெறுகின்றது. (கு.பரமசிவம்).

சான்று:

த (15) மருத்துவர் 1 மாதத்துக்கு மாத்திரை தந்தார்

ம (16) டோக்டர் 1 மாசத்தேய்க்கு குளிக தன்னு

இதற்கு இணையான மலையாள மொழிபெயர்ப்பு "ஏய்க்கு" ஒரு குறைச்சொல் ஆகும். அமைப்படையில் வேறுபாட்டினை இங்கு காணலாம்.

[க்கு= ஏய்க்கு]

### 4.5.5.4. கொடை வேற்றுமை உருபு கிழமைப்பொருளைக் குறித்தல்

தமிழில் "கு" உருபை ஏற்ற பெயர்ச்சொல்லை அடுத்து உறவு முறைப்பெயரோ அல்லது உறவு எனும் பொருளுடைய பெயரோ வரும்போது கிழமைப்பொருள் தோன்றுகிறது (கு.பரமசிவம்).

சான்று:

த (17) அவள் எனக்கு மருமகள்

ம (18) அவள் என்றெ மருமோள்

மலையாளத்தில் இவ்வகையான தொடரை மொழிபெயர்க்கும் போது கிழமைப்பொருள் உணர்த்தும் கிழமைவேற்றுமையுருபு "ன்றெ" வருவதைக் காண்க. அமைப்படிப்படையில் இரு தொடர்களும் வேறுபடுவது குறிப்பிடத்தக்கது ஆகும்.

[க்கு=ன்றெ]

### 4.5.5.5. கொடை வேற்றுமை உருபு உடைமைப்பொருளைக் குறித்தல்

தமிழில் "கு" உருபை ஏற்ற பெயரோடு இருக்கிறது - இல்லை எனும் வினைச்சொல் வரும்போது உடைமைப்பொருள் தோன்றுகிறது.

சான்று:

த (19) எனக்கு ஒரு குழந்தை இருக்கிறது

ம (20) எனிக்கு ஒரு குட்டியுண்டு

சான்று:

த (21) அவனுக்கு புத்தியில்லை

ம (22) அவனு புத்தியில்லா.

மலையாளத்திலும் இதற்கிணையான தொடர்கள் "கொடை வேற்றுமையுருபினையே பெற்று வருகின்றன. வேறுபாடு எதுவும் இல்லை.

### 4.5.5.6. கொடைவேற்றுமை உருபு சார்த்துநிலையினைக் குறித்தல்

"கு" உருபினை ஏற்ற பெயர்ச்சொல் தமிழில் சார்த்து நிலையினையும் (Reference Point) குறிக்கும் என்கிறார் கு.பரமசிவம்.

சான்று:

த (23) மதுரைக்கு வடக்கே தஞ்சாவூர் உள்ளது

ம (24) மதுரய்க்கு வடக்காயிட்டாணு தஞ்சாவூர் ஸ்திதி செய்யுன்னது

தமிழில் எப்பெயர்ச்சொல்லோடு சார்த்தி திசை முதலியவற்றைக் கூறுகிறோமோ அப்பெயர்ச்சொல் "-கு" உருபினை ஏற்கின்றது. (23). மலையாளத்திலும் இதே போல் அச்சொல் "-கு" உருபினை ஏற்கக் காணலாம். இங்கே இத்தன்மையில் இருமொழிகளிலும் வேறுபாடு இல்லை.

தமிழில் சார்த்துநிலையினைக் குறிக்கின்ற தொடர்களில் கொடை வேற்றுமையின் "-கு" உருபு வருகின்ற இடத்தில் மலையாளத்தில் உடைமை வேற்றுமை வரும் சூழலும் காணலாம்.

சான்று:

த (25) வீட்டிற்கு உள்ளே ஒரு பாம்பு சென்றது

ம (26) வீட்டின்றெ அகத்து ஒரு பாம்பு கயறி

அமைப்படிப்படையில் இரு தொடர்களும் "கு" உருபேற்கும் முறையில் வேறுபடுதலை இங்கே காணலாம்.

[க்கு=ன்றெ]

தமிழில் உடைமை வேற்றுமை ஏற்றும் இத்தொடர் அமையும்.

சான்று:

த (27) வீட்டின் உள்ளே ஒரு பாம்பு சென்றது.

தமிழில் சார்த்து நிலையினைக் குறிக்கையில், ஒப்புப்பொருளில் "-கு" உருபு இடம்பெறும். மலையாளத்தில் ஒப்பீட்டு நோக்கும் சொல்லான "விட" எனும் பொருள்படும் "காள்" எனும் சொல்லுருபு இடம்பெறுகின்றது.

சான்று:

த (28) அவனுக்கு இவன் நல்லவன்

ம (29) அவனெக்காள் இவன் பேதமாணு

தமிழில் "-கு" உருபும் மலையாளத்தில் ஒப்புப்பணியினைச் செய்யும் சொல்லுருபும் இடம்பெற்று அமைப்பளவில் வேறுபாடு ஏற்படுதல் காணத்தக்கது.

[ க்கு = காள் ]

தமிழில் திசையினைக் குறிக்கும் பொருளில் "-கு" உருபு இடம்பெறுகின்றது. ஆனால் மலையாளத்தில் "இல் நின்னும்" எனும் நீங்கல் வேற்றுமை பயன்படுத்தப்படுகிறது. இது தமிழில் "நீங்கல் வேற்றுமை" என்று அழைக்கப்படுகின்றது (இலிருந்து). (பேரா.தாமசு லேமன், கு.பரமசிவம்). ஆனால் மலையாளத்தில் நீங்கல் வேற்றுமை என்று ஒன்று இல்லை; இதன் பொருளை "இல்" எனும் இடவேற்றுமை உருபும், "நின்னும்" எனும் சொல்லுருபும் சேர்ந்த வடிவம் வெளிப்படுத்துகிறது என்பர் மலையாள இலக்கணிகள். ( கே.எம் ஜார்ஜ், பக் - 76 ), ( ஆர்.இ.ஆசர், மலையாளம், பக்- 120).

**4.5.5.7. கொடை வேற்றுமை உருபு துறைச்சிறப்பினைக் குறித்தல்**

தமிழில் ஒரு துறையில் சிறந்தவர் இவர் எனும்போது அத்தொடரில் வரும் முதல் பெயர்ச்சொல் "கு" உருபினை ஏற்கின்றது (கு.பரமசிவம்).

சான்று:

த (30) இலக்கணத்துக்கு தொல்காப்பியர்

ம (31) வியாகரணத்தினு தொல்காப்பியர்

மலையாளத்திலும் இப்பொருளில் "-கு" வேற்றுமையுருபு இடம்பெற்றிருப்பதனைக் காணலாம். அமைப்பளவில் இங்கே வேறுபாடு இல்லை.

மலையாளத்தில் இதே பொருளில் வழங்கும்வேளை "-கு" உருபுக்குப்பதில் இடவேற்றுமையுருபு "-இல்" வந்து சற்று மாறுபட்ட அமைப்பிலும் தொடர்கள் அமைகின்றன.

சான்று.

த (32) கணிதத்துக்கு இரா்மானுஜன்

ம (33) கணிதத்தில் இராமானுஜன் ஆணு மிடுக்கன்

அமைப்பளவில் இரு தொடர்களும் இவ்விடம் வேறுபடுதலைக் காணலாம்.

[ க்கு=இல் ]

தமிழில் இம்மாதிரியான தொடர்கள் வழக்கில் ஏராளம் பயன்படுத்தப்படுகின்றன. ஆனால் மலையாளத்தில் இது சற்றே வேறுபட்ட நிலையில் (33) ல் கண்டதுபோல் பயன்படுத்தப்படுகின்றது.

### 4.5.5.8. கொடை வேற்றுமை உருபு ஏற்புடைமையினைக் குறித்தல்

தமிழில் ஒன்றிற்கு ஏற்புடைய மற்றொன்று எனும்போது முதற்பெயர்ச்சொல் கொடைவேற்றுமை உருபான "-கு" உருபினை ஏற்கின்றது என்கிறார் பரமசிவம்

சான்று

த (34) பிரச்சினைக்குத் தீர்வு

ம (35) பிரஸ்னத்தினு பரிகாரம்

மலையாளத்திலும் இச்சொற்கள் கொடை வேற்றுமையுருபான "னு" ஏற்று வருகின்றன. அமைப்பில் ஒத்தே காணப்படுகின்றன.

### 4.5.5.9. கொடை வேற்றுமை உருபு விழுக்காட்டுப்பொருளில் வருதல்

தமிழில் ஒரு விழுக்காட்டினைக் கூறும்போது பேரலகு "-கு" உருபினை ஏற்கின்றது என்கிறார் பரமசிவம்.

சான்று:

த (36) ஒரு நாளைக்கு எட்டுமணிகள் வேலை செய்யவேண்டும்

ம (37) ஒரு திவசம் எட்டு மணிக்கூர் ஜோலி செய்யணம்

விழுக்காட்டினைக் குறிக்கும் போது தமிழில் "-கு" உருபு பயன்படுத்தப்படுவது போல் மலையாளத்தில் விழுக்காட்டினைக் குறிக்க பயன்படுத்தப்படுவது இல்லை மாறாக, உருபுகள் எவையுமே ஏற்காமல் எழுவாய் வேற்றுமையில் அப்பெயர்ச்சொல் அமைவதனைக் காணலாம் இவ்வமைப்பே மலையாளத்தில் பெருவழக்கு ஆகும். இரு தொடர்களும் வேறுபடுதலை இவ்விடம் தெளிவாகக்காணலாம்.

**[ நாளைக்கு = ஒரு திவசம் ]**

தமிழில் கொடை வேற்றுமையுருபு வந்து விழுக்காட்டுப்பொருளை வெளிப்படுத்துவது போல் மலையாளத்தில் இத்தொடர் இடப்பொருள் வேற்றுமையுருபினை ஏற்று விழுக்காட்டுப்பொருளை வெளிப்படுத்தும்

சான்று:

த (38) நாளொன்றுக்கு எட்டு மணிநேரம் வேலை

ம (39) ஒரு திவசத்தில் எட்டு மணிக்கூர் ஜோலி செய்யணம்

அமைப்பளவில் இருமொழிகளும் வேறுபடுதலை இவ்விடம் காணமுடிகின்றது

**[ நாளொன்றுக்கு = ஒரு திவசத்தில் ]**

**4.5.5.10. கொடை வேற்றுமை உருபு "ஒவ்வொரு" எனும் பொருளில் வருதல்**

"-கு" உருபினை ஏற்ற பெயர்ச்சொல்லை அடுத்து ஒரு எண்ணுப்பெயர் வரும்போது ஒவ்வொன்றிற்கு இத்தனை எனும் பொருள் பிறக்கிறது.

சான்று

த (40) ஆளுக்கு நான்கு இட்லி வீதம் கொண்டு வா

ம (41) ஓரோருத்தர்க்கும் நாலு இட்டலி வீதம் கொண்டு வரு.

தமிழில் ஆளுக்கு நான்கு என்று கூறுவது போல் மலையாளத்தில் கூற முடியாது. பதிலாக, "ஒவ்வொருவருக்கும் நான்கு இட்லி" என்ற பொருளில் வரும் "ஓரோருத்தருக்கும் நான்கு இட்டலி" என்ற தொடரே பயன்படுத்தப்படுகின்றது. இது மலையாளத்தின் தனித்தன்மையான வழக்கு ஆகும். இரு மொழித்தொடர்கள் இரண்டுக்குமிடையில் நல்ல வேறுபாடு அமைவதனை இதன் மூலம் அறியலாம்.

**[ஆளுக்கு = ஓரோருத்தர்க்கும்]**

தமிழில் "ஒவ்வொரு" எனும் பொருளில் "-கு" உருபு வருகின்ற இடத்தில் மலையாளத்தில் இடப்பொருள் வேற்றுமை உருபான "-இல்" வருகின்ற சூழலும் உண்டு.

சான்று:

த (42) அவர் **ஆண்டுக்கு** ஒருமுறை குளிப்பார்

ம (43) அவர் **ஆண்டில்** ஒரிக்கலே குளிக்கூ.

இவ்வாறு இடப்பொருள் வேற்றுமையுருபினை பயன்படுத்தி "ஒவ்வொரு" எனும் பொருளை வெளிப்படுத்தும் தொடர்கள் தற்கால மலையாளத்தில் பெருவழக்கு ஆகும். அமைப்பளவில் வேறுபாட்டினை இவ்விடம் காணமுடிகின்றது.

**[ க்கு = இல் ]**

தமிழில் "-கு" உருபு வெளிப்படுத்தும் பொருள் மலையாளத்தில் "இல் நின்னும்" எனப்படும் நீங்கல் வேற்றுமையினை பயன்படுத்தி வெளிப்படுத்தப்படுவதனை தற்கால மலையாளத்தில் காணமுடிகின்றது.

சான்று: த (44) வீட்டிற்கு ஒருவர் போராட்டத்தில் குதித்தனர்

ம (45) ஓரோ வீட்டில் **நின்னும்** ஓராள் சமரத்தினு பங்கெடுத்து.

**[ க்கு = இல் நின்னும் ]**

### 4.5.6.1 தமிழ்-மலையாளத்தில் கொடைவேற்றுமையினை ஏற்ற பதிலிடு பெயர்வடிவங்கள்

தமிழ் - மலையாளத்தில் கொடைப்பொருளை ஏற்ற பதிலிடு பெயர் வடிவங்கள் கீழே தரப்படுகின்றன.

| எண் | பதிலிடுபெயர் | தமிழ் | மலையாளம் |
|---|---|---|---|
| 1 | தன்மை-ஒருமை | எனக்கு | எனிக்கு |
| 2 | உ.த.பன் | நமக்கு | நமக்கு/நம்மள்க்கு |
| 3 | உதா.த.பன் | எங்களுக்கு | ஞங்ஙளுக்கு |
| 4 | முன்.ஒரு. | உனக்கு | நினக்கு |
| 5 | முன்.மரி. பன். | உங்களுக்கு | நிங்ஙள்க்கு |
| 6 | முன்.சிற.உய.ஒரு. | தாங்களுக்கு/ தங்களுக்கு | தாங்ஙள்க்கு |
| 7 | முன்.பன் | உங்களுக்கு | நிங்ஙள்க்கு |
| 8 | பட. ஒரு.ஆ. | அவனுக்கு | அவனு |
| 9 | பட.ஒரு.பெ. | அவளுக்கு | அவள்க்கு |
| 10 | பட. மரி..பன். | அவர்களுக்கு | அத்தேகத்தினு |
| 11 | பட.பன். | அவர்களுக்கு | அவர்க்கு |
| 12 | பல.பால்.ஒரு. | அதற்கு | அதினு |
| 13 | பல.பால்.பன். | அவைகளுக்கு | அவய்க்கு |

#### 4.5.6.2. கொடைப்பொருள் வேற்றுமை உருபுகள்-வேறுபாடுகள்

இதுகாறும் கொடைப்பொருள் வேற்றுமை உருபுகள் தமிழிலும் மலையாளத்திலும் வேறுபடும் இடங்கள் ஆராயப்பட்டன. அவை இங்கே தொகுத்துக் கூறப்படுகின்றன.

1) தமிழில் வருதல் போதல் போன்ற வினைச்சொற்களுடன் வரும் பெயர்கள் இலக்குப்பொருளைக் குறிக்கையில் "-கு" உருபினை ஏற்கின்றன. மலையாளத்தில் அது இடப்பொருள் வேற்றுமையான "-இல்" உருபினை ஏற்றே இலக்குப்பொருளை சுட்டுகின்றது.

[அறைக்கு= ரூமில்]

2) இலக்குப்பொருளைக் குறிப்பிடுகையில் தமிழில் "-க்கு" உருபு தோன்றும். மலையாளத்தில் இடப்பொருள் வேற்றுமை உருபு மற்றும் ஒரு குறைச்சொல் சேர்ந்த "இலேக்கு" எனும் வடிவமாகத் தோன்றும்.

[அறைக்கு = ரூமிலேக்கு]

3) தமிழில் "கு" உருபு நோக்கத்தினை வெளிப்படுத்தும் முகமாக அமைகையில் அதற்குச்சமமான மலையாளத்தொடர் அம்மொழியின் "கொடைவேற்றுமை உருபான "னு" வையும், "வேண்டி" என்ற சொல்லுருபையும் ஏற்று வருகின்ற முறையையும் தற்கால மலையாளத்தில் காணலாம்.

[பணத்துக்கு = பணத்தினு வேண்டி]

4) தமிழில் நோக்கப்பொருளை வெளிப்படுத்தும் கொடை வேற்றுமை உருபு மலையாளத்தில் அப்பொருளை வெளிப்படுத்த அம்மொழியின் கொடைவேற்றுமையுருபு "னு" வையும் "ஆயி" என்னும் சொல்லுருபினையும் ஏற்று வருகின்றது.

[ க்கு = னு+ஆயி (னாயி) ]

5) நேரத்தினைக்குறிக்கும் மூன்று சொற்களான நேற்று, இன்று, நாளை என இம்மூன்றும் "கு" உருபினை ஏற்றோ ஏற்காமலோ தமிழில் வழங்கப்படும். ஆனால் மலையாளத்தில் இவை மூன்றுமே "கு" உருபினை ஏற்காமல் எழுவாய் வேற்றுமை போன்றே உருபின்றி அமைகின்றன.

| த | | ம |
|---|---|---|
| [நேற்று/ நேற்றைக்கு | = | இன்னலெ] |
| [நாளை/ நாளைக்கு | = | நாளெ] |
| [இன்று/ இன்றைக்கு | = | இன்னு] |

6) மொத்த நேரத்தைக் குறிப்பிடும் போது தமிழில் "கு" வேற்றுமையுருபு இடம்பெறுகின்ற வேளை, மலையாளத்தில் **"ஏய்க்கு"** எனும் ஒரு குறைச்சொல் இடம்பெறுகின்றது

**[க்கு= ஏய்க்கு]**

7) தமிழில் "கு" உருபை ஏற்ற பெயர்ச்சொல்லை அடுத்து உறவு முறைப்பெயரோ அல்லது உறவு எனும் பொருளுடைய பெயரோ வரும்போது; மலையாளத்தில் இவ்விடம் கிழமைப்பொருள் உணர்த்தும் கிழமை வேற்றுமையுருபு "ன்றெ" மட்டுமே வருகின்றது.

**[க்கு=ன்றெ ]**

8) தமிழில் சார்த்து நிலையினைக் குறிக்கின்ற தொடர்களில் கொடைவேற்றுமையின் "-கு" உருபு வருகின்ற இடத்தில் மலையாளத்தில் உடைமை வேற்றுமை வருகின்றது.

**[க்கு=ன்றெ ]**

9) தமிழில் சார்த்து நிலையினைக் குறிக்கையில், ஒப்புப்பொருளில் "-கு" உருபும் மலையாளத்தில் ஒப்பீட்டு நோக்கும் சொல்லான "விட" எனும் பொருள்படும் "காள்" எனும் சொல்லுருபும் இடம்பெறுகின்றன.

**[க்கு=காள் ]**

10) தமிழில் ஒரு துறைச்சிறப்பினைக் குறிக்க அத்தொடரில் வரும் முதல் பெயர்ச்சொல் "கு" உருபினை ஏற்கின்றது. மலையாளத்தில் இதே பொருளில் வழங்கும் வேளை "-கு" உருபுக்குப்பதில் இடவேற்றுமையுருபு "-இல்" வருகின்றது.

[க்கு=இல் ]

11) தமிழில் ஒரு விழுக்காட்டினைக் கூறும்போது பேரலகு "-கு" உருபினை ஏற்கின்றது மலையாளத்தில் உருபுகள் எவையுமே ஏற்காமல் எழுவாய் வேற்றுமையில் அப்பேரலகு அமைகின்றது.

[ நாளைக்கு = ஒரு திவசம் ]

12) தமிழில் கொடைவேற்றுமையுருபு வந்து விழுக்காட்டுப்பொருளை வெளிப்படுத்துவது போல் மலையாளத்தில் இடப்பொருள் வேற்றுமையுருபு வந்தும் விழுக்காட்டுப்பொருளை வெளிப்படுத்தும்.

[ நாளொன்றுக்கு = ஒரு திவசத்தில்]

13) தமிழில் "-கு" உருபினை ஏற்ற பெயர்ச்சொல்லை அடுத்து ஒரு எண்ணுப்பெயர் வரும்போது 'ஒவ்வொன்றிற்கு இத்தனை' எனும் பொருள் பிறக்கிறது. மலையாளத்தில் "ஓரோருத்தருக்கும்" என்ற சொல்லே பயன்படுத்தப்படுகின்றது.

[ஆளுக்கு = ஓரோருத்தர்க்கும் ]

14) தமிழில் "ஒவ்வொரு" எனும் பொருளில் "-கு" உருபு வருகின்ற இடத்தில் மலையாளத்தில் இடப்பொருள் வேற்றுமை உருபு "-இல்" வருகின்றது.

[ க்கு = இல் ]

15) தமிழில் "-கு" உருபு வெளிப்படுத்தும் பொருள் மலையாளத்தில் "இல் நின்னும்" எனப்படும் நீங்கல் வேற்றுமையினைப் பயன்படுத்தி வெளிப்படுத்தப்படுகின்றது.

[ க்கு = இல் நின்னும் ]

## 4.6. தமிழிலும் மலையாளத்திலும் நீங்கல் வேற்றுமை

### 4.6.1. தமிழில் நீங்கல் வேற்றுமை

"ஐந்தா குவதே

இன்னெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி"

-தொல்.சொல்-77

"-இன்" என்பதை நீங்கல் வேற்றுமை உருபாகக் குறிப்பிடுகிறது தொல்காப்பியம். நன்னூலோ; "-இன்" னோடு, "-இல்" என்ற உருபையும் சேர்த்துக் கொண்டு,

" ஐந்தா வதனுருபு இல்லும் இன்னும்

நீங்கல் ஒப்பு எல்லை ஏதுப்பொருளே "

நன் ( 299).

என்று கூறுகின்றது.

ஐந்தாம் வேற்றுமையினை "நீக்கப்படுபொருள் வேற்றுமை" என்பார் கால்டுவெல். தமிழில் நீக்கப்படுபொருள் வேற்றுமை உருபுகள் அதாவது ஐந்தாம் வேற்றுமை உருபுகள்; "-இல்" லும், "-இன்"னுமாம் என்பார் இவர். (திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம், டாக்டர்.கால்டுவெல், தமிழாக்கம், கா.கோவிந்தன், 2004 , பக்-256).

ஜான் சாமுவேல் அவர்கள், நீங்கற்பொருளை விளக்கும் போது, "இடத்திலிருந்து. நீங்குதலை நீங்கற்பொருள் வேற்றுமை உணர்த்துகின்றது. தமிழில் நீங்கற்பொருளையுணர்த்த; "-இருந்து" என்ற சொல்லுருபு பயன்படுகின்றது என்று கூறுகின்றார். ( டாக்டர். ஜி. ஜான் சாமுவேல், 2008, பக்- 155).

தோன்றும் தொடங்கும் இடம் போன்றவற்றைக் காட்டும் பெயருக்கும், பயனிலைக்கும் இடையே உள்ள தொடர்பினைக் காட்டும்

வேற்றுமைப்பொருள் நீங்கல் வேற்றுமை எனப்படும். (முனை. ச.அகத்தியலிங்கம், தமிழ் மொழி அமைப்பியல், 2002, பக் - 138).

### 4.6.2. *தமிழில் நீங்கல் வேற்றுமையுருபுகள்*

"நீங்கல் வேற்றுமையுருபுகளாக, பழந்தமிழில் ; "-இன்" , :-இல்" , "-இனின்று" , "-இலிருந்து" ஆகியவை வழங்கின. இக்காலத்தில் "-இலிருந்து", "-இடமிருந்து" ஆகியவைகளே வழங்குகின்றன". (டாக்டர். கு.பரமசிவம், இக்காலத்தமிழ் மரபு, 1983, பக்- 155).

### 4.6.3. மலையாளத்தில் நீங்கல் வேற்றுமை

மலையாள மொழியில் நீங்கல் வேற்றுமையினைக்குறித்து கீழ்க்கண்டவாறு குறிப்பிடுவார் டாக்டர். ஆசர் அவர்கள். மலையாள மொழியில் குண்டர்ட் என்ற இலக்கணவியலாரும், பேரா. எல்.வி.இராமசுவாமி ஐயரும் "நீங்கல் வேற்றுமை" (Ablative Case) என்றொரு வேற்றுமையினையும் கூறுகின்றனர். இதன் வேற்றுமையுருபாக "இல்நின்னு" என்பதனைக் குறிப்பிடுகின்றனர். ஆனால் பிற இலக்கணிகள் இந்த "இல்நின்னு" என்பதனை "இல்" என்பது இட வேற்றுமை உருபு என்றும் "நின்னு" என்பது சொல்லுருபு என்றும் கூறுகின்றனர். ( ஆசர், மலையாளம், 1997, பக்- 192).

பேரா.ஜான் சாமுவேல் அவர்கள் தமிழில் நீங்கற் பொருளைக்குறிக்க "இருந்து" என்ற சொல்லுருபும் மலையாளத்தில் இதற்கிணையான "நின்னு" என்ற சொல்லுருபும் பயன்படுத்தப்படுகின்றன என்று கூறுகின்றார்.

### 4.6.4. மலையாளத்தில் நீங்கல் வேற்றுமை உருபு

நீங்கல் வேற்றுமையுருபாக, "இல்நின்னு" எனும் வடிவத்தினை மலையாள இலக்கணிகள் கூறுகின்றனர்.

#### 4.6.5. நீங்கல் வேற்றுமைத்தொடர்கள் - மொழிபெயர்ப்புகள்

இனி; தற்காலத்தமிழில் நீங்கற்பொருள் வேற்றுமையுருபுகள் வரும் விதமும் அவை மலையாள மொழிக்கு மொழிபெயர்க்கப்படுகையில் ஏற்படும் மாற்றங்கள் குறித்தும் கீழே ஆய்வு செய்யப்பட்டு; தமிழ்-மலையாள மொழிகளில் வழங்கும் நீங்கல்வேற்றுமையின் ஒற்றுமை வேற்றுமைகள் காணப்படுகின்றன.

தற்காலத்தமிழில் 1. "-இல் இருந்து", 2. "-இடமிருந்து" , 3. "-இடத்திலிருந்து" ஆகியவை நீங்கல் வேற்றுமையுருபுகளாகப் பயன்படுவதாக பேரா.பரமசிவம் அவர்கள் கூறுகின்றார். தற்கால மலையாளத்தில் நீங்கல் பொருளைக்குறிக்க, "இல் நின்னும்" எனும் வடிவமும் , "பக்கல் நின்னும்", "அடுத்து நின்னும்" எனும் வடிவங்கள் பயன்பாட்டில் உள்ளன.

#### 4.6.5.1. "-இல் இருந்து" உருபு நீங்கற்பொருளில் வருதல்

சான்று

த (1) எள்ளிலிருந்து எண்ணெய் எடுக்கலாம்

ம (2) எள்ளில் நின்னு எண்ண எடுக்காம்

தற்காலத் தமிழில் இல் இருந்து எனும் வடிவம் நீங்கற் பொருளை வெளிப்படுத்தப் பயன்படுகிறது. இது "-இல்" எனும் இடவேற்றுமையுருபும், "-இருந்து" எனும் சொல்லுருபும் இணைந்த அமைப்பாகும். இங்கு வரும் "-இருந்து" எனும் சொல்லுருபை "இடவேற்றுமையுருபிற்கான சொல்லுருபு" (Locative Postposition) என்பதின் கீழ் வகைப்படுத்துவார் பொன்.கோதண்டராமன். ( A Grammar of Contemporary Literary Tamil , 1997, Page 41.) தாமசு லேமன் அவர்கள் இதனைக் கட்டுறு பின்னுருபுகள் (Bound Postposition)

என்பார் இந்தச் சொல்லுருபு இடவேற்றுமையுருபுகளின் கூட மட்டுமே வருகின்றது என்பது இதனால் விளங்கும் இந்த "-இல் இருந்து" எனும் வடிவம் முழுமைக்கும் நீங்கல் வேற்றுமையுருபே என்பது கு.பரமசிவம் அவர்களின் கருத்து ஆகும். ( இக்காலத்தமிழ் மரபு, பக் - 155) தற்கால மலையாளத்தில் இதற்கு இணையான "-இல் நின்னு" எனும் வடிவம் வழங்குகின்றது. எனவே அமைப்பு அடிப்படையில் வேறுபாடு இருமொழிகளிலும் அமையவில்லை.

**[ இல் இருந்து = இல் நின்னு ]**

"-இல் இருந்து" எனும் வடிவம் உயிரில்லாப் பெயர்களுடனும், "-இடமிருந்து" என்பது உயிருள்ள பெயர்களுடனும் வரும் என்பார் தமிழ் இலக்கணிகள். (தாமசு லேமன், கு.பரமசிவம்) .

### 4.6.5.2. "-இல்இருந்து" எனும் வடிவம் உயிரில்லாப்பெயர்களுடன் வருதல்

சான்று

த (3) வடையிலிருந்து எண்ணெய் வடிகிறது

த (4) அவன் கடையிலிருந்து வருகிறான்

மலையாளத்தில்,

ம (5) வடயில்நின்னும் எண்ண ஒழுகுன்னு.

ம (6) அவன் கடையில்நின்னும் வருன்னு

என்றிவ்வாறு தமிழைப்போன்றே அமைவதனைக் காணலாம். இவ்விடம் வேறுபாடு எதுவும் அமைவதில்லை. அதாவது தமிழில் "இலிருந்து" எனும் உருபு வருமிடங்களில் மலையாளத்தில் "இல்நின்னும்" எனும் உருபு வருகின்ற சூழலை இவ்விடம் காணலாம்.

**4.6.5.3. "-இடமிருந்து" எனும் வடிவம் உயர்திணைப் பெயர்களுடன் வருதல்**

*சான்று:*

த (7) உன் அப்பாவிடமிருந்து பணம் வாங்கி வா.

த (8) என் தங்கையிடமிருந்து போன் வரவில்லை.

இத்தொடர்களில் உயிருள் பெயர்களுடன் "இடமிருந்து" எனும் உருபு வருகின்றது. மளையாளத்தில் உயிருள் பெயர்கள் "இடமிருந்து" உருபுக்குப்பதில் என்னென்ன எடுத்து வருகின்றன எனக் கீழே ஆய்வு செய்யப்படுகிறது.

சான்று:

த (9) உன் **அப்பாவிடமிருந்து** பணம் வாங்கி வா.

ம (10) நின்றெ **அச்சன்றெகையில் நின்னும்** பணம் வாங்ஙி வரு.

ம(11)நின்றெ **அச்சன்றெபக்கல் நின்னும்** பணம் வாங்ஙி வரு.

ம(12)நின்றெ **அச்சன்றெ அடுத்து நின்னும்** பணம் வாங்ஙி வரு.

தமிழில் உயர்திணைப்பெயருடன் "இடமிருந்து" நேரடியாகச் சேர்க்கப்படுகிறது; மேலும் உயிரற்ற பெயர்களுடன் "இலிருந்து" வருகின்றது என்று கண்டோம். ஆனால் மலையாளத்தில் "இலிருந்து" வுக்கு இணையான "இல்நின்னும்" எனும் வடிவம் உயர்திணைப் பெயருக்குப் பின்னால் சேர்க்கப்பட்டு, வருகின்ற ஒரு முறைமையினைக் காணமுடிகின்றது. (10). அதே நேரம், மலையாளத்தில் உயர்திணைப் பெயர்கள் "இடமிருந்து" உருபுக்குப்பதிலாக, "பக்கல்" எனும் சொல்லுருபும், (11) "அடுத்து" எனும் சொல்லும் (12) எடுத்து வருகின்றன.

சான்று (10) ல், உயர்திணைப்பெயருடன், உடைமைப்பொருள் வேற்றுமையான "-ன்றெ" வும், "கை" எனும் பொருட்பெயரும்

அத்துடன் "இல் நின்னும்" எனும் நீங்கற்பொருள் வேற்றுமையுருபும் வருகின்றன.

சான்று (11) ல் , உயர்திணைப்பெயருடன் உடைமைப்பொருள் வேற்றுமையான "-ன்றெ" வும், "பக்கல்" எனும் சொல்லுருபும், "நின்னும்" எனும் சொல்லுருபும் வருகின்றன. "பக்கல்" என்பது சொல்லுருபு என்பார் டாக்டர். இராதாகிருஷ்ணன் (Postpositions in a Dravidian Language, Page 279).

சான்று (12) ல் , உயர்திணைப்பெயரான "அச்சன்" உடன் உடைமைப்பொருள் வேற்றுமையான "-ன்றெ" வும், "அடுத்து" எனும் சொல்லும், "நின்னும்" எனும் சொல்லுருபும் வருகின்றன. எனவே,

தமிழின் "இடமிருந்து" உருபினை மலையாள மொழி மேற்கண்ட விதங்களில் வெளிப்படுத்துகின்றது என்பது புலனாகின்றது. அமைப்படிப்படையில் அமையும் வேறுபாடுகள் இவ்விடம் கண்டறியப்படுகின்றன.

**[ இடமிருந்து = ன்றெ கையில் நின்னும் ]**

**[ இடமிருந்து = ன்றெ பக்கல் நின்னும் ]**

**[ இடமிருந்து = ன்றெ அடுத்து நின்னும் ]**

**4.6.5.4. "-இடமிருந்து" உருபு உயிரில்லாப்பொருட்பெயர்களுடன் வருதல்**

"-இடமிருந்து" எனும் உருபு உயிரில்லாப் பொருட்பெயர்களுடனும் வரலாம் என்று கு.பரமசிவம் அவர்கள் கூறுகின்றார். ( பக் - 156)

சான்று

த(13) இந்தியா ரஷியாவிடமிருந்து நிதியுதவி பெறுகிறது.

ம(14) இந்தியா ரஷ்யயில்நின்னும் தனசகாயம் ஸ்வீகரிக்குன்னு.

இவ்விடம் இந்தியா உயிரில்லாப்பெயர் ஆயினும் "-இடமிருந்து" எனும் உருபு வருகின்றது. ஆனால் இதன் மலையாள மொழிபெயர்ப்பு "-இல் நின்னு" எனும் உருபினை ஏற்று வருகின்றது. இவ்விடம் தமிழில் "-இடமிருந்து" எனும் உருபே பொருத்தமானதாக அமைகின்றது. தமிழ் இவ்விடம் உயர்திணைப்பெயர்களின் உருபான "இடமிருந்து" வினை ஏற்கிறது. இருப்பினும் மலையாளம் இவ்விடம் உயிரற்ற பொருட்பெயரின் நீங்கல் வேற்றுமையுருபான "இல் நின்னும்" வையே ஏற்கின்றது. நீங்கல் பொருள் வேற்றுமையில் தமிழ் - மலையாளத்துக்கு உள்ள குறிப்பிடும் வேறுபாடாக இது அமைகின்றது.

[ இடமிருந்து = இல் நின்னும் ]

**4.6.5.5. "-இல் இருந்து" எனும் வடிவம் உயர்திணைப்பெயர்களுடன் வருதல்**

. "இல் இருந்து" என்ற நீங்கல் வேற்றுமையுருபு உயிரல் பெயர்களுடன் வருவதோடு, உயர்திணைப்பெயர்களுடனும் வரும் என்பது கு.பரமசிவம் அவர்களின் கருத்தாகும்.

சான்று

த (15) அந்த மாணவியரிலிருந்து ஒருவரை அழைத்து வா

ம (16) ஆ வித்யார்த்தினிகளில்நின்னும் ஒராளெ விளிக்கு.

தமிழில் உயர்திணைப்பெயர்களுடன் "இல்இருந்து" வருகையில் மலையாளத்திலும் அதே முறையில் நீங்கல்வேற்றுமை அமைவதனைக் காணமுடிகின்றது. அதாவது, "இல் நின்னும்" உருபே மலையாளத்திலும் வருகின்றது. இங்கே இரு தொடர்களிலும் வேறுபாடு அமைவது இல்லை.

**4.6.5.6. அஃறிணை உயிருடைப் பெயரோடு "-இடமிருந்து" வருதல்**

அஃறிணை உயிருடைப் பெயர்களோடு "இடமிருந்து" எனும் நீங்கல் வேற்றுமையுருபு வருகின்றது என்பார் கு.பரமசிவம். மலையாளமொழி இச்சூழலில் எவ்வாறு செயல்படுகிறது எனக் கீழே காணலாம்

சான்று

த (17) இந்த **நாயிடமிருந்து** துர்நாற்றம் வீசுகிறது

ம (18) ஈ பட்டி**யில்நின்னும்** துர்கந்தம் வமிக்குன்னு.

தமிழில் இவ்விடம் "இடமிருந்து" வரினும்; மலையாளத்தில் "இல் இருந்து" வுக்கு இணையான "இல் நின்னும்" எனும் உருபே வந்தமைகின்றது. இருமொழிகளும் நீங்கல் வேற்றுமை ஏற்பதில் தெளிவான வேறுபாட்டினை இங்கு காணலாம்.

**[ இடமிருந்து = இல் நின்னும் ]**

நீங்கல் பொருளில் 1. இடம்விட்டு இடம் நீங்குதலும், 2. காலம் விட்டுக் காலம் நீங்குதலும் அடங்கும் என்பார் கு.பரமசிவம். இவை மலையாளத்தில் அமையும் முறைகள் கீழே ஆயப்படுகின்றன

#### 4.6.5.7. காலம் விட்டுக் காலம் நீங்குதல்

சான்று

த (19)அவன் காலையிலிருந்து ஒன்றுமே சாப்பிடவில்லை.

ம (20) அவன் ராவிலெ முதல் ஒன்னுமே கழிச்சில்லா.

தமிழில் காலம் விட்டுக் காலம் நீங்குதலை வெளிப்படுத்த நீங்கல் வேற்றுமையுருபு "இல் இருந்து" இடம்பெறுகின்ற இடத்தில் மலையாளத்தில் "முதல்" எனும் சொல்லுருபு இடம்பெறுகின்றது "முதல்" எனும் சொல்லுருபை தற்காலத்தமிழின் . நீங்கல் வேற்றுமையுருபு என்பார் பேரா. அகத்தியலிங்கம். (தமிழ் மொழி அமைப்பியல் பக் - 139). மலையாளத்திலும் "முதல்" எனும் சொல்லுருபு இதே பொருளில் பயன்படுகிறது. "முதல்" என்பதை மலையாள மொழியின் சொல்லுருபுகளின் கீழ் வகைப்படுத்துவார் டாக்டர்.இராதாகிருஷ்ணன். (Postpositions in a Dravidian Language, Page, 261). இருமொழிகளிலும் இவ்விடம் வேறுபாடு அமைவதனைக் காணலாம்.

**[ இல் இருந்து = முதல் ]**

தமிழில் காலம் விட்டுக் காலம் நீங்குதலை வெளிப்படுத்த "இல் இருந்து" உருபு பயன்படுகின்ற இடத்தில் மலையாளத்தில் "தொட்டு" எனும் சொல்லுருபு வருகின்றது.

சான்று

த (21) போன வருடத்திலிருந்து மழை பெய்கிறது.

ம (22) கழிஞ்ஞ வர்ஷம் தொட்டு மழ பெய்யுன்னு.

தமிழிலும் இத்தகைய சொல்லுருபைப் பயன்படுத்தி இத்தொடரைக் (21) கூற இயலும்.

சான்று

த (23) போன வருடந்தொட்டு மழை பெய்கிறது.

இங்கு குறிப்பிடப்படவேண்டிய செய்தி எதுவெனில், தமிழிலும் மலையாளத்திலும் "தொட்டு" எனும் சொல்லுருபால் நீங்கற்பொருளை இவ்விடம் வெளிப்படுத்த இயலும் எனினும் தமிழில் கூறுவது போல் சான்று (21) மலையாளத்தில் கூற இயலாது என்பதே ஆகும். தற்காலத்தமிழில் "தொட்டு" என்பதை நீங்கற்பொருள் உருபு என்பார் பேரா.அகத்தியலிங்கம். மலையாளத்தில் "தொட்டு" என்பதைச் சொல்லுருபு என்பார் டாக்டர்.இராதாகிருஷ்ணன். (Postpositions in a Dravidian Language, Page 221). இரு தொடர்களும் வேறுபடும் சூழலை இங்கு காணலாம்.

[ இல் இருந்து = தொட்டு ]

**4.6.5.8. இடம் விட்டு இடம் நீங்குதல்**

தமிழில் இடம் விட்டு இடம் நீங்குதலில் "இல் இருந்து" எனும் உருபு பயன்படுகின்றது. மலையாளத்தில் இதற்கிணையான "இல் நின்னும்" எனும் உருபு பயன்படுகிறது.

சான்று

த(24) குழந்தை வீட்டிலிருந்து பள்ளிக்குச்செல்கிறது.

ம(25) குட்டி வீட்டில் **நின்னும்** ஸ்கூளிலேக்கு போகுன்னு.

இருதொடர்களுக்கும் வேறுபாடு எதுவும் இங்கே அமையவில்லை.

#### 4.6.5.9. "பிடித்து" எனும் சொல் நீங்கற்பொருளில் வருதல்

தற்காலத்தமிழில் "பிடித்து" எனும் சொல் பெருவாரியாக நீங்கற்பொருளில் பயன்படுத்தப்படுவதாக அகத்தியலிங்கம் அவர்கள் குறிப்பிடுவார் இச்சொல்லை நீங்கற்பொருளைக் குறிக்கும் "உருபு" என்பார் இவர். (பக் - 139). மலையாளத்தில் இச்சூழலில் "முதல்" எனும் சொல்லுருபு வருகின்றது.

சான்று

த (26) வெள்ளிக்கிழமை **பிடித்து** மழை பெய்கின்றது.

ம (27) வெள்ளியாழ்ச்ச **முதல்** மழ பெய்யுன்னு

இரு மொழித்தொடர்களும் வேறுபடுவதனை இங்கே காணலாம்.

**[ பிடித்து = முதல் ]**

**4.6.6.** தமிழ்-மலையாளத்தில் நீங்கற்பொருள் வேற்றுமை ஏற்ற பதிலிடு பெயர்வடிவங்கள் கீழே தரப்படுகின்றன.

| எண் | பதிலிடுபெயர் | தமிழ் | மலையாளம் |
|---|---|---|---|
| 1 | தன்மை-ஒருமை | என்னிலிருந்து | என்னில் நின்னும் |
| 2 | உ.த.பன் | நம்மிலிருந்து | நம்மில் நின்னும் |
| 3 | உதா.த.பன் | எங்களிலிருந்து | ஞங்ஙளில் நின்னும் |
| 4 | முன்.ஒரு. | உன்னிலிருந்து | நின்னில் நின்னும் |
| 5 | முன்.மரி. பன். | உங்களிலிருந்து | நிங்ஙளில் நின்னும் |
| 6 | முன்.சிற.உ.ய.ஒரு. | தங்களிலிருந்து | தாங்களில் நின்னும் |
| 7 | முன்.பன் | உங்களிலிருந்து | நிங்ஙளில் நின்னும் |
| 8 | பட.ஒரு.ஆ. | அவனிலிருந்து | அவனில் நின்னும் |
| 9 | பட.ஒரு.பெ. | அவளிருந்து | அவளில் நின்னும் |
| 10 | பட.மரி..பன். | அவர்களிலிருந்து | அவரில் நின்னும் |
| 11 | பட.பன். | அவர்களிலிருந்து | அவரில் நின்னும் |
| 12 | பல.பால். ஒரு. | அதிலிருந்து | அதில் நின்னும் |
| 13 | பல.பால்.பன். | அவையிலிருந்து | அவயில் நின்னும் |

### 4.6.7. நீங்கற்பொருள் வேற்றுமை உருபுகள்-வேறுபாடுகள்

தமிழிலும் மலையாளத்திலும் நீங்கற்பொருள் வேற்றுமையுருபுகள் வரும் முறைகளை ஆராய்ந்து; அவை வேறுபடும் இடங்கள் கீழே தொகுத்துக் கூறப்படுகின்றன.

1. தமிழின் "இடமிருந்து" உருபினை மலையாள மொழி கீழ்க்கண்ட விதங்களில் வெளிப்படுத்துகின்றது

**[ இடமிருந்து = ன்றெ கையில் நின்னும் ]**

**[ இடமிருந்து = ன்றெ பக்கல் நின்னும் ]**

**[ இடமிருந்து = ன்றெ அடுத்து நின்னும் ]**

2. சில உயிரில்லாப்பெயர்களுடன் தமிழில் "இடமிருந்து" எனும் உருபு வருகின்றது. ஆனால் இதன் மலையாள மொழிபெயர்ப்பு "-இல் நின்னு" எனும் உருபினை ஏற்று வருகின்றது.

**[ இடமிருந்து = இல் நின்னும் ]**

3. தமிழில் அஃறிணை உயிருடைப்பெயர்களோடு "இடமிருந்து" எனும் நீங்கல் வேற்றுமையுருபு வருகின்றது. எனினும்; மலையாளத்தில் "இல் இருந்து" வுக்கு இணையான "இல் நின்னும்" எனும் உருபே வந்தமைகின்றது.

**[ இடமிருந்து = இல் நின்னும் ]**

4. தமிழில் காலம் விட்டுக் காலம் நீங்குதலை வெளிப்படுத்த நீங்கல் வேற்றுமையுருபு "இல் இருந்து" இடம்பெறுகின்ற இடத்தில் மலையாளத்தில் "முதல்" எனும் சொல்லுருபு இடம்பெறுகின்றது.

**[ இல் இருந்து = முதல் ]**

5. தமிழில் காலம் விட்டுக் காலம் நீங்குதலை வெளிப்படுத்த "இல் இருந்து" உருபு பயன்படுகின்ற இடத்தில் மலையாளத்தில் "தொட்டு" எனும் சொல்லுருபு வந்து அப்பணியினைச் செய்கின்றது.

**[ இல் இருந்து = தொட்டு ]**

6. தற்காலத் தமிழில் நீங்கற்பொருளைக் குறிக்க "பிடித்து" எனும் சொல்லுருபு வருகின்றது. மலையாளத்தில் இதற்கிணையான தொடர் "முதல்" எனும் சொல்லுருபையே எடுத்து வருகின்றது.

**[ பிடித்து = முதல் ]**

## 4.7. தமிழிலும் மலையாளத்திலும் உடைமை வேற்றுமை

### 4.7.1. உடைமைப்பொருள் வேற்றுமை

பெயர்ச்சொல்லுடன் ஆறாம் வேற்றுமையுருபு சேரும் போது, அப்பெயர்ச்சொல்லுக்கு உரிமையான, உடைமையான என்ற பொருள் வெளிப்படுத்தப்படுகின்றது. இவ்வுடைமைப் பொருளைத் தரும் வேற்றுமையாதலால் இது உடைமை வேற்றுமை, கிழமை வேற்றுமை, உரிமை வேற்றுமை என்று பல பெயர்களாலும் தமிழ் இலக்கணவியலாளர்களால் அழைக்கப்படுகின்றது. இது 1. தற்கிழமை 2. பிறிதின் கிழமை என இரு வகைப்படும். தற்கிழமையென்பது தன்னிலிருந்து பிரிக்க முடியாத உடைமை. (Inalienable). பிறிதின் கிழமை என்பது தன்னிலிருந்து பிரிக்கக் கூடிய உடைமை. (alienable) என்று கு.பரமசிவம் அவர்கள் தமது நூலில் விளக்குவார். (இக்காலத்தமிழ் மரபு, பக்- 166).

### 4.7.2. தமிழில் உடைமைப்பொருள் வேற்றுமை

கிழமை வேற்றுமை தமிழிலக்கணங்களில் ஆறாம் வேற்றுமையாகக் கூறப்படுகின்றது. தொல்காப்பியம் ஆறாம் வேற்றுமையினை,

"ஆறாகுவதே,
'அது' எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி;
தன்னினும் பிறிதினும் இதனது இது எனும்
அன்ன கிளவிக் கிழமைத்து அதுவே" என்று குறிப்பிடுகின்றது.

தொல். சொல். (563)

நன்னூலார்,

"ஆற னொருமைக் கதுவுமாதுவும்
பன்மைக் கவ்வு முருபாம்" என்று கூறுகின்றார்.

நன். (300).

தமிழிலக்கணிகளால் கூறப்பட்டுள்ள அனைத்து வேற்றுமைகளும் தொடர் ஒன்றில் இடம்பெறும் வினைச்சொல்லுக்கும் பெயர்ச்சொல்லுக்கும் இடையேயுள்ள தொடர்பினை/உறவினை வெளிப்படுத்துகின்றன. ஆனால் உடைமைப்பொருள் வேற்றுமை; தொடர் ஒன்றில் அமையும் இரு பெயர்களுக்கிடையேயான உறவினைப் புலப்படுத்துகின்றது. சமசுகிருத இலக்கணங்கள் இதனை ஒரு வேற்றுமையாகக் கருதுவதில்லை.

முனை.அகத்தியலிங்கம் அவர்கள், ஒரு பெயருக்கும் அது அவாவி நிற்கும் மற்றொரு பெயருக்கும் இடையே காணப்படும் உடைமைப் பொருளைக் காட்டுவதே உடைமை வேற்றுமை என்று இவ்வேற்றுமையினை வரையறை செய்கின்றார். (தமிழ்மொழி அமைப்பியல், பக் 138).

### 4.7.3. மலையாளத்தில் உடைமைப்பொருள் வேற்றுமை

மலையாளத்தில் ஆறாம் வேற்றுமையினை "சம்பந்திகா" என்று . கேரள பாணினிய ஆசிரியர் குறிப்பிடுகின்றார். மலையாள மொழியிலும் இவ்வேற்றுமை பெயருக்கும் பெயருக்கும் இடையேயுள்ள உறவினையே சுட்டுவதாக அமைகின்றது. தற்கால மலையாளம் இரண்டு உடைமை வேற்றுமை உருபுகளைக் கொண்டுள்ளது.

### 4.7.4. தமிழில் உடைமை வேற்றுமை உருபுகள்

பழந்தமிழில் கிழமைவேற்றுமை உருபுகளாக, "-அது", "-ஆது", "-அ" போன்றன வழக்கில் இருந்தன. இக்காலத்தமிழில் "-அது" , "-உடைய", "-இன்" போன்றவை மொழியில் வழங்குகின்றன. இவற்றுள் "இன்" சாரியை என்றும் "அது" மட்டுமே உடைமைப்பொருள் வேற்றுமையாகக் கொள்ளத் தக்கது என்றும் தாமசு லேமன் அவர்கள் குறிப்பிடுகின்றார். ( Thomas Lehmann, A Grammar of Modern Tamil, Page - 43). "உடைய"

என்பதைப் பின்னுருபு (Post Position) என்பார் பேரா.பொன்கோதண்டராமன் அவர்கள்.

### 4.7.5. மலையாளத்தில் உடைமை வேற்றுமை உருபுகள்

தற்கால மலையாளத்தில் உடைமை வேற்றுமை உருபுகளாக, "-உடெ" "-ன்றெ" என்ற இரண்டு உருபுகளை மலையாள இலக்கண ஆசிரியர்கள் குறிப்பிடுகின்றனர் இவற்றுள் "-ன்றெ" எனும் உருபு "-அன்" என முடியும் ஒருமைப்பெயர் அடியுடன் வரும். "-உடெ" எனும் உருபு; பிற ஒருமைப்பெயர்களுடனும், அனைத்து பன்மைப்பெயர்களுடனும் வரும் (ஆசர் & குமாரி, மலையாளம், பக் - 192).

### 4.7.6. தமிழ் உடைமை வேற்றுமைத் தொடர்கள் - மொழிபெயர்ப்பு

கிழமை வேற்றுமைப்பொருள் தரும் தமிழ்த்தொடர்கள் மலையாள மொழிக்கு மொழிபெயர்க்கப்படுகையில் அவை பெறும் மாற்றங்கள் கீழே ஆராயப்படுகின்றன.

#### 4.7.7.1. பெயர்ச்சொல் உடைமை உருபின்றி உடைமைப்பொருள் தருதல்

தமிழில் பெயர்ச்சொல் ஒன்று உருபுகள் எதையும் பெறாமலேயே கிழமைப்பொருளைத் தரவல்லது என்பர் அகத்தியலிங்கம் மற்றும் கு,பரமசிவம் ஆகியோர்.

சான்று:

(1) த தமிழ்த் துறை நூலகம்

(2) ம தமிழ் விபாக வாயனசாலா

(3) த பாரதிராஜா படம்

(4) ம பாரதிராஜயுடெ படம்

சான்று (1) ல் தமிழில் கிழமை வேற்றுமை உருபு இடம் பெறாமலேயே கிழமைப்பொருள் வெளிப்படுத்தப்படுகின்றதனைக் காணமுடிகிறது.

தற்கால மலையாள மொழியிலும் இதே போன்றே கிழமை உருபினை ஏலாமலேயே கிழமைப்பொருளை வெளிப்படுத்தும் வேற்றுமைத் தொடர்கள் பயன்பாட்டில் உள்ளன என்பது சான்று (2)-ன் மூலம் புலனாகிறது. ஆனால் உடைமை வேற்றுமையின்றி உடைமைப்பொருள் வெளிப்படுத்தும் அனைத்துத்தொடர்களும் மலையாளத்திலும் அவ்வாறே வருவதில்லை என்பது சான்று (4) ன் மூலம் புலனாகிறது. தமிழில் சான்று (3) ல் பாரதிராஜா படம் எனும் போது, பாரதிராஜாவின் படம் என்பது தெளிவு. ஆனால் மலையாளத்தில் பராதிராஜா படம் என்று கூறும் வழக்கம் இல்லை. மாறாக கிழமை/உரிமைப்பொருள் சுட்டும் வேற்றுமை உருபான "-உடெ" கட்டாயம் இவ்விடம் இடம்பெற்றால் மட்டுமே பாரதிராஜாவின் படம் என்ற பொருள் கிடைக்கிறது. இல்லாவிடில் மலையாளத்தில் இத்தொடர் பொருளற்ற தொடராக அமைகின்றது. இது தமிழ்-மலையாள மொழிகளுக்கிடையே அமையும் வேறுபாடு ஆகும்.

**4.7.7.2.மாற்றுப்பெயர் வடிவங்கள் உடைமைப்பொருள் வேற்றுமையை ஏற்று வருதல்**

தமிழில் தன்மை முன்னிலை போன்ற மாற்றுப்பெயர்களின் வேற்றுமை ஏற்கும் வடிவங்கள் வேறு பெயர்களுடன் இணைந்து உடைமைப்பொருளை வெளிப்படுத்தும். பொதுவாகத் தமிழில் இவை உடைமை வேற்றுமை உருபின்றி உடைமைப் பொருளை வெளிப்படுத்துகின்றன. மலையாளத்தில் இவை உடைமை வேற்றுமை உருபினை ஏற்றே உடைமைப் பொருளை வெளிப்படுத்துகின்றன.

சான்று:

(5) த இது என் பை

(6) ம இது என்றெ சஞ்சி

(7) த நம் நாடு

(8) ம நம்முடெ நாடு

(9) த அது எங்கள் தோட்டம்

(10) ம அது ஞங்ஙளுடெ தோட்டமாணு

(11) த அது உம் விருப்பம்

(12) ம அது நிங்ஙளுடெ இஷ்டட்டம்

(13) த உனது பெயர் என்ன?

(14) ம நின்றெ பேர் எந்தாணு?

(15) த உங்கள் ஊர் எது?

(16) ம தாங்களுடெ நாடு ஏதாணு?

இங்கே [என் = என்றெ], [நம் = நம்முடெ], [எங்கள் = ஞங்ஙளுடெ], [உனது = நின்றெ] [ உம் = நிங்ஙளுடெ ] , [உங்கள் = நிங்ஙளுடெ] எனத் தமிழின் வேற்றுமையேற்கும் தன்மை , முன்னிலை மாற்றுப்பெயர் வடிவங்கள் உடைமை வேற்றுமை உருபினை ஏற்காமல் வருவதும் அதே வடிவங்கள் மலையாளத்தில் உடைமை வேற்றுமை உருபினை ஏற்றே வருவதனையும் மேற்கண்ட சான்றுகளின் மூலம் அறியலாம்

**4.7.7.3.1. தற்கிழமை**

தற்கிழமை என்பது தன்னிலிருந்து பிரிக்க முடியாத உரிமைப்பொருளைக் குறிக்கும் சான்றாக, ஒருவரின் குணம், ஒருவரின் தொழில் மற்றும் உடலுறுப்புக்களைக் கூறுவர். ( கு பரமசிவம், பக் - 176) இத்தகைய தற்கிழமை தமிழ் வேற்றுமைத்தொடர்கள் மலையாளத்திற்கு மொழிபெயர்க்கப்படுகையில் ஏற்படும் மாற்றங்கள் கீழே கொடுக்கப்படுகின்றன

4.7.7.3.1.1 தற்கிழமை-குணம்

சான்று:

(17) த இராமனின் நேர்மைக்குணம்

(18) ம இராமன்றெ சத்யசந்ததா

(19) த இராமனது நேர்மைக்குணம்

(20) ம இராமன்றெ சத்யசந்ததா

(21) த இராமனுடைய நேர்மைக்குணம்

(22) ம இராமன்றெ சத்யசந்ததா

குணத்தினை வெளிப்படுத்தும் தற்கிழமைத் தமிழ்த்தொடர்களை மலையாளத்திற்கு மொழிபெயர்க்கும் போது தமிழ் உடைமை வேற்றுமைகளான "-இன்" , "-அது" , "உடைய" போன்றவை மலையாளத்தில் அம்மொழியின் உடைமை வேற்றுமையான "-ன்றெ" வினை ஏற்றுவருகின்றன. தமிழ் - மலையாள உடைமை வேற்றுமைத் தொடர்களில் இவ்விடம் வேறுபாடு எதுவும் காணப்படவில்லை.

4.7.7.3.1.2. தற்கிழமை - தொழில்

சான்று:

(23) த அவளுடைய குலத்தொழில் நடனம்

(24) ம அவளுடெ குலத்தொழில் நிர்த்தமாணு

தற்கிழமைத்தொடர்கள் தொழில் என்ற பொருளில் வருகையில் அவை எவ்வித வேறுபாடும் இன்றி தத்தம் வேற்றுமை உருபுகளை ஏற்பதனை சான்று (23) , (24) ல் காணமுடிகிறது.

4.7.7.3.1.3. தற்கிழமை - உறுப்பு

சான்று:

(25) த உன்னுடைய கண்கள் அழகு

(26) ம நின்றெ கண்ணுகள் அழகுள்ளதாணு

உறுப்புகளை உரிமையாக்கிக் கூறும் கிழமைப்பொருள் வேற்றுமைகளில் தமிழிலும் மலையாளத்திலும் உடைமை வேற்றுமை ஏற்கும் வடிவங்களில் எவ்வித வேறுபாடும் காணப்படுவதில்லை.

**4.7.7.3.2. பிறிதின் கிழமை**

பிறிதின் கிழமைத்தொடர்கள் தமிழிலிருந்து மலையாளத்திற்கு மொழிபெயர்க்கப்படுகையில் அமையும் சூழல் கீழே நோக்கப்படுகிறது

**4.7.7.3.2.1. பிறிதின் கிழமை மாற்றமின்றி அமைதல்**

சான்று

(27) த கமலாவின் செல்பேசி

(28) ம கமலயுடெ மொபைல் போன்

(29) த கண்ணனது குடும்பம்

(30) ம கண்ணன்றெ குடும்பம்

பிறிதின் கிழமைத்தொடர்கள் தமிழிலும் மலையாளத்திலும் கிழமை வேற்றுமை உருபுகளை ஏற்றே வருகின்றன. இவ்விடம் மாறுபாடு எதுவும் இல்லை.

**4.7.7.4. கிழமை வேற்றுமை உறவுமுறைகளை வெளியிடல்**

சான்று:

(31) த அந்த ஆசியருடைய மகன் மருத்துவர்

(32) ம ஆ அத்யாபகன்றெ மகன் டோக்டர் ஆணு

(33) த இது லீலாவின் பெரியம்மா

(34) ம இது லீலயுடெ வலியம்ம

உறவு முறைகளை கிழமை வேற்றுமைத்தொடர்கள் வெளியிடுகையில் தமிழிலும் மலையாளத்திலும் ஒரே போன்றே அமைகின்றன. ஆனால் தமிழில் மாற்றுப்பெயர்கள் உறவு முறையினை வெளியிட வருகையில் உடைமை வேற்றுமை உருபுகள் இடம்பெறுவதில்லை. மலையாளம் இவ்விடம் மாற்றுப்பெயர்களுடன் உடைமை வேற்றுமை உருபினை ஏற்றே வருகின்றன.

சான்று:

(35) ம சீலா என் மருமகள்

(36) த சீலா என்றெ மருமோளாணு

(37) ம இது உன் தங்கை

(38) த இது நின்றெ அனுஜத்தியாணு

4.7.7.5 தமிழ்-மலையாளத்தில் உடைமைப்பொருள் வேற்றுமை ஏற்ற பதிலிடு பெயர்வடிவங்கள் கீழே தரப்படுகின்றன.

| எண் | பதிலிடுபெயர் | தமிழ் | மலையாளம் |
|---|---|---|---|
| 1 | தன்மை-ஒருமை | எனது<br>என்னுடைய | என்றெ |
| 2 | உ.த.பன் | நமது<br>நம்முடைய | நம்முடெ |
| 3 | உதா.த.பன் | எங்களின்<br>எங்களது<br>எங்களுடைய | ஞங்ஙளுடெ |
| 4 | முன்.ஒரு. | உனது<br>உன்னுடைய | நின்றெ |
| 5 | முன்.மரி.பன். | உங்களது<br>உங்களுடைய | நிங்ஙளுடெ |
| 6 | முன்.சிற.உய.ஒரு. | தங்களது<br>தங்களின்<br>தங்களுடைய | தாங்களுடெ |
| 7 | முன்.பன். | உங்களது<br>உங்களின்<br>உங்களுடைய | நிங்ஙளுடெ |
| 8 | பட.ஒரு.ஆ. | அவனது<br>அவனின்<br>அவனுடைய | அவன்றெ |
| 9 | பட.ஒரு.பெ. | அவளது<br>அவளின்<br>அவளுடைய | அவளுடெ |
| 10 | பட.மரி..பன். | அவரது<br>அவரின்<br>அவருடைய | அத்தேகத்தின்றெ |
| 11 | பட.பன். | அவர்களது<br>அவர்களின்<br>அவர்களுடைய | அவருடெ |
| 12 | பல.பால்.ஒரு. | அதனது<br>அதனின்<br>அதனுடைய | அதின்றெ |
| 13 | பல.பால்.பன். | அவற்றின்<br>அவற்றினுடைய | அவயுடெ |

#### 4.7.7.6. வேறுபாடுகள்

தமிழிலும் மலையாளத்திலும் பெயர்ச்சொற்கள் உடைமை வேற்றுமையை ஏற்கும் போது ஏற்படும் வேறுபாடுகள் கீழே தொகுத்துத் தரப்படுகின்றன.

1. தமிழில் கிழமை வேற்றுமை உருபு இடம் பெறாமலேயே கிழமைப்பொருள் வெளிப்படுத்தப்படுகின்றது. ஆனால் மலையாளத்தில் கட்டாயம் இவ்வேற்றுமை அமையும் இடங்களும் உண்டு. அதாவது தமிழில் சில தொடர்கள் கிழமை வேற்றுமையின்றி கிழமைப்பொருள் தர வல்லன. ஆனால் மலையாளத்தில் சில தொடர்களால் கிழமை வேற்றுமையின்றி அப்பொருள் தர இயலாது.

2. தமிழில் தன்மை முன்னிலை போன்ற மாற்றுப்பெயர்களின் வேற்றுமை ஏற்கும் வடிவங்கள் வேறு பெயர்களுடன் இணைந்து உடைமைப்பொருளை வெளிப்படுத்தும். மலையாளத்தில் இவை உடைமை வேற்றுமை உருபினை ஏற்றே உடைமைப்பொருளை வெளிப்படுத்துகின்றன.

2. [ என் = என்றெ ]

3. [ நம் = நம்முடெ ]

4. [ எங்கள் = ஞங்ஙளுடெ ]

5. [ உம் = நிங்ஙளுடெ ]

6. [ உனது = நின்றெ ]

7. [ உங்கள் = தாங்களுடெ ]

## 4.8. தமிழிலும் மலையாளத்திலும் இடப்பொருள் வேற்றுமை

தற்காலத்தில் வழக்கில் உள்ள தமிழ் மற்றும் மலையாள மொழிகளில் இடவேற்றுமை உருபு வழங்கப்படும் முறை குறித்து கீழே ஆராயப்படுகின்றது.

### 4.8.1. இடப்பொருள் வேற்றுமை

தொடர் ஒன்றில் அமையும் வினையானது நிகழும் இடத்தினைக் குறிப்பிடும் வேற்றுமை இடவேற்றுமை எனப்படுகின்றது.

### 4.8.2. தமிழில் இடப்பொருள் வேற்றுமை

இடவேற்றுமையினை ஏழாம் வேற்றுமை என்று தமிழ் இலக்கணங்கள் குறிப்பிடுகின்றன.

"ஏழாகுவதே

கண் எனப்பெயரிய வேற்றுமைக் கிளவி"

தொல்.சொல். (565)

என்பது தொல்காப்பியம். "கண்" என்பதனை அதன் உருபாக இவர் குறிப்பிடுகின்றார். "கண்" உருபு மட்டுமின்றி வேறு பல உருபுகளையும் இவர் குறிப்பிட்டாலும் அவை அனைத்தும் காலப்போக்கில் வழக்கிழந்துவிட்டன.

நன்னூலாரோ,

"ஏழன் உருபு கண் ஆதியாகும்"

நன். (301)

என்று "கண்" எனும் உருபினையே முதன்மையாக எடுத்துக்கூறுகின்றார். மேலும் கண், கால், கடை, இடை, தலை, வாய், திசை, வயின், முன், சார், வலம், இடம், மேல், கீழ், புடை, முதல், பின், பாடு, அழை, தேம், உழை, வழி, உழி, உளி, உள், அகம், புறம், இல் என்னும் இருபத்தெட்டு

இடவேற்றுமை உருபுகளைக் கூறுகின்றார். இவை அனைத்தும் இக்காலத்தமிழில் வழக்கொழிந்துபோயின.

"தொழில் நிகழும் இடத்தையோ காலத்தையோ குறிப்பதுதான் இடவேற்றுமை" என்கிறார் டாக்டர்.கு.பரமசிவம். (இக்காலத்தமிழ் மரபு, பக்-179).

தற்போதையத் தமிழின் ஏழாம் வேற்றுமையினை விளக்கும் பேரா.அகத்தியலிங்கம் அவர்கள், இவ்வேற்றுமையினை, "இட, கால வேற்றுமை" என்று அழைக்கின்றார். இது இடப்பொருளையும், காலப்பொருளையும் ஒரே உருபால் உணர்த்துவதால் இவ்வாறு கூறுகின்றார். மேலும்; "பயனிலை காட்டும் தொழில் அல்லது வினைக்கும், அது செயல்படுகின்ற இடத்தைக் காட்டும் பெயருக்கும் இடையே காணப்படும் இடப்பொருள் தொடர்பு இடவேற்றுமை எனப்படும்" என்று இவ்வேற்றுமையினை இவர் விளக்குகின்றார். ( தமிழ்மொழி அமைப்பியல் பக் - 141).

### 4.8.3. மலையாளத்தில் இடப்பொருள் வேற்றுடை

மலையாளத்திலும் இவ்வேற்றுமை . இடப்பொருளையே குறிப்பிடுகின்றது. இதனை, "ஆதாரிகாவேற்றுமை" என்று கேரளபாணினியம் கூறுகின்றது.

" ஆதாரிகா அதிகரணம்

இல் கல் ப்ரத்யயமாயவ" ( கே.பா. சூத்திரம் 55)

"மெத்தயில் கிடக்குன்னு" , "படிக்கல் நில்க்குன்னு" என்ற சான்றுகளை இடப்பொருள் வேற்றுமைக்கு எடுத்துக்காட்டுவார் கேரளபாணினி.

### 4.8.4. தமிழில் இடவேற்றுமை உருபுகள்

தற்காலத் தமிழின் இடவேற்றுமை உருபுகளாக, "-இல்", "-இடம்" போன்றவற்றை இக்கால இலக்கணவியலார் சுட்டிக்காட்டுவர்.

### 4.8.5. மலையாளத்தில் இடவேற்றுமை உருபுகள்

தற்கால மலையாளத்தின் இடவேற்றுமை உருபாக, "-இல்" என்பதனைச் சுட்டிக்காட்டுகிறார் ஆசர். ( மலையாளம், பக் - 191).

### 4.8.6. தமிழ் உடைமை வேற்றுமைத் தொடர்கள் - மொழிபெயர்ப்பு

தமிழின் இடப்பொருள் வேற்றுமை ஏற்ற சொற்றொடர் வடிவங்கள் மலையாளத்திற்கு மொழிபெயர்க்கப்பட்டு, அவற்றின் மூலம் இரு மொழிகளுக்கும் இடையே அமையும் வேறுபாடுகள் கீழே ஆராயப்படுகின்றன.

#### 4.8.6.1. இடவேற்றுமை தொழில் நிகழும் இடத்தைக்குறித்தல்

சான்று:

(1) த கீதா கல்லூரியில் வேலை செய்கிறாள்

(2) ம கீதா கோளேஜில் ஜோலி செய்யுன்னு

இடவேற்றுமையினைக் குறிப்பிட "-இல்" உருபு இடம்பெறுகையில், தமிழிலும் மலையாளத்திலும் வேறுபாடு எதுவும் இடம்பெறவில்லை. இரு மொழிகளும் ஒரேபோல் "-இல்" உருபினை ஏற்பது இவ்விடம் காணமுடிகின்றது.

#### 4.8.6.2. இடவேற்றுமை தொழில் நிகழும் காலத்தைக் குறித்தல்

இடவேற்றுமையினைக் குறிக்கும் "-இல்" உருபு, தமிழில் தொழில் நிகழும் காலத்தினையும் குறிக்கின்றது என்பார் டாக்டர். கு. பரமசிவம். (இக்காலத் தமிழ் மரபு, பக் - 179).

சான்று:

(3) த சேகர் பத்து நிமிடத்தில் அரைக் கிலோமீட்டர் நடந்தான்

(4) ம சேகர் பத்து நிமிஷம் **கொண்டு** அரைக் கிலோமீட்டர் நடன்னு.

தமிழில் தொழில் நிகழும் காலத்தினைக் குறிக்க "-இல்" உருபு பயன்படுகின்றது. அதே தொடரின் மலையாள மொழிபெயர்ப்பில் "-இல்" உருபுக்குப்பதில் "கொண்டு" எனும் சொல்லுருபு அப்பொருளைத் தெரிவிக்க பயன்படுகின்றது. இடவேற்றுமையினை ஏற்று, காலப்பொருளை வெளிப்படுத்தும் சூழலில் தமிழ் - மலையாள மொழிகளுக்கிடையே அமையும் வேறுபாடாக இது கருதப்படுகின்றது.

**4.8.6.3. உயிரில்லாப் பொருட்பெயர்களுடன் இல் உருபு மட்டும் வருதல்**

சான்று:

(5) த ஆசிரியர் கரும்பலகை**யில்** எழுதினார்

(6) ம அத்யாபகன் போர்டி**ல்** எழுதி

(7) த இராணி கணினி**யில்** விளையாடுகிறாள்

(8) ம ராணி கம்ப்யூட்ட**ரில்** களிக்குன்னு

(9) த யானைகள் சாலை**யில்** நடந்து செல்கின்றன.

(10) ம ஆனகள் ரோடி**லூடே** நடன்னு போகுன்னு.

தமிழிலும் மலையாளத்திலும் "-இல்" உருபு உயிரில்லாப் பெயர்களுடன் வருவது மேலே காணும் சான்றுகள் மூலம் புலனாகின்றது. அதே நேரம், தமிழில் "-இல்" உருபு இடம்பெறும் இடத்தில் "வழியாக" எனும் பொருள் தரும் "ஊடே" எனும் சொல்லுருபு மலையாளத்தில் இடம்பெறுவதனைக் காணலாம். அமைப்பளவில் 'இடவேற்றுமையின்

"-இல்" உருபினை ஏற்கும் சூழலில் இருமொழிகளுக்குமிடையே அமையும் வேறுபாட்டினை இதன் மூலம் அறியலாம்.

### 4.8.6.4. உயிருடைப் பெயர்கள் இடவேற்றுமையுருபினை ஏற்றல்

உயிருடைப் பெயர்கள் உயர்திணையானாலும் அஃறிணையானாலும் "-இல்" "-இடம்" ஆகிய இரு உருபுகளையும் ஏற்கின்றன என்பார் கு.பரமசிவம்.

#### 4.8.6.4.1. அஃறிணைப் பெயர்கள்- இல் உருபு

சான்று

(11) த அவன் கவனம் குதிரையில் லயித்தது

(12) ம அவன்றே ஸ்ரத்த குதிரயில் லெயிச்சு

இங்கே அஃறிணை உயிருடைப்பெயர் ஒருமையானாலும் பன்மையானாலும் "-இல்" உருபினையே ஏற்கின்றன.

சான்று

(13) த அந்தக் கறுப்புப்பூனைகளில் வெள்ளை முடியே இல்லை.

(14) ம ஆ கறுத்த பூச்சகளில் வெளுத்த ரோமமே இல்லா.

தமிழில் அஃறிணை உயிருடைப் பெயர்கள் "-இல்" உருபினை ஏற்பது போன்றே மலையாளத்திலும் அமைவது மேலே கண்ட சான்றுகளின் மூலம் தெளிவாகின்றது.

#### 4.8.6.4.2. அஃறிணைப் பெயர்கள் - இடம் உருபு

சான்று

(15) த தமயந்தி அன்னத்திடம் வேண்டினாள்

(16) ம தமயந்தி அன்னத்தோடு சம்சாரிச்சு.

இங்கே அஃறிணை உயிருடைப்பெயர் ஒருமையானாலும் பன்மையானாலும் "-இடம்" உருபினை ஏற்கின்றது .

சான்று

(17) த பாலன் பச்சைக் கிளிகளிடம் பேசினான்

(18) ம பாலன் தத்தகளோடு சம்சாரிச்சு.

#### 4.8.6.4.3. உயர்திணை ஒருமைப் பெயர்கள் - இல் உருபு

சான்று

(19) த குமரனில் அழகும் அறிவும் உண்டு

(20) ம குமரனில் அழகும் அறிவும் உண்டு.

#### 4.8.6.4.4. உயர்திணை பன்மைப் பெயர்கள் - இல் உருபு

சான்று

(21) த மாணவர்களில் சிலர் உயரமானவர்கள்

(22) ம ஆண்குட்டிகளில் சிலர் உயரமுள்ளவராணு.

சான்று (19), (20), (21), (22) களில் உயர்திணை ஒருமை மற்றும் பன்மைப்பெயர்களுடன் தமிழிலும் மலையாளத்திலும் "-இல்" உருபே வருவதனைக் காணமுடிகிறது.

#### 4.8.6.4.5. உயர்திணை ஒருமைப் பெயர்கள் இடம் உருபு

சான்று

(23) த கமலா ஆசிரியரிடம் போனாள்

(24) ம கமல அத்யாபிகயுடெ **அடுத்து** போயி

தமிழில், உயர்திணை ஒருமைப்பெயர்களுடன் "-இடம்" உருபு வருகையில் மலையாளத்தில் "-உடெ" எனும் கிழமைப் பொருள் உருபும் "அடுத்து" எனும் சொல்லுருபும் சேர்ந்து வந்து "இடம்" என்ற இடப்பொருள் உருபின் பொருளை வெளிப்படுத்துகின்றது.

**4.8.6.4.6. உயர்திணைப் பன்மைப் பெயர்கள் இடம் உருபு**

சான்று

(25) த அவள் குழந்தை**களிடம்** அன்பாகப் பேசினாள்

(26) ம அவள் குட்டி**களோடு** ஸ்னேகத்தோடெ சம்சாரிச்சு.

தமிழில் உயர்திணைப்பன்மைப் பெயர்கள் இடப்பொருளை வெளிப்படுத்த "இடம்" உருபினைப் பயன்படுத்துகின்றன. ஆனால் மலையாளத்தில் இச்சூழலில் இடப்பொருளானது, "-ஓடு" எனும் உடனிகழ்ச்சி வேற்றுமை உருபின் மூலம் வெளிப்படுத்தப்படுகின்றது. இவ்விடம் இவ்வேறுபாடு மொழிமாற்ற இலக்கணத்திற்காக கருத்தில் கொள்ளப்படுகிறது.

**4.8.6.4.7. உயர்திணை பன்மைப் பெயர்கள் இடம் உருபு**

இடம் என்பது இடத்தில் எனும் வடிவையும் பெறலாம் என்பார் கு.பரமசிவம். ( பக் - 179).

சான்று

(27) த என்னிடத்தில்/என்னிடம் பணம் இல்லை.

(28) ம **என்றெ பக்கல்** பணம் இல்லா.

(29) ம என்றெ **கையில்** பணம் இல்லா.

(30) ம என்றெ அடுத்து பணம் இல்லா

தற்காலத் தமிழில் “இடத்தில்” எனும் சொல்வடிவம் இடப்பொருளை உணர்த்த மிகவும் பயன்படுத்தப்படுகின்றது. ஆனால் மலையாளத்தில் “இடத்தில்” எனும் வடிவிற்குப்பதிலாக, உடைமை வேற்றுமை உருபான “-ன்றெ” வும் "பக்கல்" , “கையில்” , “அடுத்து” எனும் சொல்வடிவங்களும் அதிகமாகப் பயன்பாட்டில் உள்ளன. தமிழ் மலையாள மொழிகளுக்கிடையே அமையும் வேறுபாடாக இது கொள்ளப்படுகிறது.

4.8.7. தமிழ்-மலையாளத்தில் இடப்பொருள் வேற்றுமை ஏற்ற பதிலிடு பெயர்வடிவங்கள் கீழே தரப்படுகின்றன.

| எண் | பதிலிடுபெயர் | தமிழ் | மலையாளம் |
|---|---|---|---|
| 1 | தன்மை-ஒருமை | என்னில்<br>என்னிடம் | என்றெகையில்<br>என்றெபக்கல்<br>என்றெயடுத்து |
| 2 | உ.த.பன் | நம்மில்<br>நம்மிடம் | நம்மில்<br>நம்முடெகையில்<br>நம்முடெபக்கல்<br>நம்முடெயடுத்து |
| 3 | உதா.த.பன் | எங்களில்<br>எங்களிடம் | ஞங்ஙளில்<br>ஞங்ஙளுடெகையில்<br>ஞங்ஙளுடெபக்கல்<br>ஞங்ஙளுடெயடுத்து |
| 4 | முன்.ஒரு. | உன்னில்<br>உன்னிடம் | நின்னில்<br>நின்றெகையில்<br>நின்றெபக்கல்<br>நின்றெயடுத்து |
| 5 | முன்.மரி. பன். | உங்களில்<br>உங்களிடம் | நிங்ஙளில்<br>நிங்ஙளுடெகையில்<br>நிங்ஙளுடெபக்கல்<br>நிங்ஙளுடெயடுத்து |
| 6 | முன்.சிற.உய.ஒரு. | தங்களில்<br>தங்களிடம் | தாங்களில்<br>தாங்களுடெகையில்<br>தாங்களுடெபக்கல்<br>தாங்களுடெயடுத்து |
| 7 | முன்.பன் | உங்களில்<br>உங்களிடம் | நிங்ஙளில்<br>நிங்ஙளுடெகையில்<br>நிங்ஙளுடெபக்கல்<br>நிங்ஙளுடெயடுத்து |
| 8 | பட.ஒரு.ஆ. | அவனிடம் | அவன்றெகையில்<br>அவன்றெபக்கல்<br>அவன்றெயடுத்து |

| 9 | பட.ஒரு.பெ. | அவளிடம் | அவளுடெகையில்<br>அவளுடெபக்கல்<br>அவளுடெயடுத்து |
|---|---|---|---|
| 10 | பட.மரி..பன். | அவரிடம் | அத்தேகத்தின்றெகையில்<br>அத்தேகத்தின்றெபக்கல்<br>அத்தேகத்தின்றெயடுத்து |
| 11 | பட.பன். | அவர்களிடம் | அவரில்<br>அவருடெகையில்<br>அவருடெபக்கல்<br>அவருடெயடுத்து |
| 12 | பல.பால்.ஒரு. | அதனிடம் | அதின்றெகையில்<br>அதின்றெபக்கல்<br>அதின்றெயடுத்து |
| 13 | பல.பால்.பன். | அவற்றிடம் | ---------------- |

**4.8.8. வேறுபாடுகள்**

தமிழ் - மலையாள மொழிகளில் இடப்பொருள் வேற்றுமை அமையும்போது ஏற்படும் வேறுபாடுகள் கீழே தொகுக்கப்படுகின்றன.

**1.** இடவேற்றுமையினை ஏற்று, காலப்பொருளை வெளிப்படுத்தும் சூழலில் தமிழில் தொழில் நிகழும் காலத்தினைக் குறிக்க "-இல்" உருபு பயன்படுகின்றது. அதே தொடரின் மலையாள மொழிபெயர்ப்பில் "-இல்" உருபுக்குப்பதில் "கொண்டு" எனும் சொல்லுருபு அப்பொருளைத் தெரிவிக்க பயன்படுகின்றது.

**[ இல் = கொண்டு ]**

**2.** தமிழில் "-இல்" உருபு இடம்பெற்று இடப்பொருளை வெளிப்படுத்துகின்ற இடத்தில்; மலையாளத்தில் "வழியாக" எனும் பொருள் தரும் "ஊடே" எனும் சொல்லுருபு இடம்பெறுகின்றது.

**[ இல் = ஊடெ ]**

3. அஃறிணை உயிருடைப்பெயர்கள் இடப்பொருளை உணர்த்த "இடம்" என்னும் உருபினைப் பயன்படுத்துகின்றது மலையாளம் இவ்விடத்தில் "-ஒடு" எனும் உருபினை ஏற்கின்றது.

[ இடம் = ஒடு ]

4. தமிழில், உயர்திணை ஒருமைப்பெயர்களுடன் "-இடம்" உருபு வருகையில் மலையாளத்தில் "-உடெ" எனும் கிழமைப் பொருள் உருபும் "அடுத்து" எனும் சொல்லுருபும் சேர்ந்து வந்து "இடம்" என்ற இடப்பொருள் உருபின் பொருளை வெளிப்படுத்துகின்றது.

[ இடம் = உடெ அடுத்து ]

5. தமிழில் உயர்திணைப்பன்மைப் பெயர்கள் இடப்பொருளை வெளிப்படுத்த "இடம்" உருபினைப் பயன்படுத்துகின்றன. ஆனால் மலையாளத்தில் இச்சூழலில் இடப்பொருளானது, "-ஓடு" எனும் உடனிகழ்ச்சி வேற்றுமை உருபின் மூலம் வெளிப்படுத்தப்படுகின்றது.

[ இடம் = ஒடு ]

6. தற்காலத் தமிழில் "இடத்தில்" எனும் சொல்வடிவம் இடப்பொருளை உணர்த்த மிகவும் பயன்படுத்தப்படுகின்றது. ஆனால் மலையாளத்தில் "இடத்தில்" எனும் வடிவிற்குப்பதிலாக, உடைமை வேற்றுமை உருபான "-ன்றெ" வும் "பக்கல்" , "கையில்" , "அடுத்து" எனும் சொல்வடிவங்களும் பயன்பாட்டில் உள்ளன.

[ இடத்தில் = ன்றெ + பக்கல்/கையில்/அடுத்து ]

# 5. தமிழிலும் மலையாளத்திலும் வினைச்சொற்கள்

5.6.2.3.3. தமிழில் எதிர்கால உருபுகள்

5.6.2.3.3.1. மலையாளத்தில் எதிர்கால கால உருபுகள்

5.6.2.4. பால் எண் இட விகுதிகள் ( Pronominal Suffixes )

5.6.2.4.1. தமிழிலும் மலையாளத்திலும் மூவிடப்பெயர் விகுதிகள்-இறந்தகாலம்

5.6.3. வியங்கோள் வினை ( Optative Verb )

5.7. எச்சவினைகள் (Non-FiniteVerbForms)

5.7.1. செயவெனவெச்சம் ( Infinitive)

5.7.2. வினையெச்சம் ( Verbal Participle )

5.7.2.1. உடன்பாட்டு வினையெச்சம்

5.7.2.2. எதிர்மறை வினையெச்சம்

5.7.3. நிபந்தனை எச்சம் ( Conditional )

5.7.3.1. உடன்பாட்டு நிபந்தனை எச்சம்

5.7.3.2. எதிர்மறை நிபந்தனை எச்சம்

5.7.4. பெயரெச்சம்

5.7.4.1. உடன்பாட்டுப் பெயரெச்சம்

5.7.4.2. எதிர்மறைப் பெயரெச்சம்

5.8. தமிழ், மலையாள வினைச்சொற்களில் வேறுபாடுகள்.

# 5. தமிழிலும் மலையாளத்திலும் வினைச்சொற்கள்

## 5.1. தமிழ் வினைச்சொற்கள்

தமிழில் வினைச்சொற்கள் மிக முக்கியமானதொரு சொல் வகையாகும். தொல்காப்பியர் இதனை,

"வினை எனப்படுவது வேற்றுமை கொள்ளாது

நினையுங் காலை காலமொடு தோன்றும்" (தொல்.சொல். 683).

என்பார்.

தமிழ் வினைச்சொற்கள் வேற்றுமை உருபுகளை ஏற்காமல்; காலங்காட்டும் இடைநிலைகளை ஏற்று வரும் என்பது தொல்காப்பியனாரின் கருத்து. கால இடைநிலைகளை ஏற்கவல்லதாயும்; பாலிட விகுதிகளை ஏற்க வல்லதாயும் அமையும் கிளவிகள் வினைச்சொற்கள் என்று கொள்ளப்படும் என்பார் பேரா. பொன். கோதண்டராமன். ( இக்காலத் தமிழ் இலக்கணம், 2002, பக் - 44)

## 5.2. வினைச்சொல் வகைப்பாடுகள்

தமிழ் வினைசொற்களைப் பல்வேறு அடிப்படைகளில் பல வகைப்பாடுகளுக்கு தமிழ் இலக்கணவியலார்கள் உட்படுத்தி உள்ளனர். இதன் பயனாக பல்வேறுபட்ட வினைவகைப்பாடுகள் காணப்படுகின்றன. இவற்றுள் மெல்வினை, வல்வினை என்பது ஒரு வகை. வினைச்சொற்கள் ஏற்கும் காலம்காட்டும் உருபுகளை அடிப்படையாக வைத்து; கிரால் என்பவர் பன்னிரண்டு வகைகளாகப் பிரிப்பார். ஆர்டன் என்பவர் ஏழு வகைகளாகப் பிரிப்பார். பேரா.பொன் கோதண்டராமன் அவர்கள் வினைச்சொற்கள் ஏற்கும் காலங்காட்டும் உருபுகளை அடிப்படையாகக் கொண்டு ஆறு வகைகளாகவும்; ஒழுங்கில்லா வினைகளையும் சேர்த்து மொத்தம் ஏழாகவும் வகைப்படுத்தியுள்ளார். வினையடிகளை அடிப்படையாக வைத்து தனிவினை, கூட்டுவினை

எனப்பிரிப்பர் வினைச்சொற்களின் பொருட்பண்புகளை அடிப்படையாக வைத்து, செயல்வினை, நிலைவினை, இயங்குவினை என்றும் பிரிப்பர். தன்வினை. பிறவினை என்பது மற்றுமொரு வகைப்பாடு. தெரிநிலைவினை. குறிப்புவினை என்பது மரபிலக்கணங்கள் கூறும் வகைப்பாட்டு முறை. செய்வினை, செயப்பாட்டு வினை என்பதொருமுறை. முற்று, எச்சம் என்பது மற்றுமொரு வகை. வினைச்சொல்லுடன் பிற வினைகள் இணைவதனை வைத்து முதல்வினை, துணைவினை என்ற பகுப்பையும் காணலாம். இவ்வாறு தமிழ்வினைச்சொற்கள் பலவகைகளான பகுப்புகளைக் கொண்டுள்ளன

**5.3. மலையாள மொழியில் வினைச்சொற்களின் பாகுபாடு**

ஏ.ஆர். இராஜ இராஜ வர்மா அவர்கள் மலையாள மொழியின் வினைச்சொற்களை வினைமுற்று, வினையெச்சம் என்று இருபெரும் பிரிவுகளாகப் பிரிக்கின்றார்.

தற்கால மலையாள மொழிக்கு இலக்கணம் வகுத்த ஆர்.இ.ஆசர் அவர்கள் வினைச்சொற்களை வினைமுற்று, வினையெச்சம் என்ற இரு பிரிவுகளாகவே பிரித்துள்ளார்.

தற்கால மலையாள வினைச்சொற்களைக் குறித்து ஆய்ந்த ஏலியாஸ் என்பவர் வினைகளை வினைமுற்று, வினையெச்சம் என்றே பிரித்து ஆய்வு மேற்கொண்டுள்ளார்.

திராவிட மொழிகளைக்குறித்து ஆராய்ந்த பேரா. ஜான் சாமுவேல் அவர்கள் அவற்றின் வகைப்பாடுகளைக் குறித்து கீழ்க்கண்டவாறு விளக்குவார்.

"திராவிட மொழிகளின் வினைச்சொற்களில் தன்வினை, பிறவினை, இயக்குவினை என்ற மூவகையான வினை வகைகளையும், ஏவல் வினை, நிபந்தனை வினை, வியங்கோள் வினை என்னும் பல்வேறு வினைப்பொருள்களையும் (Moods) காணலாம்.

வினைச்சொற்களின் பொருளைச் சிறப்பிக்க ஐரோப்பிய மொழிகளில் முன்னொட்டுக்கள் (Prepositions) பயன்படுத்தப்படுகின்றன. ஆனால் திராவிட மொழிகளில் துணை வினைகளும் எச்சமாக அடுக்கும் வினைகளும் (Particles and Infinitives) பயன்படுத்தப்படுகின்றன. இம்மொழிகளின் வினைச்சொற்களைக் காலங்காட்டும் முறை, வினையின் தன்மை, பால்காட்டும் முறை ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு கூறுபடுத்தலாம்.

எ.கா:

1) வந்தான், வருகிறான் -> காலம் ( இறந்தகாலம்/ நிகழ்காலம்)
2) வந்தான், வருக -> வினையின் தன்மை ( முற்று/ வியங்கோள்)
3) வந்தான், வந்தாள் -> பால் ( ஆண்பால்/ பெண்பால்)

(பேரா.ஜான் சாமுவேல், திராவிட மொழிகளின் ஒப்பாய்வு, ஓர் அறிமுகம், 2008, பக், 176).

எனவே தமிழிலும் மலையாளத்திலும் பல அடிப்படையிலான வினைச்சொற்களின் வகைப்பாடுகள் காணப்படினும் இவற்றுள் எந்த அடிப்படையிலான பகுப்பு கணினிக்கு ஏற்பாக அமையுமோ அதனையே ஆய்வுக்கு எடுத்துக்கொள்ள இயலும். அவ்வகையில் தற்காலத் தமிழ் மற்றும் மலையாள வினைச்சொற்களுக்குப் பொருத்தமாக அமையும் வினைமுற்று, வினையெச்சம் என்ற பகுப்பு இங்கே ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்படுகிறது.

5.4. முற்றும் எச்சமும்

தமிழில் முற்றுவினை எச்சவினை என்பதைக்குறித்து பேரா.இரா.சீனிவாசன் அவர்கள் குறிப்பிடுவதாவது,

"தமிழ் வினைகள் முற்று, எச்சம் என இருவகைப்படும். முற்றுவினை வாக்கியத்தில் பயனிலையில் முடியும். எச்சவினைகள் பெயரையோ, வினையையோ எஞ்சி நிற்கும். சொல் நிலையில் முற்றுவினைகள் பால் ஈறுகள் பெற்றோ பெறாமலோ வரும். எச்சவினைகள் பால் ஈறுகள் பெறுவதே இல்லை". ( *இரா. சீனிவாசன், மொழியியல், 2009, பக் - 146*).

மலையாள மொழியின் இலக்கண நூலான கேரளபாணினியம், அம்மொழியின் வினைச்சொற்களை ,

1) முற்றுவினா (வினைமுற்று)

2) பற்றுவினா ( வினையெச்சம்)

என்ற இருபெரும் பிரிவுகளாகப்பிரிக்கிறது. (கேரளபாணினியம், அறிமுகம்).

முற்றுவினா முடிவுற்ற பொருளைக்கொண்டும் ஒரு தொடரின் இறுதியிலும் அமையும். பற்றுவினா பொருள் முடிவுறாமலும் முற்றுவினையின் முன்பாகவும் அமையும்.

எனவே தமிழ் மற்றும் மலையாள வினைச்சொற்கள் வினைமுற்று, வினையெச்சம் என்ற இருபெரும் பிரிவுகளாகப் பிரிக்கப்படுகின்றன; இவ்விரு வினைகளின் பண்புகளும் முற்றிலும் வேறுபட்டு அமைகின்றன என்பது புலனாகிறது.

### 5.5.1. தமிழில் வினைமுற்று

தமிழ் மொழியில் பொருள் நிறைவுற்று / முற்று பெற்று வரும் வினைகள் வினைமுற்று என்ற வகையில் அடங்கும். இவ்வினைகள் வினையடி, கால இடைநிலை, பால், இட விகுதி என்ற அமைப்பில் அமையும்.

மலையாள மொழியில் வினைமுற்று பிற திராவிட மொழிகளிலிருந்தும் வேறுபட்ட அமைப்பினைக் கொண்டுள்ளது: இவ்வினைமுற்றுக்களில் எழுவாய்க்கும் வினைமுற்றுக்கும் எவ்வித இயைபும் கிடையாது. அதாவது பால், எண், இடவிகுதிகள் மலையாள வினைமுற்றுக்களில் காணப்படுவது இல்லை.

### 5.6. வினைமுற்று வகைகள்

வினைப்பொருண்மையின் அடிப்படையில் மூன்று வகையான வினைமுற்று வகைகள் தமிழிலும் மலையாளத்திலும் அமைந்துள்ளன. அவையாவன,

1) ஏவல் வினைமுற்று ( Imperative Mood)
2) கூற்று அல்லது செயல் வினைமுற்று (Indicative Mood)
3) வியங்கோள் வினை முற்று ( Optative Mood)

### 5.6.1. ஏவல் வினைமுற்று ( Imperative Mood)

தமிழில் பெரும்பாலான வினைகளும் ஒருமை ஏவலாகச்செயலாற்றும். (இசுராயேல், வினைச்சொற்களின் இலக்கணம்). ஏவல்வினை முன்னிலையில் உள்ளவருக்கு இடும் வேண்டுகோளாகவோ, கட்டளையாகவோ அமையும். (பேரா. இரா.சீனிவாசன்). தமிழ் ஏவல் வினைச்சொற்களில் ஒருமையும்

பன்மையும் உண்டு இவ்விருவகையிலும் உடன்பாடும், எதிர்மறையும் உண்டு




**5.6.1.1. ஏவல் வினை அமைப்பு**

*தமிழில் ஏவல் வினை அமைப்பு*

**[ வினையடி + ( பன்மை விகுதி ) ]**

எ.கா: வா ( நீ வா ) - ஒருமை

வாருங்கள் ( நீங்கள் வாருங்கள் ) - பன்மை

மலையாளத்தில் ஏவல் வினைமுற்று முன்னிலையிடத்தில் வழங்கி, ஒருமையும் பன்மையும் கொண்டு அமைந்துள்ளது.

மலையாளத்தில் ஏவல் வினை அமைப்பு

***[ வினையடி + ( பன்மை விகுதி ) ]***

எ.கா: வா ( நீ வா ) - ஒருமை

வரூ ( நிங்ஙள் வரூ) - பன்மை

5.6.1.1.1. உடன்பாட்டு ஏவல் வினைமுற்று

தமிழில் உடன்பாட்டு ஏவல் வினைமுற்று வினையடியை ஒத்தது. இதற்கு உருபு எதுவும் கிடையாது. அதாவது, ஏவல் காட்டவும் முன்னிலை குறிக்கவும் தனி உருபன் எதுவும் கிடையாது. "வெற்றுருபன்" (Zero Morpheme) மூலம் இவ்வுருபன்கள் குறிக்கப்படுகின்றன.

எ.கா:

( நீ ) வா = வா

( நீ ) சொல் = சொல்

மலையாளத்திலும் உடன்பாட்டு ஏவல் வினைமுற்று; வினையடியை மட்டுமே எடுத்து வரும். ஏவலையும் முன்னிலையையும் சுட்ட தனி உருபன் எதுவும் கிடையாது. அவை தமிழைப் போலவே வெற்றுருபன் மூலம் குறிக்கப்படுகின்றன.

எ.கா·

( நீ ) வா = வா

( நீ ) பரா = பரா

தமிழிலும் மலையாளத்திலும் ஏவல் ஒருமை அமைவதில் வேறுபாடு எதுவும் அமைவதில்லை என்பது இதன்மூலம் புலனாகிறது.

[ வா = வா ]

#### 5.6.1.1.2. எதிர்மறை ஏவல் வினைமுற்று

தமிழில் எதிர்மறை சுட்டும் ஏவல் ஒருமை வினைமுற்று, வினையடியுடன், எதிர்மறைகாட்டும் உருபான "-ஆத்" தையும் ஒலி இசைவு ஒட்டான "-ஏ" வையும் எடுத்து வரும்.

இதன் அமைப்பு,

[ வினையடி + "-ஆத்" + "-ஏ" ]

எ.கா: வராதே

போகாதே

மலையாளத்தில் எதிர்மறை ஏவல் ஒருமை வினைமுற்று பலவகையான எதிர்மறை சுட்டும் சொற்களின் மூலம் குறிக்கப்படுகின்றது. இச்சொற்கள் வினையடியுடன் இணைந்து எதிர்மறை ஏவல் வினைமுற்றை அமைக்கும். இந்த எதிர்மறை சுட்டும் சொற்கள் ஆவன,

1) அருது
2) அண்டா
3) பாடில்லா
4) கூடா
5) என்னில்லா (ஆசர், மலையாளம், பக் - 308 ) என்பன.

எ.கா:

| | | |
|---|---|---|
| தமிழ் | வராதே | சொல்லாதே |
| மலை. | வரருது | பரயருது |

இங்கு தமிழில் எதிர்மறை ஒட்டான "-ஆதே" வருமிடத்தில் "அருது" எனும் முழுச்சொல் இடம்பெற்று, எதிர்மறைப்பொருளை உணர்த்துகின்றது.

எனவே அமைப்படிப்படையிலான வேறுபாட்டினை இவ்விரு மொழிகளிலும் காணமுடிகின்றது.

**[ -ஆதே = அருது ]**

#### 5.6.1.2. ஏவற்பன்மை ( Plural Imperatives )

தமிழிலும் மலையாளத்திலும் ஏவற்பன்மை உண்டு. ஏவற்பன்மையில் உடன்பாடும் எதிர்மறையும் உண்டு. இருமொழிகளிலும் இவ்விடத்தில் முன்னிலைப்பன்மை காட்டும் உருபன் வெற்றுருபன் ஆகும்.

##### 5.6.1.2.1. உடன்பாட்டு ஏவற்பன்மை

தமிழில் இதன் அமைப்பு

**[ வினையடி + உங்கள் ]**

என அமையும். இங்கு பன்மை ஒட்டு "உங்கள்" ( - யுங்கள் ) என்பதாகும். இது மரியாதை ஒருமைக்கும் உரிய விகுதியாக உள்ளது. எனவே இந்த ஏவற்பன்மை அமைப்பு ஒருமையில் ஒருவரை மரியாதை கருதி அழைப்பதற்கும், பன்மையைக் குறிப்பதற்கும் பயன்படுகிறது.

எ.கா. சொல்- லுங்கள் ( சொல் - உங்கள் ) ஏ.பன் & ம.ஒரு
அமர்- ருங்கள் ( அமர் - உங்கள் ) ஏ.பன் & ம.ஒரு
கேளு- ளுங்கள் ( கேள் - உங்கள் ) ஏ.பன் & ம.ஒரு

மலையாளத்தில் ஏவற்பன்மை வினையடியையும் "-ஊ" என்னும் ஏவற்பன்மை உருபையும் எடுத்து வரும். இந்த "-ஊ" என்னும் உருபு ஏவற்பன்மையையும் மரியாதை ஒருமையையும் சுட்ட உதவும்.

மலையாளத்தில் இதன் அமைப்பு

**[ வினையடி + ஊ ]**

எ.கா: ( நிங்ஙள் ) வரூ - ஏவற்பன்மை

( நிங்ஙள் ) வரூ - மரியாதை ஒருமை

இங்கே உடன்பாட்டு ஏவற்பன்மை அமைவதில்; அமைப்பு அடிப்படையில்; இரு மொழிகளும் வேறுபடுதல் காணப்படுகிறது.

**{ உங்கள் = ஊ }**

### 5.6.1.2.2. எதிர்மறை ஏவற்பன்மை

தமிழில் எதிர்மறை ஏவற்பன்மை அமைப்பு எதிர்மறை ஒட்டு "-ஆத்" தையும், முன்னிலை காட்டும் உருபு "-ஈர்கள்" ஐயும் கொண்டு அமைகின்றது. முன்னிலைப் பன்மைக்கும், மரியாதை ஒருமைக்கும் இதே உருபே பயன்படுகின்றது.

இதன் அமைப்பு,

**[ வினையடி + "-ஆத் " + " -ஈர்கள் " ]**

எ.கா: சொல்-ஆத்-ஈர்கள்

கேள்- ஆத்-ஈர்கள்

மலையாளத்தில் எதிர்மறை காட்டும் அருது, அண்டா, பாடில்லா, கூடா, என்னில்லா எனும் சொற்களைப் பயன்படுத்துவதன் மூலம் எதிர்மறை ஏவற்பன்மை பெறப்படுகிறது. இங்கே பன்மை காட்ட தனியுருபு எதுவும் இல்லை.

இதன் அமைப்பு,

**[ வினையடி + "-அருது" ]**

எ.கா: பரயருது

கேள்க்கருது

அமைப்பளவில் தெளிவான வேறுபாடு இவ்விடம் காணப்படுகிறது.

**[ ஆதீர்கள் = அருது]**

ஆனால் மரியாதை ஒருமைக்கு தமிழில் இவ்விடம் "சொல்லாதீர்கள்" (பரயருது) பயன்படுத்தப்படுவது போல் இங்கே பயன்படுத்த இயலாது. தமிழில் மரியாதையை வெளிப்படுத்தும் பன்மை உருபு வினையடியுடன் சேர்ந்து வருவதில்லை. இதற்குப் பதிலாக; மலையாளத்தில்; மரியாதை ஏவலில்; முன்னிலைப் பதிலிடுபெயரான "நிங்ஙள்" அல்லது "தாங்கள்" சேர்த்து பயன்படுத்தப்படுகிறது.

இதன் அமைப்பு,

**[ நிங்ஙள்/தாங்கள் + வினையடி + "-அருது" ]**

எ.கா.

நிங்ஙள்/தாங்கள் பரயருது

நிங்ஙள்/தாங்கள் கேள்க்கருது

மலையாளத்தில் இம்மாதிரியாக முன்னிலையிடத்தில் இருப்பவரை பதிலிடுபெயரால் சுட்டுவதற்குப் பதில் அவரை மரியாதையுடன் அழைத்தே பெரும்பாலும் மரியாதை ஏவல் வெளிப்படுத்தப்படுகின்றது.

எ.கா:

சார், தாங்கள் பரயருது

சார், தாங்கள் கேள்க்கருது

அமைப்பளவில் தமிழிலும் மலையாளத்திலும் வேறுபாடு அமைவதை இங்கே காணமுடிகிறது

த : சொல்லாதீர்கள்

ம : சார் பரயருது /. சார் தாங்கள் பரயருது

[முன்னிலை மரியாதை அமைப்பு = முன்னிலைப்பதிலிடுபெயர் + வினையடி + எதிர்மறை காட்டும் சொல்]

இங்குள்ள மற்றுமொரு குறிப்பிடத்தக்க வேறுபாடு, தமிழில் எதிர்மறை ஏவலொருமைக்கும் எதிர்மறை ஏவற்பன்மைக்கும் வெவ்வேறு உருபுகள் அமைய, மலையாளத்தில் ஒரேயொரு சொல்லே இவ்விரு செயல்களுக்கும் பயன்படுத்தப்படுகிறது.

எ.கா:

| | | |
|---|---|---|
| த: | (நீ) <u>வராதே</u> | ம: (நீ) <u>வரருது</u> |
| | (நீங்கள்) <u>வராதீர்கள்</u> | (நிங்ஙள்) <u>வரருது</u> |

5.6.1.3. விருப்பேவல் (Optional Imperative)

தற்காலத்தில் வழங்கும் தமிழில் ஏவலொருமை அல்லது ஏவற்பன்மையோடு "ஏன்" என்னும் உருபு சேர்வதனால் விருப்பேவல் தோன்றுகிறது. விருப்பேவல் என்பது ஏவப்படுகின்றவன் விரும்பினால் அந்த ஏவலைச் செய்யலாம் என்பதாகும். ( கு.பரமசிவம், 230 ). இவ்வகை விருப்பேவலில் ஒருமையும் பன்மையும் மரியாதை ஒருமையும் உண்டு. மலையாளத்திலும் இவ்வகையான விருப்பேவல் அமைந்து காணப்படுகிறது.

எகா:

| | | |
|---|---|---|
| த: | வாயேன் | ஒரு. |
| | வாருங்களேன் | பன் |
| | வாருங்களேன் | ம.ஒரு. |
| ம: | வராமோ/ வருமோ | ஒரு. |
| | வராமோ/ வருமோ | பன். |

தமிழில் விருப்பேவலைத் தெரிவிக்க "ஏன்" என்னும் உருபு சேர்க்கப்படுகிறது. மலையாளத்தில் "ஆமோ" அல்லது "ஓ" எனும் ஒட்டு சேர்க்கப்படுகிறது. அமைப்பளவில் தமிழிலும் மலையாளத்திலும் இவ்விடம் வேறுபாடு காணப்படுகிறது.

[ ஏன் = ஓ ]

மேலும் தமிழில் ஏவலொருமைக்கும் மரியதை ஒருமைக்கும் ஒருவித அமைப்பும், பன்மைக்கு மற்றுமொரு அமைப்பு என, இருவேறு அமைப்புகள் உள்ளன. ஆனால் மலையாளத்தில் ஒருமைக்கும் பன்மைக்கும் ஒரே போன்ற அமைப்பே உள்ளதை அறியமுடிகின்றது.

| | | |
|---|---|---|
| த: | வாயேன் | ஒரு. |
| | வாருங்களேன் | பன். |
| ம: | வராமோ/ வருமோ | ஒரு. |
| | வராமோ/ வருமோ | பன். |

#### 5.6.1.4. உறவு முறைப்பெயர்கள்

தற்காலத்தமிழில் சில ஏவல் வினைகள் உறவுமுறைப்பெயர்களையும் ஒட்டுக்களாக இணைத்து வருகின்றன. அப்போது முன்னிலை இடத்தில் தன்னை விட வயதில் இளையவராக இருந்தால் ஏவல் வினையுடன் டா, டீ பயன்படுத்தப்படுகிறது. மலையாளத்திலும் இதே முறை வழக்கில் உள்ளது.

எ.கா

| | | |
|---|---|---|
| த: | வா-டா | முன்.ஒரு. |
| | வா-டீ | முன்.ஒரு. |
| ம: | வா-டா | முன்.ஒரு. |
| | வா-டீ | முன்.ஒரு. |

### 5.6.2. செயல்வினை முற்றுக்கள் (Indicative Verb Forms)

செயல்வினை முற்றுகள் ஒரு செயல் நிகழ்ச்சியை நடுவு நிலையில் வெளிப்படுத்த உதவுகிறது. ( இசுராயேல் பக்-16). இவை திணை, பால், எண், இட உருபுகளை ஏற்று வரும். செயல் வினைகளில் உடன்பாடும் எதிர்மறையும் உண்டு.

மலையாளத்தில் செயல்வினை வடிவங்கள் காலங்காட்டும் உருபுகளை மட்டும் எடுத்து வரும். அவை திணை, பால், எண், இட உருபுகளை ஏற்பதில்லை. மலையாளத்திலும் உடன்பாட்டு

செயல்வினை முற்றுக்களும் எதிர்மறை செயல்வினை முற்றுக்களும் உண்டு.

#### 5.6.2.1. உடன்பாட்டு செயல்வினை முற்று

தமிழில் உடன்பாட்டு செயல்வினை வடிவங்கள் பால், எண், இட உருபுகளை ஏற்றே வருகின்றன. அப்போது அதன் அமைப்பு கீழ்க்கண்டவாறு அமையும்.

**[ வினையடி + காலங்காட்டும் உருபு + எண் உருபு + இடவிகுதி ]**

தமிழில் பால், எண், இட உருபுகள் மூன்றும் ஒன்றாக இணைந்து ஒரே உருபனாக, இம்மூன்று செய்திகளையும் உள்ளடக்கிய பாலறிகிளவியாக அமைகின்றது.

எ.கா:

வந்<u>தான்</u>, வரு<u>வான்</u>, வருகி<u>றான்</u>

மலையாளத்தில் உடன்பாட்டு வினை வடிவம் வினையடியையும், காலங்காட்டும் இட உருபனை மட்டுமே கொண்டு அமைகின்றது. அது, பாலறிகிளவிகளைக் கொண்டிருப்பதில்லை.

இதன் அமைப்பு:

**[ வினையடி + காலங்காட்டும் உருபு]**

எ.கா:

(அவன்) வன்னு, (அவன்) வருன்னு, (அவன்) வரும்

தமிழில் வினை முற்றிலிருந்தே எழுவாயின் திணை, பால், எண் மற்றும் இடத்தினை அறிந்துகொள்ள முடிகின்றது ஆனால் மலையாளத்தில் இவ்வாறு அறிய முடிவதில்லை இதற்குப்பதிலாக, எழுவாயின் பதிலிடுபெயர் வினைமுற்றின் முன்பு இணைக்கப்படுகின்றது. அப்பதிலிடுபெயரிலிருந்தே எழுவாயின் திணை, பால், எண் மற்றும் இடத்தினை அறிந்துகொள்ள இயல்கின்றது இம்மாறுபாடு அமைப்பு அளவிலும் வெளிப்பட்டு, இரு மொழிகளுக்கும் இடையே சிறப்பான வேறுபாடாக அமைகின்றது

**( அவன் வருன்னு = வருகிறான் )**

தமிழிலும் மலையாளத்திலும் மூன்று காலங்களுக்கும் உடன்பாட்டு வினைமுற்றுக்கள் அமைவதைக் கீழே காணலாம்.

5.6.2.1.1. இறந்தகால உடன்பாட்டு செயல்வினை முற்றுக்கள்

தமிழ்-மலையாளம்

"வருதல்" எனும் வினைக்கு இறந்த காலத்தில் தமிழிலும் மலையாளத்திலும் அமையும் செயல் வினைமுற்று வடிவங்களைக் கீழே காணலாம்.

| எண் | த-ப.பெயர் / த-மூ.பெ. | த-வி.மு. | ம.ப.பெயர்/ ம-மூ.பெ. | ம-வி.மு. |
|---|---|---|---|---|
| 1 | நான் | வந்தேன் | ஞான் | வன்னு |
| 2 | நாம்- உ.த.பன் | வந்தோம் | நாம் | வன்னு |
| 3 | நாங்கள்- உ.தா.த.பன் | வந்தோம் | ஞங்ஙள் | வன்னு |
| 4 | நீ | வந்தாய் | நீ | வன்னு |
| 5 | நீங்கள்-மரி.ஒ | வந்தீர்கள் | நிங்ஙள் | வன்னு |
| 6 | நீங்கள்-பன் | வந்தீர்கள் | நிங்ஙள் | வன்னு |
| 7 | அவன் | வந்தான் | அவன் | வன்னு |
| 8 | அவள் | வந்தாள் | அவள் | வன்னு |
| 9 | அவர் | வந்தார் | அத்தேகம் | வன்னு |
| 10 | அவர்கள் | வந்தார்கள் | அவர் | வன்னு |
| 11 | அது | வந்தது | அது | வன்னு |
| 12 | அவை | வந்தன | அவ | வன்னு |

தமிழில் இறந்தகால உடன்பாட்டு செயல் வினைமுற்றுக்கள் பெயர் மற்றும் மூவிடப்பெயர்களுக்கு பத்து வெவ்வேறு விதமான பாலறிகிளவிகளை ஏற்று அமைகின்றன. அவையாவன,

1.ஏன் 2.ஓம் 3.ஆய் 4.ஈர்கள் 5.ஆன் 6.ஆள் 7.ஆர் 8.ஆர்கள் 9.து 10.ன.

ஆனால் மலையாள இறந்தகால வினைமுற்றுக்கள் இவற்றை ஏற்று வருவதில்லை. எனவே அமைப்படிப்படையில் தமிழிலும் மலையாளத்திலும் இறந்தகால உடன்பாட்டு வினைமுற்றுக்களில் அமையும் சிறப்பான வேறுபாடாக இது கருதப்படுகின்றது.

[ வந்தான் = வன்னு ]

"வருதல்" எனும் வினைக்கு இறந்த காலத்தில் தமிழிலும் மலையாளத்திலும் அமையும் வினைமுற்று வடிவங்களை மேலே கண்டோம். மலையாள வினைகள் இறந்த காலத்தில் எவ்வித பாலறிகிளவியையும் எந்த ஒரு பதிலிடு பெயருக்கும் ஏற்பதில்லை என்பது அதன் மூலம் தெளிவாகின்றது. இனி நிகழ்காலத்திற்கு "வருதல்" எனும் வினைக்கு இருமொழிகளிலும் அமையும் வினைமுற்று வடிவங்களையும் அவற்றின் பாலறிகிளவிகளையும் காண்போம்.

5.6.2.1.2. நிகழ்கால உடன்பாட்டு செயல்வினை முற்றுக்கள்

தமிழ்-மலையாளம்

| எண் | த-ப.பெயர் த-மூ.பெ. | த-வி.மு. | ம.ப.பெயர் ம.மூ.பெ. | ம-வி.மு. |
|---|---|---|---|---|
| 1 | நான் | வருகிறேன்/ வருகின்றேன் | ஞான் | வருன்னு |
| 2 | நாம்- உ.த.பன் | வருகிறோம்/ வருகின்றோம் | நாம் | வருன்னு |
| 3 | நாங்கள்- உ.தா.த.பன் | வருகிறோம்/ வருகின்றோம் | ஞங்ஙள் | வருன்னு |
| 4 | நீ | வருகிறாய்/ வருகின்றாய் | நீ | வருன்னு |
| 5 | நீங்கள்-மரி.ஒ | வருகிறீர்கள்/ வருகின்றீர்கள் | நிங்ஙள் | வருன்னு |
| 6 | நீங்கள்-பன் | வருகிறீர்கள்/ வருகின்றீர்கள் | நிங்ஙள் | வருன்னு |
| 7 | அவன் | வருகிறான்/ வருகின்றான் | அவன் | வருன்னு |
| 8 | அவள் | வருகிறாள்/ வருகின்றாள் | அவள் | வருன்னு |
| 9 | அவர் | வருகிறார்/ வருகின்றார் | அத்தேகம் | வருன்னு |
| 10 | அவர்கள் | வருகிறார்கள்/ வருகின்றார்கள் | அவர் | வருன்னு |
| 11 | அது | வருகிறது/ வருகின்றது | அது | வருன்னு |
| 12 | அவை | வருகின்றன | அவ | வருன்னு |

தமிழில் நிகழ்காலத்திற்கும் 1 ஏன் 2.ஓம் 3.ஆய் 4 ஈர்கள் . 5.ஆன் 6.ஆள் 7.ஆர் 8.ஆர்கள் 9.து 10.ன. என்ற பத்து வித பாலறிகிளவிகளும் வினைமுற்றில் வருகின்றன. ஆனால் மலையாள வினைமுற்றுக்கள் அதன் ஈற்றில் எவ்வித பாலறிகிளவியையும் ஏற்பதில்லை. நிகழ்காலங்காட்டும் "உன்னு" எனும் உருபு மட்டுமே ஈற்றில் வந்து வினை முடிகின்றது இவ்வேறுபாடு இங்கே குறிப்பிடத்தக்கதாக உள்ளது.

[ வருகிறான் = வருன்னு ]

**5.6.2.1.3. எதிர்கால உடன்பாட்டு செயல் வினை முற்றுக்கள்**

**தமிழ்-மலையாளம்**

"வருதல்" எனும் வினைக்கு எதிர் காலத்தில் தமிழிலும் மலையாளத்திலும் அமையும் வினைமுற்று வடிவங்களைக் கீழே காணலாம். தமிழில் எட்டு வகையான பாலறிகிளவிகள் முக்காலத்திற்கும் ஒரே போன்று அமைகின்றன. தமிழில் அஃறிணைப்பதிலிடு பெயரான "அது" மற்றும் "அவைக்கு" எதிர்கால உடன்பாட்டு வினைமுற்றுக்கள் "உம்" என்று மட்டுமே அமைகின்றன. இவ்வாறு நோக்குகையில் தமிழின் அஃறிணைப்பதிலிடுபெயர்களின் பாலறிகிளவிகளான "உம்" மட்டுமே மலையாளத்தின் மூன்று காலங்களுக்கும் பாலறிகிளவிகளாக அமைந்து வருகின்றது என்று கருத ஏதுவாகின்றது.

எதிர்கால உடன்பாட்டு செயல் வினை முற்றுக்கள்

தமிழ்-மலையாளம்

| எண் | த-ப.பெயர்/ த-மூ.பெ. | த-வி.மு. | ம.ப.பெயர்/ ம.மூ.பெ. | ம-வி.மு. |
|---|---|---|---|---|
| 1 | நான் | வருவேன் | ஞான் | வரும் |
| 2 | நாம்- உ.த.பன் | வருவோம் | நாம் | வரும் |
| 3 | நாங்கள்- உ.தா.த.பன் | வருவோம் | ஞங்ஙள் | வரும் |
| 4 | நீ | வருவாய் | நீ | வரும் |
| 5 | நீங்கள்-மரி.ஒ | வருவீர்கள் | நிங்ஙள் | வரும் |
| 6 | நீங்கள்-பன் | வருவீர்கள் | நிங்ஙள் | வரும் |
| 7 | அவன் | வருவான் | அவன் | வரும் |
| 8 | அவள் | வருவாள் | அவள் | வரும் |
| 9 | அவர் | வருவார் | அத்தேகம் | வரும் |
| 10 | அவர்கள் | வருவார்கள் | அவர் | வரும் |
| 11 | அது | வரும் | அது | வரும் |
| 12 | அவை | வரும் | அவ | வரும் |

[ வருவேன், வரும் = வரும்

### 5.6.2.2. எதிர்மறைச் செயல்வினைமுற்று ( Negative Indicative Forms)

தமிழிலும் மலையாளத்திலும் எதிர்மறை செயல் வினைமுற்றுக்கள் காணப்படுகின்றன. இக்காலத்தமிழில் எதிர்மறை செயல் வினைமுற்றுக்கள் காலங்கட்டும் உருபுகளை எடுத்து வருவதில்லை. (கு.பரமசிவம், பக் - 235). அவை மூன்று காலங்களைக் காட்டினாலும் காலங்காட்டக்கூடிய உருபானது மூன்று காலங்களுக்குமே இல்லை.

எ.கா:

| | | |
|---|---|---|
| அவன் வரவில்லை | - | இறந்த காலம் |
| அவன் வருகிறதில்லை | - | நிகழ் காலம் |
| அவன் வரமாட்டான் | - | எதிர் காலம் |

தமிழில் எதிர்மறை செயல் வினைமுற்றுக்களில், "செய்ய" எனும் வாய்ப்பாட்டு வினையெச்சத்தோடு மூன்று வித எதிர்மறை சுட்டும் சொற்களைச் சேர்ப்பதன் மூலம் எதிர்மறையானது வெளிப்படுத்தப்படுகின்றது. அவை,

1. மாட்டு
2. இல்லை
3. ஆது

என்பன ஆகும்.

1. மாட்டு

"மாட்டு" என்பது உயர்திணையில் வரும். எதிர்காலத்தைச் சுட்டுவதாகவே அமையும். மேலும் இது திணை, பால், எண் மற்றும் இட உருபைப் பெற்று வரும்.

எ.கா: அவள் வரமாட்டாள்

அவர் நடக்கமாட்டார்

"மாட்டு" என்பது சாதாரணமாக அஃறிணை ஒருமைப் பன்மைகளை ஏற்காது. ஆனால் எழுத்துத்தமிழ், அரசாங்கத்தமிழ் ஆகியவற்றில் செயப்பாட்டு வினை வடிவங்களில் "மாட்டு" வரலாம்.

எ.கா:

1. புறப்படமாட்டாது
2. அனுமதிக்கப்படமாட்டாது
3. ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது

2. இல்லை

தமிழில் "செய்ய" எனும் வாய்ப்பாட்டு வினையெச்சத்தோடு "இல்லை" எனும் எதிர்மறை சுட்டும் சொல்லைச் சேர்ப்பதன் மூலம் எதிர்மறை உடன்பாட்டு வினைமுற்றுக்கள் தோன்றுகின்றன.

எ.கா:

1. வரவில்லை
2. வருகிறதில்லை

"இல்லை" என்பது இறந்தகாலத்தையும், நிகழ்காலத்தையும் மட்டுமே சுட்டுவது இங்கே குறிப்பிடத்தக்கது ஆகும்.

3. **ஆது**

அஃறிணை ஒருமை மற்றும் பன்மைகளில் "செய" வென் எச்சத்தோடு "ஆது" என்னும் உருபைச்சேர்த்து எதிர்மறை செயல் வினை முற்றுக்கள் பெறப்படும்.

எ.கா:

1. நடைபெறாது
2. வராது
3. சாப்பிடாது.

தற்கால மலையாளத்தில் பொதுவாக "இல்லா" எனும் ஒட்டைச் சேர்த்து எதிர்மறை செயல் வினைமுற்று வடிவங்கள் பெறப்படுகின்றன. இறந்தகால, நிகழ்கால வினைமுற்றுக்களில் "இல்லா" எனும் எதிர்மறை காட்டும் ஒட்டைச் சேர்த்து எதிர்மறை வடிவங்கள் அமைக்கப்படுகின்றன (ஆர். இ.ஆசர். பக் - 152).

எ.கா:

1. அவன் படிச்சு = அவன் படிச்சில்லா
2. அவன் படிக்குன்னு = அவன் படிக்குன்னில்லா

தமிழில் இறந்தகாலத்தையும் நிகழ்காலத்தையும் எதிர்மறையில் சுட்டுகையில் வினையெச்சத்துடன் "இல்லை" எனும் சொல் சேர்கிறது ஆனால் மலையாளத்தில் வினைமுற்றுடனேயே “இல்லா” எனும் சொல் சேர்ந்து எதிர்மறை சுட்டுவது காண்க

எ கா:

1. அவன் **படிக்கவில்லை** = அவர் **படிச்சில்லா**

2 அவன் **படிக்கிறதில்லை** = அவன் **படிக்குன்னில்லா**

அவன் படிக்கவில்லை = அவன் **படிக்குன்னில்லா**

இருமொழிகளிலும் இலக்கணத்திலும் அமைப்பிலும் அமையும் வேறுபாடாக இது அமைகின்றது.

**[ வினையெச்சம் + இல்லை = வினைமுற்று + இல்லா ]**

மலையாளத்தில் எதிர்மறை வினைமுற்றுக்கள் எதிர்காலத்தில் அமையும் போது வினையெச்சத்தையும் “இல்லா" என்ற ஒட்டையும் சேர்த்தோ அல்லது வினையடியையும் "இல்லா" என்ற ஒட்டையும் சேர்த்தோ அமைக்கப்படுகின்றன. ( ஆர். இ ஆசர். பக் - 152 )

எ.கா.

**அவன் படிக்கும் = 1. அவன் படிக்குகயில்லா.**

**2. அவன் படிக்கில்லா**

தமிழில் எதிர்கால எதிர்மறை செயல்வினைமுற்றுக்கள் உயர்திணையில் “மாட்டு” எனும் சொல்லையும் அஃறிணையில் “ஆது”

எனும் ஒட்டையும் எடுத்து வந்து எதிர்மறைகளைக் காண்பிக்கின்றன. ஆனால் மலையாளத்தில் இரு திணைகளுக்கும் "இல்லா" எனும் ஒரு ஒட்டால் மட்டுமே எதிர்மறையானது சுட்டப்படுகின்றது.

எ.கா:

தமிழ்

1. அவன் வரமாட்டான் - உயர்திணை எதிர்கால எதிர்மறை வினைமுற்று.
2. அது வராது - அஃறிணை எதிர்கால எதிர்மறை வினைமுற்று.

மலையாளம்

1. அவன் வரில்லா/ அவன் வரிகயில்லா - உ.தி, எதி.கா. எதி.ம. வினைமுற்று.
2. அது வரில்லா/ அது வரிகயில்லா - அ.தி, எதி.கா. எதி.ம. வினைமுற்று.

இருமொழிகளுக்கும் இடையே அமையும் வேறுபாடு இங்கே தெளிவாக சுட்டப்பட்டுள்ளது.

தமிழில் வினையெச்சத்தோடு எதிர்மறை காட்டும் உருபுகள் சேர்ந்து எதிர்கால எதிர்மறை வினைமுற்றுக்களை உருவாக்கும். மலையாளத்தில் வினையெச்சத்தையும் "இல்லா" என்ற உருபையுமோ அல்லது வினையடியையும் "இல்லா" என்ற உருபையுமோ சேர்த்து எதிர்மறை எதிர்கால வினைமுற்றுக்கள் பெறப்படுகின்றன. தமிழ் மலையாளத்துக்கிடையே காணப்படும் வேறுபாடாக இது அமைகின்றது.

தமிழிலும் மலையாளத்திலும் மூன்று காலங்களிலும் அமையும் எதிர்மறை செயல் வினைமுற்றுக்களை கீழே காணலாம். எ.காட்டாக, "படித்தல்" எனும் வினைக்கு மூன்று காலங்களிலும் அமையும் எதிர்மறை செயல் வினைமுற்று வடிவங்கள் கீழ்க்கண்டவாறு அமையும்.

### இறந்தகாலம்

தமிழில் இறந்தகாலத்திற்கு எதிர்மறை செயல் வினைமுற்று வடிவங்கள் எவ்வித பாலறிகிளவிகளையும் ஏற்பதில்லை. மலையாளத்திலும் அவை இவ்வாறே அமைகின்றன.

5.6.2.2.1. எதிர்மறை செயல் வினைமுற்று வடிவம் - இறந்தகாலம்

| எண் | த-ப.பெயர்/ த.மூ.பெ. | த-எ.வி.மு. | ம.ப.பெயர்/ ம.மூ.பெ. | ம-எ.வி.மு. |
|---|---|---|---|---|
| 1 | நான் | படிக்கவில்லை | ஞான் | படிச்சில்லா |
| 2 | நாம்- உ.த.பன் | படிக்கவில்லை | நாம் | படிச்சில்லா |
| 3 | நாங்கள்- உ.தா.த.பன் | படிக்கவில்லை | ஞங்ஙள் | படிச்சில்லா |
| 4 | நீ | படிக்கவில்லை | நீ | படிச்சில்லா |
| 5 | நீங்கள்-மரி.ஒ | படிக்கவில்லை | நிங்ஙள் | படிச்சில்லா |
| 6 | நீங்கள்-பன் | படிக்கவில்லை | நிங்ஙள் | படிச்சில்லா |
| 7 | அவன் | படிக்கவில்லை | அவன் | படிச்சில்லா |
| 8 | அவள் | படிக்கவில்லை | அவள் | படிச்சில்லா |
| 9 | அவர் | படிக்கவில்லை | அத்தேகம் | படிச்சில்லா |
| 10 | அவர்கள் | படிக்கவில்லை | அவர் | படிச்சில்லா |
| 11 | அது | படிக்கவில்லை | அது | படிச்சில்லா |
| 12 | அவை | படிக்கவில்லை | அவ | படிச்சில்லா |

### 5.6.2.2.2. எதிர்மறை செயல் வினைமுற்று வடிவம் - நிகழ்காலம்

தமிழில் நிகழ்கால எதிர்மறை செயல் வினைமுற்று வடிவம் இறந்தகாலத்தைப் போன்று அமைகின்றது. எ.கா: படிக்கவில்லை. நிகழ்காலத்துக்கான மற்றுமொரு வடிவமும் அமைந்துள்ளது. எ.கா: படிக்கிறதில்லை.

| எண் | த-ப.பெயர்/ த.மு.பெ. | த-எ.வி.மு. | ம.ப.பெயர்/ ம.மு.பெ. | ம-எ.வி.மு. |
|---|---|---|---|---|
| 1 | நான் | படிக்கவில்லை/ படிக்கிறதில்லை | ஞான் | படிக்குன்னில்லா |
| 2 | நாம்- உ.த.பன் | படிக்கவில்லை/ படிக்கிறதில்லை | நாம் | படிக்குன்னில்லா |
| 3 | நாங்கள்- உ.தா.த.பன் | படிக்கவில்லை/ படிக்கிறதில்லை | ஞங்ஙள் | படிக்குன்னில்லா |
| 4 | நீ | படிக்கவில்லை/ படிக்கிறதில்லை | நீ | படிக்குன்னில்லா |
| 5 | நீங்கள்-மரி.ஒ | படிக்கவில்லை/ படிக்கிறதில்லை | நிங்ஙள் | படிக்குன்னில்லா |
| 6 | நீங்கள்-பன் | படிக்கவில்லை/ படிக்கிறதில்லை | நிங்ஙள் | படிக்குன்னில்லா |
| 7 | அவன் | படிக்கவில்லை/ படிக்கிறதில்லை | அவன் | படிக்குன்னில்லா |
| 8 | அவள் | படிக்கவில்லை/ படிக்கிறதில்லை | அவள் | படிக்குன்னில்லா |
| 9 | அவர் | படிக்கவில்லை/ படிக்கிறதில்லை | அத்தேகம் | படிக்குன்னில்லா |
| 10 | அவர்கள் | படிக்கவில்லை/ படிக்கிறதில்லை | அவர் | படிக்குன்னில்லா |
| 11 | அது | படிக்கவில்லை/ படிக்கிறதில்லை | அது | படிக்குன்னில்லா |
| 12 | அவை | படிக்கவில்லை/ படிக்கிறதில்லை | அவ | படிக்குன்னில்லா |

ஆனால் மலையாளத்தில் இறந்தகால எதிர்மறை செயல் வினைமுற்றுக்களும் நிகழ்கால எதிர்மறை செயல் வினைமுற்றுக்களும் வெவ்வேறாக அமைகின்றன. இங்கே தமிழுக்கும் மலையாளத்துக்குமிடையேயான வேறுபாடு அமைந்துள்ளதனை அறியலாம்

**5.6.2.2.3. எதிர்மறை செயல் வினைமுற்று வடிவம் - எதிர்காலம்**

| எண் | த-ப.பெயர் | த-எ.வி.மு. | ம.ப.பெ. | ம-எ.வி.மு. |
|---|---|---|---|---|
| 1 | நான் | படிக்கமாட்டேன் | ஞான் | படிக்கில்லா |
| 2 | நாம்- உ.த பன் | படிக்கமாட்டோம் | நாம் | படிக்கில்லா |
| 3 | நாங்கள்-<br>உ தா.த.பன் | படிக்கமாட்டோம் | ஞங்ஙள் | படிக்கில்லா |
| 4 | நீ | படிக்கமாட்டாய் | நீ | படிக்கில்லா |
| 5 | நீங்கள்-மரி.ஒ | படிக்கமாட்டீர்கள் | நிங்ஙள் | படிக்கில்லா |
| 6 | நீங்கள்-பன் | படிக்கமாட்டீர்கள் | நிங்ஙள் | படிக்கில்லா |
| 7 | அவன் | படிக்கமாட்டான் | அவன் | படிக்கில்லா |
| 8 | அவள் | படிக்கமாட்டாள் | அவள் | படிக்கில்லா |
| 9 | அவர் | படிக்கமாட்டார் | அத்தேகம் | படிக்கில்லா |
| 10 | அவர்கள் | படிக்கமாட்டார்கள் | அவர் | படிக்கில்லா |
| 11 | அது | படிக்காது | அது | படிக்கில்லா |
| 12 | அவை | படிக்காது | அவ | படிக்கில்லா |

தமிழில் உயர்திணைப்பெயர்களுக்கு **"மாட்டேன்"** எனும் எதிர்மறை சுட்டும் சொல்லும் அஃறிணைக்கு **"ஆது"** எனும் உருபும் உள்ளன.

மலையாளத்தில் இவ்விரு திணைகளுக்கும் ஒரே மாதிரியான வடிவமே உள்ளன.

எ.கா: படிக்கில்லா.

தமிழில்

**[ வினையெச்சம் + மாட்டு + பாலறிகிளவிகள் ]**

என வந்து எதிர்மறை சுட்டும்.

மலையாளத்தில்

**[வினையடி + இல்லா]**

என வந்து எதிர்மறை காட்டுகின்றன.

**5.6.2.3. காலம்காட்டும் உருபுகள்**

" காலம் தாமே மூன்றென மொழிப " (தொல்.சொல்.199.)

என்று தொல்காப்பியம் தமிழ் மொழியின் காலத்தைக்குறித்துக் கூறுகின்றது. தற்காலத்தமிழிலும் மலையாளத்திலும் காலம் மூன்று வகைப்படும். அவை,

1. இறந்தகாலம்
2. நிகழ்காலம்
3. எதிர்காலம்

### 5.6.2.3.1. தமிழில் இறந்த கால உருபுகள்

தற்காலத்தமிழில் எட்டு வெவ்வேறு இறந்தகாலங்காட்டும் உருபுகள் காணப்படுகின்றன அவையாவன,

| -த்- | -த்த்- | -ந்த்- | -இன் - | -இ- | -ட்- | -ற்- | -ன் - |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | |

எ கா

-த்- செய்தான், அழுதான், உழுதான்,

-த்த்- அடித்தார், கொடுத்தான், சிரித்தான்

-ந்த்- எழுந்தான், வந்தது, நடந்தாள்

-இன் -பேசினார், எழுதினார், கூறினார்

-ட்- கண்டான், உண்டார், கொண்டாள்

-ற்- கற்றான், பெற்றான், நின்றாள்

-ன் - ஆனான், போனான்

### மலையாளத்தில் இறந்த கால உருபுகள்

| -இ- | -உ- |
|---|---|
| | |

தற்கால மலையாளத்தில் "-இ-" மற்றும் "-உ-" என இரண்டு இறந்தகால உருபுகள் உள்ளன. வினையடியுடன் இவை சேர்வதன் மூலம் மலையாள வினைகளில் இறந்தகாலம் சுட்டப்படுகின்றது.

இதில் "-உ-" உருபு இடம்பெறுகையில் ஒத்த மெய்யோ இரட்டித்த மெய்யோ வரும்.

எ.கா:

"-இ-" - கயறி, துடங்ஙி, போயி, இறக்கி

"-உ-" - செய்து, கண்டு, விட்டு, பெற்று, பரஞ்ஞு.

#### 5.6.2.3.2. தமிழில் நிகழ் கால உருபுகள்

| -கிற்- | -கின்ற்- |
|---|---|

தமிழில் நிகழ்கால உருபுகள் இரண்டு ஆகும். அவை "-கிற்-" மற்றும் "-கின்ற்-" என்பன.

எ.கா:

-கிற்- வருகிறேன், எழுதுகிறேன், பேசுகிறேன்

-கின்ற்- வருகின்றேன், எழுதுகின்றேன், பேசுகின்றேன்

#### மலையாளத்தில் நிகழ் கால உருபுகள்

| -உன்னு |
|---|

மலையாளத்தில் நிகழ்கால உருபு ஒன்றே உள்ளது. அது "-உன்னு" என்பதாகும்.

எ.கா:

-உன்னு - செய்யுன்னு, காணுன்னு, விடுன்னு, போகுன்னு

### 5.6.2.3.3. தமிழில் எதிர்கால கால உருபுகள்

| -ப்- | -ப்ப்- | -வ்- | -உம் |
|---|---|---|---|

தற்காலத்தமிழில் எதிர்கால உருபுகள் "-ப்-" , "-ப்ப்-", "-வ்-" மற்றும் "-உம்-" ஆகும்.

எ.கா

-ப்- காண்பான், நிற்பாள், உண்பாய்

-ப்ப்- அடிப்பாள், தடுப்பார், கொடுப்ப

-வ்- செய்வார், போவான், வருவா

-உம் அழும், வரும், போகும்

**மலையாளத்தில் எதிர்கால கால உருபுகள்**

| -உம் |
|---|

மலையாளத்தில் எதிர்கால உருபு "-உம்" ஆகும். இது வினையடியுடன் இணைந்து எதிர்காலத்தைக் காட்டும்.

எ.கா:

கரயும், துடங்ஙும், காணும், வீழும்.

### 5.6.2.4. பால் எண் இட விகுதிகள் ( Pronominal Suffixes )

தமிழில் வினைச்சொற்கள் திணை பால் எண் இட விகுதிகளைப்பெற்றே வரும்.

"இருதிணை மருங்கின் ஐம்பால் அறிய

ஈற்றில் நின்றிசைக்கும் பதினோ ரெழுத்தும்

தோற்றம் தாமே வினையொடு வருமே"

( தொ.சொல். 10 )

என்று தொல்காப்பியம் திணை, பால், எண் மற்றும் இட விகுதிகளைப் பற்றிக் கூறுகின்றது.

தமிழ் வினைமுற்று ஒன்றில் ஒரே விகுதியே திணை, பால், எண் மற்றும் இடம் குறித்த செய்திகள் அனைத்தையும் வெளிப்படுத்த வல்லது. எ.கா: **வந்தான்**. (-ஆன்).

மலையாள வினைச்சொற்களில் இப்பாலறிகிளவிகள் காணப்படுவதில்லை. எனவே மலையாள வினைச்சொற்கள் மூவிடப்பெயர்களின் இடப்பெயர் விகுதிகளைக் கொண்டு அமைவதில்லை. எ.கா: வரும். அவை காலங்கட்டும் விகுதிகளை மட்டுமே பெற்று வரும். அங்கே திணை, பால், எண் மற்றும் இடம் குறித்த செய்திகள் வினைமுற்றின் முன்பே இடம்பெறும் எழுவாய் மூலம் சுட்டப்படும். எழுவாய் பெயராகவோ, பதிலிடுபெயராகவோ அமையும். அவ்வெழுவாயினின்று மட்டுமே திணை, பால், எண், இடம் குறித்த செய்திகள் பெறப்படும்.

தமிழில் வினைச்சொல்லின் முன் இடம்பெறும் பெயரையோ, பதிலிடு பெயரையோ நீக்கிவிட்டாலும் வினைமுற்றில் இருந்து திணை, பால், எண், இடம் குறித்த செய்திகளைப் பெறலாம். ஆனால்

மலையாளத்தில் அவ்வாறு நீக்கினால் அச்செய்திகளைப் பெறுவது இயலாது.

எ.கா:

| | |
|---|---|
| தமிழ் | அவன் வந்தான் (வந்தான்) |
| மலையாளம் | அவன் வன்னு |

**5.6.2.4.1. தமிழிலும் மலையாளத்திலும் மூவிடப்பெயர் விகுதிகள்- இறந்தகாலம்**

தமிழிலும் மலையாளத்திலும் வினைமுற்றுக்களில் மூவிடப்பெயர் விகுதிகள் அமையும் முறையை ஒப்பிட்டு நோக்கினால் இரு வினைகளுக்கும் இடையே அமையும் வேறுபாடு நன்கு விளங்குகிறது. தமிழில் பத்து மூவிடப்பெயர் விகுதிகள் அல்லது பாலறி கிளவிகள் வினைமுற்றில் இடம்பெற்றே வருகின்றன. ஆனால் மலையாளத்தில் அப்படியான எவ்வித விகுதியும் பெறாமல் வினைமுற்றுகள் அமைகின்றன. தமிழில் மூன்று காலங்களுக்கும் இவ்விகுதிகள் வினைமுற்றுக்களால் ஏற்கப்படுகின்றன. மலையாளத்தில் எக்காலத்திற்குமே இவை வினைமுற்றுக்களில் ஏற்கப்படுவது இல்லை.

தமிழிலும் மலையாளத்திலும் மூவிடப்பெயர் விகுதிகள்- இறந்தகாலம்

| எண் | த-மு.பெயர்/ | த-வி.மு. | த.மு.பெ.வி. | ம.மு.பெ | ம-வி.மு. | ம.மு.பெ வி. |
|---|---|---|---|---|---|---|
| 1 | நான் | பார்த்தேன் | ஏன் | ஞான் | கண்டு | — |
| 2 | நாம்- உ.த.பன் | பார்த்தோம் | ஓம் | நாம் | கண்டு | — |
| 3 | நாங்கள்- உ.தா.த.பன் | பார்த்தோம் | ஓம் | ஞங்ஙள் | கண்டு | — |
| 4 | நீ | பார்த்தாய் | ஆய் | நீ | கண்டு | — |
| 5 | நீங்கள்-மரி.ஒ | பார்த்தீர்கள் | ஈர்கள் | நிங்ள் | கண்டு | — |
| 6 | நீங்கள்-பன் | பார்த்தீர்கள் | ஈர்கள் | நிங்ஙள் | கண்டு | — |
| 7 | அவன் | பார்த்தான் | ஆன் | அவன் | கண்டு | — |
| 8 | அவள் | பார்த்தாள் | ஆள் | அவள் | கண்டு | — |
| 9 | அவர் | பார்த்தார் | ஆர் | - | கண்டு | — |
| 10 | அவர்கள் | பார்த்தார்கள் | ஆர்கள் | அவர் | கண்டு | — |
| 11 | அது | பார்த்தது | து | அது | கண்டு | — |
| 12 | அவை | பார்த்தன | ன | அவ | கண்டு | — |

மலையாளத்தில் வினைமுற்றுக்கள் இறந்தகாலத்திற்கு எவ்வாறு மூவிடப்பெயர் விகுதிகளை ஏலாமல் அமைகின்றனவோ அதே போன்றே நிகழ்காலத்துக்கும், எதிர்காலத்துக்கும் அமையும். இவ்வாறு பாலறிகிளவிகள் அற்று அமையும் பண்பானது திராவிட மொழிகளில் மலையாள மொழிக்கு மட்டுமே அமைந்துள்ள தனித்தன்மை ஆகும்.

### 5.6.3. வியங்கோள் வினை ( Optative Verb )

பேசுவோனுடைய விருப்பத்தைக் குறிக்கும் வினை "வியங்கோள் வினை" எனப்படும். வியங்கோள் வினை எப்போதும் எதிர்காலத்தைச் சுட்டி நிற்கும். ஆனால் கால உருபு எதையும் ஏற்காது. வியங்கோள் வினை தன்மை, முன்னிலை, படர்கை என மூவிடங்களிலும் வரும். மேலும் வாழ்த்தல், வைதல் போன்ற பொருள்களில் வரும் என்பர் மரபிலக்கண வல்லுநர்கள்.

எ.கா:

வாழ்க - வாழ்த்தல்

நாசமாகப் போக - வைதல்

இவற்றுள் 'க' என்பது வியங்கோள் விகுதி எனப்படும். இதன் அமைப்பு,

**[ வினையடி + வியங்கோள் விகுதி ]**

(முனை. ச.அகத்தியலிங்கம் , தமிழ்மொழி அமைப்பியல், 2002, பக் 258).

இக்காலத்தமிழில் வாழட்டும், வளரட்டும் போன்ற சொற்கள் வியங்கோட்பொருளில் வருகின்றன. இதன் அமைப்பு,

**[ செயவென் எச்சம் = அட்டும் ]**

எ.கா: நலமாய் **வாழட்டும்**

தற்கால மலையாளத்தில் வியங்கோள் வினையானது, "-அட்டே" எனும் விகுதியினை வினையடியுடன் சேர்ப்பதன் மூலம் பெறப்படுகிறது.

இதன் அமைப்பு,

[ வினையடி + அட்டே]

எ.கா:

நீணாள் வாழட்டே !

அங்ஙனெ இரிக்கட்டே !

தமிழில் "அட்டும்" எனும் விகுதி சேர்ந்து வியங்கோள் வினையானது அமைகின்றது. மலையாளத்தில் வியங்கோள் வினை "அட்டே" எனும் விகுதி இணைந்து பெறப்படுகின்றது.

[ அட்டும் = அட்டே ]

**5.5.2.எச்சவினைகள்(Non-FiniteVerbForms)**

மொழியியல் வல்லுனர்கள் தற்காலத்தமிழில் பயின்று வரும் எச்ச வினைகளை நான்கு பிரிவுகளின் கீழ் அடக்குகின்றனர். அவையாவன,

1. செயவெனவெச்சம்/ செய எனும் வாய்ப்பாட்டு வினையெச்சம்
2. வினையெச்சம்
3. நிபந்தனை எச்சம்
4. பெயரெச்சம்

**5.5.2.1. செயவெனவெச்சம் (Infinitive)**

இவ்வகை எச்சத்தினை தனி வகையாகக் கூறாமல் வினையெச்சங்களுள் ஒன்றாகக் கூறுவதே மரபு. ((மு.வரதராசன்,

மொழிநூல், 2010, பக் - 244 ). ஆனால் மொழியியல் வல்லுனர்கள் ஐரோப்பிய மொழிகளில் காணப்படுவது போல் அதனைத் தனிப்பிரிவில் விளக்குகின்றனர். இவ்வமைப்பில் மட்டும் எதிர்மறை கிடையாது. இவ்வினைகள் காலம் காட்டுவதும் இல்லை. இவ்வகை வினைகள் வினையடியுடன் “அ” எனும் ஒட்டு சேர்வதன் மூலம் உருவாகிறது.

எ.கா:

அழு + அ = அழ

தூங்கு + அ = தூங்க

பாடு + அ = பாட

மலையாளத்தில் இவ்வினைகள் வினையடியுடன் “-ஆன்” மற்றும் “-உவான்” என்னும் விகுதிகளைச் சேர்ப்பதன் மூலம் உருவாக்கப்படுகின்றன.

எ.கா:

கர + ஆன் = கரயான் (அழ)

கர + உவான் = கரயுவான் (அழ)

பாடு + ஆன் = பாடான் (பாட)

தமிழில் வினையடியுடன் “-அ” விகுதியைச் சேர்ப்பதன் மூலம் செயவென் எச்சங்கள் உருவாக்கப்படுகின்றன. மலையாளத்தில் வினையடியுடன் “-ஆன்” மற்றும் “-உவான்” விகுதியைச் சேர்ப்பதன் மூலம் செயவென் எச்சங்கள் உருவாகின்றன. இவ்வேறுபாடு இங்கே குறிப்பிடப்படுகிறது. **[ அ = ஆன்/ உவான்**

### 5.5.2.2. வினையெச்சம் (Verbal Participle)

வினையிலிருந்து பிறந்தனவாகவும் வினை கொண்டு முடிவனவாகவும் அமைந்த கிளவிகள் வினையெச்சம் என்று அழைக்கப்படும். (முனை. பொற்கோ, இக்காலத்தமிழ் இலக்கணம், பக்- 79). இவர் ஆறுவகையான வினையெச்ச வாய்ப்பாடுகளைக்கூறி, தமிழில் அவை பயின்று வரும் முறைகளையும் விளக்குகின்றார்.

நன்னூலார்,

"தொழிலும் காலமும் தோற்றிப் பால்வினை

ஒழிய நிற்பது வினையெச் சம்மே"

என, வினையெச்சம் காலத்தினைக் காட்டும்; ஆனால் திணை, பால், எண், இடம் ஆகியவற்றை உணர்த்தாது என்று குறிப்பிடுகின்றார். மேலும், ஒன்பது வினையெச்ச வாய்ப்பாடுகளையும், கூறியுள்ளார். அவை செய்து, செய்பு, செய்யா, செய்யூ, செய்தென, செய்ய, செய்யின், செய்யிய, செய்யியர், எனும் ஒன்பதே ஆகும். ஆனால் இவையனைத்தும் இக்காலத்தமிழில் வழக்கில் இல்லை; செய்து, செய்ய எனும் இரண்டு வாய்ப்பாடுகளும், மேலும் நிபந்தனைப் பொருளில் வழங்கும் "செய்யின்" எனும் வினையெச்ச வாய்ப்பாடும் மட்டுமே இக்காலத் தமிழில் வழங்குகின்றது என்பார் டாக்டர் கு பரமசிவம். ( இக்காலத்தமிழ் மரபு. பக் - 255 ).

வினையெச்சம் காலம் காட்டுவதில்லை. இதில் உடன்பாடும் எதிர்மறையும் உண்டு.

**5.5.2.2.1. உடன்பாட்டு வினையெச்சம்**

வினையடியுடன் வினையெச்சவிகுதிகளான -து, -ந்து, -இ, -உ, மற்றும் -த்து ஆகியவற்றைச் சேர்ப்பதன் மூலம் தமிழில் வினையெச்சங்கள் தோன்றுகின்றன.

எ.கா:

அழு + து = அழுது

உட்கார் + ந்து = உட்கார்ந்து

தூங்கு + இ = தூங்கி

போடு + உ = போட்டு

படி + த்து = படித்து

மலையாளத்தில் உடன்பாட்டு வினையெச்சம் வினையடியுடன் வினையெச்ச விகுதியான "-இ" சேர்வதன் மூலம் உருவாகின்றது.

எ.கா:

ஓடு + இ = ஓடி

போய் + இ = போயி

**5.5.2.2.2. எதிர்மறை வின்னயெச்சம்**

தமிழில் எதிர்மறை வினையெச்சம் இரு வகையில் பெறப்படுகின்றன.

(1) வினையடியுடன் எதிர்மறை உருபான "-ஆ" வையும் வினையெச்ச ஒட்டு "-மல்" ஐயும் சேர்ப்பதன் மூலம் பெறப்படுகின்றது

இதன் அமைப்பு

[வினையடி + ஆ + மல்]

எ.கா

அழு + ஆ + மல் = அழாமல்

தூங்கு + ஆ + மல் = தூங்காமல்

(2) வினையடியுடன் எதிர்மறை சுட்டும் உருபான "-ஆத்" தையும் ஒலி இசைவு ஒட்டு "-து" ஐயும் சேர்ப்பதன் மூலம்.

எ.கா:

அழு + ஆத் + உ = அழாது

தூங்கு + ஆத் + உ = தூங்காது

மலையாளத்தில் வினையடியுடன் எதிர்மறை சுட்டும் உருபு "-ஆதே" யைச் சேர்ப்பதன் மூலம் எதிர்மறை வினையெச்சம் பெறப்படுகிறது.

எ.கா:

கரய் + ஆதே = கரயாதே

உறங் + ஆதே = உறங்ஙாதே

இரு மொழிகளிலும் எதிர்மறை வினையெச்சம் வேறுபடும் முறை இங்கே சுட்டப்படுகிறது.

**[ ஆமல் / ஆது = ஆதே ]**

### 5.5.2.3. நிபந்தனை எச்சம் ( Conditional )

எச்ச வகையில் நிபந்தனை எச்சமும் காலங்காட்டும் உருபுகளை ஏற்பதில்லை இவ்வகையிலும் உடன்பாடும் எதிர்மறையும் உண்டு.

**உடன்பாட்டு நிபந்தனை எச்சம்**

இவ்வகை நிபந்தனை எச்சம், வினையடியுடன் இறந்தகால உருபையும், "-ஆல்" எனும் நிபந்தனை ஒட்டையும் எடுத்து வரும். நிபந்தனை எச்சத்தில் இவ்வாறு இறந்தகாலங்காட்டும் உருபு மட்டுமே இடம் பெறும். நிகழ்கால மற்றும் எதிர்கால உருபுகள் இடம்பெறுவதில்லை.

இதன் அமைப்பு,

**[வினையடி + இறந்தகால உருபு + ஆல்**

என அமையும்.

எ.கா:

அழு + த் + ஆல் = அழுதால்

விழு + ந்த் + ஆல் = விழுந்தால்

பாடு + இன் + ஆல் = பாடினால்

ம்லையாளத்திலும் நிபந்தனை வினைகள் காலம் காட்டுவதில்லை. இவ்வினைகள், வினையெச்சத்துடன் "-ஆல்" அல்லது "-எங்கில்" எனும் நிபந்தனை எச்ச ஒட்டினைச் சேர்ப்பதன் மூலம் தோன்றும்.

எ.கா: கரஞ்ஞு + ஆல் = கரஞ்ஞால்

அடிச்சு + ஆல் = அடிச்சால்

கரஞ்னு + எங்கில் = கரஞ்ஞெங்கில்

அடிச்சு + எங்கில் = அடிச்செங்கில்

தமிழில் "-ஆல்" எனும் ஒரு நிபந்தனை எச்ச உருபு மட்டுமே இருக்க, மலையாளத்தில் "-ஆல்" எனும் உருபும், "எங்கில்" என்னும் சொல்லும் நிபந்தனை எச்சத்தை உருவாக்க பயன்படுகின்றது. அமைப்பு அளவில் இரு மொழிகளும் இவ்விடம் வேறுபடுவதை இங்கே காணமுடிகின்றது.

**[ ஆல் = ஆல் / எங்கில் ]**

**5.5.2.3.2. எதிர்மறை நிபந்தனை எச்சம்**

தற்காலத் தமிழில் வினையடியுடன் எதிர்மறை உருபான "-ஆ" வையும், "விட்டால்" எனும் சொல்லையும் சேர்ப்பதன் மூலம் எதிர்மறை நிபந்தனை எச்சவினை தோன்றும்.

இதன் அமைப்பு,

**[வினையடி + ஆ = விட்டால்]**

எ.கா:

அழு + ஆ + விட்டால் = அழாவிட்டால்

விழு + ஆ + விட்டால் = விழாவிட்டால்

மலையாளத்தில் எதிர்மறை நிபந்தனை எச்சமானது வினையடியுடன் "-இல்" எனும் எதிர்மறை ஒட்டையும் "எங்கில்" எனும் நிபந்தனை வெளிப்படுத்தும் உருபனையும் எடுத்து வரும்.

இதன் அமைப்பு,

**[வினையடி + இல் + எங்கில் ]**

எ.கா:

கரஞ் + இல் + எங்கில் = கரஞ்ஞில்லெங்கில்

வண் + இல் + எங்கில் = வண்ணில்லெங்கில்

தமிழும் மலையாளமும் எதிர்மறை நிபந்தனை வினையெச்ச அமைப்பில் வேறுபடுவது இவ்விடம் காணப்படுகிறது.

**[ ஆ + விட்டால் = இல் + எங்கில் ]**

**5.5.2.4. பெயரெச்சம் ( Adjectival Participle / Relative Participle)**

பெயரெச்சம் பெயரைக்கொண்டு முடியும். எச்சவினை வடிவங்களில் பெயரெச்சம் மட்டுமே முக்காலங்களையும் காட்டும் தன்மை உடையது.

**5.5.2.4.1. உடன்பாட்டுப் பெயரெச்சம்**

இறந்தகாலப் பெயரெச்சமும், நிகழ்காலப் பெயரெச்சமும் வினையடியுடன் அவ்வக்காலம் காட்டும் மாற்றுருபுடன் பெயரெச்ச உருபான "-அ" எனும் பெயரெச்ச உருபினைச் சேர்ப்பதன் மூலம் தோன்றும்.

இதன் அமைப்பு,

**[வினையடி + இறந்தகால/ நிகழ்கால உருபு + பெயரெச்ச விகுதி "-அ"]**

எ.கா.

அழு + த் + அ = அழுத          அழு + கின்ற் + அ = அழுகின்ற

விழு + ந்த் + அ = விழுந்த          விழு + கின்ற் + அ = விழுகின்ற

மலையாளத்திலும் பெயரெச்ச உருபு "-அ" ஆகும் எனவே தமிழைப் போலவே மலையாளத்திலும் இதன் அமைப்பு இறந்தகாலத்துக்கும், நிகழ்காலத்துக்கும் அமைகின்றது.

எ.கா:

செய் + த் + அ = செய்த

செய் + உண்ணு + அ = செய்யுண்ண

உண் + ட் + அ = உண்ட

உண் = உண்ணு + அ = உண்ணுன்ன

அமைப்பளவில் பெயரெச்சவிகுதி ஏற்கும் முறையில் தற்காலத் தமிழிலும் மலையாளத்திலும் வேறுபாடு எதுவும் இல்லை.

தமிழிலும் மலையாளத்திலும் எதிர்காலப் பெயரெச்சம் வினையடியுடன் "-உம்" எனும் பெயரெச்ச உருபினைச் சேர்ப்பதன் மூலம் தோன்றும்.

எ.கா:

தமிழ்

அழு + உம் = அழும்

விழு + உம் = விழும்

மலையாளம்

செய் + உம் = செய்யும்

பாடும் + உம் = பாடும்

5.5.2.4.2. எதிர்மறைப் பெயரெச்சம்

தமிழில் எதிர்மறைப்பெயரெச்ச வடிவங்கள் வினையடியுடன் "-ஆத்" எனும் எதிர்மறை சுட்டும் உருபையும், "-அ" எனும் பெயரெச்ச ஒட்டையும் சேர்ப்பதன் மூலம் தோன்றும்.

இதன் அமைப்பு,

[வினையடி + எதிர்மறை உருபு + பெயரெச்ச உருபு]

என அமையும்.

எ.கா:

அழு + ஆத் + அ = அழாத

விழு + ஆத் + அ = விழாத

மலையாளத்தில் எதிர்மறை பெயரெச்ச வடிவங்கள் வினையடியுடன் "-ஆத்த" எனும் உருபினைச் சேர்ப்பதன் மூலம் உருவாக்கப்படுகின்றன.

இதன் அமைப்பு

[ வினையடி + ஆத்த ]

எ.கா:

கரய் + ஆத்த = கரயாத்த

பரய் + ஆத்த = பரயாத்த

இரு மொழிகளிலும் எதிர்மறைப்பெயரெச்ச வடிவங்கள் அமைவதில் உள்ள வேறுபாடு இவ்விடம் குறிக்கப்படுகின்றது.

[ ஆத = ஆத்த ]

5.8. தமிழ், மலையாள வினைச்சொற்களில் இதுவரைக் கண்டுபிடிக்கப்பட்ட வேறுபாடுகள் கீழேதொகுத்துக் கூறப்படுகின்றன.

1. தமிழில் எதிர்மறை ஏவல் ஒட்டு "-ஆதே" மூலம் எதிர்மறைப்பொருள் சுட்டப்படுகின்றது. மலையாளத்தில் "அருது" எனும் முழுச்சொல் இடம்பெற்று, எதிர்மறை உணர்த்தப்படுகின்றது.

[ -ஆதே = அருது ]

2. தமிழில் உடன்பாட்டு ஏவற்பன்மை "உங்கள்" எனும் பன்மை ஒட்டினை வினையடியுடன் சேர்ப்பதன் மூலம் உருவாகும். மலையாளத்தில் ஏவற்பன்மை வினையடியையும் "-ஊ" என்னும் ஒட்டையும் சேர்ப்பதன் மூலம் உருவாகின்றது.

[ உங்கள் = ஊ ]

3. உடன்பாட்டு ஏவலில் மரியாதையைச் சுட்ட, தமிழ்; "உங்கள்" எனும் சொல்லை, முன்னிலை வினையடியுடன் ஏற்கும். மலையாளம் "ஊ" எனும் ஒட்டையே மரியாதை ஏவலில் முன்னிலையில் ஏற்கும்.

[ உங்கள் = ஊ ]

4. தமிழில் எதிர்மறை ஏவற்பன்மை அமைப்பு வினையடியுடன் எதிர்மறை ஒட்டு "-ஆத்" தையும், முன்னிலைகாட்டும் உருபு "-ஈர்கள்" ஐயும் கொண்டு அமைகின்றது. மலையாளத்தில் "அருது"

எனும் எதிர்மறைச் சொல் மட்டுமே வினையடியுடன் இணைக்கப்பட்டு, எதிர்மறை உணர்த்தப்படுகின்றது தமிழில் "-ஈர்கள்" என வரும் முன்னிலைப்பன்மை அமைப்பு, மலையாளத்தில் பெரும்பாலும் முன்னிலைப் பதிலிடு பெயரின் மூலமே வெளிப்படுத்தப்படுகின்றது

**[ ஆத் + ஈர்கள் = (நிங்கள்) + வினையடி + அருது]**

5. தமிழிலும் மலையாளத்திலும் மரியாதை ஒருமைக்கும "-ஈர்கள்" அமைப்பே பயன்படுகின்றது தற்கால மலையாளத்தில் பெரும்பாலும் முன்னிலைப் பதிலிடுபெயருக்குப்பதில் அப்பெயரையே பயன்படுத்தும் முறையே வழக்கமாக உள்ளது

**[ ஆத் + ஈர்கள் = முன்னிலைப்பெயர் + வினையடி + அருது]**

6. தமிழில் விருப்பேவலைத் தெரிவிக்க "ஏன்" என்னும் உருபு சேர்க்கப்படுகின்ற வேளையில் மலையாளத்தில் "ஓ" எனும் ஒட்டு சேர்க்கப்படுகிறது விருப்பேவல் வெளிப்படுத்தும் முறையில் இருமொழிகளும் இவ்விடம் வேறுபடுகின்றது **[ ஏன் = ஓ ]**

7. தமிழில் ஏவலொருமைக்கும் மரியதை ஒருமைக்கும் ஒருவித அமைப்பும், பன்மைக்கு மற்றுமொரு அமைப்பு என, இருவேறு அமைப்புகள் உள்ளன ஆனால் மலையாளத்தில் ஒரேயொரு அமைப்பே காணப்படுகின்றது.

**[ ஏன், உங்களேன் = ஓ ]**

8. தமிழில் வினை முற்றிலிருந்தே எழுவாயின் திணை, பால், எண் மற்றும் இடத்தினை அறிந்துகொள்ள முடிகின்றது. மலையாளத்தில் அவ்விடம் இடம்பெறுகின்ற எழுவாயின் பதிலிடுபெயர் வினைமுற்றின் முன்பு சேர்க்கப்படுகின்றது. எனவே மலையாளத்தைப் பொறுத்தவரையிலும் அப்பதிலிடுபெயரிலிருந்தே எழுவாயின் திணை, பால், எண் மற்றும் இடத்தினை அறிந்துகொள்ள இயல்கின்றது. இரு மொழிகளுக்கும் இடையே அமையும் சிறப்பான வேறுபாடாக இது அமைகின்றது.

[ அவன் வருன்னு = வருகிறான் ]

9. தமிழில் இறந்தகால வினைமுற்றுகள் பத்து வெவ்வேறு வித பாலறிகிளவிகளைப் பெற்றே அமைகின்றன. ஆனால் மலையாளத்தில் இறந்தகால வினைமுற்றுக்களுடன் எவ்வித பாலறிகிளவிகளும் வருவதில்லை. இது தமிழ்-மலையாள இறந்தகால உடன்பாட்டு வினைமுற்றுக்களில் அமையும் சிறப்பான வேறுபாடாகக் கருதப்படுகின்றது.

[ வந்தான் = வன்னு ]

10. தமிழில் 8 வித பாலறிகிளவிகள் எதிர்கால உடன்பாட்டு வினைமுற்றினைக் குறிக்க பயன்படுகின்றன. மேலும் இரண்டு அஃறிணைப் பெயர்களுக்கும் "வரும்" என்ற ஒரேயொரு முறையே உள்ளது. (எ.கா: அது வரும்). மலையாளத்தில்

உயர்திணைக்கும் அஃறிணைக்கும் "வரும்" என்ற ஒரேயொரு முறையே அமைகின்றது. இருமொழிகளுக்கும் இடையே அமையும் குறிப்பிடத்தக்க வேறுபாடாக இது அமைகின்றது.

**[ வருவேன், வரும் = வரும் ]**

11. தமிழில் இறந்தகாலத்தை எதிர்மறையில் சுட்டுகையில் வினையெச்சத்துடன் "இல்லை" எனும் சொல் சேர்கிறது ஆனால் மலையாளத்தில் வினைமுற்றுடனேயே "இல்லா" எனும் சொல் சேர்ந்து எதிர்மறை சுட்டுகிறது.

**[ வினையெச்சம் + இல்லை = வினைமுற்று + இல்லா ]**

12. தமிழில் எதிர்கால எதிர்மறைச் செயல்வினைமுற்றுக்கள் உயர்திணையில் "மாட்டு" எனும் சொல்லையும் அஃறிணையில் "ஆது" எனும் ஒட்டையும் எடுத்து வந்து எதிர்மறைகளை காண்பிக்கின்றன. ஆனால் மலையாளத்தில் இரு திணைகளிலும் "இல்லா" எனும் ஒரு ஒட்டால் மட்டுமே எதிர்மறையானது சுட்டப்படுகின்றது.

**[ மாட்டு/ ஆது = இல்லா ]**

13. தமிழில் வினையெச்சத்தோடு எதிர்மறை காட்டும் உருபுகள் சேர்ந்து எதிர்கால எதிர்மறை வினைமுற்றுக்களை உருவாக்கும் மலையாளத்தில் வினையெச்சம் அல்லது வினையடியுடன் எதிர்மறை காட்டும் உருபு சேர்ந்து எதிர்கால எதிர்மறை வினைமுற்றுக்கள் பெறப்படுகின்றன.

14. தமிழில் நிகழ்கால எதிர்மறை செயல் வினைமுற்று வடிவமும் இறந்த கால எதிர்மறை செயல் வினைமுற்று வடிவமும் ஒரே போல் அமைகின்றன. .எ.கா 1. நான் நேற்று **படிக்கவில்லை.** 2 நான் இப்போது **படிக்கவில்லை**. ஆனால் மலையாளத்தில் இறந்தகால எதிர்மறை செயல் வினைமுற்றுக்களும் நிகழ்கால ·எதிர்மறை செயல் வினைமுற்றுக்களும் வெவ்வேறாக அமைகின்றன. எ கா: 1 ஞான் இன்னலெ **படிச்சில்லா,** 2. ஞான் இப்போள் **படிக்குன்னில்லா.** இங்கே தமிழுக்கும் மலையாளத்துக்குமிடையேயான வேறுபாடு அமைந்துள்ளதனை அறியலாம்.

15. தமிழில் உயர்திணைப்பெயர்களுக்கு "மாட்டேன்" எனும் எதிர்மறை சுட்டும் சொல்லும் அஃறிணைக்கு "ஆது" எனும் எதிர்மறை உருபும் உள்ளன.

மலையாளத்தில் இவ்விரு திணைகளுக்கும் "இல்லா" ஒரே மாதிரியான வடிவமே உள்ளது.

எ.கா: அவன் **நடக்கமாட்டான்.**

அது **நடக்காது.**

அவன் **நடக்கில்லா.**

அது **நடக்கில்லா**

16. தமிழில் உயர்திணை மற்றும் அஃறிணைப்பெயர்களுக்கு [வினையெச்சம் + மாட்டு + பாலறிகிளவிகள்] என வந்து எதிர்மறை சுட்டப்படும். சான்று: நான் படிக்க மாட்டேன். அது படிக்காது. மலையாளத்தில் இவ்விரு திணைகளுமே [வினையடி + (உக) + இல்லா] என வந்து எதிர்மறை காட்டப்படுகின்றன. சான்று: ஞான் படிக்கில்லா, ஞான் படிக்குகயில்லா, அது படிக்கில்லா, அது படிக்குகயில்லா.

17. தமிழில் வியங்கோள் வினை விகுதி "அட்டும்" ஆகும். மலையாளத்தில் இது "அட்டே" ஆகும்

சான்று: த நலமாய் வாழட்டும்

ம நன்னாயிரிக்கட்டே

**[ அட்டும் = அட்டே ]**

18. தமிழில் செயவென் எச்ச விகுதி "-அ". மலையாளத்தில் செயவென் எச்சவிகுதி "-ஆன்" மற்றும் "-உவான்".

சான்று: த நான் அதைச் **சொல்ல** வந்தேன்

ம ஞான் அது **பரயான்** வண்ணு

ம ஞான் அது **பரயுவான்** வண்ணு

**[ அ = ஆன் / உவான் ]**

19. தமிழில் எதிர்மறைவினையெச்சம்; வினையடியுடன் "-ஆமல்" மற்றும் "-ஆது" சேர்ப்பதன் மூலம் பெறப்படுகிறது.

மலையாளத்தில் வினையடியுடன் எதிர்மறை சுட்டும் உருபு "-ஆதே" யைச் சேர்ப்பதன் மூலம் பெறப்படுகிறது.

சான்று: த அழு + ஆ + மல் = அழாமல்

ம அழு + ஆத் +உ = அழாது

ம கரய் + ஆதே = கரயாதே

**[ ஆமல் / ஆது = ஆதே ]**

20. தமிழில் "-ஆல்" எனும் ஒரு நிபந்தனை எச்ச உருபு மட்டுமே உள்ளது. மலையாளத்தில் "-ஆல்" எனும் உருபும், "எங்கில்" என்னும் சொல்லும் உள்ளது.

சான்று: த விழு + ந்த் + ஆல் = **விழுந்தால்**

ம கரஞ்னு + ஆல் = **கரஞ்ஞால்**

ம கரஞ்னு + எங்கில் = **கரஞ்ஞெங்கில்**

**[ ஆல் = ஆல் / எங்கில் ]**

21. தற்காலத் தமிழில் வினையடியுடன் எதிர்மறை உருபான "-ஆ" வையும், "விட்டால்" எனும் சொல்லையும் சேர்ப்பதன் மூலம் எதிர்மறை நிபந்தனை எச்சவினை தோன்றும். மலையாளத்தில் எதிர்மறை நிபந்தனை எச்சமானது வினையடியுடன் "-இல்" எனும் எதிர்மறை ஒட்டையும் "எங்கில்" எனும் நிபந்தனை வெளிப்படுத்தும் உருபனையும் எடுத்து வரும்.

சான்று: த சொல்லாவிட்டால்

ம பரஞ்ஞில்லெங்கில்

**[ ஆ + விட்டால் = இல் + எங்கில் ]**

22. தமிழில் எதிர்மறைப் பெயரெச்சவடிவங்கள் வினையடியுடன் "-ஆத்" எனும் எதிர்மறை சுட்டும் உருபையும், "-அ" எனும் பெயரெச்ச ஒட்டையும் சேர்ப்பதன் மூலம் தோன்றும். மலையாளத்தில் எதிர்மறைப் பெயரெச்சவடிவங்கள் வினையடியுடன் "-ஆத்த" எனும் உருபினைச் சேர்ப்பதன் மூலம் உருவாக்கப்படுகின்றன.

சான்று: த அழாத பிள்ளை

ம கரயாத்த குட்டி

**[ ஆத = ஆத்த ]**

## 6. தமிழிலும் மலையாளத்திலும் பெயரடை - வினையடைகள்

6.1. பெயரடைகள்
6.1.2. பெயரடை - விளக்கம்
6.1.3. பெயரடை - வகைகள்
6.1.3.1. தனிப் பெயரடை (Simple Adjectives)
6.1.3.2. ஆக்கப் பெயரடை (Derived Adjectives)
6.1.3.2.1. "-ஆன" விகுதி
6.1.3.2.2. "உள்ள" விகுதி
6.1.3.3. எதிர்மறைப் பெயரடைகள்
6.1.3.4. பெயர்ப் பெயரடைகள்
6.1.3.5. பெயரெச்சப் பெயரடைகள்
6.1.4. வேறுபாடுகள்
6.2. வினையடைகள்
6.2.1. வினையடை - விளக்கம்
6.2.2. வினையடை வகைகள்
6.2.2.1. தனி வினையடைகள் ( Simple Adverbs )
6.2.2.1.1. தனி வினையடைகள் - தமிழ்
6.2.2.1.2. தனி வினையடைகள் - மலையாளம்
6.2.3. மிகைப்பான்கள், குறைப்பான்கள்
6.2.4.1. முறை வினையடை
6.2.4.2. நேர வினையடை
6.2.4.3. இட வினையடை
6.2.4.4. அளவு வினையடை
6.2.5.1. தனி வினையடைகளாக வரும் முறை வினையடைகள்
6.2.5.2. தனி வினையடைகளாக வரும் கால/ நேர வினையடைகள்
6.2.5.3. தனி வினையடைகளாக வரும் இட வினையடைகள்
6.2.5.4. தனி வினையடைகளாக வரும் அளவு வினையடைகள்
6.2.2.2. கூட்டு வினையடைகள்
6.2.2.2.1. கூட்டு வினையடைகளாக வரும் முறை வினையடைகள்
6.2.2.2.2. கூட்டு வினையடைகளாக வரும் கால/ நேர வினையடைகள்
6.2.2.2.3. கூட்டு வினையடைகளாக வரும் இட வினையடைகள்
6.2.2.2.4. கூட்டு வினையடைகளாக வரும் அளவு வினையடைகள்
6.2.2.3. அடுக்கு வினையடை
6.2.2.3.1. அடுக்கு வினையடைகளாக வரும் முறை வினையடைகள்
6.2.2.3.1.2. அடுக்கு வினையடைகளாக வரும் கால வினையடைகள்

## 6. தமிழிலும் மலையாளத்திலும் பெயரடை - வினையடைகள்

### 6.1. பெயரடைகள்

பழந்தமிழில் பெயரடைகள் என்பது தனியொரு சொல்வகையாகக் கருதப்படவில்லை. மலையாளத்திலும் இவ்வாறே அமைந்துள்ளதனை அம்மொழியின் இலக்கணவியலாளர்கள் கூறுகின்றனர். (K.N.Prabhakara Warrior, Studies in Malayalam Grammar, 1979, Page 22).

பெயர்ச்சொல் வேர் அல்லது பெயரடை வேருடன் பாலிட விகுதிகள் இணைந்த சொற்களே பழந்தமிழில் வழக்கில் இருந்துள்ளன. சான்று: வல்லான், நல்லான் (Andronov, 1972, Notes on the Nature and Origin of the Adjective in Tamil). இவ்வகைப்பெயர்கள் "குறிப்புப் பெயர்கள்" (Appellative Nouns, Personal Nouns, Pronominalised Nouns) என்று இலக்கணிகளால் அழைக்கப்படுகிறது. இவ்வகைப்பெயர்களுள் நல் - அ = நல்ல எனப்படும் படர்கைப் பலவின் பாலைக்குறிக்கும் சொல் மட்டும் தற்காலத்தமிழிலும் நிலைத்திருக்கிறது. அத்தோடு மட்டுமின்றி தற்காலத்தமிழில் "நல்ல" எனும் வடிவம் பெயர்ச்சொல்லின் முன்பு இடம் பெற்று பெயரடையாக வழங்கப்படுகிறது.

சான்று

இனி-ய (அ) = இனியவை

சிறி-ய (அ) = சிறியவை

இங்கு இனி, சிறி என்பவை பழந்தமிழில் வழங்கப்பட்ட பெயரடை வேர்கள், 'அ' என்பது பலர்பால் விகுதி. ( Thomas Lehmann, A grammar of Modern Tamil, பக், 132). தற்காலத் தமிழில் இவ்வகையான பெயர்கள் பல்வேறு வழி முறைகளில் வழங்கப்பட்டு, பெயரடை என்ற ஒரு தனிச்சொல் வகையாக மொழியில் வழங்குகின்றது.

மலையாள மொழியின் பெயரடைகளைக் குறித்து, குண்டர்ட்டு, புரோன்மேயர், மற்றும் ஜார்ஜ் மேத்தன் போன்ற இலக்கணிகள் கூறியுள்ளனர். எனினும் அவ்விளக்கங்கள் எவையும் முழுமையானதாக அமையவில்லை என்பார் பிரபாகர வாரியர். ( 1979, பக் 23 ). இவர்கள் பழைய மலையாளத்தில் காணப்படும் பெயரடைகளைக் குறித்தே கூறுகின்றனர். தற்கால மலையாளத்தில் தமிழைப்போன்றே மலையாளமும் பெயரடைகளைத் தன்னுள்ளே வளர்த்துக்கொண்டுள்ளது. தற்கால மலையாளத்திற்கு இலக்கணம் வகுத்துள்ள இலக்கணிகளான ஆசர் போன்றோர், தற்கால மலையாள மொழியில் வழங்கும் பெயரடைகளைக் குறித்துத் தெளிவாக விளக்குகின்றனர்.

### 6.1.2. பெயரடை - விள்க்கம்

"பெயர்ச்சொற்களைச் சிறப்பிக்கின்ற சொற்களைப் பெயரடைகள் என்கிறோம்" என்பார் கு.பரமசிவம் ( பக். 22). "ஒரு பெயர்ச்சொல்லை அவாவி நின்று அப்பெயர்ச்சொல் காட்டும் பொருளின் பண்பினைச்

சுட்டுவது பெயரடை என்கிறார் டாக்டர்.அகத்தியலிங்கம்" பெயரடை என்பது ஒரு பெயர்ச்சொல்லின் பண்பை அல்லது தன்மையைக் காட்டும், எப்படிப்பட்ட என்ற வினாவிற்கு விடையாக வரும்; மிகைச்சொற்களை ஏற்று வரும். என்பார் சரண்யா". (தமிழ் உருபனியல், சரண்யா & முபாரக் அலி, பக் - 97 ). பெயரெச்சத்தினையும் பெயரடைகளுள் அடக்கி, தெரிநிலைப்பெயரெச்சம், குறிப்புப்பெயரெச்சம், எதிர்மறைப்பெயரெச்சம், 'ஆன' விகுதி பெற்றவை என நான்கு வகைகளையும் பெயரடையில் அடக்குகிறார் கு.பரமசிவம். இவர் தெரிநிலைப்பெயரெச்சத்தினையும், எதிர்மறைப்பெயரெச்சத்தினையும் ஒரு வகையின் கீழ் அடங்கும் பெயரடைகள் என்கிறார். குறிப்புப் பெயரெச்சத்தினையும், 'ஆன' விகுதி பெற்ற பெயர்களையும் மற்றொரு வகைப் பெயரடையின் கீழ் அடங்குபவை என்கிறார். ஆனால் அகத்தியலிங்கம் அவர்கள் "பெயர்ச்சொல்லின் பண்பினை விளக்குவதே பெயரடை" என்ற கருத்தை முன்வைக்கிறார்.

மலையாள மொழியில் "பெயரடை" என்பது 'நாம விசேசணம்' என்று அழைக்கப்படுகிறது. பெயரை அவாவி வந்து பெயரின் பொருளை வேறுபடுத்துவது என்று விளக்கமளிக்கிறார் ஆசர். (மலையாளம், பக்-116). பெயருடன் சேர்ந்து நின்று அப்பெயருக்கு ஒரு பொருளைக்கொடுக்கின்ற சொல்லே பெயரடை எனப்படும் என்பார் பேராசிரியர் கோபிக்குட்டன். ( மலையாள வியாகரணம், 2002, பக்-134).

சுட்டுப்பெயரடை, எண்ணுப்பெயரடை, வினாப்பெயரடை எனப் பல பெயரடைகள் தமிழில் உள்ளன. இவற்றுள் பெயர்ச்சொல்லின் பண்பினை வெளிப்படுத்தும் பெயரடைகள் மட்டும் இங்கே ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்படுகின்றன.

### 6.1.3. பெயரடை - வகைகள்

தற்காலத் தமிழ்மொழியில் வழங்கும் பெயரடைகளின் அமைப்பினை அடிப்படையாகக் கொண்டு, அதனைத் தற்கால இலக்கணிகள் பல பிரிவுகளாகப் பிரித்துள்ளனர். தாமசு லேமன் அவர்கள் அதனைத் தனிப்பெயரடை, ஆக்கப்பெயரடை வினைப்பெயரடை என்று மூன்று வகையாகப் பிரிக்கின்றார். ( A Grammar of Modern Tamil, - 131) முனை. சரண்யாவும் முபாரக் அலியும் தனிப்பெயரடை, ஆக்கப்பெயரடை, அடுக்குப்பெயரடை என்று பிரிக்கின்றனர். ( தமிழ் உருபனியல் - பக் - 99-100 )

தற்கால மலையாளத்தில் வழங்கும் பெயரடைகளை அடிப்படையாகக் கொண்டு ஆசர் அவர்கள், தனிப் பெயரடை, ஆக்கப் பெயரடை என்று இருவகையாகப் பிரிக்கின்றார். ( மலையாளம் - பக் 116).

தற்காலத் தமிழிலும் மலையாளத்திலும் வழங்கும் பெயரடைகள் அவற்றின் பல்வேறு அமைப்பின் அடிப்படையில் இப்போது ஒப்பீடு செய்யப்பட்டு ஒற்றுமை வேற்றுமைகள் காணப்படுகின்றன.

### 6.1.3.1. தனிப் பெயரடை ( Simple Adjectives )

தனிச்சொல் ஒன்று பெயர் ஒன்றின் முன் இடம்பெற்று, அப்பெயர்சுட்டும் பொருளின் பண்பினை வெளிப்படுத்தினால் அது தனிப்பெயரடை எனப்படும்.

தமிழில் தனிப்பெயரடைகளாக புதிய, நல்ல, தீய, பெரிய, சிறிய கொடிய, இனிய, எளிய போன்றன காணப்படுகின்றன. மரபு இலக்கணங்கள் இவற்றைக் "குறிப்புப்பெயரெச்சம்" என்று குறிப்பிடுகின்றன.

மலையாளத்திலும் தமிழைப் போன்றே தனிச்சொற்கள் தனிப்பெயரடைகளாகக் காணப்படுகின்றன. ஆனால் ஆக்கப்பெயரடைகளுடன் ஒப்பிடுகையில் இவை அளவில் குறைவாகவே காணப்படுகின்றன. தனிப்பெயரடைகளை மேலும் அதன் சிறிய பகுதிகளாகப் பிரிக்க இயலாது. சான்றாக, 'நல்ல' என்பது ஒரு தனி உருபன். அதனை மேலும் சிறிய உருபன்களாகப் பிரிக்க இயலாது. இவ்வகைத் தனிப்பெயரடைச்சொற்களின் இறுதி எழுத்து '-அ' , '-ஆ', '-இய', '-ஆய' என்பவற்றுள் ஏதாவது ஒன்றினைக் கொண்டிருக்கும் என்பார் ஆசர். ( ஆசர், மலையாளம், பக் - 116).

சான்று: நல்ல, வலிய, பழய.

தமிழிலும் தனிப்பெயரடைகள் இவ்வாறு பொதுவான சொல் இறுதியினைக் கொண்டு முடிவதனை இலக்கணிகள் எடுத்துரைக்கின்றனர் ( சரண்யா, 99).

இதுவரைத் தமிழிலும் மலையாளத்திலும் தனிப்பெயரடைகள் அமையும் முறை விளக்கப்பட்டது. இனி, இவை தமிழிலிருந்து மலையாளத்திற்கு மொழிபெயர்க்கப்படுகையில் ஏற்படும் ஒற்றுமைகள் வேற்றுமைகள் கண்டறியப்படுகின்றன

சான்று

(1) த இராமன் நல்ல பையன்

(2) ம இராமன் நல்ல பையன் ஆணு

(3) த சீதை பெரிய பெண்

(4) ம சீத வலிய பெண்குட்டியாணு

(5) த இது என்னுடைய புதிய ஆடை

(6) ம இது என்றெ புதிய வஸ்த்ரம் ஆணு

(7) த கிருஷ்ணன் ஒரு பழைய கார் வாங்கினான்

(8) ம கிருஷ்ணன் ஒரு பழய கார் வாங்ஙி

தமிழில் வழங்கும் தனிப்பெயரடைச் சொற்களை மலையாளத்திற்கு மொழிபெயர்த்துப்பார்க்கையில் இரு மொழிகளுக்குமிடையே வேறுபாடு

எதுவும் அமையவில்லை. அவை தமிழ்ப் பெயரடைகளின் மலையாள நிகரன்களாகவே பெரும்பாலும் அமையக் காண்கிறோம்.

### 6.1.3.2. ஆக்கப் பெயரடை ( Derived Adjectives )

ஆக்கப்பெயரடை என்பவை ஒரு சொல்லிலிருந்து பெயரடைகளாக உருவாக்கி எடுக்கப்படும் சொற்கள் ஆகும். குறிப்பாக, இவை பண்புப்பெயர்களுடன் பெயரடையாக்க விகுதிகளை இணைத்து உருவாக்கப்படுகின்றன. தற்காலத் தமிழிலும் மலையாளத்திலும் இவ்வகை ஆக்கப்பெயரடைகள் மிகுதியாகக் காணப்படுகின்றன. தனிப்பெயரடைகள் இரு மொழிகளிலும் மிகக் குறைவாகவே பயன்பாட்டில் உள்ளன. பேரா. கு.பரமசிவம் தம்முடைய நூலில் '-ஆன' விகுதியினைப் பெயர்ச்சொற்களுடன் சேர்த்து, ஆக்கப்பெயரடைகள் உருவாக்கப்படுகின்றன என்று கூறுகின்றார். ( இக்காலத் தமிழ் மரபு, பக்-196). முனை.ச.அகத்தியலிங்கம் , '-ஆன', 'உள்ள', போன்ற விகுதிகளை பெயர்ச்சொற்களுடன் சேர்த்து, ஆக்கப் பெயரடைகள் உருவாக்கப்படுகின்றன என்கிறார். ஆக்கப்பெயரடைகளின் அமைப்பினை இவர்,

[ பண்புப் பெயர் + ஆன / உள்ள ]

என்று காட்டுகின்றார். எனவே தற்காலத் தமிழில் '-ஆன', 'உள்ள' போன்ற ஆக்கப்பெயரடை விகுதிகள் வழங்குவதனை அறியமுடிகின்றது.

மலையாளத்தில் ஆக்கப்பெயரடைகள், பெயர்ச்சொற்களுடன் "-ஆய" மற்றும் "உள்ள" என்னும் விகுதிகளை இணைத்து உருவாக்கப்படுகின்றன. ( ஆசர், 117) . மலையாளத்தில் ஆக்கப்பெயரடை விகுதிகளாக "-ஆய" மற்றும் "உள்ள" போன்றவைகளையே டாக்டர்.கே.எம்.ஜார்ஜ் அவர்களும் எடுத்துக்காட்டுகின்றார். ( Dr. K.M. George, Malayalam Grammar and Reader, 1983, Page 22 ). எனவே மலையாளத்தில் ஆக்கப்பெயரடை விகுதிகளாக "-ஆன" மற்றும் "உள்ள" போன்றவை இருப்பதாக அறியமுடிகின்றது. மலையாளத்தில் இவற்றின் அமைப்பு,

**[ பண்புப் பெயர் + ஆய / உள்ள ]**

என அமைகின்றது. இனி, தமிழின் ஆக்கப்பெயரடைகள் அடங்கிய தொடர்கள் மலையாளத்திற்கு மொழிபெயர்க்கப்பட்டு, அவை இரண்டிற்குமிடையேயான ஒற்றுமைகள் வேறுபாடுகள் கண்டறியப்படுகின்றன.

**6.1.3.2.1. "-ஆன" விகுதி**

தமிழின் "-ஆன" விகுதி மலையாளத்தில் மாறிவரும் முறைகள் இங்கே ஆராயப்படுகின்றன.

சான்று

(9) த அழகான குழந்தை

(10) ம அழகுள்ள குட்டி

[ ஆன = உள்ள ]

(11) த நீளமான சாலை

(12) ம நீளமுள்ள ரோடு

[ ஆன = உள்ள ]

(13) த உயரமான மனிதன்

(14) ம உயரமுள்ள மனுஷன்

[ ஆன = உள்ள ]

(15) த நீளமான கூந்தல்

(16) ம நீளமுள்ள தலமுடி

[ ஆன = உள்ள ]

(17) த அறிவான மகள்

(18) ம அறிவுள்ள மகள்

[ ஆன = உள்ள ]

தற்காலத் தமிழில் ஆக்கப்பெயரடை விகுதியான "-ஆன" என்பது பெருமளவில் பயன்படுத்தப்படுகின்றது. மலையாளத்தில் இதற்குப்பதிலாக "உள்ள" எனும் விகுதியே அதிகமாகப்

பயன்படுத்தப்படுகிறது என்பது மேற்கண்ட சான்றுகளின் மூலம் புலனாகின்றது. தமிழ்ப் பெயரடைத்தொடர்களை மலையாளத்தில் மொழிபெயர்க்கையில் தமிழின் "-ஆன" விகுதிக்கு இணையான மலையாளத்தின் "-ஆய" எனும் விகுதி இடம்பெறுவதில்லை. என்வே, தமிழின் "-ஆன" எனும் விகுதிக்குப்பதிலாக "உள்ள" எனும் விகுதியே மலையாள மொழியில் பெருவழக்காக உள்ளது. மலையாளத்தில் "உள்ள" விகுதிக்குப்பதில் "-ஆய" எனும் விகுதி வந்தால் அத்தொடர் பொருள் மாற்றமுடைய தொடராக மாறுகின்றது. ஆக்கப்பெயரடைகள் வழங்குமிடத்தில் தமிழுக்கும் மலையாளத்திற்குமிடையே அமையும் முக்கிய வேறுபாடாக இது கருதப்படுகின்றது.

சான்று

(19) த கறுப்பான கண்கள்

(20) ம கறுத்த கண்ணுகள்

(21) த வெண்மையான தேகம்

(22) ம வெளுத்த தேகம்

[ ஆன = பெயரெச்சங்கள் ]

சான்று (19) - (22) ல் " -ஆன" உருபு சேர்ந்த ஆக்கப் பெயரடைகள் மலையாளத்தில் மொழிபெயர்க்கப்படுகையில் "-ஆய" எனும் உருபோ, "உள்ள" எனும் விகுதியோ இடம்பெறுவதில்லை. அவ்வாறு இடம்பெறின்

அது மாறுபட்ட பொருளைத் தருகின்றது. எனவே இதற்குப்பதிலாக இவ்விடத்தில் மலையாளத்தில், தமிழுக்கிணையான பெயரெச்சங்கள் இடம்பெற்று, பெயரடைகள் உருவாகின்றன.

சான்று:

| | |
|---|---|
| கறுப்பான | கறுத்த |
| வெண்மையான | வெளுத்த |

இது தமிழ் மலையாளப் பெயரடைகளில் அமையும் சிறந்த வேறுபாடுகளில் ஒன்று ஆகும்.

சான்று

(23) த தடிமனான புத்தகம்

(24) ம தடியன் புஸ்தகம்

**[ ஆன = அன் ]**

தமிழின் "-ஆன" விகுதிப்பெயரடைகள் மலையாளத்தின் ஆக்கப் பெயரடை விகுதிகள் எதையும் ஏற்காமல் முற்றிலும் வேறுபட்டு, "-அன்" விகுதியினை ஏற்று வருவதுமுண்டு. மலையாள மொழியில் அஃறிணைப் பெயர்களுடன் இந்த "-அன்" விகுதி இணைந்து வருவது வழக்கமாகும். இங்கு இவ்விகுதி பெயடைப்பொருளில் வருகின்றது.

#### 6.1.3.2.2. "உள்ள" விகுதி

தமிழின் "உள்ள" எனும் ஆக்கப்பெயரடை விகுதி மலையாளத்தில் மாறிவரும் முறைகளைக் கீழே காண்போம்.

சான்று

(25) த அன்புள்ள அம்மா

(26) ம ஸ்னேகமுள்ள அம்ம

(27) த கருணயுள்ள மனிதன்

(28) ம கருணயுள்ள மனுஷ்யன்

(29) த கல்வியறிவுள்ள பெண்மணி

(30) ம வித்யாப்யாசமுள்ள ஸ்திரீ

"உள்ள" எனும் ஆக்கப் பெயரடை விகுதி தமிழிலும் மலையாளத்திலும் பயன்படுத்தப்படுகிறது எனினும் மலையாளத்தில் அதன் பயன்பாடு அதிகமாக உள்ளது. ஆனால் இரு மொழிகளிலும் இவ்விகுதியினைப் பயன்படுத்தும் முறை ஒரே போன்றே உள்ளது.

இது வரையிலும் தமிழிலும் மலையாளத்திலும் வழங்கும் ஆக்கப்பெயரடை விகுதிகள் குறித்துக்கூறப்பட்டது.

### 6.1.3.3. எதிர்மறைப் பெயரடைகள்

பண்புச் சொற்களின் அடிப்படையில் உருவாகும் பெயரடைகளின் எதிர்ச்சொல்லையடிப்படையாக வைத்து எதிர்ப்பெயரடைகள் தோன்றுகின்றன. (அகத்தியலிங்கம், பக் - 159).

சான்று

| | | | |
|---|---|---|---|
| (31) | த | நல்ல பழம் | கெட்ட பழம் |
| (32) | ம | நல்ல பழம் | சீத்தப் பழம் |
| (33) | த | பெரிய பையன் | சின்னப் பையன் |
| (34) | ம | வலிய பையன் | செறிய பையன் |

சான்று (31) - (34) ல் எதிர்ப்பெயர்டைகள் தமிழிலும் மலையாளத்திலும் அமையும் முறையினைக் காணலாம். இரு மொழிகளிலும் இம்முறை காணப்படுகிறது. எதிர்ப்பெயரடைகள் அமைவதில் இவ்விரு மொழிகளும் குறிப்பிடத்தக்க வேறுபாடுகளைக் கொண்டிருக்கவில்லை.

### 6.1.3.4. பெயர்ப் பெயரடைகள்

தமிழிலும் மலையாளத்திலும் வழங்கும் பெயரடை வகைகளைத் தற்காலத் தமிழ் அறிஞர்கள் மேற்கண்டவாறு பகுத்துக் கூறியுள்ளனர். ஆய்வுக்காகத் தற்காலத் தமிழ் மலையாளத்தில் காணப்படும்

பெயரடைகளை ஆராய்ந்த போது , பெயர்ச்சொற்களே எவ்வித மாற்றமும் இன்றி, பெயரடையாகப் பயன்படுத்தப்படுவதையும் காணமுடிகின்றது. தமிழிலும் மலையாளத்திலும் இவ்வகைப் பயன்பாடு மிகுதியாகக் காணப்படுகின்றது. இதனைக் கீழே உள்ள சான்றுகளின் மூலம் விளக்கலாம்

சான்று

(35) த கொம்பு மீசை

(36) ம கொம்பன் மீச

மேற்கண்ட சான்றுகளில் (35), (36) "கொம்பு" என்ற பெயர் பெயரடையாகப் பயன்படுத்தப்படுகிறது. அது மலையாளத்திற்கு மொழிபெயர்க்கப்படுகையில் மலையாளத்தில் பெயராகவே வந்து பெயரடைப்பொருள் தருவதில்லை மாறாக; "கொம்பன்" எனும் "-அன்" விகுதி பெற்ற பெயரடையாக மாறிவருகின்றது. இருமொழிகளும் அமைப்பில் வேறுபடுவதனை இங்கு காணமுடிகின்றது.

#### 6.1.3.5. பெயரெச்சப் பெயரடைகள்

தமிழிலும் மலையாளத்திலும் பெயரெச்சங்களும் பெயரடையாகப் பயன்படுத்தப்படுகின்றன. இதனைக் கீழ்க்காணும் சான்றின் மூலம் அறியலாம்.

சான்று

(37) த கறுப்புப் பூனை

(38) ம கறுத்த பூச்ச

இருமொழிகளிலும் பெயரெச்சங்களும் பெயரடைப் பொருளில் பரவலாகப் பயன்படுத்தப்படுகின்றன தமிழில் "கறுப்பு" எனும் பெயர், பெயரடையாக வருகின்ற வேளை மலையாளத்தில் "கறுத்த" எனும் பெயரெச்சம் பெயரடைப்பொருளில் வருவதனைக் காணலாம். இதன் மூலம் தமிழில் பெயரடைப்பொருளில் வரும் பெயரெச்சங்கள் மலையாளத்தில் பெயரெச்சமாகவே வரும் முறை விளக்கப்பட்டது.

**6.1.4.தமிழிலும் மலையாளத்திலும் பெயரடையடைகளில் காணப்படும் வேறுபாடுகள் கீழே தரப்படுகின்றன.**

1. தற்காலத் தமிழில் ஆக்கப்பெயரடை விகுதியான "-ஆன" என்பது பெருமளவில் பயன்படுத்தப்படுகின்றது மலையாளத்தில் இதற்குப்பதிலாக "உள்ள" எனும் விகுதியே அதிகமாகப் பயன்படுத்தப்படுகிறது.

1. [ அழகான = அழகுள்ள ]

2. [ நீளமான = நீளமுள்ள ]

3. [ உயரமான = உயரமுள்ள ]

4. [ நீளமான = நீளமுள்ள ]

5. [ அறிவான = அறிவுள்ள ]

6. தற்காலத் தமிழில் ஆக்கப்பெயரடை விகுதியான "-ஆன" என்பது பெருமளவில் பயன்படுத்தப்படுகின்றது. மலையாளத்தில் இதற்குப்பதிலாக "உள்ள" எனும் விகுதியே அதிகமாகப் பயன்படுத்தப்படுகிறது

[ **கறுப்பான** = **கறுத்த** ]

[ **வெண்மையான** = **வெளுத்த** ]

7. "-ஆன" உருபு சேர்ந்த ஆக்கப் பெயரடைகளை மலையாளத்தில் மொழிபெயர்க்கையில் தமிழுக்கிணையான பெயரெச்சங்கள் அம்மொழியில் இடம்பெற்று, பெயரடைகள் உருவாகின்றன.

சான்று:

கறுப்பான - கறுத்த

வெண்மையான - வெளுத்த

8. தமிழின் "-ஆன" விகுதிப்பெயரடைகள் மலையாளத்தின் ஆக்கப் பெயரடை விகுதிகள் எதையும் ஏற்காமல் முற்றிலும் வேறுபட்டு, "-அன்" விகுதியினை ஏற்று வரும்.

[ **ஆன** = **அன்** ]

9. தமிழில் பெயர்ச்சொற்களே எவ்வித மாற்றமும் இன்றி, பெயரடையாகப் பயன்படுத்தப்படுகின்றது. இவை மலையாளத்தில் மொழிபெயர்க்கப்படும் போது, அஃறிணைப் பெயர்கள் "-அன்" விகுதியோடு பயன்படுத்தப்படுகின்றன.

[ **கொம்பு மீசை** = **கொம்பன் மீச** ]

10. தமிழில் பெயர்கள் பெயரடையாக வருகின்ற வேளை மலையாளத்தில் பெயரெச்சம் பெயரடைப்பொருளில் வருகின்றது.

[ **கறுப்பு** = **கறுத்த** ]

## 6.2. வினையடைகள்

இக்காலத் தமிழ் மொழியில் வினையடை எனும் இலக்கண வகை மிக இன்றியமையாததாகக் கருதப்படுகிறது. மரபிலக்கணங்களில் வினையடை குறித்து கூறப்படவில்லை. இதன் மூலம் பழங்காலத்தமிழ் வழக்கில் இவ்வகையான சொற்கள் அருகி இருந்திருக்கலாம் என்று கருத இடமுள்ளது. ஆனால் இவ்வாறு வழக்கில் இருந்த சில சொற்களையும் பழங்கால இலக்கணவியலார் வினையெச்சங்கள் எனவும் இடைச்சொற்கள் எனவும் கூறிப்போந்தனர். தற்காலத் தமிழ் வழக்கில் வினையடைகள் மிக முக்கியமான இலக்கணக்கூறாகக் கருதப்படுகின்றது. இக்கால மொழியில் இவை ஏராளமாகப் பயன்படுத்தப்படுகின்றன. எனவே தற்கால இலக்கண அறிஞர்கள் வினையடை என்று ஒரு தனி இலக்கணக் கூறினைத் தற்காலத் தமிழ் மொழிக்கு வகுத்துள்ளனர். தற்காலத் தமிழ் மொழியின் அமைப்பினை நன்கு விளங்கிக் கொள்ள இதுபோன்ற புதிய இலக்கணக்கூறுகளை இனங்கண்டு, அவற்றைத் தனியே விளக்குவது இன்றியமையாதாக அமைகின்றது.

மலையாள மொழியிலும் வினையடை எனும் இலக்கணச் சொல்வடிவம் முக்கியமான ஒரு இலக்கணக்கூறே ஆகும். பழைய மலையாளத்தில் இவை அதிகம் காணப்படவில்லை. தற்கால மலையாள மொழிவழக்கு , தமிழைப் போன்றே வினையடைகளை அதிகம் கொண்டுள்ளது. எனவே

தற்கால மலையாள இலக்கணங்களில் வினையடை தனியொரு இலக்கணக்கூறாக விளக்கப்படுகின்றது

### 6.2.1. வினையடை - விளக்கம்

வினை ஒன்றிற்கு அடையாக வருவது வினையடை (முனை. அகத்தியலிங்கம், தமிழ் மொழி அமைப்பியல், 2002, பக் - 221 ). என்று முனை. அகத்தியலிங்கம் அவர்களும், வினைச்சொல்லைச் சிறப்பித்து வரக்கூடியது என்று முனை.கு.பரமசிவமும் (முனை. கு.பரமசிவம், இக்காலத்தமிழ் மரபு, 1983, பக் - 255) வினையடை குறித்து விளக்கம் தருகின்றனர். வினையெச்சங்களுக்கும் வினையடைகளுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. தமிழ் மரபிலக்கணங்களில் கூறப்படும் வினையெச்சங்கள் வினையடைகளில் ஒரு வகையே என்பார் கு.பரமசிவம். ஒரு வினை நிகழும் முறை, அது நிகழும் காலம், அது நிகழும் இடம் ஆகியவற்றை உணர்த்த முற்றுபெற்ற வினைகளின் முன் இடம்பெறும் சொற்களே வினையடைகள் என்பர் மு. சரண்யா மற்றும் முபாரக் அலி. ( தமிழ் உருபனியல், பக் - 100). வினையடைகளில் ஒரு வகையே வினையெச்சங்கள் எனினும் எல்லா வினையெச்சங்களும் வினையடை ஆகா; வினையினை விசேடித்து வரும் வினையெச்சங்களே வினையடைகள் ஆக வரும் என்பார் அகத்தியலிங்கம்

நன்னூலார்,

" தொழிலும் காலமும் தோற்றிப் பால்வினை

ஒழிய நிற்பது வினையெச்சம்மே "   நன் - (342)

என்று வினையெச்சத்தினை விளக்கும் நன்னூலார், வினையெச்ச வாய்ப்பாடுகளையும் கூறுகின்றார். இவ்வாறு அவர் கூறும் வினையெச்ச வாய்ப்படுகளில் சில இன்றைய வினையடைகளுக்குப் பொருந்துவதாக கு.பரமசிவம் சுட்டிக்காட்டுவார்.

வினையை அவாவி வருவதெல்லாம் வினையடை என்று கூற இயலாது என்பார் முனை.அகத்தியலிங்கம். பல வேற்றுமைகள், இடைச்சொற்கள், வினையினைச் செய்யும் நேரம், செய்யும் முறை , செய்யும் காலம் இவற்றை எடுத்துக்காட்டும் சொற்கள் இவை யாவும் வினையடைகளாகக் கருத வாய்ப்புள்ளது என்றும் இவர் விளக்குவார்.

மலையாள மொழியிலும் வினையடையினை தனித்துப்பிரித்து அறிவது சற்று கடினமானதாகவே உள்ளது. தற்கால மொழியில் எழுந்த புதிய இலக்கணக்கூறு ஆதலால் இதனைக் குறித்து பழைய மலையாள இலக்கணங்கள் கூறவில்லை. ஆனால், மலையாள மொழிக்கு இலக்கணம் வகுத்தவர்கள் எல்லாம் பெரும்பாலும் ஆங்கில இலக்கண வல்லுனர்கள் ஆதலால், ஆங்கிலத்தில் காணும் இவ்விலக்கணக் கூறினை அம்மொழியில் நன்றாகவே விளக்கியுள்ளனர். சான்றாக, ஆர். இ. ஆசர்

எழுதிய "மலையாளம்" என்ற நூலில் மலையாள மொழியின் வினையடைகள் சிறப்பாக விளக்கப்பட்டுள்ளன.

தற்கால இலக்கண வல்லுனர்களின் வினையடைகள் குறித்த கருத்துக்களின் படி வினையடைகளின் பண்புகளை கீழ்க்கண்டவாறு கருதிட இயலுகின்றது.

1. முற்றுபெற்ற வினைச்சொற்களைச் சிறப்பிக்க வரும் வினையெச்சங்கள் வினையடையாக வரலாம்.
2. இடைச்சொற்கள் வினையடைகளாக வரலாம்
3. வேற்றுமை உருபுகளும் வினையடைப்பொருளில் வரலாம்.
4. வினையடை விகுதிகளைப்பெற்று வரும் வினையடைச் சொற்களும் வினையடைகளாக வரலாம்.
5. வினையடைகளாக தற்கால மொழிவழக்கில் காணப்படும் வினையடைச் சொற்களும் வரலாம்.

### 6.2.2. வினையடை வகைகள்

பழந்தமிழில் வினையடைச்சொற்கள் அரிதெனினும் தற்காலத் தமிழில் இவை ஏராளமாகக் காணப்படுகின்றன. தமிழ் இலக்கணிகள் அவற்றைக் கீழ்க்கண்டவாறு வகைப்படுத்துகின்றனர். தமிழிலும் மலையாளத்திலும் வழங்கும் வினையடைகளின் அமைப்பினை அடிப்படையாக்கொண்டு அவற்றை,

1. தனி வினையடை

2. கூட்டு வினையடை அல்லது ஆக்க வினையடை

3. அடுக்கு வினையடை என மூன்று வகையாகப் பிரிப்பர்.

மேலும் வினையடைகள் வெளிப்படுத்தும் பொருளினை அடிப்படையாகக் கொண்டு அவற்றை,

1. முறை வினையடை

2. நேர வினையடை

3. இட வினையடை

4. அளவு வினையடை என்று பிரிப்பர் இலக்கணிகள்.

அமைப்பு மற்றும் வினையடைகள் வெளிப்படுத்தும் பொருள் என இவ்விரு அடிப்படைகளிலும் தமிழ் மற்றும் மலையாளத்தில் காணப்படும் வினையடைகள் ஆயப்பட்டு, இரு மொழிகளிலும் வினையடைகள் வழங்கும் முறையும் அவற்றுக்கிடையே காணப்படும் ஒற்றுமை வேற்றுமைகளும் இங்கே கண்டறியப்படுகின்றன.

**6.2.2.1. தனி வினையடைகள் ( Simple Adverbs )**

தனி வினையடை என்பது, மேலும் அச்சொல்லை பொருள் தரும் சொற்களாகப் பிரிக்க இயலாது மேலும், அது கொண்டு முடியும் வினைச்சொல்லின் நிகழ் இடம், முறை, மற்றும் நிகழும் காலம் இவற்றை வெளிப்படுத்துவதாக இச்சொற்கள் அமையும். தமிழிலும் மலையாளத்திலும் வழக்கில் உள்ள சில வினையடைகள் கீழே தரப்படுகின்றன.

#### 6.2.2.1.1. தனி வினையடைகள் - தமிழ்

சீக்கிரம், இப்படி, அப்படி, பிந்தி, முந்தி, நேற்று, இன்று, நாளை, நாளைக்கு, காலையில், பிறகு, இப்போது, எப்போது, அப்போது, உள்ளே, வெளியே, மேலே, கீழே, இடையில், நடுவில், அருகில் என்பன தற்காலத் தமிழில் வழங்கும் வினையடைகளுக்கு சான்றுகள் ஆகும்.

#### 6.2.2.1.2. தனி வினையடைகள் - மலையாளம்

தற்கால மலையாளத்தில் வழங்கும் தனி வினையடைகளாவன,

இப்போள், இன்னு, எங்ஙனே, இவிடெ, இத்ர, அப்போள், அன்னு, அங்ஙனெ, அவிடெ, அத்ர, எப்போள், என்னு, எங்ஙனெ, எவிடெ, எத்ர, தாழே, மேலே, முன்பே, முன்பில், பின்பே, பின்னில், வலத்தே, இடத்தே, அகத்தே, புறத்தே, அரிகே, அரிகத்தே, வண்ணம், மாதிரி, என்பன போன்றவை ஆகும்.

### 6.2.3. மிகைப்பான்கள், குறைப்பான்கள்

வினையடைகளுக்கு முன்பாக வந்து; நடைபெற்ற வினையின் தன்மையினைக் குறைத்தோ கூட்டியோ வெளிப்படுத்துவதற்கு மிகைப்பான்களும், குறைப்பான்களும் பயன்படுத்தப்படுகின்றன. தமிழில், மிக, மிக மிக, சிறிது, ரொம்ப போன்றவைகளும் மலையாளத்தில் வளரெ, குறச்சு போன்றவைகளும் இவ்வாறு காணப்படுகின்றன.

சான்று

த இராதா **மிக** வேகமாக நடந்தாள்

ம இராத **வளரெ** வேகத்தில் நடன்னு

தமிழிலும் மலையாளத்திலும் வினையடைகளை, வினை நிகழும் முறை, காலம், இடம் மற்றும் அளவு அடிப்படையில் ஒப்பிட்டு வேறுபாடுகளும் ஒற்றுமைகளும் கீழே காணப்படுகின்றது

**6.2.4.1. முறை வினையடை**

வினைச்சொல்லின் முன் இடம் பெறும் வினையடையானது, எவ்வாறு வினை நிகழ்ந்தது என்ற வினாவுக்குப் பதிலளிப்பதாக இருந்தால் அவ்வினையடை முறை வினையடை எனப்படும். இவ்வினைகள் மிகைப்பான்களையோ குறைப்பான்களையோ எடுத்து வரும்

சான்று

படம் **நன்றாக** இருக்கிறது

இராணி **அழகாக** இருக்கிறாள்

**6.2.4.2. நேர/கால வினையடை**

வினைச்சொல்லின் முன் இடம் பெறும் வினையடை அது அவாவி வரும் வினை எப்போது நிகழ்ந்தது என்று குறிப்பிடுமாயின் அது நேர வினையடை எனப்படும்.

சான்று

கனிமொழி **நேற்று** வந்தாள்

கண்ணன் **இப்போது** வருவான்

**6.2.4.3. இட வினையடை**

எவ்விடத்தில் வினை நடைபெற்றது என்பதைக் குறிக்க வரும் அடைகள் இட வினையடைகள் எனப்படும்.

*சான்று*

இந்தப் பந்து **அங்கிருந்து** வந்தது.

இராமனின் வீடு **அங்கே** இருக்கிறது.

**6.2.4.4. அளவு வினையடை**

வினையடையால் தழுவப்படும் வினைச்சொல் எவ்வளவு என்ற கேள்விக்குப் பதில் தருமாறு அமைந்தால் அவ்வினையடை அளவு வினையடை எனப்படும்.

சான்று

இரவியிடம் பணம் **குறைவாக** இருக்கிறது

இராமரிடம் சொத்து **நிறைய** இருக்கிறது.

தமிழிலும் மலையாளத்திலும் அமையும் மூன்று வகை வினையடைகளை இந்நான்கு அடிப்படைகளில் ஒப்பீட்டாய்வு செய்து அவற்றிடையே நிலவும் ஒற்றுமைகளும் வேறுபாடுகளும் மொழிமாற்று இலக்கணத்திற்கு ஏற்ப கண்டுபிடிக்கப்படுகின்றன.

**6.2.5.1. தனி வினையடைகளாக வரும் முறை வினையடைகள்**

தனி வினையடைகளாக வந்து வினை எவ்வாறு நிகழ்ந்தது என வெளிப்படுத்துவன, இப்பகுதியில் அடங்கும். தமிழில் *சீக்கிரம்*, நன்கு, விரைந்து, இப்படி, அப்படி போன்றவை தனி வினையடைகளாக வருகின்றன. மலையாளத்தில் பெட்டென்னு, இங்ஙனெ, அங்ஙனெ, பதுக்கெ, வேகம், *மாதிரி*, உடனே *போன்ற சொற்கள் தனி வினையடைகளாக* மொழி வழக்கில் உள்ளன.

சான்று

(1) த அவன் சீக்கிரம் வந்தான்

(2) ம அவன் பெட்டென்னு வன்னு.

(3) த மோகினி நன்கு வேலை செய்கிறாள்

(4) ம மோகினி நன்னாயி / நன்னாயிட்டு ஜோலி செய்யுன்னு

(5) த நீங்கள் அப்படிப் பேசாதீர்கள்

(6) ம நிங்ஙள் அங்ஙனெ சம்சாரிக்கருது

தமிழிலும் மலையாளத்திலும் தனி வினையடைகளில் முறை வினையடைகள் தம்முள் மிகவும் வேறுபடவில்லை. ஆனால் சான்று (3) மற்றும் (4) ஐப் பார்க்கையில்; தமிழின் தனி வினையடையாக வரும் "நன்கு" மலையாளத்தில் வினையடை விகுதியான "-ஆயி" மற்றும் "ஆயிட்டு" என்பவைகளைப் பெற்று, நன்னாயி, நன்னாயிட்டு எனும் கூட்டு வினையடையாக வருகின்றன. இரு மொழிகளும் வினையடைகளை ஏற்பதில் இவ்விடம் வேறுபடுகின்றன.

நன்கு = நன்னாயி ]

### 6.2.5.2. தனி வினையடைகளாக வரும் கால/ நேர வினையடைகள்

தனி வினையடைகளாக வந்து வினை நிகழ்ந்த காலத்தினை வெளிப்படுத்தும் வினையடைகள் இதன் கீழ் அடங்கும். தமிழில் நேற்று, இன்று, நாளை, காலையில், பிறகு , எப்போது, இப்போது போன்றவை காலவினையடைகளாக வழங்குகின்றன. மலையாளத்தில் நாளெ, மற்றே

நாள், பிற்றே நாள், ராவிலெ, காலத்து, வீண்டும், ஒரிக்கல், பண்டு போன்றன காணப்படுகின்றன.

சான்று

(7) த அவள் **நேற்று** வந்தாள்

(8) ம அவள் **இன்னலெ** வன்னு

(9) த ராமன் **மீண்டும்** காட்டுக்குச் சென்றான்

(10) ம ராமன் **வீண்டும்** காட்டில் போயி

தமிழிலும் மலையாளத்திலும் தனிவினையடைகள் காலத்தினை வெளிப்படுத்துகையில் ஒரே போன்றே அமைகின்றன. அவை தம்முள் வேறுபடுவதில்லை.

**6.2.5.3. தனி வினையடைகளாக வரும் இட வினையடைகள்**

தனி வினையடைகளாக வந்து, வினை நிகழ்ந்த இடத்தினைச் சுட்டும் வினையடைகள் இவ்வகையில் அடங்கும். தற்காலத் தமிழில் இவ்வகை இட வினையடைகளாக; உள்ளே, வெளியே, இங்கு, அங்கு, முன்னால், பின்னால், உயரே, கீழே, கிட்டே, அருகில், இடையில், அப்பால், நடுவில் போன்றன அமைகின்றன. மலையாளத்தில் தாழே, மேலே, முன்பே, முன்பில், பின்பே, பின்பில், வலத்தே, இடத்தே, அகத்தே, புறத்தே, அரிகே, அரிகத்தே, அடுத்தே என ஏராளமான இட வினையடைகள் வழக்கில் உள்ளன.

சான்று

(11) த பூனை என் அருகே வந்தது

(12) ம பூச்ச என்றெ அரிகில் வன்னு

(13) த கல்லைக் கீழே போடு

(14) ம கல்லு தாழ இடு

தமிழிலும் மலையாளத்திலும் தனி இட வினையடைகள் வேறுபாடுகள் எதையும் கொண்டு அமையவில்லை.

**6.2.5.4. தனி வினையடைகளாக வரும் அளவு வினையடைகள்**

வினைச்சொல்லின் அளவினைக் குறிக்கும் தனி வினையடைகள் இதன் கீழ் அடங்கும். தற்காலத் தமிழில் ஏராளம், கொஞ்சம், தாராளம், அதிகம் போன்ற சொற்கள் தனி அளவு வினையடைகளாகப் பயன்படுத்தப்படுகின்றன. தற்கால மலையாளத்தில் தாராளம், அல்ப்பம், அதிகம் போன்ற அளவு வினையடைகள் மொழியில் காணப்படுகின்றன.

சான்று

(15) த என்னிடம் கொஞ்சம் பணம் உள்ளது

(16) ம என்றெ அடுத்து குறச்சு பணம் உண்டு

தமிழிலும் மலையாளத்திலும் தனி அளவு வினையடைகள் வேறுபாடுகள் எதையும் கொண்டு அமைவதில்லை.

**6.2.2.2. கூட்டு வினையடைகள்**

வினையடை விகுதிகளான -ஆக, -ஆய், -அது, -என, -என்று போன்றவற்றை பெயர்ச்சொல்லுடன் சேர்த்து உருவாக்கப்படும்

வினையடைகள் கூட்டு வினையடைகள் எனப்படும். தமிழிலும் மலையாளத்திலும் கூட்டு வினையடைகள் வினையடை விகுதிகளைச் சேர்ப்பதன் மூலமே உருவாக்கப்படுகின்றன. மலையாளத்தில் வினையடை விகுதியான "-ஆயி" யினைச் சேர்ப்பதன் மூலம் கூட்டு வினையடைகள் உருவாக்கப்படுகின்றன. தமிழில் கூட்டு வினையடை விகுதிகள் ஏராளமாக உள்ள நிலையில் மலையாளத்தில் ஒரேயொரு விகுதியே இருப்பது இவ்விடம் குறிப்பிடத்தக்க செய்தி ஆகும்.

**6.2.2.2.1. கூட்டு வினையடைகளாக வரும் முறை வினையடைகள்**

தமிழில் கூட்டு - முறை வினையடைச் சொற்களாக, வேகமாக, வேகமாய், எளிமையாக, எளிமையாய், தெளிவாக, தெளிவாய், நன்றாக, நன்றாய், திடீரென்று, கணீரென்று, திடீரென என்பன போன்ற சொற்கள் ஏராளமாகக் காணப்படுகின்றன. மலையாளத்தில், நன்னாயி, பங்ஙியாயி, கெம்பீரமாயி, தாழ்மயாயி, ஆத்யமாயி என்பன போன்று ஏராளமான கூட்டு - முறை வினையடைகள் விகுதிகள் சேர்த்து உருவாக்கப்பட்டு மொழியில் வழங்குகின்றன.

சான்று

| | | |
|---|---|---|
| (17) | த | மணி அப்பணியை அழகாகச் செய்தான் |
| (18) | ம | மணி ஆ ஜோலி பங்ஙியாயி செய்து |
| (19) | த | அவன் எளிமையாகப் பேசினான் |
| (20) | ம | அவன் எளிமயாயி சம்சாரிச்சு |

தமிழில் "-ஆக" , "-ஆயி" எனும் வினையாக்க விகுதிகள் வருமிடத்தில் மலையாளத்தில் "-ஆயி" எனும் ஒரு விகுதி வடிவம் மட்டுமே வருகின்றது. தமிழ் - மலையாளத்தில் கூட்டு முறை வினையடைகள் வருமிடம் அமையும் வேறுபாடாக இது அமைகிறது.

[ ஆக = ஆயி ]

சான்று

(21) த சோமன் வேகமாக நடந்தான்

(22) ம சோமன் வேகத்தில் நடன்னு

சான்று (21) , (22) ல் தமிழில் வேகமாக எனும் கூட்டு வினையடை "-ஆக" எனும் வினையடை விகுதியினைக் பெற்று வருகின்ற இடத்தில் மலையாளத்தில் வேகத்தில் என்னும் வினையடை, இடப்பொருள் வேற்றுமையினை எடுத்து வினையடைப்பொருளை உணர்த்துகின்றது. தமிழ் மலையாள கூட்டு - முறை வினையடைகளுக்கிடையே அமையும் முக்கிய வேறுபாடாக இது கருதப்படுகின்றது

[ ஆக = இல் ]

சான்று

(23) த கர்ணன் ஆசையாகப் பேசினான்

(24) ம கர்ணன் இஷ்ட்டத்தோடெ சம்சாரிச்சு

தமிழில் "-ஆக" எனும் வினையடை விகுதி வருமிடத்தில் மலையாளத்தில் "-ஓடெ" எனும் உடனிகழ்ச்சி வேற்றுமை உருபு வினையடைப்பொருளில் வருகின்றது தமிழிலும் "ஆசையோடு வந்தான்" போன்ற தொடர்கள்

அமைவதுண்டு. ஆனால் அது பொருள் மயக்கமுள்ள தொடர்களாக வருதல் காணத்தக்கது. இவ்விடத்தில் "-ஆக" , அல்லது "-ஆய்" உருபு வந்தால் மட்டுமே பொருள் மயக்கமற்ற வினையடைத்தொடர் அமைகின்றது. மலையாளத்தில் இவ்விடத்தில் "-ஓடெ" எனும் உடனிகழ்ச்சி வேற்றுமை மட்டுமே வினையடைப்பொருளில் வருகின்றது. இவ்விடம் "-ஓடெ " எனும் விகுதிக்குப் பதில் "-ஆயி" எனும் விகுதி வருவதில்லை. தமிழும் மலையாளமும் இவ்விடம் வேறுபடுவது காணமுடிகிறது.

[ ஆக = ஓடெ ]

**6.2.2.2.2. கூட்டு வினையடைகளாக வரும் கால/ நேர வினையடைகள்**

தமிழில் கூட்டு அல்லது ஆக்க வினையடை விகுதிகளாக "-அது" , மற்றும் "-தோறும்", "பொழுதும்" எனும் விகுதிகள் உள்ளன. இவ்வினையடைகளாக, எப்போதாவது, இப்போதாவது, திடீரென, நாளையாவது, என்றாவது, தினந்தோறும், மாதந்தோறும் எனும் சொற்கள் வழக்கில் உள்ளன. மலையாளத்தில் " -எங்கிலும் " , " -என்னு " , "-போழும்" , பிராவஸ்யம்" என்பன போன்ற விகுதிகள் கூட்டு கால வினையாக்க விகுதிகளாக உள்ளன. இவ்வகை வினைச்சொற்களாக, எல்லாய்ப்போழும், பலப்போழும், ஒரு பிராவஸ்யம், ரண்டு பிராவஸ்யம், எப்போழெங்கிலும், என்பன போன்ற சொற்கள் வழங்குகின்றன.

சான்று

(25) த நீ இப்போதாவது வரவேண்டும்

(26) ம நீ இப்போழெங்கிலும் வரணம்

(27) த இங்கே வேலை தினந்தோறும் நடக்கிறது

(28) ம இவிடெ பணி திவசந்தோறும் நடக்குன்னு

(29) த உன்னிடம் பலமுறை சொன்னேன்.

(30) ம நின்னோடு பல பிராவஸ்யம் பரஞ்ஞு.

தமிழிலும் மலையாளத்திலும் நேரத்தினை வெளிப்படுத்தும் கூட்டு வினைடைகள் தம்முள் வேறுபாடுகள் எதனையும் கொண்டிருக்கவில்லை. தமிழில் வரும் வினையடைகளின் நிகரன்களையே மலையாளமும் கொண்டுள்ளது.

### 6.2.2.2.3. கூட்டு வினையடைகளாக வரும் இட வினையடைகள்

தமிழில் கூட்டு வினையடைகளில் இடத்தினை சுட்டும் சொற்களாக, அங்கிருந்து, எங்கிருந்து, இங்கிருந்து, மேலிருந்து போன்றவைகள் காணப்படுகின்றன. மலையாளத்தில் அவிடெநின்னும், இவிடெ நின்னும், முகளில் நின்னும் என்பன போன்றன கூட்டு - நேர வினையடைகளாக உள்ளன.

சான்று

(31) த பந்து மேலிருந்து விழுந்தது

(32) ம பந்து முகளில்நின்னும் வீணு

(33) த நீ எங்கிருந்து வருகிறாய் ?

(34) ம நீ எவிடெநின்னும் வருன்னு ?

தமிழில் நேரத்தினைச் சுட்டும் கூட்டு வினையடைகள் பெயர்ச்சொல்லையும் "இலிருந்து" என்னும் நீங்கல் வேற்றுமையினையும்

எடுத்து வருகின்றன. மலையாளத்திலும் இதே அமைப்பினைக் காண முடிகின்றது. இதனால் இரு மொழிகளிலும் இவ்வினையடைகளில் வேறுபாடு அமையவில்லை.

**6.2.2.2.4. கூட்டு வினையடைகளாக வரும் அளவு வினையடைகள்**

தமிழில் அளவினைச் சுட்ட வரும் கூட்டு வினையடைகளாக ஏராளமாக , கொஞ்சமாக, அதிகமாக, நிறைவாக, குறைவாக என்பவை காணப்படுகின்றன. மலையாளத்தில் தாராளமாயி, அல்ப்பமாயி, கூடுதலாயி, குறவாயி என்பன காணப்படுகின்றன.

சான்று

(35) த மழை இம்முறை **ஏராளமாகப்** பெய்தது

(36) ம மழ ஈபிராவஸ்யம் **தாராளம்** பெய்து

(37) த உனக்குப் பணம் **கூடுதலாகக்** கிடைக்கும்

(38) ம நினக்குப் பைச **கூடுதாயி** லபிக்கும் .

அளவு வினையடைகளில் தமிழ் மலையாளத்திற்கிடையே பெரும் வேறுபாடு இல்லை எனினும், சான்று (37) மற்றும் (38) ல் ஏராளமாக எனக் கூட்டு வினையடையாகத் தமிழில் வந்தாலும் மலையாளத்தில் அதற்கிணையான தாராளம் என்ற தனி வினையடையாகவே பெரும்பாலும் பயன்படுத்தப்படுகிறது. இது இருமொழிகளுக்கிடையேயான சிறு வேறுபாடாக அமைகின்றது.

[ ஏராளமாக = தாராளம் ]

### 6.2.2.3. அடுக்கு வினையடை

தமிழில் அடுக்குச்சொற்களான, வழவழ, சொரசொர, வருடாவருடம், என்பன போன்றவற்றுடன் "-ஆக", " -ஆயி" "-என" "-என்று" போன்ற வினையடையாக்க விகுதிகளைச் சேர்ப்பதன் மூலம் அடுக்கு வினையடைகள் தோன்றுகின்றன. தற்கால மலையாளத்திலும் இவ்வகையான வினையடைகள் அம்மொழியில் ஏராளமாகப் பயன்பாட்டில் உள்ளன

#### 6.2.2.3.1. அடுக்கு வினையடைகளாக வரும் முறை வினையடைகள்

தமிழில் அடுக்குச்சொற்கள் ஏராளமாக பயன்படுத்தப்படுகின்றன. இதனால் இவ்வகையான வினையடைகளும் தமிழில் ஏராளமாகவே பயன்படுத்தப்படுகின்றன. வேகவேகமாக, அவ்சர அவசரமாக, அடுக்கடுக்காக, மளமளவென்று, சுறுசுறுப்பாக, வெதுவெதுப்பாக என்பவை தமிழில் வழங்கும் அடுக்கு - முறை வினையடைகளில் சில ஆகும். மலையாளத்தில் வேகம்வேகம், அடுக்கடுக்காயி போன்ற வினையடைகள் பயன்படுத்தப்படுகின்றன.

சான்று

(39) த இராதை **வேகவேகமாக** சாப்பிட்டாள்

(40) ம ராத **வேகம்வேகம்** கழிச்சு

(41) த கட்டிடங்களை **அடுக்கடுக்காகக்** காணலாம்

(42) ம கெட்டிடங்ஙள் **அடுஅடுக்காயி** காணாம்

தமிழில் வேகவேகமாக என்ற அடுக்குச்சொல்லுடன் "-ஆக" போன்ற வினையாக்க ஒட்டுக்கள் இணைந்து அடுக்கு வினையடையினை உருவாக்குகின்றன. ஆனால் மலையாளத்தில் வினையடையாக்க விகுதியின்றியே அடுக்குவினையடை வெளிப்படுத்தப்படுவதனை சான்று (40) ல் காணலாம். பெரும்பாலான அடுக்கு - முறை வினையடைகளும் தமிழிலும் மலையாளத்திலும் ஒரே போன்றே வருகின்றன.

**6.2.2.3.1.2. அடுக்கு வினையடைகளாக வரும் கால வினையடைகள்**

தமிழில் வினை நடைபெற்ற காலத்தினை வெளிப்படுத்தும் வகையில் அடுக்குச்சொற்கள் வினையடைகளாகப் பயன்பாட்டில் உள்ளன. இவை "-ஆக" விகுதியினை ஏற்றோ ஏலாமலோ வினையடைப்பொருளை வெளிப்படுத்தும். சான்றாக, வேளா வேளைக்கு , காலங்காலமாக, தினம் தினம், வருடாவருடம், ஆண்டாண்டு காலமாக போன்றவற்றைக் கூறலாம். மலையாளத்தில் வர்ஷங்ஙளாயி, வர்ஷாவர்ஷம், வளரெ காலமாயி போன்றவை காலத்தினை வெளிப்படுத்தும் அடுக்கு வினையடைகளாக வழக்கில் உள்ளன.

சான்று

(43) த நீ **வேளாவேளைக்கு** சாப்பிட வேண்டும்

(44) ம நீ **சமயத்தினு** கழிக்கணம்

(45) த ஓணம் **காலங்காலமாக** கொண்டாடப்படுகிறது

(46) ம ஓணம் வர்ஷாவர்ஷம்

ஆகோஷிக்கப்பெடுன்னு

தமிழில் அடுக்குச்சொற்களும் கொடை வேற்றுமையுருபும் வந்து வினையடைப்பொருளை வெளிப்படுத்துமிடத்தில் மலையாளத்தில் பெயர்ச்சொல்லும் கொடைவேற்றுமையும் இணைந்து வினையடைப்பொருளை வேளிப்படுத்துவதனை அறியலாம். சான்று (39), (40). தமிழில் அடுக்குச்சொல்லும் வினையாக்க விகுதியும் வந்து வினையடைப்பொருளை வெளிப்படுத்துமிடம் மலையாளத்தில் அடுக்குச்சொல் மட்டும் வந்து வினையடைப்பொருளை வெளிப்படுத்துகின்றது. தமிழ்மொழியும் மலையாளமும் அடுக்குச்சொல்லுடன் வினையடையாக்க விகுதிகளை இணைத்து கால/நேர வினையடைப்பொருளைப் புலப்படுத்துவதில் இவ்வாறு வேறுபடுகின்றன.

[ வேளாவேளைக்கு = சமயத்தினு ]

**6.2.2.3.1.3. அடுக்கு வினையடைகளாக வரும் இட வினையடைகள்**

*தமிழில் அடுக்குச்சொற்கள் வினையடையாக்க விகுதியான "-ஆக" வை* ஏற்காமல் தனித்தனியே வந்தோ, வினையடை விகுதியினை ஏற்றோ வினையடைப்பொருளை வெளிப்படுத்துகின்றன. இங்கு அடுக்கு - இட வினையடைகளாக, அங்கங்கு, தெருத்தெருவாக, ஊர் ஊராக போன்றன வழக்கில் உள்ளன. மலையாளத்தில் அடுக்குச்சொற்களாகவும், வினையடையாக்க விகுதியினையேற்ற பெயர்ச்சொல்லாகவும் வந்து

அடுக்கு - நேர வினையடைகள் உருவாக்கம் பெறுகின்றன. சான்று: தெருவுதோறும், ஊர்தோறும், அவிடவிடெ , அவிடவிடெயாயி என்பன.

சான்று

(47) த திருடன் **தெருத்தெருவாக** நடந்தான்

(48) ம கள்ளன் **தெருவுதோறும்** நடன்னு

(49) த பூக்கள் **அங்கங்காகச்** சிதறிக் கிடக்கின்றன.

(50) ம பூக்கள் **அவிடவிடெயாயி** சிதறிக்கிடக்குன்னு

தமிழிலும் மலையாளத்திலும் அடுக்கு - இட வினையடைகள் இடம் சுட்டி பெயர்ச்சொற்களுடன் வினையடை விகுதிகளையும் ஏற்று வினையடைப் பொருளை வெளிப்படுத்துகின்றன. இவை தம்முள் வேறுபாடு எதுவும் அமையவில்லை.

**6.2.2.3.1.4. அடுக்கு வினையடைகளாக வரும் அளவ வினையடைகள்**

தற்காலத் தமிழில் வினை நிகழும் அளவினைக் குறிக்க, அளவு குறித்த அடுக்குச் சொற்களுடன் "-ஆக", "-ஆய்" விகுதிகள் இணைந்து அடுக்கு - அளவு வினையடைகளாக வழங்குகின்றன. சான்றாக, கொஞ்சம் கொஞ்சமாக, சின்னச்சின்னதாக, உயர உயரமாக போன்றன. மலையாளத்திலும் இதே போன்று அடுக்கு - அளவு வினையடைகள் காணப்படுகின்றன.

சான்று

(51) த எண்ணெயைக் கொஞ்சம் கொஞ்சமாக ஊற்று

(52) ம எண்ண குறச்சு குறச்சாயிட்டு ஒழிக்கூ.

தமிழில் அளவினைக் காண்பிக்க, அடுக்குச்சொற்கள் "-ஆக" வினையடை விகுதியுடன் வருகின்றன. மலையாளத்தில் இவ்விடம் "-ஆயிட்டு" என்னும் வினையடை விகுதி சேர்க்கப்படுகிறது. சான்று : (51) , (52). தமிழ் - மலையாளத்தில் இவ்விடம் குறிப்பிடத்தக்க வேறுபாடு எதுவும் அமையவில்லை.

**6.2.6. வினையெச்சம் வினையடையாக வருதல்**

தமிழில் வினையெச்சங்களும் வினையடைப்பொருளில் வரலாம்.

சான்று

(53) த பேருந்து விரைந்து சென்றது

(54) ம பஸ் வேகத்தில் நீங்ஙி

6.2.7. தமிழிலும் மலையாளத்திலும் வினையடைகளில் காணப்படும் வேறுபாடுகள் கீழே தரப்படுகின்றன.

1. தமிழின் தனி வினையடையாக வரும் "நன்கு" மலையாளத்தில் வினையடை விகுதியான "-ஆயி" மற்றும் "ஆயிட்டு" என்பவைகளைப் பெற்று, நன்னாயி, நன்னாயிட்டு எனும் கூட்டு வினைடடையாக வருகின்றது.

[ நன்கு = நன்னாயி / நன்னாயிட்டு ]

2. தமிழில் "-ஆக" , "-ஆயி" எனும் வினையாக்க விகுதிகள் வருமிடத்தில் மலையாளத்தில் "-ஆயி" எனும் ஒரு விகுதி வடிவம் மட்டுமே வருகின்றது.

[ ஆக = ஆயி ]

3. தமிழில் வேகமாக எனும் கூட்டு வினையடை "-ஆக" எனும் வினையடை விகுதியினைப் பெற்று வருகின்ற இடத்தில் மலையாளத்தில் வேகத்தில் என்னும் வினையடை, இடப்பொருள் வேற்றுமையினை எடுத்து வினையடைப்பொருளை உணர்த்துகின்றது.

[ ஆக = இல் ]

4. தமிழில் "-ஆக" எனும் வினையடை விகுதி வருமிடத்தில் மலையாளத்தில் "-ஓடெ" எனும் உடனிகழ்ச்சி வேற்றுமை உருபு வினையடைப் பொருளில் வருகின்றது.

[ ஆக = ஓடெ ]

5. ஏராளமாக எனும் கூட்டு வினையடை தமிழில் வரும்போது மலையாளத்தில் அதற்கிணையான "தாராளம்" என்ற தனி வினையடையே பெரும்பாலும் இடம்பெறுகின்றது..

**[ ஏராளமாக = தாராளம் ]**

6. தமிழில் அடுக்குச்சொல்லும் வினையாக்க விகுதியும் வந்து வினையடைப்பொருளை வெளிப்படுத்துமிடம் மலையாளத்தில் அடுக்குச்சொல் மட்டும் வந்து வினையடைப்பொருளை வெளிப்படுத்துகின்றது.

**[ வேளாவேளைக்கு = சமயத்தினு ]**

7. தமிழில் வினையெச்சம் முறை வினையடைப்பொருளில் வருகின்ற இடத்தில் மலையாளத்தில் பெயர்ச்சொல் இடப்பொருள் வேற்றுமையுடன் இணைந்து வந்து வினையடையாக செயல்படுகின்றது.

**[ விரைந்து = வேகத்தில் ]**

# ஆய்வு முடிவுரை

தமிழ் மலையாள இயந்திர மொழிபெயர்ப்புக்கு உரிய மொழிமாற்ற இலக்கணம் என்ற தலைப்பில் மேற்கொள்ளப்பட்ட இவ்வாய்வின் மூலம்பெறப்பட்ட முடிவுகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

1) மலையாளத்தில் பொதுப்பால் பன்மை விகுதியாக, "-ங்ள்" எனும் மூக்கொலியுடன் அமைந்த விகுதி வழக்கில் உண்டு. ஆனால் தமிழில் இது "-கள்" எனும் அடைப்பொலியில் தொடங்கும் பன்மைப்பெயர் விகுதியாகவே வழக்கில் உள்ளது. "-ங்ள்" எனும் விகுதி மலையாளத்திற்கே உரியதாகும். இது தமிழில் இல்லை.

2) தற்காலத் தமிழ் , மலையாள மொழிகளில் பால்காட்டும் சொற்களில் அமைந்துள்ள வேறுபாடுகளாவன; தமிழில் "-அர்" விகுதி மரியாதையினைச் சுட்ட உயர்திணை ஒருமை ஆண்பாற்பெயர்கள், பெண்பாற்பெயர்களில் வழங்குகின்றது. ஆனால் தற்கால மலையாளத்தில் இவ்விகுதி மரியாதையினைக் குறிக்க வருவதில்லை.

3) "-கள்" விகுதிபெற்ற உயர்திணைப் பொதுப்பெயர் விகுதிகள் மலையாளத்தில் "-கள்", "-கார்", "-மார்" என மூன்று விதங்களில்

மாறுகின்றன இவ்விடங்களில், மலையாளத்தில் போன்று "-**கார்**", எனும் விகுதி தற்காலத் தமிழில் இடம்பெறுவது இல்லை

4) தமிழில் இருந்து மலையாளத்துக்கு மாற்றப்படுகையில் "**-வர்கள்**" விகுதி "**-கள்**", "**-அர்**" என்று ஒற்றைப்பன்மை விகுதியாக மாறுகிறது "-வர்கள்" எனும் இரட்டைப்பன்மை விகுதி மலையாளத்தில் கிடையாது

5) தமிழின் உயர்திணைப் பொதுப்பால் பன்மை விகுதியான "-ஞர்கள்" எனும் விகுதி மலையாளத்தில் "-மார்" என்று மாறுகிறது. மலையாளத்தில் "-ஞர்கள்" விகுதி இவ்விடம் அமையாது "-மார்" விகுதி தமிழில் இவ்விடம் வருவதில்லை

6) தமிழில் "-ஓர்" எனும் விகுதியும் "-ஓர்கள்" விகுதியும் உயர்திணைப் பொதுப்பால் விகுதிகளாக வருகின்றன இவற்றை மலையாளத்தில் மொழிபெயர்க்கையில், அவை, "-கள்" என்றும் "-அர்" என்றும் மாறுகின்றது மலையாளத்தில் "-ஓர்" விகுதி, மற்றும் "-ஓர்கள்" எனும் இரட்டைப்பன்மை விகுதி அமைவது இல்லை

7) தற்காலத்தமிழில் "-கள்" எனும் பன்மை உருபு பெரும்பான்மை வழக்கு தற்காலமலையாளத்தில் "-மார்" எனும் பன்மை உருபு பெரும்பான்மை வழக்கு.

8) தற்காலத் தமிழில் "-அர்கள்" , "-மார்கள்", "-வர்கள்" "-ஞர்கள்" "-ஓர்கள்" போன்ற இரட்டைப்பன்மை விகுதிகள் பலர்பால் விகுதிகளாக வருகின்றன. ஆனால் தற்கால மலையாளத்தில் இரட்டைப்பன்மை விகுதிகள் வழக்கில் இல்லை.

9) தமிழில் வினைச்சொற்களும் பால் காட்டும் பண்பினை உடையன. ஆனால் மலையாளத்தில் வினைச்சொற்கள் பால் காட்டுவது இல்லை.

10) தமிழில் வினைப்பயனிலை (Verbal Predicate), பெயர்ப்பயனிலை (Nominal Predicate) இயைபு உண்டு. மலையாளத்தில் பெயர்ப்பயனிலை இயைபு மட்டுமே உண்டு.

11) க்ருத் இறுதிச் சொற்களிலும் தத்தித இறுதிச்சொற்களிலும் பாலற்ற சொற்களுக்கு / அஃறிணைச்சொற்களுடன் "அன்" என்ற ஒட்டு சேரும். இவ்வொட்டு வருகையில் அச்சொற்களுக்கு ஆண்பால் விகுதியான "-அன்" வரும். இவ்வகைச் சொற்கள் தமிழில் அருகியே உள்ளன. தற்கால மலையாளத்தில் இவை அதிகம் உள்ளன.

12) தமிழிலும் மலையாளத்திலும் காணப்படும் எண்களின் வேறுபாடுகளாவன, தமிழில் "-கள்" என முடியும் ஆண்பால் பெயர்கள் மலையாளத்தில் "-மார்" என்று முடிகின்றன.

13) தமிழில் இரட்டைப்பன்மை வரும் இடத்தில் மலையாளத்தில் ஒரு பன்மையுருபே வருகின்றது. அதாவது தமிழில் "-மார்கள்" வரும் இடத்தில் மலையாளத்தில் "-மார்" மட்டுமே வருகின்றது.

14) ஆண்பால் ஒட்டான "-அர்" உடைய சொற்கள் மலையாளத்திற்கு மாற்றப்படுகையில் அம்மொழியின் ஆண்பால் பன்மை ஒட்டான "-மார்" விகுதியினை ஏற்று வருகின்றது.

15) தமிழில் "-அர்கள்" என்று இரட்டைப்பன்மையால் குறிக்கப்படும் ஆண்பால் பெயர்கள் மலையாளத்தில் "-மார்" என்று குறிக்கப்படுகின்றது.

16) பெண்பால் பன்மையுருபு "-கள்" ஏற்ற சொற்கள் மலையாளத்தில் "-மார்" என்று வருகின்றன.

17) தமிழின் பெண்பால்பன்மை உருபு "-மார்கள்" மலையாளத்துக்கு மொழிபெயர்க்கப்படும் போது மலையாளப் பெண்பால் பெயர்களின் "-கள்" உருபு நீக்கப்பட்டு, "-மார்" உருபு மட்டும் பன்மை உருபாகச் சேர்க்கப்படுகிறது.

18) தமிழின் பெண்பன்மையுருபு "-அர்" ; "-கள்" மற்றும் "-மார்" என்று இரு விதங்களில் மாறுகின்றது.

19) தமிழின் இரட்டைப்பெண்பாற்பன்மையுருபு "-அர்கள்" மலையாளத்தில் "-கள்" எனும் ஒற்றைப்பன்மையுருபாக மாறுகின்றது.

20) தமிழின் பெண்பன்மை ஒட்டான "-இர்" மலையாளத்தில் "-கள்" எனும் ஒட்டாக மாறுகின்றது.

21) தமிழில் பெண்பன்மை ஒட்டான "-இர்கள்" மலையாளத்தில் "-கள்" எனும் பெண்பன்மை ஒட்டாக வருகின்றது

22) தற்காலத் தமிழ் , மலையாள மொழிகளில் வழங்கிடும் பதிலிடு பெயர்களில் காணப்படும் வேறுபாடுகளாவன, தமிழில் உளப்பாட்டுத்தன்மைப்பன்மையினை வெளிப்படுத்த 'நாம்' என்ற ஒரு வடிவமே காணப்படுகிறது. ஆனால் மலையாளத்தில்,

1) நாம்

2) நம்மள்

என்ற இரண்டு வடிவங்கள் வழக்கத்தில் உள்ளன. இதில் 'நாம்' என்பது ஒருமைப்பன்மை வடிவம். 'நம்மள்' இரட்டைப்பன்மை வடிவம். தமிழில் 'நாம்' என்ற ஒருமைப்பன்மை வடிவம் மட்டுமே வழங்குகின்றது.

23) தமிழில் முன்னிலை இயல்பு உயர்வு ஒருமை 'நீர்' என்பது ஒருமைப்பன்மை வடிவமாக உள்ளது. மலையாளத்தில் 'நிங்ஙள்' என்ற இரட்டைப்பன்மை வடிவமாக வழங்குகின்றது.

24) தமிழில் மரியாதையை வெளிப்படுத்தும் சிறப்பு உயர்வு ஒருமை வடிமாக 'நீங்கள்' என்ற பதிலிடு பெயர் உள்ளது. ஆனால் மலையாளத்தில் அதற்கு இணையானது போல் தோன்றும் 'நிங்ஙள்' என்ற வடிவம் எப்போதும் சிறந்த மரியாதையை உணர்த்தும் வடிவமாகப் பயன்படுத்தப்படுவது இல்லை. கேரளத்தின் பல இடங்களில் இரு முறைகளிலும் இவ்வாறான இருவேறு பொருள்களில் வழங்கப்படுகின்றது. நிங்ஙள் மரியாதை குறைவாகக் கருதப்படும் வேளைகளில் 'தாங்கள்' என்ற வடிவம் தகுந்த மரியாதை தரும் வடிவமாகப் பயன்படுத்தப்படுகிறது.

25) தற்காலத்தமிழில் 'அவர்கள்' என்ற படர்கை சிறப்பு உயர்வு ஒருமை வடிவம் வழங்கி வருகின்றது. ஆனால் மலையாளத்தில் இது மேடைப்பேச்சுக்களிலும், தொலைக்காட்சி உரையாடல்களிலும் மட்டுமே வழங்கி வருகின்றது.

26) 'இவர்கள்' என்ற வடிவம் தற்கால மலையாளத்தில் இல்லை.

27) தமிழில் படர்கை உயர்வு ஒருமை வடிவமாக 'அவர்' 'இவர்' என்று பயன்படுத்துகிறோம். மலையாளத்தில் இது

படர்கைப்பன்மை வடிவம் ஆகும். ஆனால் பெண்களை மரியாதையுடன் குறிப்பிடுகையில் படர்கை உயர்வு ஒருமை வடிவமாக இவ்வடிவங்களைப் பயன்படுத்துவர்.

28) தமிழில் படர்கை பலர்பால் பன்மை வடிவங்களாக 'அவர்கள்' , 'இவர்கள்' என்பன வழக்கில் உள்ளன. மலையாளத்தில் இதற்கு இணையாக 'அவர்' , ' இவர்' என்பன பன்மை வடிவங்கள்.

29) அ∴றிணைப் பலவின் பாலுக்குத்தமிழில் 'அவை' , 'இவை' , 'அவைகள்' 'இவைகள்' என நான்கு வடிவங்கள் உள்ளன. மலையாளத்தில் 'அவ' , 'இவ' என இரண்டு வடிவங்களே உள்ளன. ஆனால் பெரும்பாலும் இவை தனித்து வருவதில்லை. சில முழுமைப் பதிலிடுபெயர்களை (எ.கா: அவயொக்கெ, அவயெல்லாம்) இணைத்துக்கொண்டே வருகின்றன.

30) தமிழ் மலையாளத்தில் செயப்படுபொருள் வேற்றுமை ஏற்கும் சூழலில் நிலவும் வேறுபாடுகளுமாவன, மலையாளத்தில் செயப்படுபொருள் வேற்றுமையுருபினை ஏற்கையில் இடம்பெறும் "இன்" சாரியை பெரும்பான்மை கட்டாயச்சாரியையாகவே உள்ளது. தமிழில் இது சிறிய அளவிலேயே வழக்கில் உள்ளது.

31) தமிழில் அஃறிணை உயிரற்ற பெயர்களுடன் "ஐ" உருபு வருவது விருப்பத்தேர்வு. ஆனால் மலையாளத்தில் செயப்படுபொருள் வேற்றுமை உருபு அஃறிணை உயிரற்ற பெயர்களுடன் கட்டாயமாக வருவதில்லை.

32) தமிழில் செயப்படுபொருள் ஏற்கும் அஃறிணை உயிரற்ற பெயர்கள் சுட்டுப்பெயர்களால் சுட்டப்பட்டால் அவை "ஐ" உருபினைக் கட்டாயம் ஏற்கும். ஆனால் மலையாளத்தில் சுட்டுப்பெயர் இடம்பெற்றாலும் அப்பெயர்கள் "எ" உருபினை ஏற்பதில்லை.

33) தமிழில் "ஐ" உருபு உயர்திணைப்பெயர்களுடனும், அஃறிணைப்பெயர்களுடனும் இணைந்து அதைக் குறிப்பிட்டுச்சுட்டிக்காட்டும். மலையாளத்தில் இவ்வாறு அஃறிணை உயிரற்ற பெயர்களைச்சுட்டிக்காட்ட, செயப்படுபொருள் உருபு "எ" பயன்படுவதில்லை. அதற்குப்பதில் "ஆணு" போன்ற அழுத்திச்சொல்லும் சொற்கள் மலையாளத்தில் பயன்படுகின்றன.

34) தமிழில் அஃறிணைப்பெயர்கள் பொதுவாகக் கூறப்பட்டு அப்பொதுமையைக் குறிக்கும் "ஒரு" போன்ற சொற்களுடன் வந்தால் செயப்படுபொருள் வேற்றுமை உருபு விருப்பத்தேர்வாக அமையும். ஆனால் மலையாளம் விருப்பத்தேர்வாகவோ, கட்டாயமாகவோ "எ" உருபினை ஏற்காது.

35) மலையாளத்தில் சில பெயர்வினைச்சொற்கள் கூட்டாகக் காணப்படுவதால் (Noun-Verb Compound) அப்பெயர்களுடன் செயப்படுபொருள் வேற்றுமை உருபு "எ" இடம்பெறுவதில்லை. தமிழிலும் இதேபோன்ற தொடர்கள் மொழிபெயர்க்கப்பட்டால் அவை "ஐ" உருபை ஏற்றோ ஏற்காமலோ ( Optional ) அமைகின்றன.

36) சமநிலை காட்ட வரும் பெயர்களில் மலையாளத்தில் "எ" உருபு கட்டாயம் இடம்பெறுகிறது. தமிழில் இவ்விடம் "ஐ" உருபேற்பது விருப்பத்தேர்வாக அமைகிறது.

37) மலையாளத்தில் உயிரற்ற அஃறிணைப்பெயர்கள் ஒரே தொடரில் அமையும்போது செயப்படுபொருள் எது என்று அத்தொடரில் இடம்பெறும் வினைமுற்று பொருண்மைக்கூற்றின் மூலம் புலப்படுத்துகின்றது. இச்சூழலில் மலையாளத்தில் அப்பெயர்கள் "எ" உருபினைப்பெறாமலும் தமிழில் அப்பெயர்கள் "ஐ" உருபினைப்பெற்றும் அமைகின்றன.

38) தமிழிலும் மலையாளத்திலும் கருவிப்பொருள் வேற்றுமையின் வேறுபாடுகளாவன, தமிழில் கருவிப்பொருளைச் சுட்டுவதற்கு "-ஆல்" உருபு வருமிடத்தில் மலையாளத்தில் "கொண்டு" என்ற

சொல்லுருபு வருகின்றது. தற்கால மலையாளம் "-ஆல்" உருபினை இச்சூழலில் ஏற்பதில்லை.

39) தமிழில் கருவி வேற்றுமை "-ஐக்கொண்டு" , "-ஐ" என்ற செயப்படு பொருள் வேற்றுமை மற்றும் "கொண்டு" என்ற சொல்லுருபின் கூட்டமைப்பால் வெளிப்படுத்தப்படும். மலையாளத்தில் கருவிப்பொருள் வேற்றுமையானது "கொண்டு" எனும் சொல்லுருபாலேயே வெளிப்படுத்தப்படுகின்றது.

40) தமிழில் "ஐ வைத்து" எனும் வடிவம் கருவிப்பொருளை உணர்த்தும். மலையாளத்தில் "கொண்டு" எனும் வடிவம் கருவிப்பொருளை உணர்த்தும்.

41) தமிழில் கருவிப்பொருளுணர்த்தும் "ஐ வைத்து" அமைப்பு மலையாளத்தில் "வெச்சு" (வைத்து) என மட்டும் அமைந்து கருவி வேற்றுமையை உணர்த்தும்.

42) தமிழில் "-ஆல்" உருபு முதற்பொருள் அல்லது மூலப்பொருளையும் குறிக்கும். மலையாளத்தில் "கொண்டு" எனும் சொல்லுருபே அம்மொழியில் முதற்பொருள் அல்லது மூலப்பொருளையும் குறிக்கப் பயன்படுத்தப்படுகிறது.

43) முதல்/மூலப்பொருளை உணர்த்தும் நிலையில் தமிழில் "-ஐக்கொண்டு" எனும் அமைப்பு வருகின்றது. மலையாளத்தில் "கொண்டு" எனும் சொல்லுருபு மட்டுமே இடம்பெறுகின்றது.

44) தமிழில் "-ஆல்" உருபு முதல் வகைக்காரணத்தை வெளிப்படுத்தும் உருபாக வருகின்றது. ஆனால் மலையாளத்தில் முதல் வகைக் காரணப்பொருள் 1) "காரணம்" என்ற சொல்லாலும் 2) "கொண்டு" என்ற சொல்லுருபாலும் வெளிப்படுத்தப்படுகின்றது.

45) தமிழில் உடைமை வேற்றுமை உருபு 1) "-இன்", 2) "காரணம்" என்ற சொல் மற்றும் 3) "-ஆல்" உருபு போன்றன இணைந்து காரணப்பொருளை உணர்த்தி நிற்கின்றது. மலையாளத்தில் "கொண்டு" எனும் சொல்லுருபு மட்டுமே இப்பொருளை உணர்த்தி நிற்கின்றது.

46) தமிழில் "அதன்" என்ற உடைமை வேற்றுமையும் "பேரில்" என்ற சொல்லுருபும் சேர்ந்து வந்து காரணப்பொருளை உணர்த்துகின்றது. ஆனால் மலையாளத்தில் இக்கருத்து "கொண்டு" எனும் சொல்லுருபாலேயே வெளிப்படுத்தப்படுகின்றது.

47) தமிழில் "அதன்மூலம்" என்ற அமைப்புக்குப்பதில் மலையாளத்தில் "கொண்டு" எனும் சொல்லுருபு இடம்பெறும்.

48) தமிழில் "அதன் நிமித்தம்" எனும் சொற்கள் சேர்ந்து நின்று காரணப்பொருளை உணர்த்தும். மலையாளத்தில் "கொண்டு" எனும் சொல்லுருபு காரணப்பொருளை புலப்படுத்தும்.

49) தமிழில் "-ஆல்" உருபு கருத்தாப்பொருளிலும் வருகின்றது. ஆனால் மலையாளத்தில் "-க்கு" எனும் கொடை வேற்றுமை உருபால் இப்பொருள் வெளிப்படுத்துகின்றது.

50) தமிழில் அனைத்துப்பதிலிடு பெயர்களுடனும் கருவி வேற்றுமை "-ஆல்" உருபினை இணைத்துக்கூற முடியும். ஆனால் மலையாளத்தில் "-ஆல்" உருபுக்குப்பதில் "கொண்டு" எனும் சொல்லுருபு இணைகின்றது. ஆனால் "கொண்டு" சொல்லுருபைத்தவிர கொடை வேற்றுமை உருபு "-க்கு" கருவி வேற்றுமையில் அதிகம் இடம்பெறுகின்றது: அதே நேரம் தமிழில் அது எல்லாச்சூழலகளிலும் இடம்பெறுவதில்லை. மலையாளத்தில் இது எல்லாச்சூழலிலும் கருவிப்பொருளில் வருவது குறிப்பிடத்தக்க வேறுபாடு ஆகும்.

51) உடனிகழ்ச்சிப்பொருள் வேற்றுமை உருபுகளின் வேறுபாடுகளாவன, தமிழில் "-ஓடு" என்ற உடனிகழ்ச்சி வேற்றுமை வருகின்ற இடத்தில் மலையாளத்தில் "-ன்றெ" என்னும் உடைமை வேற்றுமையும், "-கூடெ" என்ற சொல்லுருபும் இடம்பெறுகின்றது.

52) தமிழில் உடனிகழ்ச்சி வேற்றுமை "ஓடு" வருகின்ற இடத்தில் மலையாளத்தில் "ஆயி" எனும் வினைச்சொல் சொல்லுருபாக இடம்பெற்று உடனிகழ்ச்சிப்பொருளை வேறுபடுத்துவதும் உண்டு.

53) "ஓடு" வேற்றுமையைக்கொண்ட தமிழ்த்தொடர் ஒன்று மலையாளத்திற்கு மொழிபெயர்க்கப்படுகையில் அம்மொழியின் உடனிகழ்ச்சி வேற்றுமையான "ஓடு" வும், "கூடி" எனும் சொல்லுருபும் இடம்பெறுகின்றன

54) தமிழில் "ஓடு" வேற்றுமை வருமிடங்களில் மலையாளத்தில் "ஓடு" வேற்றுமையும், "ஒப்பம்" எனும் சொல்லுருபும் இடம்பெறுவதும் உண்டு.

55) தமிழில் "ஓடு" வேற்றுமை இடம்பெறும் தொடர்களில் மலையாளத்தில் "ஓடு" வேற்றுமையும் "ஒத்து" எனும் சொல்லுருபும் வந்தமைந்து உடனிகழ்ச்சிப்பொருளை வெளிப்படுத்தும்.

56) தற்காலத் தமிழின் உடனிகழ்ச்சி வேற்றுமை உருபாகக் கருதப்படும் "உடன்" இடம்பெறுகின்ற தொடரினை மலையாளத்தில் மொழிபெயர்க்கும் போது, அது மூன்று விதங்களில் உடனிகழ்ச்சி வேற்றுமைகளை ஏற்று, அதன் பொருளை வெளிப்படுத்துகின்றன. அவை, உடன் உருபு கிழமைப்பொருள் வேற்றுமையான "ன்றெ"

மற்றும் "கூடெ" எனும் சொல்லுருபால் வெளிப்படுத்தப்படுகின்றது.

57) "உடன்" உருபு மலையாளத்தின் உடனிகழ்ச்சி வேற்றுமையுருபான "ஓடு" மற்றும் "ஒப்பம்" எனும் சொல்லுருபால் வெளிப்படுத்தப்படுகின்றது

58) "உடன்" உருபு மலையாளத்தில் "ஓடு" உருபு மற்றும் "ஒத்து" எனும் சொல்லுருபால் வெளிப்படுத்தப்படுகின்றது.

59) தமிழில் "கூட" எனும் சொல் தற்கால அறிஞர்களால் உடனிகழ்ச்சி வேற்றுமை உருபாகக் கொள்ளப்படுகிறது இந்த "கூட" உருபு மலையாளத்தில் கிழமைப்பொருள் உருபான "உடெ" மற்றும் சொல்லுருபு "கூடெ" இவற்றின் மூலம் வெளிப்படுத்தப்படுகிறது.

60) "கூட" உருபு வருமிடங்களில் மலையாளத்தில் அதன் உடனிகழ்ச்சி உருபான "ஓடு" உருபும், சொல்லுருபான "ஒப்பம்" மும் ஒருங்கே வந்து தமிழில் "கூட" உருபு வெளிப்படுத்தும் அதே பொருளை வெளிப்படுத்துகின்றது.

61) தமிழில் "கூட" உருபு வருமிடத்தில் மலையாளத்தில் "ஓடு" உருபும் "ஒத்து" எனும் சொல்லுருபும் சேர்ந்து அமைந்து உடனிகழ்ச்சிப்பொருளை வெளிப்படுத்துகின்றது.

62) கொடைப்பொருள் வேற்றுமை உருபுகள் தமிழிலும் மலையாளத்திலும் வேறுபடும் இடங்களாவன, தமிழில் வருதல் போதல் போன்ற வினைச்சொற்களுடன் வரும் பெயர்கள் இலக்குப்பொருளைக் குறிக்கையில் "-கு" உருபினை ஏற்கின்றன. மலையாளத்தில் அது இடப்பொருள் வேற்றுமையான "-இல்" உருபினை ஏற்றே இலக்குப்பொருளை சுட்டுகின்றது.

63) இலக்குப்பொருளைக் குறிப்பிடுகையில் தமிழில் "-க்கு" உருபு தோன்றும். மலையாளத்தில் இடப்பொருள் வேற்றுமை உருபு மற்றும் ஒரு குறைச்சொல் சேர்ந்த "இலேக்கு" எனும் வடிவமாகத் தோன்றும்.

64) தமிழில் "கு" உருபு நோக்கத்தினை வெளிப்படுத்தும் முகமாக அமைகையில் அதற்குச் சமமான மலையாளத்தொடர் அம்மொழியின் "கொடை வேற்றுமை உருபான "னு" வையும், "வேண்டி" என்ற சொல்லுருபையும் ஏற்று வருகின்ற முறை காணப்படுகிறது.

65) தமிழில் நோக்கப்பொருளை வெளிப்படுத்தும் கொடைவேற்றுமை உருபு மலையாளத்தில் அப்பொருளை வெளிப்படுத்த அம்மொழியின் கொடைவேற்றுமையுருபு "னு" வையும் "ஆயி" என்னும் சொல்லுருபினையும் ஏற்று வருகின்றது.

66) தமிழில் காலத்தினைக்குறிக்கும் மூன்று சொற்களான நேற்று, இன்று, நாளை என இம்மூன்றும் "கு" உருபினை ஏற்றோ ஏற்காமலோ வழங்கப்படும். ஆனால் மலையாளத்தில் இவை மூன்றுமே "கு" உருபினை ஏற்காமல் எழுவாய் வேற்றுமை போன்றே உருபின்றி அமைகின்றன.

67) மொத்த நேரத்தைக் குறிப்பிடும் போது தமிழில் "கு" வேற்றுமையுருபு இடம்பெறுகின்ற வேளை; மலையாளத்தில் "ஏய்க்கு" எனும் ஒரு குறைச்சொல் இடம்பெறுகின்றது.

68) தமிழில் "கு" உருபை ஏற்ற பெயர்ச்சொல்லை அடுத்து உறவு முறைப்பெயரோ அல்லது உறவு எனும் பொருளுடைய பெயரோ வரும்போது; மலையாளத்தில் இவ்விடம் கிழமைப்பொருள் உணர்த்தும் கிழமை வேற்றுமையுருபு "ன்றெ" மட்டுமே வருகின்றது.

69) தமிழில் சார்த்து நிலையினைக் குறிக்கின்ற தொடர்களில் கொடை வேற்றுமையின் "-கு" உருபு வருகின்ற இடத்தில் மலையாளத்தில் உடைமை வேற்றுமை வருகின்றது.

70) தமிழில் சார்த்து நிலையினைக் குறிக்கையில், ஒப்புப்பொருளில்"-கு" உருபும் மலையாளத்தில் ஒப்பீட்டு நோக்கும் சொல்லான "விட"

எனும் பொருள்படும் "காள்" எனும் சொல்லுருபும் இடம்பெறுகின்றன.

71) தமிழில் ஒரு துறைச்சிறப்பினைக் குறிக்க அத்தொடரில் வரும் முதல் பெயர்ச்சொல் "கு" உருபினை ஏற்கின்றது மலையாளத்தில் இதே பொருளில் வழங்கும்வேளை "-கு" உருபுக்குப்பதில் இடவேற்றுமையுருபு "-இல்" வருகின்றது

72) தமிழில் ஒரு விழுக்காட்டினைக் கூறும்போது பேரலகு "-கு" உருபினை ஏற்கின்றது. மலையாளத்தில் உருபுகள் எவையுமே ஏற்காமல் எழுவாய் வேற்றுமையில் அப்பேரலகு அமைகின்றது

73) தமிழில் கொடை வேற்றுமையுருபு வந்து விழுக்காட்டுப்பொருளை வெளிப்படுத்துவது போல் மலையாளத்தில் இடப்பொருள் வேற்றுமையுருபு வந்தும் விழுக்காட்டுப்பொருளை வெளிப்படுத்தும்

74) தமிழில் "-கு" உருபினை ஏற்ற பெயர்ச்சொல்லை அடுத்து ஒரு எண்ணுப்பெயர் வரும்போது 'ஒவ்வொன்றிற்கு இத்தனை' எனும் பொருள் பிறக்கிறது. மலையாளத்தில் "ஓரோருத்தருக்கும்" என்ற சொல்லே பயன்படுத்தப்படுகின்றது.

75) தமிழில் "ஒவ்வொரு" எனும் பொருளில் "-கு" உருபு வருகின்ற இடத்தில் மலையாளத்தில் இடப்பொருள் வேற்றுமை உருபு "-இல்" இப்பொருளில் வருகின்றது.

76) தமிழில் "-கு" உருபு வெளிப்படுத்தும் பொருள் மலையாளத்தில் "இல் நின்னும்" எனப்படும் நீங்கல் வேற்றுமையினைப் பயன்படுத்தி வெளிப்படுத்தப்படுகின்றது.

77) தமிழிலும் மலையாளத்திலும் நீங்கற்பொருள் வேற்றுமையுருபுகள் வரும் முறைகளை ஆராய்ந்தபோது, தமிழின் "இடமிருந்து" உருபினை மலையாள மொழி கீழ்க்கண்ட விதங்களில் வெளிப்படுத்துகின்றது

**[ இடமிருந்து = ன்றெ கையில் நின்னும் ]**

**[ இடமிருந்து = ன்றெ பக்கல் நின்னும் ]**

**[ இடமிருந்து = ன்றெ அடுத்து நின்னும் ]**

78) சில உயிரில்லாப்பெயர்களுடன் தமிழில் "இடமிருந்து" எனும் உருபு வருகின்றது. ஆனால் இதன் மலையாள மொழிபெயர்ப்பு இல் நின்னு" எனும் உருபினை ஏற்று வருகின்றது.

79) தமிழில் அஃறிணை உயிருடைப்பெயர்களோடு "இடமிருந்து" எனும் நீங்கல் வேற்றுமையுருபு வருகின்றது. எனினும்; மலையாளத்தில் "இல் இருந்து" வுக்கு இணையான "இல் நின்னும்" எனும் உருபே வந்தமைகின்றது.

80) தமிழில் காலம் விட்டுக் காலம் நீங்குதலை வெளிப்படுத்த நீங்கல் வேற்றுமையுருபு "இல் இருந்து" இடம்பெறுகின்ற இடத்தில் மலையாளத்தில் "முதல்" எனும் சொல்லுருபு இடம்பெறுகின்றது

81) தமிழில் காலம் விட்டுக் காலம் நீங்குதலை வெளிப்படுத்த "இல் இருந்து" உருபு பயன்படுகின்ற இடத்தில் மலையாளத்தில் "தொட்டு" எனும் சொல்லுருபு வருகின்றது

82) தற்காலத் தமிழில் நீங்கற்பொருளைக் குறிக்க "பிடித்து" எனும் சொல்லுருபு வருகின்றது. மலையாளத்தில் இதற்கிணையான தொடர் "முதல்" எனும் சொல்லுருபையே எடுத்து வருகின்றது.

83) தமிழிலும் மலையாளத்திலும் பெயர்ச்சொற்கள் உடைமை வேற்றுமையை ஏற்கும் போது ஏற்படும் வேறுபாடுகளாவன, தமிழில் கிழமை வேற்றுமை உருபு இடம் பெறாமலேயே கிழமைப்பொருள் வெளிப்படுத்தப்படுகின்றது. ஆனால் மலையாளத்தில் கட்டாயம் இவ்வேற்றுமை அமையும் இடங்களும் உண்டு. அதாவது தமிழில் சில தொடர்கள் கிழமை வேற்றுமையின்றி கிழமைப்பொருள் தர வல்லன. ஆனால் மலையாளத்தில் சில தொடர்களால் கிழமை வேற்றுமையின்றி அப்பொருள் தர இயலாது.

84) தமிழில் தன்மை முன்னிலை போன்ற மாற்றுப்பெயர்களின் வேற்றுமை ஏற்கும் வடிவங்கள் வேறு பெயர்களுடன் இணைந்து உடைமைப்பொருளை வெளிப்படுத்தும். மலையாளத்தில் இவை உடைமை வேற்றுமை உருபினை ஏற்றே உடைமைப் பொருளை வெளிப்படுத்துகின்றன.

[ என் = என்றெ ]

[ நம் = நம்முடெ ]

[ எங்கள் = ஞங்ஙளுடெ ]

[ உம் = நிங்ஙளுடெ ]

[ உனது = நின்றெ ]

[ உங்கள் = தாங்களுடெ ]

85) தமிழ் - மலையாள மொழிகளில் இடப்பொருள் வேற்றுமை அமையும்போது ஏற்படும் வேறுபாடுகளாவன, இடவேற்றுமையினை ஏற்று, காலப்பொருளை வெளிப்படுத்தும் சூழலில் தமிழில் தொழில் நிகழும் காலத்தினைக் குறிக்க "-இல்" உருபு பயன்படுகின்றது. அதே தொடரின் மலையாள மொழிபெயர்ப்பில் "-இல்" உருபுக்குப்பதில் "கொண்டு" எனும் சொல்லுருபு அப்பொருளைத் தெரிவிக்க பயன்படுகின்றது.

86) தமிழில் "-இல்" உருபு இடம்பெற்று இடப்பொருளை வெளிப்படுத்துகின்ற இடத்தில்; மலையாளத்தில் "வழியாக" எனும் பொருள் தரும் "ஊடே" எனும் சொல்லுருபு இடம்பெறுகின்றது.

87) அஃறிணை உயிருடைப்பெயர்கள் இடப்பொருளை உணர்த்த "இடம்" என்னும் உருபினைப் பயன்படுத்துகின்றது. மலையாளம் இவ்விடத்தில் "-ஓடு" எனும் உருபினை ஏற்கின்றது.

88) தமிழில், உயர்திணை ஒருமைப்பெயர்களுடன் "-இடம்" உருபு வருகையில் மலையாளத்தில் "-உடெ" எனும் கிழமைப் பொருள் உருபும் "அடுத்து" எனும் சொல்லுருபும் சேர்ந்து வந்து "இடம்" என்ற இடப்பொருள் உருபின் பொருளை வெளிப்படுத்துகின்றது.

89) தமிழில் உயர்திணைப்பன்மைப்பெயர்கள் இடப்பொருளை வெளிப்படுத்த "இடம்" உருபினைப் பயன்படுத்துகின்றன. ஆனால் மலையாளத்தில் இச்சூழலில் இடப்பொருளானது, "-ஓடு" எனும் உடனிகழ்ச்சிவேற்றுமை உருபின் மூலம் வெளிப்படுத்தப்படுகின்றது.

90) தற்காலத் தமிழில் "இடத்தில்" எனும் சொல்வடிவம் இடப்பொருளை உணர்த்த மிகவும் பயன்படுத்தப்படுகின்றது. ஆனால் மலையாளத்தில் "இடத்தில்" எனும் வடிவிற்குப்பதிலாக, உடைமை வேற்றுமை உருபான "-ன்றெ" வும் "பக்கல்" ,

"கையில்" , "அடுத்து" எனும் சொல்வடிவங்களும் பயன்பாட்டில் உள்ளன.

91) தமிழ் - மலையாள வினைச்சொற்களில் இதுவரைக் கண்டுபிடிக்கப்பட்ட வேறுபாடுகளாவன, தமிழில் எதிர்மறை ஏவல் ஒட்டு "-ஆதே" மூலம் எதிர்மறைப்பொருள் சுட்டப்படுகின்றது. மலையாளத்தில் "அருது" எனும் முழுச்சொல் இடம்பெற்று, எதிர்மறையினை உணர்த்த வருகின்றது .

92) தமிழில் உடன்பாட்டு ஏவற்பன்மை "உங்கள்" எனும் பன்மை ஒட்டினை வினையடியுடன் சேர்ப்பதன் மூலம் உருவாகும். மலையாளத்தில் ஏவற்பன்மை வினையடியையும் "-ஊ" என்னும் ஒட்டையும் சேர்ப்பதன் மூலம் உருவாகின்றது.

93) உடன்பாட்டு ஏவலில் மரியாதைச் சுட்ட தமிழ், முன்னிலை வினையடியுடன் "உங்கள்" எனும் சொல்லை, ஏற்கும். மலையாளம் "ஊ" எனும் ஒட்டையே முன்னிலையில் மரியாதை ஏவலில் ஏற்கும்.

94) தமிழில் எதிர்மறை ஏவற்பன்மை அமைப்பு வினையடியுடன் எதிர்மறை ஒட்டு "-ஆத்" தையும், முன்னிலைகாட்டும் உருபு ஈர்கள்" ஐயும் கொண்டு அமைகின்றது. மலையாளத்தில் "அருது"

எனும் எதிர்மறை சொல் மட்டுமே வினையடியுடன் இணைக்கப்பட்டு, எதிர்மறை உணர்த்தப்படுகின்றது.

95) தமிழில் "-ஈர்கள்" என வரும் முன்னிலைப்பன்மை அமைப்பு, மலையாளத்தில் பெரும்பாலும் முன்னிலைப்பதிலிடு பெயரின் மூலமே வெளிப்படுத்தப்படுகின்றது.

96) தமிழிலும் மலையாளத்திலும் மரியாதை ஒருமைக்கும் [ வினையடி + உங்கள் ] என்ற அமைப்பே பயன்படுகின்றது. தற்கால மலையாளத்தில் பெரும்பாலும் முன்னிலைப் பதிலிடுபெயருக்குப் பதில் அப்பெயரையே பயன்படுத்தும் முறையே வழக்கமாக உள்ளது.

97) தமிழில் விருப்பேவலைத் தெரிவிக்க "ஏன்" என்னும் உருபு சேர்க்கப்படுகின்ற வேளையில் மலையாளத்தில் "ஒ" எனும் ஒட்டு சேர்க்கப்படுகிறது. விருப்பேவல் வெளிப்படுத்தும் முறையில் இருமொழிகளும் இவ்விடம் வேறுபடுகின்றது.

98) தமிழில் ஏவலொருமைக்கும் மரியதை ஒருமைக்கும் ஒருவித அமைப்பும், பன்மைக்கும் மற்றுமொரு அமைப்பு என, இருவேறு அமைப்புகள் உள்ளன. ஆனால் மலையாளத்தில் ஒரேயொரு அமைப்பே காணப்படுகின்றது.

99) தமிழில் வினை முற்றிலிருந்தே எழுவாயின் திணை, பால், எண் மற்றும் இடத்தினை அறிந்துகொள்ள முடிகின்றது மலையாளத்தில் அவ்விடம் இடம்பெறுகின்ற எழுவாயின் பதிலிடுபெயர் வினைமுற்றின் முன்பு சேர்க்கப்படுகின்றது எனவே மலையாளத்தைப் பொறுத்தவரையிலும் அப்பதிலிடுபெயரிலிருந்தே எழுவாயின் திணை, பால், எண் மற்றும் இடத்தினை அறிந்துகொள்ள இயல்கின்றது இரு மொழிகளுக்கும் இடையே அமையும் சிறப்பான வேறுபாடாக இது அமைகின்றது

100) தமிழில் இறந்தகால வினைமுற்றுகள் பத்து வெவ்வேறு வித பாலறிகிளவிகளைப்பெற்றே அமைகின்றது ஆனால் மலையாளத்தில் இறந்தகாலத்திற்கு எவ்வித பாலறிகிளவிகளும் வருவதில்லை இது தமிழ் மற்றும் இறந்தகால உடன்பாட்டு வினைமுற்றுக்களில் அமையும் சிறப்பான வேறுபாடாகக் கருதப்படுகின்றது

101) தமிழில் 8 வித பாலறிகிளவிகள் எதிர்கால உடன்பாட்டு வினையினைக் குறிக்கப் பயன்படுகின்றன மேலும் இரண்டு அஃறிணைப் பெயர்களுக்கும் "வரும்' என்ற ஒரேயொரு முறையே உள்ளது மலையாளத்தில் அனைத்துப்பெயர்களுக்கும் "வரும்" என்ற

ஒரேயொரு முறையே அமைகின்றது இருமொழிகளுக்கும் இடையே அமையும் குறிப்பிடத்தக்க வேறுபாடாக இது அமைகின்றது.

102) தமிழில் இறந்தகாலத்தை எதிர்மறையில் சுட்டுகையில் வினையெச்சத்துடன் "இல்லை" எனும் சொல் சேர்கிறது ஆனால் மலையாளத்தில் வினைமுற்றுடனேயே “இல்லா" எனும் சொல் சேர்ந்து எதிர்மறை சுட்டுகிறது

103) தமிழில் எதிர்கால எதிர்மறைச் செயல்வினைமுற்றுக்கள் உயர்திணையில் “மாட்டு" எனும் சொல்லையும் அஃறிணையில் “ஆது" எனும் ஒட்டையும் எடுத்து வந்து எதிர்மறைகளைக் காண்பிக்கின்றன. ஆனால் மலையாளத்தில் இரு திணைகளுக்கும் “இல்லா" எனும் ஒரு ஒட்டால் மட்டுமே எதிர்மறையானது சுட்டப்படுகின்றது.

104) தமிழில் வினையெச்சத்தோடு எதிர்மறை காட்டும் உருபுகள் சேர்ந்து எதிர்கால எதிர்மறை வினைமுற்றுக்களை உருவாக்கும் மலையாளத்தில் வினையெச்சம் அல்லது வினையடியுடன் எதிர்மறை காட்டும் உருபு சேர்ந்து எதிர்கால எதிர்மறை வினைமுற்றுக்கள் பெறப்படுகின்றன

105) தமிழில் நிகழ்கால எதிர்மறை செயல் வினைமுற்று வடிவமும் இறந்த கால எதிர்மறை செயல் வினைமுற்று

வடிவமும் ஒரே போல் அமைகின்றது. சான்று: படிக்கவில்லை. ஆனால் மலையாளத்தில் இறந்தகால எதிர்மறை செயல் வினைமுற்றுக்களும் நிகழ்கால எதிர்மறை செயல் வினைமுற்றுக்களும் வெவ்வேறாக அமைகின்றன. சான்று: படிச்சில்லா, படிக்குன்னில்லா. இங்கே தமிழுக்கும் மலையாளத்துக்குமிடையேயான வேறுபாடு அமைந்துள்ளதனை அறியலாம்.

106) தமிழில் உயர்திணைப்பெயர்களுக்கு "மாட்டேன்" எனும் எதிர்மறை சுட்டும் சொல்லும் அஃறிணைக்கு "ஆது" எனும் எதிர்மறை உருபும் உள்ளன. மலையாளத்தில் இவ்விரு திணைப்பெயர்களுக்கும் ஒரே மாதிரியான வடிவங்களே உள்ளன.

சான்று: அது / அவன் நடக்கில்லா.

அது / அவன் நடக்குகயில்லா.

107) தமிழில் உயர்திணை மற்றும் அஃறிணைப்பெயர்களுக்கு [ வினையெச்சம் + மாட்டு + பாலறிகிளவிகள் ] என வந்து எதிர்மறை சுட்டப்படும். மலையாளத்தில் இவ்விரு திணைப்பெயர்களுமே [வினையடி + (உக) + இல்லா ] என வந்து எதிர்மறை காட்டப்படுகின்றன.

108) தமிழில் வியங்கோள் வினை விகுதி "அட்டும்" ஆகும். மலையாளத்தில் இது "அட்டே" ஆகும்

109) தமிழில் செயவென் எச்ச விகுதி "-அ" மலையாளத்தில் செயவென் எச்ச விகுதி விகுதி "-ஆன்" மற்றும் "-உவான்"

110) தமிழில் எதிர்மறை வினையெச்சம்; வினையடியுடன் "-ஆமல்" மற்றும் "-ஆது" சேர்ப்பதன் மூலம் எதிர்மறை வினையெச்சம் பெறப்படுகிறது மலையாளத்தில் வினையடியுடன் எதிர்மறை சுட்டும் உருபு "-ஆதே" யைச் சேர்ப்பதன் மூலம் பெறப்படுகிறது.

111) தமிழில் "-ஆல்" எனும் ஒரு நிபந்தனை எச்ச உருபு மட்டுமே உள்ளது. மலையாளத்தில் "-ஆல்" எனும் உருபும், "எங்கில்" என்னும் சொல்லும் உள்ளது

112) தற்காலத் தமிழில் வினையடியுடன் எதிர்மறை உருபான "-ஆ" வையும், "விட்டால்" எனும் சொல்லையும் சேர்ப்பதன் மூலம் எதிர்மறை நிபந்தனை எச்சவினை தோன்றும். மலையாளத்தில் எதிர்மறை நிபந்தனை எச்சமானது வினையடியுடன் "-இல்" எனும் எதிர்மறை ஒட்டையும் "எங்கில்" எனும் நிபந்தனை வெளிப்படுத்தும் உருபனையும் எடுத்து வரும்.

113) தமிழில் எதிர்மறைப் பெயரெச்ச வடிவங்கள் வினையடியுடன் "-ஆத்" எனும் எதிர்மறை சுட்டும் உருபையும், "-அ" எனும் பெயரெச்ச ஒட்டையும் சேர்ப்பதன் மூலம் தோன்றும். மலையாளத்தில் எதிர்மறைப் பெயரெச்ச வடிவங்கள் வினையடியுடன் "-ஆத்த" எனும் உருபினைச் சேர்ப்பதன் மூலம் உருவாக்கப்படுகின்றன.

114) தமிழிலும் மலையாளத்திலும் பெயரடையடைகளில் காணப்படும் வேறுபாடுகளாவன, தற்காலத் தமிழில் ஆக்கப்பெயரடை விகுதியான "-ஆன" என்பது பெருமளவில் பயன்படுத்தப்படுகின்றது. மலையாளத்தில் இதற்குப்பதிலாக "உள்ள" எனும் விகுதியே அதிகமாகப் பயன்படுத்தப்படுகிறது.

[ அழகான = அழகுள்ள ]

[ நீளமான = நீளமுள்ள ]

[ உயரமான = உயரமுள்ள ]

[ நீளமான = நீளமுள்ள ]

[ அறிவான = அறிவுள்ள ]

115) "-ஆன" உருபு சேர்ந்த ஆக்கப் பெயரடைகளை மலையாளத்தில் மொழிபெயர்க்கையில் தமிழுக்கிணையான பெயரெச்சங்கள் இடம்பெற்று, பெயரடைகள் உருவாகின்றன.

சான்று:

| | | |
|---|---|---|
| கறுப்பான | - | கறுத்த |
| வெண்மையான | - | வெளுத்த |

116) தமிழின் "-ஆன" விகுதிப்பெயரடைகள் மலையாளத்தின் ஆக்கப் பெயரடை விகுதிகள் எதையும் ஏற்காமல் முற்றிலும் வேறுபட்டு, "-அன்" விகுதியினை ஏற்றும் வரும்.

117) தமிழில் பெயர்ச்சொற்களே எவ்வித மாற்றமும் இன்றி, பெயரடையாகப் பயன்படுத்தப்படுகின்றது. இவை மலையாளத்தில் மொழிபெயர்க்கப்படும் போது, அஃறிணைப் பெயர்கள் "-அன்" விகுதியோடு பயன்படுத்தப்படுகின்றன.

118) தமிழில் பெயர்கள் பெயரடையாக வருகின்ற வேளை மலையாளத்தில் பெயரெச்சம் பெயரடைப்பொருளில் வருகின்றது.

119) தமிழிலும் மலையாளத்திலும் வினையடைகளில் காணப்படும் வேறுபாடுகளாவன, தமிழின் தனி வினையடையாக வரும் "நன்கு" மலையாளத்தில் வினையடை விகுதியான "-ஆயி" மற்றும் "ஆயிட்டு" என்பவைகளைப் பெற்று, நன்னாயி, நன்னாயிட்டு எனும் கூட்டு வினையடையாக வருகின்றது.

120) தமிழில் "-ஆக" , "-ஆயி" எனும் வினையாக்க விகுதிகள் வருமிடத்தில் மலையாளத்தில் "-ஆயி" எனும் ஒரு விகுதி வடிவம் மட்டுமே வருகின்றது.

121) தமிழில் வேகமாக எனும் கூட்டு வினையடை "-ஆக" எனும் வினையடை விகுதியினைக் பெற்று வருகின்ற இடத்தில் மலையாளத்தில் வேகத்தில் என்னும் வினையடை, இடப்பொருள் வேற்றுமை "-இல்" ஐ எடுத்து வினையடைப்பொருளை உணர்த்துகின்றது.

122) தமிழில் "-ஆக" எனும் வினையடைவிகுதி வினையடைப்பொருளில் வருமிடத்தில் மலையாளத்தில் "-ஓடெ" எனும் உடனிகழ்ச்சி வேற்றுமை உருபு வினையடைப்பொருளில் வருகின்றது.

123) ஏராளமாக எனும் கூட்டு வினையடை தமிழில் வரும்போது மலையாளத்தில் அதற்கிணையான தாராளம் என்ற தனி வினையடையே பெரும்பாலும் இடம்பெறுகின்றது.

124) தமிழில் அடுக்குச்சொல்லும் வினையாக்க விகுதியும் வந்து வினையடைப்பொருளை வெளிப்படுத்துமிடம் மலையாளத்தில் அடுக்குச்சொல் மட்டும் வந்து வினையடைப்பொருளை வெளிப்படுத்துகின்றது.

125) தமிழில் வினையெச்சம் முறை வினையடைப்பொருளில் வருகின்ற இடத்தில் மலையாளத்தில் பெயர்ச்சொல் இடப்பொருள் வேற்றுமையுடன் இணைந்து வந்து முறை வினையடையாக செயல்படுகின்றது.

**மேலாய்வுக்களங்கள்**

- ✓ தற்காலத் தமிழிலும் தற்கால மலையாளத்திலும் அமைந்துள்ள அனைத்து உருபன்களையும் இயந்திர மொழிபெயர்ப்புக்குத் தகுந்த முறையில் கண்டறியலாம். இவ்வாய்வு இயந்திர மொழிபெயர்ப்பியை எளிதாக உருவாக்க பயனுள்ளதாக அமையும்.
- ✓ ஒரு குறிப்பிட்ட பொருண்மையில் அமைந்த் தற்காலத் தமிழ் - மலையாள இணைத்தரவுகளை உருவாக்கலாம். இது புள்ளியியல் அடிப்படையிலான இயந்திர மொழிபெயர்ப்பியை உருவாக்க பயன்படும்.
- ✓ தற்காலத் தமிழ் - மலையாளச் சொற்களைச் சேகரித்து அகராதி வடிவில் தொகுக்கலாம். இது இயந்திர மொழிபெயர்ப்புக்குரிய அகராதியினை வடிவமைக்க உதவிடும்.
- ✓ தமிழிலும் மலையாளத்திலும் சொல் வலையினை உருவாக்கலாம். இது இயந்திர மொழிபெயர்ப்பின்போது மொழிபெயர்ப்பியானது, சூழல் அறிந்து மொழிபெயர்க்க உதவிடும்.

## துணைநூல் பட்டியல்


1. பரமசிவம்.கு (1983) இக்காலத் தமிழ் மரபு, அன்னம் பிரைவேட் லிமிடெட், சிவகங்கை.
2. அகத்தியலிங்கம்.ச (2002) தமிழ்மொழி அமைப்பியல், மெய்யப்பன் தமிழாய்வகம், சிதம்பரம்.
3. மு.இராமலிங்கம், பகீரதன் (1994) தொல்காப்பியம்,எழுத்துப்படலம், சொல்படலம், இராமலிங்கர் பணிமனை வெளியீடு.
4. இரா.சீனிவாசன் (2000) தமிழ் இலக்கண மரபுகள், தி பார்க்கர், சென்னை
5. கோபிக்குட்டன் (2002) மலயாள வியாகரணம், கரண்ட் புக்ஸ், கொல்லம்.
6. . சரண்யா ஆர், முபாரக் அலி தமிழ் உருபனியல், அண்ணாமலைப்பல்கலைக்கழகம்.
7. காசிராசன்.இரா. (1987) இலக்கண ஒளி - சொல், மதி பதிப்பகம், மதுரை-10

8. சண்முகதாஸ்.அ (1997) தமிழ்மொழி இலக்கண இயல்புகள், பூபாலசிங்கம் புத்தகசாலை, கொழும்பு.

9. கால்டுவெல் (2004) திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்-மொழிபெயர்ப்பு, கோவிந்தன்.கா, ரத்னம்.க. முல்லை நிலையம், சென்னை

10. மருதூர் அரங்கராசன் (2000) தமிழில் வேற்றுமைகள், பாலமுருகன் பதிப்பகம், அரியலூர்.

11. சிவலிங்கனார். ஆ (1983) தொல்காப்பியம் உரைவளம், சொல்லதிகாரம் - வேற்றுமையியல்

12. சிவலிங்கனார் (1984) தொல்காப்பியம், சொல் (உரைவளம்), வேற்றுமை மயங்கியல்.

13. தமிழ்த்துறை ஆசிரியர்கள்(1978) தொல்காப்பியச் சிந்தனைகள், அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

14. சுப்பிரமணியன்.ச. வே. (2005) தொல்காப்பியம் தெளிவுரை, மணிவாசகர் பதிப்பகம், சென்னை.

15. முனை.ச.கிருட்டினமூர்த்தி (2008) அறிவியல் தமிழ் வளர்ச்சிப் போக்குகள், அனைத்திந்திய அறிவியல்த் தமிழ்க்கழகம் தஞ்சாவூர்.

16. ஜான் சாமுவேல். ஜி (2008) திராவிட மொழிகளின் ஒப்பாய்வு (ஓர் அறிமுகம்), முல்லை நிலையம், சென்னை.

17. வரதராசன். மு (2010) மொழிநூல், பாரி நிலையம், சென்னை.

18. சீனிவாசன். ரா (2009) மொழியியல், பாரி நிலையம், சென்னை.

19. பொற்கோ (2002) இக்காலத் தமிழ் இலக்கணம், பூம்பொழில் வெளியீடு, சென்னை.

20. இசுராயேல்,எம் வினைச்சொல் இலக்கணம், அமைப்பு, வகைகள்

21. இளையபெருமாள். மா (1977) கேரள பாணினியம், மலயாள இலக்கணம், தமிழ்மொழிபெயர்ப்பு.

22. எம்.ஆர். அடைக்கல சாமி (1960) தமிழ் இலக்கிய வரலாறு, இராசி பதிப்பகம், சென்னை.

23. முனை.பாக்கியமேரி (2008) வகைமை நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, பாவை பிரிண்டர்ஸ், சென்னை.

24. டாக்டர்.சு.சக்திவேல் (1984) தமிழ் மொழி வரலாறு, மணிவாசகர் பதிப்பகம், சென்னை.

25. முனை.சண்முகம்.செ.வை (2005) மொழி ஆய்வு, மெய்யப்பன் பதிப்பகம், சென்னை.

26. ப.குமார் (2007) மொழிபெயர்ப்பில் சிக்கல்கள், சாரதா பதிப்பகம்,சென்னை.

27. முனை. சண்முகம்.செ.வை (1984) சொல்லிலக்கணக் கோட்பாடு - I, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சிதம்பரம்.

28. முனை.சண்முகம்.செ.வை (1986) சொல்லிலக்கணக் கோட்பாடு - II, அண்ணாமலைப்பல்கலைக்கழகம், சிதம்பரம்.

29. புலவர்.சோம இளவரசு எம்.ஏ.(2004) நன்னூல்.சொல். மெய்யப்பன் பதிப்பகம், சென்னை.

30. சண்முக வேலாயுதம்.சு.( 2008 ) மொழிபெயர்ப்பியல், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

31. சீனிவாசன். ரா (2010) மொழியியல்,சாரதா பதிப்பகம், சென்னை.

32. சேதுமணிமணியன் (1990) மொழிபெயர்ப்பியல் கோட்பாடுகளும் உத்திகளும், செண்பகம் வெளியீடு, மதுரை.

33. கருணாகரன்.கி. & ஜெயா.வ.(2007) மொழியியல்,மெய்யப்பன் பதிப்பகம், சென்னை.

34. சுப்பிரமணியம்.ச.வே. (1971) இலக்கணத்தொகை - சொல்.

35. சிங்காரவேலன்.சொ. (1988) தொல்காப்பியம் - எளிய உரை.

36. மருதூர் அரங்கராசன் (2000) தமிழில் வேற்றுமைகள், பாலமுருகன் பதிப்பகம், அரியலூர்.

37. இராசாராம்.சு. (2010) இலக்கணவியல்- மீக்கோட்பாடும் கோட்பாடுகளும், காலச்சுவடு பதிப்பகம், நாகர்கோவில்.

38. முனை. சண்முகம்.செ.வை (2010) கேரள பாணினியம், நோக்கு, சென்னை.

39. சக்திவேல்.சு, இராஜேந்திரன்.ச (2003) சொற்கள்,மெய்யப்பன் பதிப்பகம், சென்னை.

40. சண்முகம்.சி. (1989) பொருண்மையியல், அண்ணாமலைப்பல்கலைக்கழகம்.

41. முனை. சண்முகம்.செ.வை தொல்காப்பியரின் சொல்லிலக்கணக்கோட்பாடு, அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

42. சடகோபராமானுசாரியார் (1939) நன்னூல் காண்டிகையுரை, ஆர்.ஜி. அச்சுக்கூடம், சென்னை.

43. பட்டாபிராமன்.கா.(2005) மொழிபெயர்ப்புக்கலை, நியூ செஞ்சுரி புக்ஹவுஸ்,சென்னை.

44. சுப்பையாபிள்ளை.கு. (2003) இயற்கை மொழியாய்வு - தமிழ், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

45. கு.மீனாட்சி (1998) பாணினியின் அஷ்டாத்தியாயி (தமிழாக்கம்) உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

46. தெய்வச்சிலையார் உரை(1984). தொல்காப்பியம், சொல்லதிகாரம், தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

## ஆங்கில நூல்கள்


| | |
|---|---|
| 47. Thomas Lehmann (1989) | A Grammar of Modern Tamil Pondicherry Institute of Linguistics and Culture. |
| 48. R.E.Asher and T.C.Kumari (1997) | Malayalam, Routledge, New York. |
| 49. George K.M. (1971) | Malayalam Grammar and Reader, Sahithya Pravarthaka Co-operative Society Ltd, Kottayam. |
| 50. Christa Hawnschild, &Susanne Heizmann ( Ed),(1997) | Machine Translation and Translation Theory, Mouton de Gryter, Newyork. |
| 51. Kothanda Raman.P. (1988) | Tamil Morphemics, Pulamai Publications, Madras. |
| 52. S.V.Subramanian& K.M.Irulappan (1980) | Language and Grammar, I.I.T.S. Publication, Madras. |
| 53. Paul.L.Garvin ( Ed.) (1963) | Natural Language and the Computer Mc Graw-Hill Book Company, London. |
| 54. H.P.Edmondson (Ed.) (1961). | Proceedings of the National Symposium On Machine Translation, Prentice Hall International, Canada. |

55. Christopher Butler (1985) Computer in Linguistics, Basil Blackwell Ltd, U.K.

56. Andrewskutty A.P. (1971) Malayalam -An Intensive Course, The Dravidian Linguistics Association, Trivandrum.

57. Prabhakara Varriar.K.M (1979) Studies in Malayalam Grammar, University of Madras.

58. Radhakrishnan Mallassery (1994) Post Positions in a Dravidian Language, Mittal Publications, New Delhi.

59. Kothandaraman.Pon. (1997) A Grammar of Contemporary Literary Tamil, International School of Tamil Studies, Chennai.

60. Gopinathan Nair. B. (2008) Collected Papers on Malayalam Language and Linguistics, International School of Dravidian Linguistics, Trivandrum.

61. Francis Whyte Ellis Edited Introduction, Puthusserry Ramachandran.(2005) A dissertation on the Malayalam with Language, Dravidian Linguistics Publication, Trivandrum.

62. N.D.Krishnamurthy, Conversational Malayalam –

H.Parameshwaran, U.P.Upadhyaya — A microwave Approach, N.D.K. Institute of Languages, Bangalore.

63. Namboodiri. E.V.N. (2004) — A Brief History of Malayalam Language, University of Kerala.

64. W.J. Hutchins.(1986) — Machine Translation - Past, Present, Future.

65. Arden A.H. (1954) — A Progressive Grammar of Common Tamil, The Christian Literary Society, Madras.

66. S.Agesthialingom & N.Rajasekaran Nair.(1981) — Dravidian Syntax, Annamalai University, Chithambaram.

67. S.Agesthialingom & P.S.Subrahmanyam.(1976) — Dravidian Linguistics-V, Annamalai University, Chithambaram.

68. Gopala Pillai A.R. (1985) — Linguistic Interpretation of Liilathilakam, DLA Publication, Trivandrum.

69. N.Rajasekharan Nair (1990) — Auxiliary Verbs in Malayalam, Annamalai University, Chidhambaram.

70. Narasimha Rao. K.V.V.L.(2005) — Aspects of Translation, CIIL Publishers, Mysore.

71. Vijaya Venu Gopal.G.(1979) — Nominal Composition in Tamil, Madurai Kamaraj University, Madurai.

72. Raveendran.P.N.(1974) — Nominal Composition in Malayalam, Annamalai University, Chidhambaram.

73. Harikumar Bhasi (Editor) ( 1994) — Automatic Translation (Seminar Proceedings ) DLA Publication, Trivandrum.

74. A.R.Raja Raja Varma — Kerala Paniniam, DLA (Translation) Roy. C.J.(1999) Publication,Trivandrum.

75. Israel.M. ( 1973) — The Treatment of Morphology in Tolkappiam, Madurai Kamaraj University.

76. Sreedevi.B. (1991). Syntactic Pattern of Malayalam and Telugu, Vivek Publications, Trivandrum.

77. Sourav Chakraborty (2012) A Contrastive Study of Case in Bengali and Tamil, DLA Publication, Trivandrum.

78. Nigel Fab (1994) Sentence Structure, Routledge Publishers, U.S.A.

79. Robert.D. Van-valan Jr. (2001) An Introduction to Syntax, Cambridge University Press, U.S.A.

80. Victoria Fromkin (1993) An Introduction to Language, Harcourt Brace Jovanovich College Publishers, New York.

81. Arden (1891) Arden's Grammar of Common Tamil.

82. K.N.Ezhuthaccan (1998) The History of the Grammatical Theories in Malayalam, DLA Publication.

## மலையாள நூல்கள்


83. ஆப்ரகாம்.பி.டி. (2012) மலையாள வியாகரணம்-சில வீண்டு விசாரங்ஙள்,தாரதம்ய படன சங்கம், சங்கனாசேரி.

84. குஞ்ஞுன்பிள்ளைஇளங்குமரன்(1985) லீலாதிலகம் மணிப்பிரவாள லக்ஷணம்.

85. டாக்.கெ.ரத்னம்மா (2003) மலையாள பாஷா சரித்ரம்- எழுத்தச்சன் வரெ. கேரள பாஷா இன்ஸ்டிடியூட், திருவனந்தபுரம்.

86. திருநல்லூர் கருணாகரன் (1965) பாரத் புக்ஸ், கோட்டயம்.

87. சி.கே.சந்திரசேகரன் நாயர் (1968) மலையாளத்தின்றெ வளர்ச்ச, சில வசங்ஙள் நேஷனல் புக்ஸ்டால், கோட்டயம்.

88. சி.எல்.ஆண்டனி, (1969). பாஷா படனங்ஙள், நேஷனல் புக்ஸ்டால், கோட்டயம்.

89. சி.வி.வாசுதேவ பட்டதிரி(1983) நல்ல் மலையாளம், நேஷனல் புக்ஸ்டால், கோட்டயம்.

90. ரவ.ஜோர்ஜ் மாத்தன் கீ வர்கீஸ்(1862)மலயாழ்மயுடெ வியாகரணம்.
சி.எம்.பிரஸ், கோட்டயம்.

91. என்.என்.மூஸ்த (1984) வியாகரண விவேகம், நேஷனல் புக்ஸ்டால், கோட்டயம்.

92. பி.மீராகுட்டி(1982) கேரளபாணினியம், சில அனுபந்த சிந்தனைகள், நேஷனல் புக்ஸ்டால், கோட்டயம்.

93. ஜோன் குன்னப்பள்ளி (1976) சப்த சௌபகம், மலையாள வியாகரணம், பொந்திபிக்கல் இன்ஸ்டிடியூட், பப்ளிகேஷன்ஸ், ஆலுவா.

94. டாக்.எஸ்.வி. வேணுகோபாலன் நாயர் (எடிட்டர்). மலையாள பாஷா சரித்ரம் மாளும்பன் பப்ளிகேஷன்ஸ், திருவனந்தபுரம்.

# ஆய்வேடுகள்


1. P.V.S. Avinesh (2010) — Transfer Grammar Engine and Automatic Learning of Reorder Rules in Machine Translation, Master of Computer Science Thesis , IIIT-Hyderabad.
2. சுபஸ்ரீ — இயந்திர மொழிபெயர்ப்பு, முன்முனைவர் பட்ட ஆய்வேடு, தமிழ்ப் பல்கலைக்கழகம்.
3. Manoharan. N (2009) — Globalization and Language Planning, University of Madras.
4. Asha Rajan (2005) — Noun Morphology of Malayalam, M.Phil Thesis, University of Kerala.
5. Gopinathan.V.P. ( 1983) — Case System in Malayalam, Annamalai University, Chidambaram.
6. Kunjamma.S. (1986) — Syntactic Analysis of the Muslim Dialect of Vizhinjam, University of Kerala.

7. Pushpavalli.K.(1973) Contrastive Study of Tamil and Malayalam, Annamalai University.

8. Biji.M. ( 2010) Gender Number in Malayalam, M.Phil Thesis, University of Kerala.

9. Santhosh Kumar S.V.(2011) A Comparative Study of Tamil-Malayalam Peasant Folk Literature with Special Reference to Krishi Geetha, University of Kerala.

## அகராதிகள், நிகண்டுகள் மற்றும் களஞ்சியங்கள்


| | |
|---|---|
| 1. N. Aruna Bharathi | Glossary of Linguistics, English, Tamil. |
| 2. Rangan.K & G.Chandra Sekaran(1994) | A Glossary of Standardized Technical Terms in Linguistics, English – Tamil, Tamil University, Thanjavur. |
| 3. அண்ணா பல்கலைக்கழகம், சென்னை.(1998) | கணிப்பொறி மின் கலைச்சொல் அகராதி,வளர்தமிழ் மன்றம் |
| 4. M.E.Manickavasagam, Editor | Dravidian Encyclopaedia, Vol III, Language and Literature,The International School of Dravidian Linguistics, Trivandrum. |
| 5. கிரியா வெளியீடு | கிரியாவின் தற்காலத் தமிழ் அகராதி |

# ஆய்வுக்கட்டுரை வெளியீடுகள்

1. Presented a paper on **IYANDHIRA MOZHIPEYARPU (MACHINE TRANSLATION)** conducted by 'All India Scientific Tamil Association, Thanjavur on June 6th, 7th 2008 at Kongunadu Arts & Science College Coimbatore, Tamilnadu.

2. Presented a paper on **DIVERGENCES BETWEEN PRONOMINAL CONSTRUCTIONS IN TAMIL AND MALAYALAM FOR MACHINE TRANSLATION** conducted by 'All India Scientific Tamil Association, Thanjavur on October 27th, 28th 2012 at Tamil University Thanjavur, Tamilnadu.

3. Presented a paper on **GENDER DISTINCTION IN TAMIL AND MALAYALAM FOR MACHINE TRANSLATION** in the Three Day National Seminar on contemporary Literature jointly conducted by Departments of Malayalam, Tamil and Hindi, University of Kerala held on April 10th To 11th 2012 at University of Kerala, Karyavattom , Thiruvanathapuram.

4. Presented a paper on **MACHINE TRANSLATION BETWEEN TAMIL AND MALAYALAM** in the Two day National Seminar on Relevance of Malayalam in the field of Information Technology held on November 1st and 2nd 2012 at Department of linguistics, University of Kerala, Karyavattom.

5. Presented a paper on **TRANSLATION DIFFERENCES IN THE CASE SYSTEM OF TAMIL AND MALAYALAM FOR MACHINE TRANSLATION** conducted by 40th All India Conference of Dravidian Linguists on June 18th To

20th 2012 at Centre for Applied Linguistics and Translation Studies, University of Hyderabad, Hyderabad.

6. Presented a paper on **CASES IN TAMIL** in the three days International Seminar on Contemporary Literary Theories and its Impact on Tamil – Malayalam Modern Literature on March 20th To 22nd 2013 at Department of Tamil, University of Kerala, Kariavattom.

7. Presented a paper on **ACCUSATIVE CASE IN TAMIL AND MALAYALAM - DIFFERENCES FROM MACHINE TRANSLATION RESPECTIVE** conducted by Department of Linguistics, University of Kerala and Central Institute of Indian Languages (CIIL) Mysore on May 27th To 29th 2013 at Department of Linguistics, University of Kerala, Karyavattom Campus, Thiruvanandhapuram, Kerala.

8. Presented paper on **WIKI TECHNOLOGY AND TAMIL LANGUAGE** on August 2011 in the Three day International Conference on Innovative Thoughts – Education, Management, Arts, Science, Linguistics (Teaching & Learning) Organized by the Department of Indian Studies Faculty of Arts and Sciences, University Malaya, Kuala Lumpur, Malaysia.

## பயன்பட்ட கட்டுரைகள்


| எண் | ஆசிரியர் | கட்டுரைத் தலைப்பு |
|---|---|---|
| 1. | Salil Badodekar<br>IIT- Mumbai | Translation Resources, Services and Tools for Indian Languages |
| 2 | Dr. KC Chellamuthu<br>San Jose, CA, USA. | Russian to Tamil Machine Translation System at Tamil University, |
| 3 | Durgesh Rao,<br>National Centre for Software Technology Mumbai | Machine Translation in India: A Brief Survey |
| 4 | R.M.K Sinha,<br>IIT- Kanpur | Machine Translation: An Indian Perspective |
| 5 | Sudip Naskar<br>Sivaji Bandyopadhyay<br>Jadavpur University | Use of Machine Translation in India: Current Status. |
| 6 | Sivaji Bandyopadhyay,<br>Jodpur University | Machine Translation: Technologies and Resources. |
| 7 | Peter F. Brown,<br>et.al.IBM, New York | A Statistical Approach to Machine Translation |
| 8 | Girish Nath Jha,<br>JNU, New Delhi | The TDIL program and the Indian Language Corpora Initiative (ILCI) |

| | | |
|---|---|---|
| 9 | R. Mahesh K. Sinha<br>& Anil Thakur<br>IIT- Kanpur | Translation Divergence in<br>English-Hindi MT |
| 10 | R.M.K. Sinha,<br>IIT-Kanpur. | Machine Translation:The<br>Indian Context. |
| 11 | W. John Hutchins.<br>University of East.<br>Angelia, Norwich. | Recent developmentsin Machine<br>Translation a review of the last five<br>years. |
| 12 | Vineet Yadav,<br>Anuroop Sriram,<br>Hemansagar and Sriram<br>Language Technologies<br>Research Centre, III-T<br>Hyderabad. | Inducing Transfer Grammar From<br>Word Aligned Corpus |
| 13 | Mahidas Bhattacharya<br>International School of<br>Dravidian Linguistics,<br>Trivandrum. | Introduction to Computational<br>Linguistics, Class notes. |
| 14. | Jisha.P.Jeyan, Rajeev.R.R<br>Morphological & Dr.S.Rajendran,<br>International Journal of<br>Computer Applications,<br>2011. | Morphological Analyzer and<br>Generator for Malayalam |
| 15. | Chris Callison-Burch,<br>David Talbot &<br>Miles Osborne,<br>University of Edinburgh. | Statistical Machine Translation with<br>Word- and Sentence- Aligned<br>Parallel Corpora. |

| | | |
|---|---|---|
| 16. | Durgesh D Rao,<br>National Centre for<br>Software Technology,<br>Mumbai. | Machine Translation, A Gentle Introduction |
| 17. | B.Kumara Shanmugam,<br>AU-KBC Research Centre,<br>Madras Institute of Technology,<br>Chennai. | Machine Translation as related to Tamil |
| 18. | Dr. Vasu Renganathan, | An Interactive Approach to Development of English Tamil Machine Translation System on the Web.University of Pennsylvania. |
| 19. | Ruth Kramer,<br>Georgetown University. | Gender in Amharic Nominals. |
| 20. | Parameshwari.K,<br>Uma Maheswar Rao. G.<br>Centre for Applied Linguistics&<br>Translation Studies,<br>University of Hyderabad. | Dative Divergence in Telugu-Tamil Machine Translation |



# A TRANSFER GRAMMAR FOR TAMIL MALAYALAM MACHINE TRANSLATION

*Thesis submitted to the University of Kerala for the award of the Degree of Doctor of Philosophy in Tamil*

**VIJAYA RAJESWARI. S**

DEPARTMENT OF TAMIL
UNIVERSITY OF KERALA, KARIAVATTOM
THIRUVANANTHAPURAM, KERALA - 695 581
INDIA
2014

# தமிழ் மலையாள இயந்திரமொழிபெயர்ப்புக்கு உரிய மொழிமாற்ற இலக்கணம்

முனைவர் பட்டத்திற்காக கேரளப் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பட்ட ஆய்வேடு

**விஜயராஜேஸ்வரி.சா**

தமிழ்த்துறை
**கேரளப்பல்கலைக்கழகம், காரியவட்டம்**
**திருவனந்தபுரம், கேரளம் - 695 581**

**2014**

# ஆய்வு முடிவுரை

தமிழ் மலையாள இயந்திர மொழிபெயர்ப்புக்கு உரிய மொழிமாற்ற இலக்கணம் என்ற தலைப்பில் மேற்கொள்ளப்பட்ட இவ்வாய்வின் மூலம்பெறப்பட்ட முடிவுகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

1) மலையாளத்தில் பொதுப்பால் பன்மை விகுதியாக, "-ங்ஙள்" எனும் மூக்கொலியுடன் அமைந்த விகுதி வழக்கில் உண்டு. ஆனால் தமிழில் இது "-கள்" எனும் அடைப்பொலியில் தொடங்கும் பன்மைப்பெயர் விகுதியாகவே வழக்கில் உள்ளது. "-ங்ஙள்" எனும் விகுதி மலையாளத்திற்கே உரியதாகும். இது தமிழில் இல்லை.
2) தற்காலத் தமிழ் , மலையாள மொழிகளில் பால்காட்டும் சொற்களில் அமைந்துள்ள வேறுபாடுகளாவன; தமிழில் "-அர்" விகுதி மரியாதையினைச் சுட்ட உயர்திணை ஒருமை ஆண்பாற்பெயர்கள், பெண்பாற்பெயர்களில் வழங்குகின்றது. ஆனால் தற்கால மலையாளத்தில் இவ்விகுதி மரியாதையினைக் குறிக்க வருவதில்லை.
3) "-கள்" விகுதிபெற்ற உயர்திணைப் பொதுப்பெயர் விகுதிகள் மலையாளத்தில் "-கள்", "-கார்", "-மார்" என மூன்று விதங்களில்

மாறுகின்றன இவ்விடங்களில், மலையாளத்தில் போன்று "-கார்", எனும் விகுதி தற்காலத் தமிழில் இடம்பெறுவது இல்லை

4) தமிழில் இருந்து மலையாளத்துக்கு மாற்றப்படுகையில் **"-வர்கள்"** விகுதி **"-கள்", "-அர்"** என்று ஒற்றைப்பன்மை விகுதியாக மாறுகிறது "-வர்கள்" எனும் இரட்டைப்பன்மை விகுதி மலையாளத்தில் கிடையாது

5) தமிழின் உயர்திணைப் பொதுப்பால் பன்மை விகுதியான "-ஞர்கள்" எனும் விகுதி மலையாளத்தில் "-மார்" என்று மாறுகிறது. மலையாளத்தில் "-ஞர்கள்" விகுதி இவ்விடம் அமையாது "-மார்" விகுதி தமிழில் இவ்விடம் வருவதில்லை

6) தமிழில் "-ஓர்" எனும் விகுதியும் "-ஓர்கள்" விகுதியும் உயர்திணைப் பொதுப்பால் விகுதிகளாக வருகின்றன இவற்றை மலையாளத்தில் மொழிபெயர்க்கையில், அவை, "-கள்" என்றும் "-அர்" என்றும் மாறுகின்றது மலையாளத்தில் "-ஓர்" விகுதி, மற்றும் "-ஓர்கள்" எனும் இரட்டைப்பன்மை விகுதி அமைவது இல்லை

7) தற்காலத்தமிழில் "-கள்" எனும் பன்மை உருபு பெரும்பான்மை வழக்கு தற்காலமலையாளத்தில் "-மார்" எனும் பன்மை உருபு பெரும்பான்மை வழக்கு.

8) தற்காலத் தமிழில் "-அர்கள்" , "-மார்கள்", "-வர்கள்" "-ஞர்கள்" "-ஓர்கள்" போன்ற இரட்டைப்பன்மை விகுதிகள் பலர்பால் விகுதிகளாக வருகின்றன. ஆனால் தற்கால மலையாளத்தில் இரட்டைப்பன்மை விகுதிகள் வழக்கில் இல்லை.

9) தமிழில் வினைச்சொற்களும் பால் காட்டும் பண்பினை உடையன. ஆனால் மலையாளத்தில் வினைச்சொற்கள் பால் காட்டுவது இல்லை.

10) தமிழில் வினைப்பயனிலை (Verbal Predicate), பெயர்ப்பயனிலை (Nominal Predicate) இயைபு உண்டு. மலையாளத்தில் பெயர்ப்பயனிலை இயைபு மட்டுமே உண்டு.

11) க்ருத் இறுதிச் சொற்களிலும் தத்தித இறுதிச்சொற்களிலும் பாலற்ற சொற்களுக்கு / அஃறிணைச்சொற்களுடன் "அன்" என்ற ஒட்டு சேரும். இவ்வொட்டு வருகையில் அச்சொற்களுக்கு ஆண்பால் விகுதியான "-அன்" வரும். இவ்வகைச் சொற்கள் தமிழில் அருகியே உள்ளன. தற்கால மலையாளத்தில் இவை அதிகம் உள்ளன.

12) தமிழிலும் மலையாளத்திலும் காணப்படும் எண்களின் வேறுபாடுகளாவன, தமிழில் "-கள்" என முடியும் ஆண்பால் பெயர்கள் மலையாளத்தில் "-மார்" என்று முடிகின்றன.

13) தமிழில் இரட்டைப்பன்மை வரும் இடத்தில் மலையாளத்தில் ஒரு பன்மையுருபே வருகின்றது. அதாவது தமிழில் "-மார்கள்" வரும் இடத்தில் மலையாளத்தில் "-மார்" மட்டுமே வருகின்றது.

14) ஆண்பால் ஒட்டான "-அர்" உடைய சொற்கள் மலையாளத்திற்கு மாற்றப்படுகையில் அம்மொழியின் ஆண்பால் பன்மை ஒட்டான "-மார்" விகுதியினை ஏற்று வருகின்றது.

15) தமிழில் "-அர்கள்" என்று இரட்டைப்பன்மையால் குறிக்கப்படும் ஆண்பால் பெயர்கள் மலையாளத்தில் "-மார்" என்று குறிக்கப்படுகின்றது.

16) பெண்பால் பன்மையுருபு "-கள்" ஏற்ற சொற்கள் மலையாளத்தில் "-மார்" என்று வருகின்றன.

17) தமிழின் பெண்பால்பன்மை உருபு "-மார்கள்" மலையாளத்துக்கு மொழிபெயர்க்கப்படும் போது மலையாளப் பெண்பால் பெயர்களின் "-கள்" உருபு நீக்கப்பட்டு, "-மார்" உருபு மட்டும் பன்மை உருபாகச் சேர்க்கப்படுகிறது.

18) தமிழின் பெண்பன்மையுருபு "-அர்" ; "-கள்" மற்றும் "-மார்" என்று இரு விதங்களில் மாறுகின்றது.

19) தமிழின் இரட்டைப்பெண்பாற்பன்மையுருபு "-அர்கள்" மலையாளத்தில் "-கள்" எனும் ஒற்றைப்பன்மையுருபாக மாறுகின்றது.

20) தமிழின் பெண்பன்மை ஒட்டான "-இர்" மலையாளத்தில் "-கள்" எனும் ஒட்டாக மாறுகின்றது.

21) தமிழில் பெண்பன்மை ஒட்டான "-இர்கள்" மலையாளத்தில் "-கள்" எனும் பெண்பன்மை ஒட்டாக வருகின்றது

22) தற்காலத் தமிழ் , மலையாள மொழிகளில் வழங்கிடும் பதிலிடு பெயர்களில் காணப்படும் வேறுபாடுகளாவன, தமிழில் உளப்பாட்டுத்தன்மைப்பன்மையினை வெளிப்படுத்த 'நாம்' என்ற ஒரு வடிவமே காணப்படுகிறது. ஆனால் மலையாளத்தில்,

1) நாம்

2) நம்மள்

என்ற இரண்டு வடிவங்கள் வழக்கத்தில் உள்ளன. இதில் 'நாம்' என்பது ஒருமைப்பன்மை வடிவம். 'நம்மள்' இரட்டைப்பன்மை வடிவம். தமிழில் 'நாம்' என்ற ஒருமைப்பன்மை வடிவம் மட்டுமே வழங்குகின்றது.

23) தமிழில் முன்னிலை இயல்பு உயர்வு ஒருமை 'நீர்' என்பது ஒருமைப்பன்மை வடிவமாக உள்ளது. மலையாளத்தில் 'நிங்ஙள்' என்ற இரட்டைப்பன்மை வடிவமாக வழங்குகின்றது.

24) தமிழில் மரியாதையை வெளிப்படுத்தும் சிறப்பு உயர்வு ஒருமை வடிமாக 'நீங்கள்' என்ற பதிலிடு பெயர் உள்ளது. ஆனால் மலையாளத்தில் அதற்கு இணையானது போல் தோன்றும் 'நிங்ஙள்' என்ற வடிவம் எப்போதும் சிறந்த மரியாதையை உணர்த்தும் வடிவமாகப் பயன்படுத்தப்படுவது இல்லை. கேரளத்தின் பல இடங்களில் இரு முறைகளிலும் இவ்வாறான இருவேறு பொருள்களில் வழங்கப்படுகின்றது. நிங்ஙள் மரியாதை குறைவாகக் கருதப்படும் வேளைகளில் 'தாங்கள்' என்ற வடிவம் தகுந்த மரியாதை தரும் வடிவமாகப் பயன்படுத்தப்படுகிறது.

25) தற்காலத்தமிழில் 'அவர்கள்' என்ற படர்கை சிறப்பு உயர்வு ஒருமை வடிவம் வழங்கி வருகின்றது. ஆனால் மலையாளத்தில் இது மேடைப்பேச்சுக்களிலும், தொலைக்காட்சி உரையாடல்களிலும் மட்டுமே வழங்கி வருகின்றது.

26) 'இவர்கள்' என்ற வடிவம் தற்கால மலையாளத்தில் இல்லை.

27) தமிழில் படர்கை உயர்வு ஒருமை வடிவமாக 'அவர்' 'இவர்' என்று பயன்படுத்துகிறோம். மலையாளத்தில் இது

படர்கைப்பன்மை வடிவம் ஆகும். ஆனால் பெண்களை மரியாதையுடன் குறிப்பிடுகையில் படர்கை உயர்வு ஒருமை வடிவமாக இவ்வடிவங்களைப் பயன்படுத்துவர்.

28) தமிழில் படர்கை பலர்பால் பன்மை வடிவங்களாக 'அவர்கள்' , 'இவர்கள்' என்பன வழக்கில் உள்ளன. மலையாளத்தில் இதற்கு இணையாக 'அவர்' , ' இவர்' என்பன பன்மை வடிவங்கள்.

29) அஃறிணைப் பலவின் பாலுக்குத்தமிழில் 'அவை' , 'இவை' , 'அவைகள்' 'இவைகள்' என நான்கு வடிவங்கள் உள்ளன. மலையாளத்தில் 'அவ' , 'இவ' என இரண்டு வடிவங்களே உள்ளன. ஆனால் பெரும்பாலும் இவை தனித்து வருவதில்லை. சில முழுமைப் பதிலிடுபெயர்களை (எ.கா: அவயொக்கெ, அவயெல்லாம்) இணைத்துக்கொண்டே வருகின்றன.

30) தமிழ் மலையாளத்தில் செயப்படுபொருள் வேற்றுமை ஏற்கும் சூழலில் நிலவும் வேறுபாடுகளுமாவன, மலையாளத்தில் செயப்படுபொருள் வேற்றுமையுருபினை ஏற்கையில் இடம்பெறும் "இன்" சாரியை பெரும்பான்மை கட்டாயச்சாரியையாகவே உள்ளது. தமிழில் இது சிறிய அளவிலேயே வழக்கில் உள்ளது.

31) தமிழில் அஃறிணை உயிரற்ற பெயர்களுடன் "ஐ" உருபு வருவது விருப்பத்தேர்வு. ஆனால் மலையாளத்தில் செயப்படுபொருள் வேற்றுமை உருபு அஃறிணை உயிரற்ற பெயர்களுடன் கட்டாயமாக வருவதில்லை.

32) தமிழில் செயப்படுபொருள் ஏற்கும் அஃறிணை உயிரற்ற பெயர்கள் சுட்டுப்பெயர்களால் சுட்டப்பட்டால் அவை "ஐ" உருபினைக் கட்டாயம் ஏற்கும். ஆனால் மலையாளத்தில் சுட்டுப்பெயர் இடம்பெற்றாலும் அப்பெயர்கள் "எ" உருபினை ஏற்பதில்லை.

33) தமிழில் "ஐ" உருபு உயர்திணைப்பெயர்களுடனும், அஃறிணைப்பெயர்களுடனும் இணைந்து அதைக் குறிப்பிட்டுச்சுட்டிக்காட்டும். மலையாளத்தில் இவ்வாறு அஃறிணை உயிரற்ற பெயர்களைச்சுட்டிக்காட்ட, செயப்படுபொருள் உருபு "எ" பயன்படுவதில்லை. அதற்குப்பதில் "ஆணு" போன்ற அழுத்திச்சொல்லும் சொற்கள் மலையாளத்தில் பயன்படுகின்றன.

34) தமிழில் அஃறிணைப்பெயர்கள் பொதுவாகக் கூறப்பட்டு அப்பொதுமையைக் குறிக்கும் "ஒரு" போன்ற சொற்களுடன் வந்தால் செயப்படுபொருள் வேற்றுமை உருபு விருப்பத்தேர்வாக அமையும். ஆனால் மலையாளம் விருப்பத்தேர்வாகவோ, கட்டாயமாகவோ "எ" உருபினை ஏற்காது.

35) மலையாளத்தில் சில பெயர்வினைச்சொற்கள் கூட்டாகக் காணப்படுவதால் (Noun-Verb Compound) அப்பெயர்களுடன் செயப்படுபொருள் வேற்றுமை உருபு "எ" இடம்பெறுவதில்லை. தமிழிலும் இதேபோன்ற தொடர்கள் மொழிபெயர்க்கப்பட்டால் அவை "ஐ" உருபை ஏற்றோ ஏற்காமலோ ( Optional ) அமைகின்றன.

36) சமநிலை காட்ட வரும் பெயர்களில் மலையாளத்தில் "எ" உருபு கட்டாயம் இடம்பெறுகிறது. தமிழில் இவ்விடம் "ஐ" உருபேற்பது விருப்பத்தேர்வாக அமைகிறது.

37) மலையாளத்தில் உயிரற்ற அஃறிணைப்பெயர்கள் ஒரே தொடரில் அமையும்போது செயப்படுபொருள் எது என்று அத்தொடரில் இடம்பெறும் வினைமுற்று பொருண்மைக்கூற்றின் மூலம் புலப்படுத்துகின்றது. இச்சூழலில் மலையாளத்தில் அப்பெயர்கள் "எ" உருபினைப்பெறாமலும் தமிழில் அப்பெயர்கள் "ஐ" உருபினைப்பெற்றும் அமைகின்றன.

38) தமிழிலும் மலையாளத்திலும் கருவிப்பொருள் வேற்றுமையின் வேறுபாடுகளாவன, தமிழில் கருவிப்பொருளைச் சுட்டுவதற்கு "-ஆல்" உருபு வருமிடத்தில் மலையாளத்தில் "கொண்டு" என்ற

சொல்லுருபு வருகின்றது. தற்கால மலையாளம் "-ஆல்" உருபினை இச்சூழலில் ஏற்பதில்லை.

39) தமிழில் கருவி வேற்றுமை "-ஐக்கொண்டு" , "-ஐ" என்ற செயப்படு பொருள் வேற்றுமை மற்றும் "கொண்டு" என்ற சொல்லுருபின் கூட்டமைப்பால் வெளிப்படுத்தப்படும். மலையாளத்தில் கருவிப்பொருள் வேற்றுமையானது "கொண்டு" எனும் சொல்லுருபாலேயே வெளிப்படுத்தப்படுகின்றது.

40) தமிழில் "ஐ வைத்து" எனும் வடிவம் கருவிப்பொருளை உணர்த்தும். மலையாளத்தில் "கொண்டு" எனும் வடிவம் கருவிப்பொருளை உணர்த்தும்.

41) தமிழில் கருவிப்பொருளுணர்த்தும் "ஐ வைத்து" அமைப்பு மலையாளத்தில் "வெச்சு" (வைத்து) என மட்டும் அமைந்து கருவி வேற்றுமையை உணர்த்தும்.

42) தமிழில் "-ஆல்" உருபு முதற்பொருள் அல்லது மூலப்பொருளையும் குறிக்கும். மலையாளத்தில் "கொண்டு" எனும் சொல்லுருபே அம்மொழியில் முதற்பொருள் அல்லது மூலப்பொருளையும் குறிக்கப் பயன்படுத்தப்படுகிறது.

43) முதல்/மூலப்பொருளை உணர்த்தும் நிலையில் தமிழில் "-ஐக்கொண்டு" எனும் அமைப்பு வருகின்றது. மலையாளத்தில் "கொண்டு" எனும் சொல்லுருபு மட்டுமே இடம்பெறுகின்றது.

44) தமிழில் "-ஆல்" உருபு முதல் வகைக்காரணத்தை வெளிப்படுத்தும் உருபாக வருகின்றது. ஆனால் மலையாளத்தில் முதல் வகைக் காரணப்பொருள் 1) "காரணம்" என்ற சொல்லாலும் 2) "கொண்டு" என்ற சொல்லுருபாலும் வெளிப்படுத்தப்படுகின்றது.

45) தமிழில் உடைமை வேற்றுமை உருபு 1) "-இன்", 2) "காரணம்" என்ற சொல் மற்றும் 3) "-ஆல்" உருபு போன்றன இணைந்து காரணப்பொருளை உணர்த்தி நிற்கின்றது. மலையாளத்தில் "கொண்டு" எனும் சொல்லுருபு மட்டுமே இப்பொருளை உணர்த்தி நிற்கின்றது.

46) தமிழில் "அதன்" என்ற உடைமை வேற்றுமையும் "பேரில்" என்ற சொல்லுருபும் சேர்ந்து வந்து காரணப்பொருளை உணர்த்துகின்றது. ஆனால் மலையாளத்தில் இக்கருத்து "கொண்டு" எனும் சொல்லுருபாலேயே வெளிப்படுத்தப்படுகின்றது.

47) தமிழில் "அதன்மூலம்" என்ற அமைப்புக்குப்பதில் மலையாளத்தில் "கொண்டு" எனும் சொல்லுருபு இடம்பெறும்.

48) தமிழில் "அதன் நிமித்தம்" எனும் சொற்கள் சேர்ந்து நின்று காரணப்பொருளை உணர்த்தும். மலையாளத்தில் "கொண்டு" எனும் சொல்லுருபு காரணப்பொருளை புலப்படுத்தும்.

49) தமிழில் "-ஆல்" உருபு கருத்தாப்பொருளிலும் வருகின்றது. ஆனால் மலையாளத்தில் "-க்கு" எனும் கொடை வேற்றுமை உருபால் இப்பொருள் வெளிப்படுத்துகின்றது.

50) தமிழில் அனைத்துப்பதிலிடு பெயர்களுடனும் கருவி வேற்றுமை "-ஆல்" உருபினை இணைத்துக்கூற முடியும். ஆனால் மலையாளத்தில் "-ஆல்" உருபுக்குப்பதில் "கொண்டு" எனும் சொல்லுருபு இணைகின்றது. ஆனால் "கொண்டு" சொல்லுருபைத்தவிர கொடை வேற்றுமை உருபு "-க்கு" கருவி வேற்றுமையில் அதிகம் இடம்பெறுகின்றது: அதே நேரம் தமிழில் அது எல்லாச்சூழலகளிலும் இடம்பெறுவதில்லை. மலையாளத்தில் இது எல்லாச்சூழலிலும் கருவிப்பொருளில் வருவது குறிப்பிடத்தக்க வேறுபாடு ஆகும்.

51) உடனிகழ்ச்சிப்பொருள் வேற்றுமை உருபுகளின் வேறுபாடுகளாவன, தமிழில் "-ஒடு" என்ற உடனிகழ்ச்சி வேற்றுமை வருகின்ற இடத்தில் மலையாளத்தில் "-ன்றெ" என்னும் உடைமை வேற்றுமையும், "-கூடெ" என்ற சொல்லுருபும் இடம்பெறுகின்றது.

52) தமிழில் உடனிகழ்ச்சி வேற்றுமை "ஓடு" வருகின்ற இடத்தில் மலையாளத்தில் "ஆயி" எனும் வினைச்சொல் சொல்லுருபாக இடம்பெற்று உடனிகழ்ச்சிப்பொருளை வேறுபடுத்துவதும் உண்டு.

53) "ஓடு" வேற்றுமையைக்கொண்ட தமிழ்த்தொடர் ஒன்று மலையாளத்திற்கு மொழிபெயர்க்கப்படுகையில் அம்மொழியின் உடனிகழ்ச்சி வேற்றுமையான "ஓடு" வும், "கூடி" எனும் சொல்லுருபும் இடம்பெறுகின்றன

54) தமிழில் "ஓடு" வேற்றுமை வருமிடங்களில் மலையாளத்தில் "ஓடு" வேற்றுமையும், "ஒப்பம்" எனும் சொல்லுருபும் இடம்பெறுவதும் உண்டு.

55) தமிழில் "ஓடு" வேற்றுமை இடம்பெறும் தொடர்களில் மலையாளத்தில் "ஓடு" வேற்றுமையும் "ஒத்து" எனும் சொல்லுருபும் வந்தமைந்து உடனிகழ்ச்சிப்பொருளை வெளிப்படுத்தும்.

56) தற்காலத் தமிழின் உடனிகழ்ச்சி வேற்றுமை உருபாகக் கருதப்படும் "உடன்" இடம்பெறுகின்ற தொடரினை மலையாளத்தில் மொழிபெயர்க்கும் போது, அது மூன்று விதங்களில் உடனிகழ்ச்சி வேற்றுமைகளை ஏற்று, அதன் பொருளை வெளிப்படுத்துகின்றன. அவை, உடன் உருபு கிழமைப்பொருள் வேற்றுமையான "ன்றெ"

மற்றும் "கூடெ" எனும் சொல்லுருபால் வெளிப்படுத்தப்படுகின்றது.

57) "உடன்" உருபு மலையாளத்தின் உடனிகழ்ச்சி வேற்றுமையுருபான "ஓடு" மற்றும் "ஒப்பம்" எனும் சொல்லுருபால் வெளிப்படுத்தப்படுகின்றது

58) "உடன்" உருபு மலையாளத்தில் "ஓடு" உருபு மற்றும் "ஒத்து" எனும் சொல்லுருபால் வெளிப்படுத்தப்படுகின்றது.

59) தமிழில் "கூட" எனும் சொல் தற்கால அறிஞர்களால் உடனிகழ்ச்சி வேற்றுமை உருபாகக் கொள்ளப்படுகிறது இந்த "கூட" உருபு மலையாளத்தில் கிழமைப்பொருள் உருபான "உடெ" மற்றும் சொல்லுருபு "கூடெ" இவற்றின் மூலம் வெளிப்படுத்தப்படுகிறது.

60) "கூட" உருபு வருமிடங்களில் மலையாளத்தில் அதன் உடனிகழ்ச்சி உருபான "ஓடு" உருபும், சொல்லுருபான "ஒப்பம்" மும் ஒருங்கே வந்து தமிழில் "கூட" உருபு வெளிப்படுத்தும் அதே பொருளை வெளிப்படுத்துகின்றது.

61) தமிழில் "கூட" உருபு வருமிடத்தில் மலையாளத்தில் "ஓடு" உருபும் "ஒத்து" எனும் சொல்லுருபும் சேர்ந்து அமைந்து உடனிகழ்ச்சிப்பொருளை வெளிப்படுத்துகின்றது.

62) கொடைப்பொருள் வேற்றுமை உருபுகள் தமிழிலும் மலையாளத்திலும் வேறுபடும் இடங்களாவன, தமிழில் வருதல் போதல் போன்ற வினைச்சொற்களுடன் வரும் பெயர்கள் இலக்குப்பொருளைக் குறிக்கையில் "-கு" உருபினை ஏற்கின்றன. மலையாளத்தில் அது இடப்பொருள் வேற்றுமையான "-இல்" உருபினை ஏற்றே இலக்குப்பொருளை சுட்டுகின்றது.

63) இலக்குப்பொருளைக் குறிப்பிடுகையில் தமிழில் "-க்கு" உருபு தோன்றும். மலையாளத்தில் இடப்பொருள் வேற்றுமை உருபு மற்றும் ஒரு குறைச்சொல் சேர்ந்த "இலேக்கு" எனும் வடிவமாகத் தோன்றும்.

64) தமிழில் "கு" உருபு நோக்கத்தினை வெளிப்படுத்தும் முகமாக அமைகையில் அதற்குச் சமமான மலையாளத்தொடர் அம்மொழியின் "கொடை வேற்றுமை உருபான "னு" வையும், "வேண்டி" என்ற சொல்லுருபையும் ஏற்று வருகின்ற முறை காணப்படுகிறது.

65) தமிழில் நோக்கப்பொருளை வெளிப்படுத்தும் கொடைவேற்றுமை உருபு மலையாளத்தில் அப்பொருளை வெளிப்படுத்த அம்மொழியின் கொடைவேற்றுமையுருபு "னு" வையும் "ஆயி" என்னும் சொல்லுருபினையும் ஏற்று வருகின்றது.

66) தமிழில் காலத்தினைக்குறிக்கும் மூன்று சொற்களான நேற்று, இன்று, நாளை என இம்மூன்றும் "கு" உருபினை ஏற்றோ ஏற்காமலோ வழங்கப்படும். ஆனால் மலையாளத்தில் இவை மூன்றுமே "கு" உருபினை ஏற்காமல் எழுவாய் வேற்றுமை போன்றே உருபின்றி அமைகின்றன.

67) மொத்த நேரத்தைக் குறிப்பிடும் போது தமிழில் "கு" வேற்றுமையுருபு இடம்பெறுகின்ற வேளை; மலையாளத்தில் "ஏய்க்கு" எனும் ஒரு குறைச்சொல் இடம்பெறுகின்றது.

68) தமிழில் "கு" உருபை ஏற்ற பெயர்ச்சொல்லை அடுத்து உறவு முறைப்பெயரோ அல்லது உறவு எனும் பொருளுடைய பெயரோ வரும்போது; மலையாளத்தில் இவ்விடம் கிழமைப்பொருள் உணர்த்தும் கிழமை வேற்றுமையுருபு "ன்றெ" மட்டுமே வருகின்றது.

69) தமிழில் சார்த்து நிலையினைக் குறிக்கின்ற தொடர்களில் கொடை வேற்றுமையின் "-கு" உருபு வருகின்ற இடத்தில் மலையாளத்தில் உடைமை வேற்றுமை வருகின்றது.

70) தமிழில் சார்த்து நிலையினைக் குறிக்கையில், ஒப்புப்பொருளில்"-கு" உருபும் மலையாளத்தில் ஒப்பீட்டு நோக்கும் சொல்லான "விட"

எனும் பொருள்படும் "காள்" எனும் சொல்லுருபும் இடம்பெறுகின்றன.

71) தமிழில் ஒரு துறைச்சிறப்பினைக் குறிக்க அத்தொடரில் வரும் முதல் பெயர்ச்சொல் "கு" உருபினை ஏற்கின்றது மலையாளத்தில் இதே பொருளில் வழங்கும்வேளை "-கு" உருபுக்குப்பதில் இடவேற்றுமையுருபு "-இல்" வருகின்றது

72) தமிழில் ஒரு விழுக்காட்டினைக் கூறும்போது பேரலகு "-கு" உருபினை ஏற்கின்றது. மலையாளத்தில் உருபுகள் எவையுமே ஏற்காமல் எழுவாய் வேற்றுமையில் அப்பேரலகு அமைகின்றது

73) தமிழில் கொடை வேற்றுமையுருபு வந்து விழுக்காட்டுப்பொருளை வெளிப்படுத்துவது போல் மலையாளத்தில் இடப்பொருள் வேற்றுமையுருபு வந்தும் விழுக்காட்டுப்பொருளை வெளிப்படுத்தும்

74) தமிழில் "-கு" உருபினை ஏற்ற பெயர்ச்சொல்லை அடுத்து ஒரு எண்ணுப்பெயர் வரும்போது 'ஒவ்வொன்றிற்கு இத்தனை' எனும் பொருள் பிறக்கிறது. மலையாளத்தில் "ஓரோருத்தருக்கும்" என்ற சொல்லே பயன்படுத்தப்படுகின்றது.

75) தமிழில் "ஒவ்வொரு" எனும் பொருளில் "-கு" உருபு வருகின்ற இடத்தில் மலையாளத்தில் இடப்பொருள் வேற்றுமை உருபு "-இல்" இப்பொருளில் வருகின்றது.

76) தமிழில் "-கு" உருபு வெளிப்படுத்தும் பொருள் மலையாளத்தில் "இல் நின்னும்" எனப்படும் நீங்கல் வேற்றுமையினைப் பயன்படுத்தி வெளிப்படுத்தப்படுகின்றது.

77) தமிழிலும் மலையாளத்திலும் நீங்கற்பொருள் வேற்றுமையுருபுகள் வரும் முறைகளை ஆராய்ந்தபோது, தமிழின் "இடமிருந்து" உருபினை மலையாள மொழி கீழ்க்கண்ட விதங்களில் வெளிப்படுத்துகின்றது

**[ இடமிருந்து = ன்றெ கையில் நின்னும் ]**

**[ இடமிருந்து = ன்றெ பக்கல் நின்னும் ]**

**[ இடமிருந்து = ன்றெ அடுத்து நின்னும் ]**

78) சில உயிரில்லாப்பெயர்களுடன் தமிழில் "இடமிருந்து" எனும் உருபு வருகின்றது. ஆனால் இதன் மலையாள மொழிபெயர்ப்பு இல் நின்னு" எனும் உருபினை ஏற்று வருகின்றது.

79) தமிழில் அஃறிணை உயிருடைப்பெயர்களோடு "இடமிருந்து" எனும் நீங்கல் வேற்றுமையுருபு வருகின்றது. எனினும்; மலையாளத்தில் "இல் இருந்து" வுக்கு இணையான "இல் நின்னும்" எனும் உருபே வந்தமைகின்றது.

80) தமிழில் காலம் விட்டுக் காலம் நீங்குதலை வெளிப்படுத்த நீங்கல் வேற்றுமையுருபு "இல் இருந்து" இடம்பெறுகின்ற இடத்தில் மலையாளத்தில் "முதல்" எனும் சொல்லுருபு இடம்பெறுகின்றது

81) தமிழில் காலம் விட்டுக் காலம் நீங்குதலை வெளிப்படுத்த "இல் இருந்து" உருபு பயன்படுகின்ற இடத்தில் மலையாளத்தில் "தொட்டு" எனும் சொல்லுருபு வருகின்றது

82) தற்காலத் தமிழில் நீங்கற்பொருளைக் குறிக்க "பிடித்து" எனும் சொல்லுருபு வருகின்றது. மலையாளத்தில் இதற்கிணையான தொடர் "முதல்" எனும் சொல்லுருபையே எடுத்து வருகின்றது.

83) தமிழிலும் மலையாளத்திலும் பெயர்ச்சொற்கள் உடைமை வேற்றுமையை ஏற்கும் போது ஏற்படும் வேறுபாடுகளாவன, தமிழில் கிழமை வேற்றுமை உருபு இடம் பெறாமலேயே கிழமைப்பொருள் வெளிப்படுத்தப்படுகின்றது. ஆனால் மலையாளத்தில் கட்டாயம் இவ்வேற்றுமை அமையும் இடங்களும் உண்டு. அதாவது தமிழில் சில தொடர்கள் கிழமை வேற்றுமையின்றி கிழமைப்பொருள் தர வல்லன. ஆனால் மலையாளத்தில் சில தொடர்களால் கிழமை வேற்றுமையின்றி அப்பொருள் தர இயலாது.

84) தமிழில் தன்மை முன்னிலை போன்ற மாற்றுப்பெயர்களின் வேற்றுமை ஏற்கும் வடிவங்கள் வேறு பெயர்களுடன் இணைந்து உடைமைப்பொருளை வெளிப்படுத்தும். மலையாளத்தில் இவை உடைமை வேற்றுமை உருபினை ஏற்றே உடைமைப் பொருளை வெளிப்படுத்துகின்றன.

[ என் = என்றெ ]

[ நம் = நம்முடெ ]

[ எங்கள் = ஞங்ஙளுடெ ]

[ உம் = நிங்ஙளுடெ ]

[ உனது = நின்றெ ]

[ உங்கள் = தாங்களுடெ ]

85) தமிழ் - மலையாள மொழிகளில் இடப்பொருள் வேற்றுமை அமையும்போது ஏற்படும் வேறுபாடுகளாவன, இடவேற்றுமையினை ஏற்று, காலப்பொருளை வெளிப்படுத்தும் சூழலில் தமிழில் தொழில் நிகழும் காலத்தினைக் குறிக்க "-இல்" உருபு பயன்படுகின்றது. அதே தொடரின் மலையாள மொழிபெயர்ப்பில் "-இல்" உருபுக்குப்பதில் "கொண்டு" எனும் சொல்லுருபு அப்பொருளைத் தெரிவிக்க பயன்படுகின்றது.

86) தமிழில் "-இல்" உருபு இடம்பெற்று இடப்பொருளை வெளிப்படுத்துகின்ற இடத்தில்; மலையாளத்தில் "வழியாக" எனும் பொருள் தரும் "ஊடே" எனும் சொல்லுருபு இடம்பெறுகின்றது.

87) அஃறிணை உயிருடைப்பெயர்கள் இடப்பொருளை உணர்த்த "இடம்" என்னும் உருபினைப் பயன்படுத்துகின்றது. மலையாளம் இவ்விடத்தில் "-ஓடு" எனும் உருபினை ஏற்கின்றது.

88) தமிழில், உயர்திணை ஒருமைப்பெயர்களுடன் "-இடம்" உருபு வருகையில் மலையாளத்தில் "-உடெ" எனும் கிழமைப் பொருள் உருபும் "அடுத்து" எனும் சொல்லுருபும் சேர்ந்து வந்து "இடம்" என்ற இடப்பொருள் உருபின் பொருளை வெளிப்படுத்துகின்றது.

89) தமிழில் உயர்திணைப்பன்மைப்பெயர்கள் இடப்பொருளை வெளிப்படுத்த "இடம்" உருபினைப் பயன்படுத்துகின்றன. ஆனால் மலையாளத்தில் இச்சூழலில் இடப்பொருளானது, "-ஓடு" எனும் உடனிகழ்ச்சிவேற்றுமை உருபின் மூலம் வெளிப்படுத்தப்படுகின்றது.

90) தற்காலத் தமிழில் "இடத்தில்" எனும் சொல்வடிவம் இடப்பொருளை உணர்த்த மிகவும் பயன்படுத்தப்படுகின்றது. ஆனால் மலையாளத்தில் "இடத்தில்" எனும் வடிவிற்குப்பதிலாக, உடைமை வேற்றுமை உருபான "-ன்றெ" வும் "பக்கல்" ,

"கையில்" , "அடுத்து" எனும் சொல்வடிவங்களும் பயன்பாட்டில் உள்ளன.

91) தமிழ் - மலையாள வினைச்சொற்களில் இதுவரைக் கண்டுபிடிக்கப்பட்ட வேறுபாடுகளாவன, தமிழில் எதிர்மறை ஏவல் ஒட்டு "-ஆதே" மூலம் எதிர்மறைப்பொருள் சுட்டப்படுகின்றது. மலையாளத்தில் "அருது" எனும் முழுச்சொல் இடம்பெற்று, எதிர்மறையினை உணர்த்த வருகின்றது .

92) தமிழில் உடன்பாட்டு ஏவற்பன்மை "உங்கள்" எனும் பன்மை ஒட்டினை வினையடியுடன் சேர்ப்பதன் மூலம் உருவாகும். மலையாளத்தில் ஏவற்பன்மை வினையடியையும் "-ஊ" என்னும் ஒட்டையும் சேர்ப்பதன் மூலம் உருவாகின்றது.

93) உடன்பாட்டு ஏவலில் மரியாதைச் சுட்ட தமிழ், முன்னிலை வினையடியுடன் "உங்கள்" எனும் சொல்லை, ஏற்கும். மலையாளம் "ஊ" எனும் ஒட்டையே முன்னிலையில் மரியாதை ஏவலில் ஏற்கும்.

94) தமிழில் எதிர்மறை ஏவற்பன்மை அமைப்பு வினையடியுடன் எதிர்மறை ஒட்டு "-ஆத்" தையும், முன்னிலைகாட்டும் உருபு ஈர்கள்" ஐயும் கொண்டு அமைகின்றது. மலையாளத்தில் "அருது"

எனும் எதிர்மறை சொல் மட்டுமே வினையடியுடன் இணைக்கப்பட்டு, எதிர்மறை உணர்த்தப்படுகின்றது.

95) தமிழில் "-ஈர்கள்" என வரும் முன்னிலைப்பன்மை அமைப்பு, மலையாளத்தில் பெரும்பாலும் முன்னிலைப்பதிலிடு பெயரின் மூலமே வெளிப்படுத்தப்படுகின்றது.

96) தமிழிலும் மலையாளத்திலும் மரியாதை ஒருமைக்கும் [ வினையடி + உங்கள் ] என்ற அமைப்பே பயன்படுகின்றது. தற்கால மலையாளத்தில் பெரும்பாலும் முன்னிலைப் பதிலிடுபெயருக்குப் பதில் அப்பெயரையே பயன்படுத்தும் முறையே வழக்கமாக உள்ளது.

97) தமிழில் விருப்பேவலைத் தெரிவிக்க "ஏன்" என்னும் உருபு சேர்க்கப்படுகின்ற வேளையில் மலையாளத்தில் "ஓ" எனும் ஒட்டு சேர்க்கப்படுகிறது. விருப்பேவல் வெளிப்படுத்தும் முறையில் இருமொழிகளும் இவ்விடம் வேறுபடுகின்றது.

98) தமிழில் ஏவலொருமைக்கும் மரியதை ஒருமைக்கும் ஒருவித அமைப்பும், பன்மைக்கும் மற்றுமொரு அமைப்பு என, இருவேறு அமைப்புகள் உள்ளன. ஆனால் மலையாளத்தில் ஒரேயொரு அமைப்பே காணப்படுகின்றது.

99) தமிழில் வினை முற்றிலிருந்தே எழுவாயின் திணை, பால், எண் மற்றும் இடத்தினை அறிந்துகொள்ள முடிகின்றது மலையாளத்தில் அவ்விடம் இடம்பெறுகின்ற எழுவாயின் பதிலிடுபெயர் வினைமுற்றின் முன்பு சேர்க்கப்படுகின்றது எனவே மலையாளத்தைப் பொறுத்தவரையிலும் அப்பதிலிடுபெயரிலிருந்தே எழுவாயின் திணை, பால், எண் மற்றும் இடத்தினை அறிந்துகொள்ள இயல்கின்றது இரு மொழிகளுக்கும் இடையே அமையும் சிறப்பான வேறுபாடாக இது அமைகின்றது

100) தமிழில் இறந்தகால வினைமுற்றுகள் பத்து வெவ்வேறு வித பாலறிகிளவிகளைப்பெற்றே அமைகின்றது ஆனால் மலையாளத்தில் இறந்தகாலத்திற்கு எவ்வித பாலறிகிளவிகளும் வருவதில்லை இது தமிழ் மற்றும் இறந்தகால உடன்பாட்டு வினைமுற்றுக்களில் அமையும் சிறப்பான வேறுபாடாகக் கருதப்படுகின்றது

101) தமிழில் 8 வித பாலறிகிளவிகள் எதிர்கால உடன்பாட்டு வினையினைக் குறிக்கப் பயன்படுகின்றன மேலும் இரண்டு அஃறிணைப் பெயர்களுக்கும் "வரும்' என்ற ஒரேயொரு முறையே உள்ளது மலையாளத்தில் அனைத்துப்பெயர்களுக்கும் "வரும்" என்ற

ஒரேயொரு முறையே அமைகின்றது இருமொழிகளுக்கும்இடையே அமையும் குறிப்பிடத்தக்க வேறுபாடாக இது அமைகின்றது.

102) தமிழில் இறந்தகாலத்தை எதிர்மறையில் சுட்டுகையில் வினையெச்சத்துடன் "இல்லை" எனும் சொல் சேர்கிறது ஆனால் மலையாளத்தில் வினைமுற்றுடனேயே “இல்லா" எனும் சொல் சேர்ந்து எதிர்மறை சுட்டுகிறது

103) தமிழில் எதிர்கால எதிர்மறைச் செயல்வினைமுற்றுக்கள் உயர்திணையில் “மாட்டு" எனும் சொல்லையும் அஃறிணையில் “ஆது" எனும் ஒட்டையும் எடுத்து வந்து எதிர்மறைகளைக் காண்பிக்கின்றன. ஆனால் மலையாளத்தில் இரு திணைகளுக்கும் “இல்லா" எனும் ஒரு ஒட்டால் மட்டுமே எதிர்மறையானது சுட்டப்படுகின்றது.

104) தமிழில் வினையெச்சத்தோடு எதிர்மறை காட்டும் உருபுகள் சேர்ந்து எதிர்கால எதிர்மறை வினைமுற்றுக்களை உருவாக்கும் மலையாளத்தில் வினையெச்சம் அல்லது வினையடியுடன் எதிர்மறை காட்டும் உருபு சேர்ந்து எதிர்கால எதிர்மறை வினைமுற்றுக்கள் பெறப்படுகின்றன

105) தமிழில் நிகழ்கால எதிர்மறை செயல் வினைமுற்று வடிவமும் இறந்த கால எதிர்மறை செயல் வினைமுற்று

வடிவமும் ஒரே போல் அமைகின்றது. சான்று: படிக்கவில்லை. ஆனால் மலையாளத்தில் இறந்தகால எதிர்மறை செயல் வினைமுற்றுக்களும் நிகழ்கால எதிர்மறை செயல் வினைமுற்றுக்களும் வெவ்வேறாக அமைகின்றன. சான்று: படிச்சில்லா, படிக்குன்னில்லா. இங்கே தமிழுக்கும் மலையாளத்துக்குமிடையேயான வேறுபாடு அமைந்துள்ளதனை அறியலாம்.

106) தமிழில் உயர்திணைப்பெயர்களுக்கு "மாட்டேன்" எனும் எதிர்மறை சுட்டும் சொல்லும் அஃறிணைக்கு "ஆது" எனும் எதிர்மறை உருபும் உள்ளன. மலையாளத்தில் இவ்விரு திணைப்பெயர்களுக்கும் ஒரே மாதிரியான வடிவங்களே உள்ளன.

சான்று: அது / அவன் நடக்கில்லா.

அது / அவன் நடக்குகயில்லா.

107) தமிழில் உயர்திணை மற்றும் அஃறிணைப்பெயர்களுக்கு [ வினையெச்சம் + மாட்டு + பாலறிகிளவிகள் ] என வந்து எதிர்மறை சுட்டப்படும். மலையாளத்தில் இவ்விரு திணைப்பெயர்களுமே [வினையடி + (உக) + இல்லா ] என வந்து எதிர்மறை காட்டப்படுகின்றன.

108) தமிழில் வியங்கோள் வினை விகுதி "அட்டும்" ஆகும். மலையாளத்தில் இது "அட்டே" ஆகும்

109) தமிழில் செயவென் எச்ச விகுதி "-அ" மலையாளத்தில் செயவென் எச்ச விகுதி விகுதி "-ஆன்" மற்றும் "-உவான்"

110) தமிழில் எதிர்மறை வினையெச்சம்; வினையடியுடன் "-ஆமல்" மற்றும் "-ஆது" சேர்ப்பதன் மூலம் எதிர்மறை வினையெச்சம் பெறப்படுகிறது மலையாளத்தில் வினையடியுடன் எதிர்மறை சுட்டும் உருபு "-ஆதே" யைச் சேர்ப்பதன் மூலம் பெறப்படுகிறது.

111) தமிழில் "-ஆல்" எனும் ஒரு நிபந்தனை எச்ச உருபு மட்டுமே உள்ளது. மலையாளத்தில் "-ஆல்" எனும் உருபும், "எங்கில்" என்னும் சொல்லும் உள்ளது

112) தற்காலத் தமிழில் வினையடியுடன் எதிர்மறை உருபான "-ஆ" வையும், "விட்டால்" எனும் சொல்லையும் சேர்ப்பதன் மூலம் எதிர்மறை நிபந்தனை எச்சவினை தோன்றும். மலையாளத்தில் எதிர்மறை நிபந்தனை எச்சமானது வினையடியுடன் "-இல்" எனும் எதிர்மறை ஒட்டையும் "எங்கில்" எனும் நிபந்தனை வெளிப்படுத்தும் உருபனையும் எடுத்து வரும்.

113) தமிழில் எதிர்மறைப் பெயரெச்ச வடிவங்கள் வினையடியுடன் "-ஆத்" எனும் எதிர்மறை சுட்டும் உருபையும், "-அ" எனும் பெயரெச்ச ஒட்டையும் சேர்ப்பதன் மூலம் தோன்றும். மலையாளத்தில் எதிர்மறைப் பெயரெச்ச வடிவங்கள் வினையடியுடன் "-ஆத்த" எனும் உருபினைச் சேர்ப்பதன் மூலம் உருவாக்கப்படுகின்றன.

114) தமிழிலும் மலையாளத்திலும் பெயரடையடைகளில் காணப்படும் வேறுபாடுகளாவன, தற்காலத் தமிழில் ஆக்கப்பெயரடை விகுதியான "-ஆன" என்பது பெருமளவில் பயன்படுத்தப்படுகின்றது. மலையாளத்தில் இதற்குப்பதிலாக "உள்ள" எனும் விகுதியே அதிகமாகப் பயன்படுத்தப்படுகிறது.

[ அழகான = அழகுள்ள ]

[ நீளமான = நீளமுள்ள ]

[ உயரமான = உயரமுள்ள ]

[ நீளமான = நீளமுள்ள ]

[ அறிவான = அறிவுள்ள ]

115) "-ஆன" உருபு சேர்ந்த ஆக்கப் பெயரடைகளை மலையாளத்தில் மொழிபெயர்க்கையில் தமிழுக்கிணையான பெயரெச்சங்கள் இடம்பெற்று, பெயரடைகள் உருவாகின்றன.

சான்று:

கறுப்பான - கறுத்த

வெண்மையான - வெளுத்த

116) தமிழின் "-ஆன" விகுதிப்பெயரடைகள் மலையாளத்தின் ஆக்கப் பெயரடை விகுதிகள் எதையும் ஏற்காமல் முற்றிலும் வேறுபட்டு, "-அன்" விகுதியினை ஏற்றும் வரும்.

117) தமிழில் பெயர்ச்சொற்களே எவ்வித மாற்றமும் இன்றி, பெயரடையாகப் பயன்படுத்தப்படுகின்றது. இவை மலையாளத்தில் மொழிபெயர்க்கப்படும் போது, அஃறிணைப் பெயர்கள் "-அன்" விகுதியோடு பயன்படுத்தப்படுகின்றன.

118) தமிழில் பெயர்கள் பெயரடையாக வருகின்ற வேளை மலையாளத்தில் பெயரெச்சம் பெயரடைப்பொருளில் வருகின்றது.

119) தமிழிலும் மலையாளத்திலும் வினையடைகளில் காணப்படும் வேறுபாடுகளாவன, தமிழின் தனி வினையடையாக வரும் "நன்கு" மலையாளத்தில் வினையடை விகுதியான "-ஆயி" மற்றும் "ஆயிட்டு" என்பவைகளைப் பெற்று, நன்னாயி, நன்னாயிட்டு எனும் கூட்டு வினையடையாக வருகின்றது.

120) தமிழில் "-ஆக" , "-ஆயி" எனும் வினையாக்க விகுதிகள் வருமிடத்தில் மலையாளத்தில் "-ஆயி" எனும் ஒரு விகுதி வடிவம் மட்டுமே வருகின்றது.

121) தமிழில் வேகமாக எனும் கூட்டு வினையடை "-ஆக" எனும் வினையடை விகுதியினைக் பெற்று வருகின்ற இடத்தில் மலையாளத்தில் வேகத்தில் என்னும் வினையடை, இடப்பொருள் வேற்றுமை "-இல்" ஐ எடுத்து வினையடைப்பொருளை உணர்த்துகின்றது.

122) தமிழில் "-ஆக" எனும் வினையடைவிகுதி வினையடைப்பொருளில் வருமிடத்தில் மலையாளத்தில் "-ஓடெ" எனும் உடனிகழ்ச்சி வேற்றுமை உருபு வினையடைப்பொருளில் வருகின்றது.

123) ஏராளமாக எனும் கூட்டு வினையடை தமிழில் வரும்போது மலையாளத்தில் அதற்கிணையான தாராளம் என்ற தனி வினையடையே பெரும்பாலும் இடம்பெறுகின்றது.

124) தமிழில் அடுக்குச்சொல்லும் வினையாக்க விகுதியும் வந்து வினையடைப்பொருளை வெளிப்படுத்துமிடம் மலையாளத்தில் அடுக்குச்சொல் மட்டும் வந்து வினையடைப்பொருளை வெளிப்படுத்துகின்றது.

125) தமிழில் வினையெச்சம் முறை வினையடைப்பொருளில் வருகின்ற இடத்தில் மலையாளத்தில் பெயர்ச்சொல் இடப்பொருள் வேற்றுமையுடன் இணைந்து வந்து முறை வினையடையாக செயல்படுகின்றது.

**மேலாய்வுக்களங்கள்**

- ✓ தற்காலத் தமிழிலும் தற்கால மலையாளத்திலும் அமைந்துள்ள அனைத்து உருபன்களையும் இயந்திர மொழிபெயர்ப்புக்குத் தகுந்த முறையில் கண்டறியலாம். இவ்வாய்வு இயந்திர மொழிபெயர்ப்பியை எளிதாக உருவாக்க பயனுள்ளதாக அமையும்.
- ✓ ஒரு குறிப்பிட்ட பொருண்மையில் அமைந்த் தற்காலத் தமிழ் - மலையாள இணைத்தரவுகளை உருவாக்கலாம். இது புள்ளியியல் அடிப்படையிலான இயந்திர மொழிபெயர்ப்பியை உருவாக்க பயன்படும்.
- ✓ தற்காலத் தமிழ் - மலையாளச் சொற்களைச் சேகரித்து அகராதி வடிவில் தொகுக்கலாம். இது இயந்திர மொழிபெயர்ப்புக்குரிய அகராதியினை வடிவமைக்க உதவிடும்.
- ✓ தமிழிலும் மலையாளத்திலும் சொல் வலையினை உருவாக்கலாம். இது இயந்திர மொழிபெயர்ப்பின்போது மொழிபெயர்ப்பியானது, சூழல் அறிந்து மொழிபெயர்க்க உதவிடும்.